பரஞ்சோதிமுனிவர்
மொழிபெயர்த்தருளிய
திருவிளையாடற்
புராணம்

உ

சிவமயம்.

சுத்தசைவராகிய

# பரஞ்சோதிமுனிவர்

மொழிபெயர்த்தருளிய

# திருவிளையாடற் புராணம்.

மூலமும்,

இதற்கு-ம-௱-௱-ஸ்ரீ, காஞ்சீபுரம், பச்சையப்பமுதலி
யாரவர்கள் கல்விச்சாலையில்
தமிழ்த்தலைமைப்புலமைநடாத்திய
காஞ்சீபுரம்,

## சபாபதிமுதலியா ரவர்களால்

நூதனமாகச்செய்யப்பட்ட வுரையும்.

சதுரங்கப்பட்டணம்,
சாமிமுதலியார்குமாரராகிய
அண்ணாமலைமுதலியா
ரவர்களாற்றமது
சரஸ்வதிவிலாச
அச்சுக்கூடத்திற்பதிப்பிக்கப்பட்டன.

கலியுகாப்தம்- ௪௲௯௱௪௰௮.
சாலீவாகனசகம்- ௲௭௱௬௰௯- நிகழாநின்ற
பிலவங்க௵-தைமீ.

சாற்றுகவிகள்.

மதுரைச் சங்கத்திலும், புதுவைச்சங்கத்திலும், சென்னையிற் றமதுசங்கத்திலும், தமிழ்த்தலைமைப்புலமைநடாத்திய

# ஆ - வேதகிரிமுதலியாரவர்களாற்பாடிய பாடல்கள்.

திருவிளையாடலுக்கு உரைசெய்தபுலவர்சிறப்பு.

(அறுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.)

பங்கயமார்தடஞ்சூழுஞ் சதுரையண்ணாமலைமகிபன் பணியினாலே, சங்குலவுகாஞ்சியில்வாழ் புலவர்சிரோமணிசபா பதியாம் வள்ளல், திங்களணிமுடிப்பரமர்திருவிளையாடற் குரைசெய்திறங்கண்டஞ்சி, மங்கைகலைவாணி முகநாணிவெருத்தயனுவின்மறைந்திட்டாளே....... .... .... .... .... ........... *

(இதுவுமது)

மாயிருஞாலம்புகழு மலையமுனிதனைநிகர்த்து மதிப்புற்றோருந், தேயமெல்லாம் புகழ்சபாபதிபுலவர் திருவிளையாடற்குச் செய்த, தூயவுரைத்திறங்கண்டுகளிகொண்டுவாய்விண்டு சொல்லவென்றால், ஆயிரநாப்போதாதென்றுதிசேடன்பிலத்துளடங்கினனே....... ........ ........ .... .... .... .... .. ....... *

திருவிளையாடலுக்கு உரைசெய்வித்த

(பிரபுவின்சிறப்பு)

(இரட்டையாசிரியவிருத்தம்.)

அணியாகன்மணிவாசகனயபோகன்கனயோகனருண்மோகனவிவேகன், அதிகாரன் சயசீலன் மிகுதீரனெழின்மாரனடல்சேரனிதிருபேரன், திணிதேவதாசன் விசுவாசன் பிரகாசன்றேசன்மகராசபோசன், சீர்ப்பிரதாபன் பார்மேவுமொருதீபன் சிலவநுகூலபூபன், தணியாதகொடையாளன் வரைதோளன் வடிவாளன் சாந்தகுருசற்குணாளன், சகநேயனகதூயன் கனிவாயன்வறியோர்கள் சகாயனற்சதுருபாயன், மணிமகுடர்புகழ்சாமி மைந்தனண்ணாமலைமன் சபாபதி புலவரால், மாசிறிருவிளையாட்டறனக்குரைசெய்வித்தநன் மாட்சிசொலன்மிக்கவரிதே... .... .... .... .... .... .... .... .... *

# புதுவை-பொன்னுச்சாமிமுதலியாராற் பாடியது.

புரவலர்புகழுங்காஞ்சீ புரஞ்சபாபதியாமேலோன் .. *
திருவிளையாடலுக்குச்செய்தநல்லுரைக்குமுன்னே ... *
பரவருமுன்னோர்செய்தபல்லுரையெல்லாம்பார்க்கில்.. *
இரவிமுன்மதியமென்னவியம்புதற்கொண்மையாமே... .. *

# திருவிளையாடற்புராணம்

## படல அகராதிகள்.

| பக்கம் | புராண அட்டவணை. | கவிகள். |
|---|---|---|
| ௧ | கடவுள்வணக்கம்-பாயிரம் | ௬௰ |
| ௰௭ | நாட்டுப்படலம் | ௯௰ |
| ௪௭ | நகரப்படலம் | ௱௯ |
| ௱௮ | திருக்கைலாசப்புகழ்ச்சி | ௭ |
| ௱௰ | புராணவரலாறு | ௨௫ |
| ௱௰௧ | தலவிசேடம் | ௨௬ |
| ௱௨௯ | தீர்த்தவிசேடம் | ௬௬ |
| ௱௪௧ | மூர்த்திவிசேடம் | ௬௭ |
| ௱௫௫ | பதிகம் | ௰௫ |

ஆக படலம்-௯-க்கு-திருவிருத்தம், ௬௱௪௰௨.

## முதலாவது

| பக்கம் | புராண அட்டவணை. | கவிகள். |
|---|---|---|
| ௱௬௨ | இந்திரன்பழிதீர்த்தபடலம் | ௯௭ |
| ௱௬௬ | வெள்ளையானைசாபந்தீர்த்தபடலம் | ௬௧ |
| ௨௱௮ | திருநகரங்கண்டபடலம் | ௪௭ |
| ௨௨௬ | தடாதகைப்பிராட்டி[illegible] திருவவதாரப்படல(ம் | ௮௧ |
| ௨௬௧ | திருமணப்படலம் | ௱௯௯ |

ஆக படலம்-௰௪-க்கு-கூடியதிருவிருத்தம், ௭௱௯௭.

❖❖❖❖❖❖❖❖❖❖❖❖❖❖❖❖❖❖❖❖❖❖❖❖❖❖❖❖❖❖

௨

இஃது-வீரணந்தோட்டம்,

கோவிந்தநாயகரால் அச்சுடுக்கிப்

பிரசுரஞ்செய்யலாயிற்று.





சிவமயம்.

# திருவிளையாடற்புராணம்.

## காப்பு.

சத்தியாய்ச்சிவமாகித்தனிப்பர ........ *
முத்தியானமுதலைத்துதிசெயச் ........ *
சுத்தியாகியசொற்பொருணல்குவ ....... *
சித்தியானைதன் செய்யபொற்பாதமே ...*

(இதன் பொருள்.)

சத்தியாகியும்-சிவமாகியும்-ஒப்பற்றபரமுத்தியுமானமுதற்கடவுளை(யான்) துதிசெய்ய-யானைமுகத்தையுடையசித்திவிநாயகருடைய செம்பொன்னிறமுள்ள பாதங்கள் தூய்மையான சொற்பொருள்களை - அருளிச்செய்வன.—(என்றவாறு.) *

ஒருகருமஞ்செய்யத் தொடங்குகின்றவர்கள், அது இடையூறின்றி நிறைவேறும்பொருட்டு, விநாயகமூர்த்தியைத் துதிசெய்வது சைவசமயமுறைமை யாதலின்- இந்தப்புராணஞ்செய்யத்தொடங்கிய பரஞ்சோதிமுனிவரும் விநாயகரைத்துதிசெய்தார். *

(விவரம்.)

விநாயகமூர்த்தியானவர்- கயிலாசபதியினுடைய திருவருளால் பிரணவாகாரமான யானையினிட்மாகத் திருவவதாரஞ்செய்தபோது, பரமசிவன் திருவுளமகிழ்ந்து, மகாவிஷ்ணு முதலான தேவர்களும், மற்ற உலகங்களிலிருப்பவர்களும்; யாதாவ

தொருகருமஞ்செய்யத்தொடங்கினால் முன்னதாக உன்னைப் பிரார்த்திப்பார்களாகில் அவர்கள்கருமம் இடையூறின்றி நிறைவேறக்கடவது, உன்னைப்பிரார்த்தியாமல்செய்யத்தொடங்குகின்றவர்கள் கருமம் நிறைவேறாமல், இடையூறுறக்கடவது, என்று அனுக்கிரகஞ்செய்தார். *

விநாயகபுராணம், திரு அவதாரப்படலம்.
(விருத்தம்.)

முராரியாதியதேவர்கள்முதலுமுழுதுலகினிலுள்ளோர், விராவியாதொருகாரியமாயினும் விளங்குறச்செயவென்றே, பராவியுன்னருச் சனைசெய்வோர் மனத்துறுபான்மைதந்தருளுன்னன், பிராதுசெய்பவர் காரியமூறுசெய் திடுதியென்றிவை சொல்வான் .......................... *

கைலாசபதியானவர்- திரிபுரசங்காரஞ்செய்ய ஆரோகணித்துக்கொண்டெழுந்தருளுவதற்காகப்பூமியைத் தேராகச்சமைத்த தேவர்கள்விநாயகமூர்த்தியைத்துதிசெய்யாமையினால் அந்தத்தேரின் அச்சு முறிந்தது- அதை அறிந்து தேவர்கள் விநாயகரைத் துதிசெய்ய அவருடையதிருவருளால் அந்த அச்சு செவ்வையாயிற்று. *

(ஷெபுராணம் அச்சிறுத்தபடலம்.) (விருத்தம்.)

அரியுந்தாமரை யயனுநல்லருச்சனையாற்றிட வத்தேரின், புரியுமச்சுநன் கொளிர்தரச் செவ்வையின் முற்றுவித்தது கும்பச், கரிமுகத்திறையவனருள் கண்டனர்கடவுளர்களிப்பெய்திப், பரவிநாயகநீமுனமேயெனப்புகழ்தலுமிசைந்துற்றான் .... *

இந்தமுறைமையைபற்றி ஒருகருமம் செய்யத்தொடங்குகின்றவர்கள் விநாயகமூர்த்தியைத் துதிசெய்யவேண்டுமென்பது புராணசித்தாந்தமென் றுணர்க. *

விநாயகர், யானைமுகத்துடன்திருவவதாரஞ்செய்ததற்குக் காரணம்.

கஜமுகாசுரனென்பவன் - தேவர்களாலும், மனிதர்களாலும், மிருகங்களாலும், எவ்வகைப்பட்ட ஆயுதங்களாலும், தனக்கு மரணம் நேரிடாமலிருக்க வரம் பெற்றுக்கொண்டதன்றித் தன்னைப்போல் உருவங்கொண்டவர்களால் மரணம் நேரிடாமலிருக்கவேண்டுமென்று கேட்டுக்கொள்ளாமையால் விநாயகர் மாறுமுகமாகத் திருவவதாரமானார். *

# வாழ்த்து.

ஷைபுராணம்கஜமுகனுற்பத்திப்படலம்.

வானநாட்டுறையும்பரான்மன்னுமானிடரால், தானவர்குலத்தி
வர்களால்மற்றுளோர்தம்மால், கானகத்துறுவிலங்கினாற்கருவு
யிரிறந்தே; யூனமுற்றிடாவகையுமெற்கீந்தருளென்றான் ...*

மும்மதம்பொழிகரையடிக்கைம்மலைமுகமுடையசுரன்றான், ற
ம்முருத்தனில் விளிந்திடாவரமெமைக்கேட்டிலனது தன்னாற்
றெம்முனைக்கடி நின்னையாதியர்களாற் றீர்கிலாத் தீயோனைச்,
செம்மைமிக்குயர்கரிமுகத்திறைவனாய்ச்சென்றடுகின்றேமால்.

ஆத்தும கோடிகளுக்குப் போகத்தை அருள்செய்யும் பொ
ருட்டு- நிஷ்களப் பொருளாகிய பரமசிவம், சத்தி, சிவமாகச்
சகளீகரித் திருக்கின்றமையால், சத்தியாய்ச் சிவமாகியென்று
ம், பக்குவாத்துமாக்கள் ஆசாரியருடைய அனுக்கிர கத்தினால்
அடையு மோக்ஷமாகியும், எல்லாக்கடவுளர்க்குமுதலாயு மிருப்
பதினால் பரமூர்த்தியான முதலென்றும், ஆன்மபோத வாசகத்
தினால்- துதிசெய்யப்படுவதன்றி- மெய்ப்போதவாசகத்தி னா
ல் துதிசெய்யப்படுவ தாதலால், சத்தியாகிய சொற்பொரு
ள் என்றும், சித்திவிநாயக ராதலால் அடியார்கள் வேண்டிய
பொருளைத் தருவனென்னுந் துணிவுபற்றி நல்குவ என்றும் கூ
றினார். சத்தியாகிய சொற்பொருள்என்பதற்கு - சுருங்கச்
சொல்லுதல்முதலான பத்துவகை அழகுள்ள சொற்பொரு
ளென்றும்- பொருள் கூறலாம் .......................*

# வாழ்த்து.

---

மல்குகவேதவேள்விவழங்குகசுரந்துவானம் ..........
பல்குகவளங்களெங்கும்பரவுகவறங்களின்ப...............*
நல்குகவுயிர்கட்கெல்லாநான்மறைச்சைவமோங்கிப்........*
புல்குகவுலகமெல்லாம்புரவலன்செங்கோல்வாழ்க .........*

(இ-ள்)வேதவிதிப்படிசெய்துவருகின்றயாகம்குறைவில்லா
மல் நடந்துவரக்கடவது-காலந்தப்பாமல் மேகமானது நீர்சு
ரந்து மழைபொழியக்கடவது-உலகமெங்கும்வளப்பம்பெரு
கக்கடவது-தருமம்விர்த்தியடையக்கடவது- உயிர்களுக்கெல்
லாம்இன்பம் உண்டாகக்கடவது-சைவசமயமானதுஎல்லாச்சு

மயங்கிருக்குமேலானதாயே நிலைபெற்றிருக்கக்கடவது - இவைகளை யெல்லாம் மாறுபடாமல் நடத்துகின்ற அரசனது செங்கோல் ஓங்கிவாழக்கடவது.—(எ-று) வேள்விமுதலானவை ஒன்றி லொன்று விளையுமாறாலும் அரசன்செங்கோல் மாறாதிருக்குமாகில் அவைகளுமாறாமலிருக்குமென்பது விளங்கப்-பாடல்முடிவில் (புரவலன்செங்கோல்வாழ்க) என்றார். இம்மைப்பயனையும்- மறுமைப் பயனையும் - அனுபவித்தவர்கள் பின்பு மோக்ஷம் அடைவதற்கேதுவாயிருப்பது- சைவசமயமாதலால்(நான்மறைச்சைவமோங்கிப்புல்குக)வென்றார்.

(ஆளுடையபிள்ளையார்புராணம்)

வேள்விநற்பயன் வீழ்புனலாவது, நாளுமர்ச்சனை நல்லுறுப்பாதலால், ஆளுமன்னனைவாழ்த்தியதர்ச்சனை, மூளுமற்றவைகாக்குமுறைமையால். ........................(க)

(திருவிளையாடலைக்கேட்பவர்கள்அடையும்பேறு)

திங்களணி திருவாலவாயெம்மண்ணல் திருவிளையாட்டினையன்புசெய்துகேட்போர், சங்கநிதிபதுமநிதிச்செல்வமோங்கித்தகைமைதருமகப்பெறுவர்பகையைவெல்வா, மங்கலநன்மணம்பெறுவர் பிணிவந்தெய்தார் வாழ்நாளுநனிபெறுவர் வானாடெய்திப்; புங்கவராயங்குள்ளபோகமூழ்கிப் புண்ணியராய்ச்சிவனடிக்கீழ்நண்ணிவாழ்வார்,........................*

(இ-ள்) சந்திரனை அணிந்த- திருவாலவாயில் வீற்றிருக்கும் எம்மிறைவனாகிய சோமசுந்தரக்கடவுள் செய்தருளிய திருவிளையாடல்களை அன்புடன் கேட்பவர்கள் சங்கநிதியையும் பதுமநிதியையுமுடைய குபேரசம்பத்தைப்பெற்றுப்புகழாலோங்கிவிவேகமுள்ளபுத்திரர்களைப்பெறுவார்கள்- பகையைவெல்வார்கள் - மங்களமாகிய விவாகஞ்செய்துகொள்ளப் பெறுவார்கள்- வியாதிவந்தடையப்பெறார்கள் - பூரணாயுசு உடையவர்களாவார்கள்- ( இவ்வாறு இம்மைப்பயனாகிய போகத்தை அனுபவித்து அதற்குமேல் இறுதிநாள்வரும்போது யமதண்டனைமுதலாகிய துன்பமில்லாமல்) சுவர்க்கலோகத்தில் போய்ச்சேர்ந்து தேவர்களாகி அவ்விடத்திலுள்ள போகங்களை அனுபவித்துச் சிவபுண்ணியமும் உள்ளவர்களாகிப் பரமசிவனுடைய திருவடிநிழலில்பொருந்திப் பேரின்பத்தை அனுபவித்துக்கொண்டு நீடூழியாகவாழ்வார்கள்.— எ-று) கயிலாசபதியானவர் சந்திரன்தக்கனுடைய சாபத்தினால்-சோடசகலைகளு

ளீ பதினைந்து கலைகளையிழந்துமற்றொருகலையையுமிழப்பதற்கு முன்தம்மைச்சரணமென்றடையக்கிருபைகூர்ந்து - அவனிடத்திலிருந்த ஒருகலையையும் தக்கன்சாபந்தொடராத வண்ணம் எடுத்துத்தம்முடையதிருமுடியில் அணிந்து சந்திரனுக்கு நாளுக்குநாள் கலைவளரும்படி அனுக்கிரகஞ் செய்தவராதலால் - தம்முடையதிருவிளையாடலை அன்புடன்கேட்பவர்களுக்குக் கிருபை செய்வாரென்பது விளங்கத் திங்களணிதிருவாலவா யென விசேடித்தார். *

(தக்ஷகாண்டத்தில் - சந்திரசாபப்படலம் - விருத்தம்)

தீர்ந்தனவன்றியேதிங்கட்கன்னிடை, ஆர்ந்திடுகலையினையங்கையாற்கொளா, வார்ந்திடுசடைமிசையயங்கச்சேர்த்தினன், சார்ந்திலதிவ்வழித்தக்கன்சாபமே ........... ....... *

சங்கநிதி - பத்மநிதி - இவ்விரண்டுநிதியும் - எடுக்க எடுக்கக்குறையாதநிதிகளாயுள்ளவைகளாய்ச் சங்காகாரமான ஒருபிலமும் பத்மாகாரமான ஒருபிலமுமாய்க்குபேரனிடத்திலிருக்கின்றவைகளாம். (உ)

(கடவுள்வணக்கம் - சிவத்தைப்போற்றல்.)

(வேறு.)

வென்றுளேபுலன்களைந்தார்மெய்யுணருள்ளந்தோறுஞ் ...*
சென்றுளேயமுதமூற்றுந்திருவருள்போற்றியேற்றுக் ...*
குன்றுளேயிருந்துகாட்சிகொடுத்தருள்கோலம்போற்றி... *
மன்றுளேமாறியாடுமறைச்சிலம்படிகள்போற்றி..... ....*

(இ - ள்) உட்புலனைந்தையும் வென்று நீக்கினவர்களுடைய உண்மையை உணர்கின்ற உள்ளந்தோறுஞ்சென்று அவர்கள் அறிவினில் பேரின்பமாகிய அமுதத்தைச்சொரிகின்ற திருவருளைப்போற்றுகிறேம். வெள்ளிமலைபோன்ற ரிஷபவாகனருடராய் வந்து தரிசனங்கொடுத்தருளுகிற திருக்கோலத்தைப் போற்றி செய்கிறேம், வெள்ளியம்பலத்தில்மாறியாடிய வேதமாகிய சிலம்புகளை யணிந்த திருவடிகளைப் போற்றிசெய்கிறேம் — (எ - று) [இந்தப்பாடலின் தத்துவார்த்தமும் இது போலிருக்கின்ற பாடல்களின் தத்துவார்த்தங்களும் ஆசாரியருடைய திருவருளால் அறியத்தக்கவைகளாம்.] (ங)

(சத்தியைப்போற்றல்.)

(வேறு.)

கரும்புமூரல் கடிமலர்ப்பூங் குழல்போற்றி யுத்தரியத்தொடி

த்தோள்போற்றி, கரும்புருவச் சிலைபோற்றி கவுணியர்க்குப்
பால்சுரந்த கலசம்போற்றி, யிரும்புமனங் குழைத்தென்னை
யெடுத்தாண்ட வங்கயற்க ணெம்பிராட்டி, யரும்புமிளநகை
போற்றியாரண நூபுரஞ்சிலம்புமடிகள்போற்றி ..... ..... *

(இ-ள்) இரும்பைப்போல் கடினமாகிய மனதைக் குழையச்செய்து அடியேனைப் பிறவியாகிய குழியினின்றும் எடுத்தாண்டுகொண்ட எம்பிராட்டியாகிய மீனாக்ஷியம்மையினுடைய வண்டுகளிசைபாடுகின்றமணந்தங்கிய பூமாலையணிந்த அழகியகுழலைப் போற்றிசெய்கிறேன்- உத்தரீயமும் தொடிகளும் அணியப்பட்ட தோள்களைப் போற்றிசெய்கிறேன்- வில்லைப்போல் வளைவாயிருக்கும் புருவங்களைப் போற்றிசெய்கிறேன்- திருஞானசம்பந்தசுவாமிகளுக்கு ஞானப்பால் சுரந்தருளிய பொற்கலசம்போன்ற கொங்கைகளைப் போற்றிசெய்கிறேன் - பிரகாசிக்கிற புன்னகையைப் போற்றிசெய்கிறேன்- வேதமாகிய நூபுரங்கள் ஒலித்துக்கொண்டிருக்கும் திருவடிகளைப் போற்றிசெய்கிறேன்.—(எ-று) (ச)

(சொக்கலிங்கமூர்த்தி துதி.)

(வேறு)

பூவண்ணம்பூவின்மணம்போலமெய்ப்போதவின்ப .. ..., *
மாவண்ணமெய்கொண்டவன்றன்வலியாணைதாங்கி..... ...*
மூவண்ணறன்சந்நிதிமுத்தொழில்செய்யவாளா .... ....*
மேவண்ணலன்னான்விளையாட்டின்வினையைவெல்வாம் .... *

(இ-ள்) பூவின்வண்ணமும் பூவின்மணமும்போலமெய்ப்போதானந்தமாகிய பெருமைபொருந்திய அழகியதிருமேனிகொண்டவன்- தன்னுடையசத்தியின் ஏவலைப்பெற்றுப்பிரமவிஷ்ணு ருத்திரர்களாகிய திரிமூர்த்திகளும்தன்சந்நிதியில் சிருஷ்டி- திதி- சங்காரமென்னும் முத்தொழில்களையுஞ்செய்ய அசைவற்றிருக்குங்கடவுள் அந்தக்கடவுளுடைய திருவிளையாட்டினால்எமதுவினையைவெல்லுகிறோம். (எ-று) (ரு)

(பரசிவம்.)

அண்டங்களெல்லாமணுவாகவணுக்களெல்லா, மண்டங்களாக
ப்பெரிதாய்ச்சிறிதாயினானு, மண்டங்களுள்ளும்புறம்புங்கரி
யாயினானு, மண்டங்களின்றுந்துணையென்பரறிந்தநல்லோர் .*

(இ-ள்) அண்டங்களெல்லாம் அணுத்தன்மையையடையும்படிபெ

ரிதானவனும் அணுக்களெல்லாம் அண்டங்களின் தன்மையை அடையும்படி சிறிதானவனும் அவ்வண்டங்களி னுள்ளும்புறத்தும் சாக்ஷியாகநின்றவனும் அண்டங்களையெல்லாம் பெற்ற உமையவளுடைய கணவனென்று எல்லா நூல்களையும் கற்றுணர்ந்தசான்றோர்சொல்லுவார்கள்.—(எ-று) (சு)

(வேறு) (பரசிவம்.)

பூவினாயகன்பூமகணாயகன் ........................ *
காவினாயகனாதிக்கடவுளர்க் ........................ *
காவிநாயகனங்கயற்கண்ணிமா ........................ *
தேவிநாயகன்சேவடியேத்துவாம் ........................ *

(இ-ள்.) தாமரைப்பூவில்வீற்றிருக்கும்பிர்ம்மதேவனுக்கும் லட்சுமிநாயகனாகியமகாவிஷ்ணுவுக்குங்கற்பகச் சோலைசூழ்ந்தபொன்னுலகத்துக்கு இறைவனாகியதேவேந்திரனுக்குப் இவர்களேயன்றிமற்றுமுள்ள தேவர்களுக்கும் உயிர்போலிராநின்ற முதற்கடவுளாயும்மீனாக்ஷியம்மையின் கணவனாகியும் விளங்காநின்ற சொக்கநாத சுவாமியின்சிவந்த நிறமுள்ள பாதங்களைத் தோத்திரஞ் செய்கின்றோம்.—(எ-று) (எ)

(மீனாக்ஷியம்மை துதி.)

(வேறு)

பங்கயற்கண்ணரியபரம்பரனுருவேதனக்குரியபடிவமாகி, யிங்கயற்கனகனுலகத்தெண்ணிறந்த சராசரங்களீன்றுந்தாழாக், கொங்கயற்கண்மலர்க்கூந்தற் குமரியாண்டியன்மகள் போர்க்கோலங்கொண்ட, வங்கயற்கணம்மையிரு பாதப்போதெப்போதுமகத்துள்வைப்பாம் ........................ *

(இ-ள்) பிர்ம்மதேவனும் காணுதற்கரிய பரமசிவனுடைய திருமேனியே தனக்குரிய திருமேனியாகக்கொண்டு - இடமகன்ற தாகிய உலகங்களையும் அளவற்ற சராசரங்களாகிய ஆத்மகோடிகளையும் - தனக்குப்புறம்பாகத் தோற்றும்படி யீன்றுந்தாழ்வுபடாத யோதானந்தமாகிய ஸ்தனங்களையும், இருள்போலக் கருமைநிறம்பெற்று மலர்கள்சூடிய அளக பாரத்தையுமுடைய குமரியாகிய - மலயத்துவசபாண்டியராசன் புத்திரியாகத் திருமேனிகொண்டு வந்த மீனாக்ஷியம்மையின் செந்தாமரை மலர்போன்ற இரண்டுதிருவடிகளையும் எக்காலத்தும் வணங்குகிறோம்.—(எ-று) (அ)

(சபாநாதர் துதி.)

(வேறு.)

உண்மையறிவானந்தவுருவாகியெவ்வுயிர்க்குமுயிராய்நீரின் *
றண்மையனல்வெம்மையென தனையகலாதிருந்துசராசரங்க
ளீன்ற, பெண்மையுருவாகியதன் னானந்தக்கொடிமகிழ்ச்சிபெ
ருகயார்க்கு, மண்மையதா யம்பலத்து ளாடியருள்பேரொளி
யையகத்துள் வைப்பாம் .......... *

(இ-ள்) மெய்ஞ்ஞானாநந்தமே திருமேனியாகக்கொண்டு எல்லாவுயிர்களுக்கு முயிராகி நீரினிடத்திருக்கும் குளிர்ச்சியைப்போலவு நீயினிடத்திருக்கும்வெப்பத்தைப்போலவும் தம்மைவிட்டுநீங்காமலிருந்து சராசரமாகிய உயிர்களையெல்லாம் பெற்ற பெண்வடிவமாகிய தம்முடைய ஆனந்தக்கொடியென்னும் சிவகாமியம்மைக்குமகிழ்ச்சிபெருகத்தக்கதாகயாவருக்கும் எளிதாய்ப்பொன்னம்பலத்தில் நடனஞ்செய்தருளியசோதிசொரூபமுள்ளநடேசமூர்த்தியை யெமது சித்தத்தில்வைத்துஇடைவிடாது சிந்திக்கின்றோம்.—(எ-று) (௬)

(சோமசுந்தரக்கடவுள் துதி.)

சடைமறைத்துக் கதிர்மகுடந்தரித்துநறுங் கொன்றையந்தார்
தணந்துவேப்பந், தொடைமுடித்துவிடநாகக்கலனகற்றி ம
ணிக்கச்சுடர்ப்பூணேந்தி, விடைநிறுத்திக் கயலெடுத்து வழுதி
மருமகனாகிமீனநோக்கின், மடவரலைமணந்துலகமுழுதாண்ட
சுந்தரனைவணக்கஞ்செய்வாம் .......... *

(இ-ள்) சடைமுடியைமறைத்துஒளிநிறைந்த ரத்தினமகுடந்தரித்துவாசனைதங்கிய கொன்றைப்பூமாலையைநீக்கி வேப்பம்பூமாலையை அணிந்து விஷத்தையுடையசர்ப்பாபரணங்களை நீக்கிப்பிரகாசம்பொருந்தியரத்தினாபரணங்களைப்பூண்டு - ரிஷபக்கொடியைவிட்டுமீனக்கொடியை எந்தி-மீனாக்ஷியாகியதடாதகைப் பிராட்டியாரைத் திருக்கல்யாணஞ்செய்தருளி மலயத்துவசபாண்டியராசன் மருமகனாகிச் சௌந்தர பாண்டியனென்னும் பெயரும்பெற்று-உலகங்களை யெல்லாம் ஆண்டுகொண்டிருந்த சோமசுந்தரக்கடவுளைப் பணிகின்றோம். (௭)

(தடாதகைப்பிராட்டியார் துதி.)

செழியர்பிரான்றிருமகளாய்க்கலைபயின்றுமுடி புனைந்துசெங்

கோலோச்சி, முழுதுலகுஞ் சயங்கொண்டு திறைகொண்டு
நந்திகணமுனைப்போர்சாய்த்துத்,தொழுகணவற்கணிமணமா
லிகைசூட்டித்தன்மகுடஞ்சூட்டிச்செல்வர், தழைவுறுதன்ன
ரசளித்தபெண்ணரசியடிக்கமலந்தலைமேல்வைப்பாம்.....*

(இ-ள்) மலயத்துவச பாண்டியன் புத்திரியாய்த் திரு அவ
தாரஞ்செய்து வேதாகமமுதலாகிய கலைகளை யெல்லாம் ஓதி
யுணர்ந்து மகுடாபிஷேகஞ் செய்யப் பெற்றுச் செங்கோல்
செலுத்தி உலகங்களையெல்லாம்வென்றுதிறைவாங்கிப்(பின்பு
கயிலாயத்துக்குப் போய்ப் போர்செய்யவந்த) நந்தி கணங்க
ளைப்போரில் ஓடச்செய்துசெயம்பெற்றுப்பிர்ம்மவிஷ்ணுக்க
ள்முதலாகியதேவர்களெல்லாம்,தொழுகின்றதன்கணவனுகிய
கயிலாசபதிக்குத் திருக்கல்யாணமாலை தரித்துத் தன் மகுடத்
தையுஞ் சூட்டிச் செல்வமிகுந்த தன் அரசாட்சியையுங் கொ
டுத்த பெண்ணரசியாகிய தடாதகைப்பிராட்டியின் திருவடித்
தாமரைகளை எம்முடைய சிரசின் மேல் தரித்துக் கொள்
வாம்.—(எ-று) (௰க)

(கான்மாறியாடியவர் துதி.)

பொருமாறிற்கிளர்தடந்தோளொருமாறன்மனங்கிடந்தபுழுக்
கமாற, வருமாறிற்கண்ணருவிமாறுதுகளிப்படையமண்ணும்
விண்ணு, மொருமாறிப்பவக்கடல்வீழ்ந்தாசலெனத்தடுமாறியு
ழலுமாக்கள், கருமாறிக்கதியடையக்கான்மாறி நடித்தவரைக்
கருத்துள்வைப்பாம்..............................*

(இ-ள்) போர் செய்யு முறைமையில்கிளர்ச்சியுறுகின்றபெ
ரியதோளையுடையராசசேகரபாண்டியராசன் மனதி லுண்டா
கியவருத்தம் நீங்கவும் வருகின்ற ஆற்றுவெள்ளம்போல்அம்ம
ன்னவன் கண்ணிலிருந்து ஆனந்தவெள்ளம்மாறுமல் பெருகி
க் களிப்படையவும்மேலேபோவதும் கீழேவருவதுமாகியஊ
சலைப்போல் தேவரூபங்கொண்டு சுவர்க்கமுதலாகியபதங்க
ளிற்செல்வதும் பின்னும் இவ்வுலகத்தேமனித உருவமுதலாகி
ய உருவங்கொண்டுவருவதுமாகிய பிறவிக்கடலுள் ஆழ்ந்து
மனந்தடுமாறி உழலுகின்றமனிதர்கள் அப்பிறவியைநீங்கிமோ
க்ஷமடையவும் கால்மாறியாடிய சோமசுந்தரக்கடவுளையெம்மு
டைய இருதயத்தில்வைப்பாம்.—(எ-று) (௰உ)

(தக்ஷிணாமூர்த்தி துதி.)

கல்லாலின்புடையமர்ந்துநான்மறையா றங்கமுதற் கற்றகேள்வி, வல்லார்களொல்வருக்கும் வாக்கிறந்தபூரணமாய்மறைக்கப்பாலா, யெல்லாமா யல்லது மாயிருந்ததனையிருந்தபடியிருந்துகாட்டிச், சொல்லாமற்சொன்னவரைநினையாமனினைந்துபவத்தொடக்கைவெல்வாம் ........................ *

(இ-ள்) கல்லாலமரத்தினிடத்தில் வீற்றிருந்து நான்குவேதங்களையும் ஆறுவேதாங்கங்களையுங்கற்ற கேள்விவல்லவர்களாகிய சனகர்-சனந்தனர்-சனாதனர்-சனற்குமாரர் என்னும்முனிவர்களுக்கு வாக்குக்கெட்டாத பரிபூரணமாய் வேதங்களுக்கெட்டாததாய் எல்லாப்பொருளுமாய் அப்பொருளல்லாததுமாய் இருந்த உண்மையை அது நிர்விகாரமா யிருந்தது போலத் தாமும் அசைவறவிருந்து காட்டி வாக்கினாற் சொல்லாமல், குறிப்பாற்சொல்லிய தக்ஷிணாமூர்த்தியை ஒருக்கால் மறந்து பின்பு சிந்தியாமல் இடைவிடாதுசிந்தித்துப் பிறவித்தொடர்ச்சியாகிய வினையைவெல்லுகின்றோம்.—(எ-று) (யரு)

(சித்திவிநாயகர் துதி.)

உள்ளமெனுங்கூடத்திலூக்கமெனுந்தறிநிறுவியுறுதியாகத் *தள்ளரியவன்பென்னுந் தொடர்பூட்டியிடைப்படுத்தித் தறுகட்பாசக், கள்ளவினைப்பசுபோதக்கவளமிடக்களித்துண்டுகருணையென்னும், வெள்ளமதம்பொழிசித்திவேழத்தைநினைந்துவருவினைகடீர்ப்பாம் ........................ *

(இ-ள்) எமதுஉள்ளமாகிய கூடத்தில் மனவுறுதியாகிய கட்டுத்தறியை நாட்டித் தள்ளக்கூடாத அன்பென்னுஞ் சங்கிலியை உறுதியாகப்பூட்டி அதனிடத்தில்கட்டிக்கொடிய ஆணவமல சம்பந்தமான கள்ளவினையையுடைய சீவபோதமாகிய கவளங்கொடுக்க அதனைக் களிப்புடன் உண்டு கிருபையாகிய மதவெள்ளத்தைப் பொழிகின்ற யானையாகிய சித்திவிநாயகரைத் தியானித்து வருகின்ற வினைகளைத் தீர்க்கின்றோம்.—(எ-று) (யசா)

(சுப்பிரமணியர் துதி.)

கறங்குதிரைக்கருங்கடலுங்கார்வுணப் பெருங்கடலுங்கலங்கக்கார்வந், துறங்குசிகைப்பொருப்புஞ்சூரப்பொருப்பும்பிளப்பமறையுணர்ந்தோராற்றும், அறங்குலவுமகத்தழலுமவுணமடவார்வயிற்றினழலுமூள, மறங்குலவு வேலெடுத்தகுமரவேள்சேவடிகள்வணக்கஞ் செய்வாம் ........................ *

(இ-ள்) ஒலிக்காநின்ற அலைகளையுடைய கரியகடலும் கருமைநிறமுள்ள அவுணராகிய பெரியகடலும் கலங்கவும், மேகம்வந்து உறங்கும்படியான சிகரத்தையுடைய கிரவுஞ்சமலையும் சூரனுடைய மார்பாகிய மலையும் பிளக்கவும், வேதங்களையுணர்ந்தோராகிய பிராமணர்கள் செய்கின்ற வேள்வித்தீயும், அவுணமாதர்கள் வயிற்றிலுண்டாகும் தீயும், சிகைவிட்டெரியவும் வீரமே விளங்கிக்கொண்டிருக்கும் ஞானசத்தியாகிய வேலாயுதத்தைத் திருக்கரத்தில் எடுத்தருளிய சுப்பிரமணியசுவாமியின் சிவந்தபாதங்களைப் பணிகின்றேம்.—(எ-று) (௰௫)

(சரஸ்வதிதுதி)

பழுதகன்றநால்வகைச்சொன்மலரெடுத்துப்பத்திபடப் பரப்பித்திக்கு, முழுதகன்று மணந்துசுவை யொழுகியணிபெற முக்கண்மூர்த்திதாளிற், றொழுதகன்றவன்பெனுநார்தொடுத்தலங்கல்சூட்டவரிச்சுரும்புந்தேனுங், கொழுதகன்றவெண்டோட்டுமுண்டகத்தாளிடிமுடிமேற்கொண்டுவாழ்வாம்.... ....*

(இ-ள்)குற்றம்நீங்கியபெயர்ச்சொல்-வினைச்சொல்.இடைச்சொல்-உரிச்சொல்- என்னும்நால்வகைச்சொற்களாகியமலர்களையெடுத்துப்பத்தியுறப்பரப்பிஎட்டுத்திசைகளிலுஞ்சென்றுமணம்வீசிமதுரமொழுகி அலங்காரம்பொருந்த அகன்றஅன்பாகியநாரினால்மாலையாகத், தொடுத்துத் திரிநேத்திரங்களையுடையசோமசுந்தரக்கடவுள் பாதங்களில் பணிந்துதரிப்பதற்குவரிபொருந்தியசுரும்பென்னும்வண்டுகளும்தேனென்கிறவண்டுகளும் குடைதலால்மலர்ந்த இதழ்களையுடைய வெள்ளைத்தாமரைமலரின்மேல்வீற்றிருக்கும்சரஸ்வதியின்திருவடிகளை எமதுமுடிமேல் சூட்டிக்கொண்டு வாழ்வாம்.—(ஏ-று) (௰௬)

(வேறு)

(திருநந்திதேவர்துதி.)

வந்திறையடியிற்றாழும் வானவர்மகுடகோடி, பந்தியின்மணிகள்சிந்தவேத்திரப்படையாற்றுக்கி,யந்தியும்பகலுந்தொண்டரலகிடுங் குப்பையாக்கு; நந்தியெம்பெருமான்பாத நகைமலர்முடிமேல்வைப்பாம்.............. ..........*

(இ-ள்)கயிலாயகிரியில்வந்துபரமசிவனுடைய திருவடிகளில் வணங்குகின்ற தேவர்கள் (நெருக்கங்கொள்ளாதவண்ணம்) அவர்களுடைய கிரீடங்களில் பத்திபத்தியாகப் பதித்திராநின்றரத்தினங்கள் சிந்தும்படி தம்முடையகையிலிருக்கும் பிரம்

பினால் அடித்து அந்திப்பொழுதிலும் பகற்பொழுதிலும் அடியார்கள் திருவலகிடும்படியான குப்பையாக்குகின்ற எம்முடைய பெருமானாகிய நந்திதேவருடைய திருவடித்தாமரைமலர்களை முடிமேல்தரித்துக்கொள்வோம்.—(எ-று) (௰௭)

(திருஞானசம்பந்தசுவாமிகள் துதி.)

கடியவிழ்கடுக்கைவேணித்தாதைபோற்கனற்கண்மீனக் .. ..*
கொடியனைவேவநோக்கிக்குறையிரந்தனையான்கற்பிற் ....*
பிடியனநடையாள்வேண்டப்பின்னுயிரளித்துக்காத்த ....*
முடியணிமாடக்காழிமுனிவனைவணக்கஞ்செய்வாம் ......*

(இ-ள்) வாசனைமிகுந்த கொன்றைப்பூமாலையணிந்த சடைமுடியையுடைய தமதுபிதாவாகிய பரமசிவன் மீனக்கொடியோனாகிய மன்மதன் எரியும்படி தீக்கண்ணாற்பார்த்துப்பின்பு அவன்மனைவியாகியரதிதேவிவந்துவணங்கிமுறையிட்டுவேண்ட அந்தமன்மதனுக்கு உயிர் கொடுத்து ரக்ஷித்தருளியதுபோலத்-தாம் எழுந்தருளியிருந்த திருமடத்தில் சமணர்களிட்டதீயை யேவி அந்தத்தீயாகிய சுரவெப்பத்தில் மீனக்கொடியுடைய பாண்டியன் வருந்தச்செய்து அதன்பின்பு அவன் மனைவியாகிய கற்புள்ள பெண்யானையினடைபோன்ற நடையினையுடைய மங்கையர்க்கரசியார்வந்து வணங்கிக் குறையிரப்பத் (திருவுளமிரங்கித் திருநீற்றுப்பதிக மோதிப் பாண்டியன்மேல் விபூதியைத்தடவி வெப்பநோயைநீக்கி) அவனுயிரைக்கொடுத்துக்காத்த- சிகரங்கள்பொருந்திய வீடுகள்நெருங்கிய சீகாழியில் திருவவதாரஞ்செய்த திருஞானசம்பந்தசுவாமிகளைவணங்குகிறோம்.—(ஏ-று) (௰௮)

(அப்பர்சுவாமிகள் துதி.)

அறப்பெருஞ்செல்விபாகத்தண்ணலைந்தெழுத்தாலஞ்சா .. *
மறப்பெருஞ்செய்கைமாறுவஞ்சகரிட்டநீல ............*
நிறப்பெருங்கடலும்யார்க்குநீந்துதற்கரியவேழு ........*
பிறப்பெனுங்கடலுநீத்தபிரானடிவணக்கஞ்செய்வாம் ....*

(இ-ள்) பார்வதிதேவியை இடப்பாகத்தில்வைத்தருளிய பரமசிவனுடைய பஞ்சாக்ஷரத்தினால் மிகுந்த பாபச்செயல்மாறாத சமணர்கள் கல்லிற்கட்டியிட்ட பெரியகருங்கடலையும்யாவர்க்கும் நீந்துதற்கரிய எழுபிறப்பாகிய கடலையும் எவ்வாறுநீந்துவோமென்று பயமுறாமல் எளிதில் நீந்திய திருநாவுக்கரசுசுவாமிகளின் திருவடிகளை வணங்குவோம்.—(எ-று) (௰௯)

(சுந்தரமூர்த்திசுவாமிகள் துதி.)

அரவகல்குலார்பாலாசைநீத் தவர்க்கேவீடு, தருவமென்றள வில்வேதஞ்சாற்றியதலைவன்றன்னைப், பரவைதன்புலவி தீர்ப் பான்கழுதுகண்படுக்கும்பாறு, விரவினிற் றூதுசெண்டோ னிணையடிமுடிமேல்வைப்பாம்.......................*

(இ-ள்) மாதர்களிச்சையை நீங்கினவர்களுக்கேமோக்ஷந்த ருவோமென்று அளவில்லாத வேதங்களில்சொல்லிய பரமசி வனைப்பரவைநாச்சியாருடைய ஊடலைத் தீர்க்கும்பொருட்டு ப்பேய்களும் நித்திரைசெய்யத்தக்க அர்த்தராத்திரியில் தூ துபோம்படி அனுப்பிய சுந்தரமூர்த்தி சுவாமிகளுடைய இர ண்டுதிருவடிகளையும்எம்முடையசிரசின்மேல் தரித்துக்கொள் வோம்.—(எ-று) (௨௰)

(மாணிக்கவாசகசுவாமிகள் துதி.)

எழுதருமறைகடேறாவிறைவனையெல்லிற்சங்குற்........*
பொழுதறுகாலத்தென்றும்பூசனைவிடாதுசெய்து.......*
தொழுதகைதலைமேலேறத்தாரும்புகண்ணீருண்மூழ்கி.....*
யழுதடியடைந்தவன்பனடியவர்க்கடிமைசெய்வாம்.......*

(இ-ள்) எழுதுதற்கரிய வேதங்களாலும் இத்தன்மையனெ னத்தெளியப்படாதபரமசிவனைப் பகற்பொழுதிலும் இராப் பொழுதிலுமாகிய ஆறுகாலத்தும் நாள்தோறும் இடைவிடா துபூசைசெய்து தொழுதகைகள் தலையின்மேலேறவைத்துக் கொண்டு (துதிசெய்து) அன்பினால் பெருகாநின்ற ஆனந்தக் கண்ணீருள் மூழ்கிப்பிரிவாற்றாமையால் அழுதுதிருவடி நிழலி ல்சேர்ந்த அன்பராகிய மாணிக்கவாசக சுவாமிகளின் அடிய வர்களுக்கு யாம் பத்திசெய்வாம்.—(எ-று) (௨௧)

(சண்டேசநாயனார்முதலாகியதிருத்தொண்டர்கள்துதி)

தந்தைதாளொடும்பிறவித்தாளறிந்துதிருத்தளிருதாளைச்சே ர்ந்த,மைந்தர்தாள்வேதநெறிசைவநெறிபத்திநெறிவழாதுவா ய்மெய், சிந்தைதானாளடிக்கேசெலுத்தினராய்ச்சிவானுபவ ச்செல்வராகிப், பந்தமாற்றொடக்கறுத்ததிருத்தொண்டர்தா ள் பரவிப்பணிதலசெய்வாம்,.......................*

(இ-ள்) தம்முடையபிதாவின் தாள்களுடன் பிறவித்தாளை யும்வெட்டிடத்தறித்து நடனமூர்த்தியாகிய பரமசிவனுடையதி ருவடிகளைச்சேர்ந்த சண்டேசநாயனாருடைய பாதங்களையும் வைதிகநெறியிலும் சைவநெறியிலும் பத்திமார்க்கத்திலு மா

றுபடாமல் நடந்து மனவாக்குக்காயங்களின் செய்கைகளாகிய சிந்தித்தல் - துதிசெய்தல் - பூமாலைதொடுத்தல் முதலாகிய தொண்டுகளைப் பரமசிவனது திருவடிக்கேசெலுத்திச் சிவானுபவம்பெற்றிருக்குமற்றை அடியார்பாதங்களையும் பணிந்து போற்றிசெய்வோம்.—(எ-று) (௨௨)

(முதனூல்வழி.—வேறு)

அண்ணல்பாற்றெளிந்தநந்தியடிகள்பாற்சனற்குமார...... *
னுண்ணிறையன்பினுய்ந்துவியாதனுக்குணர்த்தவந்தப்.... *
புண்ணியமுனிவன்சூதற்கோதியபுராணமூவா........... *
றெண்ணியவிவற்றுட்காந்தத்தீசசங்கிதையின்மாதோ..... *

(இ-ள்) பரமசிவனிடத்தில்உபதேசம்பெற்றுக்கொண்ட நந்திதேவரிடத்தில் சனற்குமாரமுனிவர் உள்ளத்தில் நிறைந்த அன்பினால் உபதேசகிரமமாக ஓதியுணர்ந்து வியாசமுனிவருக்குப் போதிக்க அந்தப்புண்ணிய சொரூபராகிய வியாசமுனிவரானவர் சூதமுனிவருக்கு அருளிச்செய்த புராணங்கள் பதினெட்டாம்-எண்ணப்பட்ட அந்தப் பதினெண்புராணங்களுள் ஒன்றாகிய காந்தத்தில்சொல்லப்பட்ட சங்கர சங்கிதையில்.—(எ-று) (௨௩)

(நூல்செய்தற்குக்காரணம்.)

அறைந்திடப்பட்டதாகுமாலவாய்ப்புகழ்மையந்தச்...... *
சிறந்திடும்வடநூறன்னைத்தென்சொலாற்செய்தியென்றிங்.. *
குறைந்திடும்பெரியோர்கூறக்கடைப்பிடித்துறுதியிந்தப். *
பிறந்திடும்பிறப்பிலெய்தப்பெறுதுமென்றுள்ளந்தேறா... *

(இ-ள்) திருவாலவாய்ப்புகழ்ச்சி சொல்லப்பட்டதாம்- அந்தச்சிறப்புற்றதாகியசமஸ்கிருதபுராணத்தைத்தமிழ்ப்புராணமாகச்செய்யென்று அந்தஸ்தலத்தில்வாசமாயிருக்கும் பெரியோர்கள்சொல்ல அவ்வார்த்தையை ஞாபகத்தில் வைத்துக்கொண்டு ஆன்மலாபத்தையிந்தப்பிறப்பில்அடையப் பெறலாமென்றுமனந்தெளிந்து.(எ-று) (௨௪)

(மொழிபெயர்த்தவிதம்.)

திருநகர்தீர்த்தமூர்த்திச்சிறப்புமூன்றந்தமூர்த்தி........ *
யருள்விளையாடலெட்டெட்டருச்சனைவினையொன்றாக..... *
வரன்முறையறுபத்தெட்டாமற்றவைபடலமாக......... *
விரிமுறைவிருத்தச்செய்யுள்வகைமையால்விளம்பலுற்றேன் *

(இ-ள்) ஸ்தலவிசேஷம் தீர்த்தவிசேஷம் மூர்த்திவிசேஷம் என்பது மூன்று அந்தமூர்த்தியானவர் கிருபையினால் செய்தருளிய திருவிளையாடல் அறுபத்துநாலு அருச்சனைவினையொன்றுஆக அறுபத்தெட்டுவரன் மூறையாம் அந்த வரன்முறைமைப்படி அறுபத்தெட்டுப்படலமாக அமைத்து விரிமுறையாக விருத்தமாகிய செய்யுட் பேதங்களால் சொல்லத்தொடங்கினேன்.—(எ-று) (உ௫)

(அவையடக்கம்.)

நாயகன் கவிக்குங்குற்றநாட்டியகழகமாந்தர் .......... *
மேயவத்தலத்தினோர்க்கென்வெள்ளறிவுரையிற்குற்ற ...... *
மாயுமாறரிதன்றேனுநீர்பிரித்தன்னமுண்ணுந் .......... *
தூயதீம்பால்போற்கொள்கசுந்தரன்சரிதந்தன்னை ....... *

(இ-ள்) சோமசுந்தரக்கடவுள் கூறியபாடலுக்குங் குற்றங் கூறியசங்கப்புலவர்கள் பொருந்தியஅம்மதுரை நகரிலிருப்பவர்க்கு என்னுடையவெள்ளறிவினாற் சொல்லும்சொற்களில் குற்றம் ஆய்வது அரிதல்ல வானாலும் (நீரையும் பாலையும் ஒன்றாகக் கலந்துவைத்தால்) அன்னப்பக்ஷியானது நீரைப் பிரித்துவிட்டுப் பாலைமாத்திரம் உண்பதுபோல் (குற்றங்களை நீக்கிவிட்டுச்) சோமசுந்தரக்கடவுள் சரித்திரமாகிய திருவிளையாடலை மாத்திரம் ஏற்றுகொள்ளக்கடவர்கள்.—(எ-று) (உ௬)

சுவைக்கொழுந்தமுதுச்சுவைகண்டவுனிமையோர் ......... *
சுவைக்கவின்னமுதாயினதுளக்கமில்சான்றோர் ........... *
ரவைக்களம்புகுந்தினியவாயால்வாயுடையார் ........... *
செவிக்களம்புகுந்தேறுவசிறியனேன்பனுவல் ........... *

(இ-ள்) பிரிவாகியசிகைவிட்டெரிகின்ற அக்கினி தேவனுடையநாவினால் உரிசைகண்டஉணவானது தேவர்கள் உண்ண இனிதாகிய அமுதம்போலாகின்றன அதுபோல் கல்வி யுணர்ச்சியில்லாத எளியேன் சொல்லிய பாடல்கள் உறுதிப்பாட்டினையுடைய சான்றோர் அவையினிடத்துச்சென்று குற்றங்களையெல்லாம் நீங்கி மதுரமுள்ள சுவைகளாய்ச் சோமசுந்தரக் கடவுளுடையதிருச்செவிகளிடத்துச் சென்று அடைவன. (எ-று) (உ௭)

பாயவாரியுண்டுவர்கெடுத்துலகெலாம்பருகத் ........... *
தூயவாக்கியகாரொணச்சொற்பொருடெளிந்தோ ......... *

ராயகேள்வியர் துகளறுத்தாலவாயுடைய . . . . . . . . . . . . . . *
நாயனார்க்கினிதாக்குப நலமிலேன்புன்சொல் . . . . . . . . . . . *

(இ-ள்) மேகங்கள்,பரந்தசமுத்திர நீரையுண்டு அந்நீரிலுள்ள உப்பினைக்கெடுத்து உலகத்தா ரெல்லாரும் உண்ணத்தக்கதாகப்பரிசுத்தமாக்குதல்போல்சொற்பொருள் தெளிந்தவர்களாகியசான்றோர்கள் கல்விநலமில்லாதஎன்னுடையபுன்சொல்லில்உண்டாகியகுற்றங்களைநீக்கிச்சோமசுந்தரக்கடவுளுக்கு இனியதாகச்செய்வார்கள்.—(எ-று) (௨௮)

அல்லையீதல்லையீதெனமறைகளுமன்மைச் . . . . . . . . . . . . *
சொல்லினாற்றுதித்திளைக்குமிச்சுந்தரனாடற் . . . . . . . . . . . . *
கெல்லையாகுமோவென்னுணர்வையென்செய்கோவிதனைச் . . . *
சொல்லுவேனெனுமாசையென்சொல்வழிகேளா . . . . . . . *

(இ-ள்) இதுவுமல்லை இதுவுமல்லையென்று வேதங்களும் அன்மைச்சொல்லினால் துதிசெய்து இளைப்பதேயன்றிக் காணக்கூடாதசோமசுந்தரக்கடவுளுடைய திருவிளையாடலைச் சொல்லுதற்கு என்னுணர்வானது அளவுபடுமோ படாது என்னும் எண்ணத்தினால் நான் சும்மா இருந்தாலும் இதனையான் சொல்லுவேனென்று என் உள்ளத்தில் உண்டாகின்ற ஆசையானது யான்சொல்லு மார்க்கத்தைக் கேட்கவில்லை ஆதலால்நானென்னசெய்வேன்.—(எ-று) (௨௯)

(அரங்கேற்றிடம்.)

அறுகாற்பீடத்துயர்மாலாழிகடைந்தமிர்தையரங்கேற்றுமா
போ, லறுகாற்பேடிசைபாடுங் கூடன்மான்மியத்தையருந்த
மிழாற்பாடி,யறுகாற்பீடுயர்முடியார்சொக்கேசர்சன்னிதியில
மரர்சூழ, மறுகாற்பீடத்திருந்துபரஞ்சோதி முனிவனரங்கே
ற்றினானே . . . . . . . . . . . . . . . . . . . . . . . . . . . . . . . . . . *

(இ-ள்) ஆதிசேஷனாகிய சயனத்தில் பள்ளிகொண்டிருக்கும் திருமாலானவர் திருப்பாற்கடலைக்கடைந்து அதிலுண்டான அமிர்தத்தை அரங்கேற்றிய முறைமைபோல் பெண்வண்டுகள் இசைபாடும்படியான சோலைகளையுடைய திருவாலவாயின் மான்மியத்தை அரிதாகிய தமிழினாற்பாடி அறுகினாற்பெருமையோங்கிய திருமுடியையுடையவராகிய சொக்கநாதசுவாமிசன்னிதியில் தேவர்கள் சூழ்ந்திருக்கும் அறுகாற்பீடத்திருந்து பரஞ்சோதிமுனிவர் அரங்கேற்றினார் —(எ-று) (௩௰)

பாயிரம் முற்றுப்பெற்றது.



# திருவிளையாடற்புராணம்.

## நாட்டுப்படலம்.

கறைநிறுத்தியகந்தரச்சுந்தரக்கடவு..................*
ளுறைநிறுத்தியவாளினுற்பகையிருளொதுக்கி..........*
மறைநிறுத்தியவழியினல்வழுதியாய்ச்செங்கோன்......*
முறைநிறுத்தியபாண்டிநாட்டணியதுமொழிவாம்.......*

(இ-ள்) விஷத்தைவைத்த கண்டத்தையுடைய சோமசுந்தரக்கடவுளானவர் பாண்டியராசனாகி உறைபூட்டும் வாளாயுதத்தினாலேயே பகைவராகிய இருள் சோரவண்ணந் தூரத்தி வேதத்தில் தம்மாற் சொல்லப்பட்ட முறைமைப்படி செங்கோல்முறை நிலைநிற்கச் செய்த பாண்டிநாட்டின் சிறப்பினைச் சொல்லுகின்றோம்.— (எ-று) [கறைமேவிய - கறைதங்கிய - என்று சொல்லாமல் கறைநிறுத்திய வென்றது. தேவர்களை யெல்லாம் இறுதி செய்யவந்த விஷத்தினையுண்டு அதன் வேகத்தை யடக்கிய அவரதுபோராற்றல் தோன்றத்தென்றுணர்க. கறைதங்கிய கண்டத்தை யுடையவரோ யாயினும் சௌந்தரிய முள்ளவ ரென்பதுதோன்றச் சுந்தரக்கடவுளென்றார். மறுதேசத்து மன்னவர்கள் சுந்தரக்கடவுளுடைய போராற்றலை யுணர்ந்து போர்செய்ய வராமையால், வாளானது உறையில் வைத்தபடியே யிருந்த தென்பது தோன்ற, உறைநிறுத்திய வாளென்றார். வேதத்தில் எல்லாநீதிகளும் இவரால் சொல்லப்பட்டதாதலால், மறைநிறுத்திய வழியென்றார். சந்ததியின்றிப்பாண்டியர்களுடைய செங்கோன்முறை போய்விடாமல் நிலை நிற்கும்படி செய்யவேண்டுமென்னும் கிருபையினால், பாண்டியராசனாகி அரசு செய்தாரென்பது தோன்ற, முறைநிறுத்திய வென்றார்.] செங்கோல் என்பது- அரசனாற்செய்யப்படு முறைமையினதுதன்மை அம்முறை- ஒருபக்கத்திற்சாயாமல் செவ்வையான கோல்போல நிற்பதினால்- செங்கோலென்றுசொல்லப்பட்டதாம். (க)

தெய்வநாயகனீறணிமேனிபோற்சென்று..............*
பௌவமேய்ந்துமைமேனிபோற்பசந்துபல்லுயிர்க்கு...*
மெவ்வமாற்றுவான்சுரந்திடுமின்னருளென்னக்..........*
கௌவைநீர்சுரந்தெழுந்தனகனைகுரன்மேகம்............*

(இ-ள்) ஒலிக்கும் ஒலியை உடைய மேகங்கள்கடவுளர்களுக்கெல்லாந் தலைவனாகிய சோமசுந்தரக்கடவுளுடைய விபூதி அணிந்திருக்கும் திருமேனிபோல்வெண்மைநிறங்கொண்டுசென்று சமுத்திரநீரை உண்டுபின்பு பார்வதியாருடையதிருமேனிபோல்பசியநிறங்கொண்டு பலவுயிர்களுக்குநேரிடுகிற துன்பத்தை ஆற்றப்பரமசிவனிடத்தும் பார்வதியிடத்தும் சுரந்திடும் இனிதாகிய திருவருளைப்போல் ஓசையை உடைய நீர் சுரந்தெழுந்தன.—(எ-று) [பரமசிவனது திருமேனிபவளநிறமுள்ளதாதலால், தெய்வநாயகன்மேனிபோ லென்னாது நீறணிமேனிபோ லென்றார். விபூதி அணிந்தால், மோக்ஷம் அடையலாமென்று பரமசிவனுடைய அடியார்கள் தரிக்கிறார்கள், பரமசிவன் தரிப்பதற்குக் காரணமென்னவெனில், ஒரு கற்பத்தில் தேவர்களையெல்லாம் தமது நெற்றிக்கண்ணிலுண்டான தீப்பொறியினால் சாம்பலாக்கித்தேவர்கள் நற்கதி அடையவேண்டுமென்கிற கிருபையினால் அந்தச்சாம்பலைத் திருமேனியில் தரித்துக்கொண்டார்.] (௨)

தக்ஷகாண்டத்தில்-உத்தரப்படலம்.

அல்லதங்கவர் தங்களைமுத்தலையயிலால், மெல்லவேவெயடுத் தேந்திடுமவர்தம்மைவிழியால்,தொல்லைநாளினீருக்கியும்புனைந்திடுந்தூயோன்,மல்லன்மாதவமனையவரியற்றிய வகையால்.

இடித்துவாய்திறந்தொல்லெனவெல்லொளிமழுங்கத் .....*
தடித்துவாள்புடைவிதிர்த்துநின்றிந்திரசாபம் ..........*
பிடித்துநீளம்புகோடைமேற்பெய்துவெம்பெரும்போர் ..*
முடித்துநாமெனவருதல்போற்மொய்த்தனகொண்மூ ..*

(இ-ள்) ஒல்லென்றுவாய்திறந்திடித்துச்சூரியன் ஒளியும்மழுங்கும்படி தடித்து நான்குபுறத்திலுமாக வாள் விதிர்த்துநின்று இந்திரவில்லையேந்தி நீடியஅம்பினைக்கோடைமேற்பெய்து வெவ்விதாகியபெரிய போரினைநாம் முடித்துமென்று வருதல்போல் மேகங்கள்நெருங்கின.— (எ-று) [தடித்து என்பது மின்னல்- வாள் என்பது ஒளி- இந்திரசாபம் என்பது பச்சைவில்- அப்பு என்பது நீர்.] (௩)

மூலிதனீள்வரையுச்சிமேன்முழங்கிவானிவந்து .. .. .. ...*
தனிதநீர்மழைபொழிவனதடந்தகிலைப்பிராமன் ..... . ....*
கனிதனீர்மையாலாலவாயீக்கண்ணுதன்முடிமேற் .. .... *
புனிதநீர்த்திருமஞ்சனமாட்டுவான்போலும் ..... .... ..*

(இ-ள்) மேகங்கள் அகஸ்தியமுனிவரது நீண்டமலையாகிய பொதியமலையின் உச்சிமேலேறிக் குமுறி வானிலுயர்ந்து சளசளவென்னும் ஓசையுடன் நீரைப்பொழிதல் - நெடியகோதண்டத்தையுடைய இராமமூர்த்தி கனிந்ததன் அன்புடன் சோமசுந்தரக் கடவுளுடைய திருமுடிமேல் பரிசுத்தமாகிய நீரால் திருமஞ்சனஞ்செய்தலை யொக்கும்.—(எ-று) (௪)

சுந்தரன் திருமுடிமிசைத் தூயநீராட்டு ................ *
மிந்திரன்றனை யொத்தகொழிலிதென்மலைமேல் ......... *
வந்துபெய்வவத்தனிமுதன்மௌலிமேல்வலாரி ......... *
சிந்துகின்றலைகப்போதெனப்பன்மணிதெறிப்ப ......... *

(இ-ள்) பொதியமலைமேல் வந்துமழைபெய்யுங்கருமையாகிய மேகங்கள் சோமசுந்தரக் கடவுளுடைய திருமுடியின்மேல் பரிசுத்தமாகிய நீரினுல் அபிஷேகஞ்செய்யும்தேவேந்திரனை யொத்தன - அந்தமேகங்களினின்றும் சிந்துகின்ற பலமணிகள் அந்தச் சோமசுந்தரக் கடவுளுடைய திருமுடியின்மேல் தேவேந்திரன் அர்ச்சிக்கும்மலர்களை யொத்தன (எ-று) [மேகங்கள் தேவேந்திரனை யொத்தன என்றதனுல் இராமமூர்த்தியைப்போலத் தேவேந்திரனுங் கருமைநிறமுள்ளவனென்றுணர்க - மேகங்களில்-மணி ஏதென்றால் - சமுத்திர நீரை உண்ணும்போது அந்நீருடன் கலந்திருப்பதாம். (௬)

உடுத்ததெண்கடன்மேகலையுடையபார்மகட ............ *
னிடத்துதித்தபல்லுயிர்க்கெலாமிரங்கித்தன்கொங்கைத் ... *
தடத்துநின்றிழிபாலெனத்தடவரைமுகடு ............... *
தொடுத்துவீழ்வனவிழுமெனத்தூங்குவெள்ளருவி ...... *

(இ-ள்) சூழ்ந்ததெளிவுள்ளசமுத்திரமாகிய ஆடையணிந்திருக்கும்பூமிதேவிதன்னிடத்திலுதித்தபலவாகியஉயிர்களுக்கெல்லாம்இரங்கித்தன் முலையினின்றும்பாலைப்பொழிதல்போல்பெரியதாகியபொதியமலையின் உச்சிதொடுத்து இழும் என்கிற ஓசையுடன் அசைதலையுடைய வெண்மையான அருவிகள்வீழ்வன.—(எ-று) (௭)

(வேறு.)

கருநிறமேகமென்னுங்கச்சணிசிகரக்கொங்கை; யருவியாந்தீம்பால்சோர வகன்சுனையென்னுங்கொப்பூழ்ப், பொருவில்வறையென்னுமென்றேட்பொதியமாஞ்சயிலப்பாவை, பெருகுதன்பொருனையென்னும்பெண்மகப் பெற்றளன்றே....*

(இ-ள்) கருநிறத்தையுடைய மேகமாகியகச்சணிந்த சிகரமாகியஸ்தனத்திலிருந்து அருவியாகியமதுரமுள்ளபால்பெருகும்படி அகன்றசுனையாகியநாபியும் ஒப்பில்லாத மூங்கிலாகியதோளும் உடையபொதியமலையாகியஒருஸ்திரியானவள்பெருகாநின்றகுளிர்ச்சிபொருந்தியதாமிரபர்ணியென்னும்பெண்குழந்தையைப்பெற்றாள்.—(எ-று) (௭)

கல்லெனக்கரைந்துவீழுங்கடும்புனற்குழவிகானத் .......*
தொல்லெனத்தவழ்ந்துதீம்பாலுண்டொரீஇத்திண்டோண்மள்ளர், செல்லெனத்தெழிக்கும்பம்பைத் தீங்குரல்செவிவாய்த்தேக்கி, மெல்லெனக்காலிற்போகிப்பணைதொறும் விளையாட்டெய்தி .......................................*

(இ-ள்) கல் என்றுஒலித்துக்கொண்டுவருகின்றவேகத்தையுடையசலமாகியகுழந்தையானதுகாட்டில்ஒல்-என்னும்சத்தத்துடன்தவழ்ந்து,மதுரமுள்ளபாலையுண்டு அவிடம்விட்டு நீங்கிப்பலம்பொருந்தியதோள்களையுடையஉழவர்கள்மேகம்போல் முழக்கும்பம்பையின் இனிப்பாகியசத்தத்தைக் காதிலிடத்தில் நிறையக்கொண்டு மெதுவாகக்காலிற் சென்று வயல்கள்தோறும் விளையாடுதலைப்பொருந்தி—(எ-று) செவிவாய்-என்பதற்கு அழகுவாய்த்தல் பொருந்த என்று - வேறுபொருள்படுத்திக்கொள்க. [இதுவும்.] (௮)

அரம்பைமென்குறங்காமாவினவிர்தளிர்நிறமாத்தெங்கின் ..*
குரும்பைமென்முலையாவஞ்சிக்கொடியிறுநுசுப்பாக்கூந்தல்*
சுரும்பவிழ்குழலாக்கஞ்சச்சுடர்மதிமுகமாக்கொண்டு ....*
நிரம்பிநீள்கைதைவேலிநெய்தல்சூழ்கானில்வைகி .........*

(இ-ள்) வாழைமரம் தொடையாகவும் பிரகாசியாநின்றமாந்தளிர் நிறமாகவும் தென்னங்குரும்பை மென்மையாகிய ஸ்தனமாகவும் பூங்கொடி இறுமென்னும்இடையாகவும் கூந்தற்பனையின்பாளை வண்டுகள் பரந்திருக்கும் அளகபாரமாகவும் செந்தாமரைமலர் பிரகாசமுள்ள மதிமுகமாகவுங்கொண்டு அழகு நிறைந்து நீண்ட தாழைகள் பொருந்திய ஊர்களையுடைய நெய்தனிலத்தில் சூழ்ந்திருக்கும் சோலையில்பொருந்தியிருந்து—(எ-று) (இதுவும்-)குளகம்- இவ்வாறு வருவனவெல்லாம் குளகமாமென்றுணர்ந்துகொள்க - [குளகமாவது- பலபாட்டொருவினைகொண்டுமுடிவது.] (௯)

பன்மலர்மாலைவேய்ந்துபானுரைப்போர்வைபோர்த்துத் *
தென்மலைத்தேய்ந்தசாந்தமான்மதச்சேறுபூசிப் ...... *
பொன்மணியாரந்தாங்கிப்பொருனையாங்கன்னிதூநீர்த் . *
தன்மகிழ்கிழவனாகந்தழீஇக்கொடுகலந்ததன்றே ........ *

(இ-ள்) தாமிரபர்ணியென்னும் கன்னி - பலவித மலர் மாலைகளை அணிந்து கொண்டும் - வெண்மை நிறமுள்ள நுரையாகிய போர்வையைப் போர்த்துக் கொண்டும் பொதியமலையிலுண்டாகி யுரைக்கப்பட்ட கஸ்தூரிசேர்ந்த சந்தனக் குழம்பைப் பூசிக்கொண்டும் பொன்னாற்செய்து மணிகள் பதிக்கப்பட்ட ஆரங்களைத் தரித்துக்கொண்டும் தன்னை மகிழ்கின்ற கணவனாகிய சமுத்திரராசனுடைய ஆகத்தைத்தழுவிக்கொண்டு கலந்தது.—(எ-று) (௰)

வல்லைதாயிருபால்வைகுஞ்சிவாலயமருங்குமீண்டி ...... *
முல்லையானைந்துந்தேனுந்திரைக்கையான்முகந்துவீசி .... *
நல்லமான்மதஞ்சாந்தப்பிநறுவிரைமலர்தூய்நீத்தஞ் ..... *
செல்லலாற்பூசைத்தொண்டின்செயல்வினைமாக்கள்போலும் *

(இ-ள்) தாமிரபர்ணியானது விரைவாகச் சென்று, இரண்டு பக்கத்திலும் பொருந்திய சிவாலயங்களிடத்தும் சேர்ந்து முல்லைநிலத்தி லிருக்கும் பசுவினிடத்துண்டான - பால்- தயிர்- நெய்- கோமயம் -கோசலம்- என்னும் பஞ்சகவ்வியத்தையும், தேனையும், அலையாகிய கையினால் எடுத்து வீசியும் கஸ்தூரி நல்ல சந்தனம் இவைகளை அப்பியும் வாசனையையுடைய மலர்களைத் தூவியும் செல்லுதலால் சிவபூசைசெய்யும் அடிமைத்திறமாகிய கிரியா மார்க்கத்தி லிருக்கும் அன்பர்கள்போ லிருந்தது.—(எ-று) (௰௧)

தாருகாவனத்துரிஷிபத்தினிகளுக்குந்தாமிரபர்ணி
நதிக்குஞ்-சிலேடை.

அரும்பவிழனங்கவாளியலைதரவாகம்பொன்போர்த் ...... *
திரங்கிவாலன்னமேந்தியிருகையுஞ்சங்கஞ்சிந்தி ........ *
மருங்குசூழ்காஞ்சிதள்ளிவரம்பிறவொழுகும்வாரி ....... *
பரமபரற்கையம்பெய்யும்பார்ப்பனமகளிர்போலும் .... *

(இ-ள்) அரும்புகளையும்பாரந்த மன்மதபாணமாகிய மலர்களையும் அலைகள்தரவும் உண்டாகிய அழகிய பொன்னை யுடைத்தா

யீ ஒலித்தும்வெண்மையாகிய அன்னப்பக்ஷிகளை யேந்திக் கொண்டும் இரண்டுகரைகளிலும்சங்கங்களை எறிந்தும்பக்கங்க ளில் சூழ்ந்திருக்குங் காஞ்சிவிருக்ஷங்களைத் தள்ளியும் கரைகள் உடையும்படி செல்லுகின்ற வெள்ளமானது- (பிக்ஷாடன மூர்த்தங்கொண்டுவந்த) பரமசிவனுக்குப் பிக்ஷையிட்ட ரிஷிபத்தினிகளை யொத்தது.— (எ-று) ரிஷிபத்தினிகளைச் சொல்லுமிடத்து-அரும்புகள் மலர்ந்த மலர்களாகிய காமபாணங்கள் அலைதலை உண்டாக்க-மார்பினிடத்தில் தேமல் பரந்து மகிழ்ந்து வெண்மையாகிய சோற்றினைக்கையிலேந்தி- இரண்டுகைகளிலும் அணிந்திருக்கும் சங்குவளையல்கள் கழன்று இடையில் அணிந்தமேகலாபரணம் சோர்ந்து கற்புநிலை அழியவெனப் பொருள் கொள்ளப்படும். (அரும்பவிழ வங்கவாளி) என்பதற்குப் பிக்ஷாடனமூர்த்தியைக் கண்டமாத்திரத்தில் காமமுண்டாக, அதனால் வீழ்கின்ற காமபாணம் என்றுஒருவாறு பொருள்கொள்ளலாம், வீழ்- என்பது, விழ் - எனக் குறுகி நின்றதாகக் கொள்ளப்படும். (ധഉ)

வரைபடுமணியும்பொன்னும்வயிரமுங்குழையும்பூட்டி.....*
யுரைபடுமகிலுஞ்சாந்துமப்பியின்னமுதமூட்டிக்......*
கரைபடுமருதமென்னுங்கன்னியைப்பருவநோக்கித்.....*
திரைபடுபொருனைநற்றாய்செவிலிபோல்வளர்க்குமாதோ.*

(இ-ள்) அலைகளையுடைய தாமிரபர்ணி வெள்ளமானது மலையினிடத் துண்டாகிய மணிகளையும் பொன்னினையும் வயிரத்தையும் குழைகளையும் பூட்டி அணைக்கப்படுவதாகிய அகிலையும் சந்தனத்தையும் அப்பி, இனிதாகிய பாலையும் ஊட்டி, வரம்பினையுடைய மருதநிலமென்னும் கன்னியைப் பருவத்துக்குத் தக்கபடி செவிலித்தாய்போல் வளர்க்கின்றது (எ-று) [குழையென்பது-தளிர்.] (ധக)

மறைமுதற்கலைகளெல்லாமணிமிடற்றவனேயெங்கு......*
நிறைபரமென்றும்புதிசாதனநெறிவீடென்று.........*
மறைகுவதறிந்துதேருமறிவெனக்கலங்கியந்த..........*
முறையின்வீழ்ந்தோர்போலத் தெளிந்ததுமரிவெள்ளம்

(இ-ள்) வன்மையையுடைய வெள்ளமானது வேதமுதலாகிய சாஸ்திரங்களெல்லாம் காளகண்டத்தையுடைய பரமசிவனே எங்கும்பரிபூரணமாய் நிறைந்த பரமென்றும்- விபூதி

ருத்திராக்ஷங்களைத்தரிப்பதற்குரிய சைவ சமயமே மோக்ஷமென்றுஞ்சொல்வதை அறிந்தும்தெளியாதவர்களுடைய அறிவைப்போலக்கலங்கிஉடனே அந்தச்சைவசமயாசாரத்தினின்று மோக்ஷ நிலையையுணர்ந்தவர்கள் போலத் தெளிந்தது. (எ-று)[விபூதி ருத்திராக்ஷந் தரித்துக்கொண்டு சிவார்ச்சனை-சிவ தரிசனஞ் செய்வதே பேரின்பமென்பதுதோன்றப்-பூதிசாதன நெறிவிடென்றார்.] (௰௪)

மறைவழிகிளைத்தவெண்ணெண்கலைகள்போல்வருநீர் வெள்ள
த், துறைவழியொழுகும்பல்கால்சோலைதண் பழனஞ்செய்தே
னுறைவழியோடையெங்குமோடிமன்றுடையார்க்கன்பர் .. *
நிறைவழியாதவுள்ளத் தன்புபோனிரம்பிற்றன்றே ...... *

(இ-ள்)வேதத்தினிடத்தில் அறுபத்துநாலுகலைகள்உண்டானதுபோல்பொதிகைமலையிலிருந்து வருகின்றநீர் வெள்ளத்தையுடைய ஆற்றினிடத்திலிருந்துண்டாகிச்செல்லுகின்ற பலகால்கள்சோலைகளிலும் குளிர்ச்சியாகிய வயல்களிலும்செவ்விதாகியதேன்தாரைகள்வழிகின்ற ஓடைகளிலும்மற்றுமுள்ள இடங்களிலும் சென்றுசிற்சபையினையுடைய நடேசமூர்த்தியினிடத்தில் அடியார்களுடைய உள்ளத்தில் உண்டான அன்பானது நிறைந்திருப்பதுபோல் நிறைந்தது.(எ-று) (௰௫)

(வேறு.)

இழிந்தமாந்தர்கைப்பொருள்களுமிகபரத்தாசை ....... *
கழிந்தயோகியர்கைப்படிற்றூயவாய்க்களங்க .......... *
மொழிந்தவாறுபொலுவரியுண்டுவர்கெடுத்தெழிலி ...... *
பொழிந்தநீரமுதாயினபுவிக்கும்வானவர்க்கும் ......... *

(இ-ள்) கொலைமுதலாகிய பாவத்தொழிலைச்செய்யும் இழிவானகுலத்திற்பிறந்த மனிதர்கள் கையினாற் கொடுக்கா நின்றபொருள்களும், இவ்வுலகத்தில் அனுபவிக்கும்படியான செல்வத்திலும் சுவர்க்கமுதலாகிய பதவிகளில்சென்று அனுபவிக்கும்படியானபோகத்திலும் ஆசைநீங்கியசிவயோகிகளுடைய கையிற்பொருந்தினால்குற்றம்நீங்கிப்பரிசுத்தமாகின்ற முறைமைபோல் மேகமானது- சமுத்திரநீரை உண்டு அந்த நீரில் தொந்தப்பட்டிருக்கும்உப்பின்தன்மையைக்கெடுத்துப்பொழிந்தநீரானவை- பூலோகத்திலுள்ளவர்களுக்குந்தேவலோகத்திலுள்ளவர்களுக்கும்அமுதம்போலாயின(எ.று உயர்குலத்திற்பிறந்து கொடியசெய்கையினால் இழிவுபட்டவர்கள்பொ

ருளூர்க்கும் இஃதொக்கும்-பாபச்செய்கையைமேற்கொண்டவர்கள்தருமத்தின்வழியில்பொருள்சம்பாதியாமல் பாபவழியிலேயே சம்பாதிப்பார்கள் அந்தப்பொருளைச் சம்பாதிக்கும்போதேபாபம்நேரிடுவதுமன்றி-அதனைமண்ணாசை - பெண்ணாசை- பொன்னாசை- என்னும் மூன்றாசைகளையுமே பெரிதாகக்கொண்டு பாபபுண்ணியச்செய்கைகளைப் பகுத்துணராதவர்களுக்குத் தானமாகக்கொடுத்தால் பின்னும்பாயம் மேல்மேலும்விர்த்தியாகும்- ஆசையையொழிந்த சிவயோகிகள் கையிற் கொடுத்தால் - பரிசுத்தப்பட்டுத் தன்னைத் தேடியவர்களையும் பாவத்தினின்றும் நீக்கிப் புண்ணியவான்களாகும்படி செய்யும் இந்த முறைமைபற்றித் தூயவாய்க்களங்கமொழிந்தவாறுபோலென்றார்- [நெஞ்சிற்றுறவார், துறந்தார்போல்வஞ்சித்து,வாழ்வாரிலவன்கணாரில்.] என்னுங்குறளுக்கு- யான்எனது -என்னும்- இருவகைப்பற்றினையும்விட்டுத்துறந்த முனிவர்களுக்குத்தானங்கொடுத்தால்மறுபிறப்பில் தேவனாகலாமென்கிறவிருப்பங் கொண்ட ஒருவன் - இருவகைப்பற்றினையும்விட்டுத் துறந்தவன் போல்வெளிக்குக்காட்டி- உள்ளே துறவாது பொய் வேஷங்கொண்டு நிற்பவன்செய்கையை அறியாமல்,உருவத்தைமாத்திரங்கண்டு- இவன்தபசிதானென்றுதானங்கொடுத்தால் இழிவானபிறப்பினை அடைவான் என்றுஉரைசெய்தபரிமேலழகர் - கணைகொடி-தியாழ்கோடி- தென்னுங்குறளையில், தவஞ்செய்வாரைக்- கொடியர் - செவ்வியர்- என்பது, வடிவாற்கொள்ளாது, அவர்செயல் பட்டகூற்றானே அறிந்துகொள்கவென்றும் சொல்லியிருக்கின்றார்- ஆதலால்நல்லொழுக்கத்தையுடையவர்களுக்குத்தானங்கொடுத்தாலேபயன்என்றறிக-இம்மைமறுமைகளில் ஆசையற்றவர்கள், ஒருவன் தானங்கொடுத்தால் வாங்குவார்களோ வெனின்வாங்குவதரிது- ஆயினும், சிவயோகிகளுக்குப் பொருள் கொடுத்துத்தான் - நன்மை அடைய விரும்புமுள்ளவன்- அவர்களிருக்குமிடத்திற்குப் பலகாற்சென்று குறையிரந்து வேண்டிக்கொண்டால் அருளுடையராதலால் இரக்கத்தினால் வாங்கிக்கொள்வார்கள்- அமுதமுண்டவர்கள் மரணம் அடையாமல் நிலைபெற்றிருப்பதுபோல் தாமிரபர்ணிநதி நீரும் அந்நாட்டி லிருப்பவர்கள் மரணமடையாத வண்ணஞ்செய்தலால் புவிக்

கமுதாயின வென்றார்- வானோர்க்கென்றதுபோலப், புவியோர்க்கென்றது புவிக்கு, என்றமையான் மனித உயிர்களுக்கேயன்றி எல்லா வுயிர்க்குமெனக் கொள்க. மழைபொழிதலால், தேவர்களுக்கு இவ்வுலகில் திருவிழாவும்பூசையும்நடந்து வருவதினால் வானவர்க்கும் அமுதாயினவென்றார். [வானின் றுலகம் வழங்கிவருதலாற் றானமுதமென் றுணரற் பாற்று.] [சிறப்பொடுபூசனை செல்லாது வானம் வறக்குமேல் வானோர்க்கு மீண்டு.] [என்னுங் குறள்களானுமுணர்க.] (ய௬)

ஈறிலாதவளொருத்தியேயைந்தொழிலியற்ற ........... *
வேறுவேறுபேர்பெற்றெனவேலைநீரொன்றே ........... *
யாறுகால்குளங்கூவல்குண்டகழ்கிடங்கெனப்பேர் ...... *
மாறியீறில்வான்பயிரெலாம்வளர்ப்பதுமாதோ .... ...... *

(இ-ள்) ஆதியந்த மில்லாதவளாகிய பராசத்தி யொருத்தியே பஞ்சகிருத்தியங்கள் செய்ய வெவ்வேறு பெயர்பெற்றதுபோலச் சமுத்திரத்து நீரொன்றே ஆறு-கால்-குளம்-கிணறு-ஆழ்ந்த அகழ்-ஓடை-என்று மாறுபெயர்கொண்டு முடிவில்லாத பெருமையையுடைய பயிர்களையெல்லாம் வளர்க்காநின்றது.—(எ-று) பஞ்சகிர்த்தியங்களாவன-சிருஷ்டி-ஸ்திதி-சங்காரம்-திரோபவம்-அனுக்கிரகம் (ய௭)

(வேறு)

களமர்கள்பொன்னேர்பூட்டித்தாயர்வாய்க்கனிந்தபாடற். *
உளமகிழ்சிறாரினேறுமொருத்தலுமுவகைதூங்க.. .. .... *
வளமலிமருதம்பாடிமனவலிகடந்தோர்வென்ற.. .. .... *
அளமருபொறிபோலேவலாற்றவாள்வினையின்மூண்டார்... *

(இ-ள்) உழவர்கள் பொன்னேர்பூட்டித் தாய்மாருடையவாயினிடமாகக் கனிவுடன் உண்டாகாநின்ற பாடலுக்கு மனமகிழ்கின்றசிறுவர்களைப்போல் எருதுகளும் எருமைக்கடாக்களும் சந்தோஷம் அடைய. வளப்பம் நிறைந்த மருதப்பண்பாடி மனதின்வழியைக் கடந்த முனிவர்கள் வென்ற சுழலுகின்ற ஐம்பொறிகள் அம்முனிவர்கள் வழியில்நிற்பதுபோல் ஏவலாள்கள் தங்கள்சொற்படி ஏவல்செய்யப் பயிரிடுமுயற்சி செய்யத்தொடங்கினார்கள்.—(எ-று) (அலமருஎன்பது) அளமருஎன்றாயிற்று- வித்துமுதலானவை யெல்லாம் குறைவின்றியிருப்பினும்- ஏவலாள்கள் எசமானனுடைய சொற்படிநடவாவி

ட்டால் - பயிர்த்தொழில்சீர்படாதென்பது விளங்க- முனிவர்கள்வென்றபொறிபோலென்றார். (வெண்பா) எருமிரண்டுளதாயில்லத்தேவித்துளதாய், நீரருகுசேர்ந்தநிலமுளதா- யூரருகு, சென்றுவரவெளிதாய்ச்செய்வாருஞ்சொற்கேட்டால், என்றுமுழவேயினிது. இது ஔவைசொல்லியதாம் [ஏவலாளர்கள் எசமானனுடைய சொற்படி வேலைசெய்த லருமையென்பதனை யிச்செய்யுளானு மறிந்துகொள்க.] (௰அ)

பலநிறமணிகோத்தென்னப்பன்னிறவேறுபூட்டி .. .... *
யலமுகவிருப்புதேயவாள்வினைக்சருங்காண்மள்ளர் ...... *
நிலமகளுடலங்கீண்டசால்வழிநிமிர்ந்தசோரிச் ......... *
சலமெனநிவந்தசெங்கேழ்த்தழன்மணியிமைக்குமன்றே.. *

(இ-ள்) பலநிறமான மணிகளைக் கோத்ததுபோல் பலநிறமுள்ள எருதுகளைப்பூட்டிக் கலப்பையினிடத்திலிருக்குங்காறுனதுதேய உழவுதொழில்செய்யும் வலியகாலையுடைய உழவர்கள்பூமிதேவியின் உடலைக்கிழித்த சால்வழியில் உண்டான உதிரவெள்ளம்போல் மேலோங்கியசிவந்த நிறத்தையுடைய அழல்போன்றமாணிக்கங்கள்பிரகாசிக்கும்.—(எ-று) (௰௯)

ஊறுசெய்படைவாய்தேயவுழுநருநீர்கால்யாத்துச் ....., *
சேறுசெய்குநருந்தெய்வந்தொழுதுமதிஞ்செந்நெல்வீசி .. *
நாறுசெய்குநரும்பேர்த்துநடவுசெய்குநருந்தெவ்வின் .. *
மாறுசெய்களைகட்டோம்பிவளம்படுக்குநருமானார். ..... *

(இ-ள்) பூமியைக் கிழிக்கான்ற கலப்பையின்வாய்தேயும்படி உழுகின்றவர்களும் நீரைக் காலின்வழியாகச் சேர்த்துச் சேறு செய்கின்றவர்களும்-அந்நிலக்கடவுளாகிய இந்திரன்முதலாகிய தெய்வங்களைத் தொழுதுமதுரமுள்ளசெந்நெல்வித்துகளைவிதைத்து நாறுசெய்கின்றவர்களும்-அந்நாற்றுகளைப் பெயர்த்து நடுகின்றவர்களும்-பகைவரைப்போல் மாறுபாடுசெய்கின்ற களைகள்பறித்துப் பாதுகாத்து வளம் படுப்பவர்களுமானார்கள்.—(எ-று) (உ௰)

பழிபடுநறவந்தானேகடைசியர்பருகிச்செவ்வாய் ......... *
மொழிதடுமாறவேர்வையுழுகத்தெழமுறுவரேன்ற ....... *
விழிசிவந்துழலக்கூந்தன்மென்றுகில்சோரவுள்ளக் ....... *
கழிபெருங்களிப்புநல்கிக்கலந்தவரொத்ததன்றே......... *

(இ-ள்) பழிபட்டமதுவானது பள்ளஸ்திரீகளால் குடிக்கப்பட்டு அவர்கள் செவ்வாயினிடமாக உண்டாகின்ற மொழிகள் தடுமாறவும் முகத்தில் வியர்வை உண்டாகவும் நகை தோன்றவும் கண்கள் சிவந் துழலவும் அளகமும் மிருதுவான வஸ்திரமும் சோரவும்மிகுந்த மனக்களிப்பைக் கொடுத்துப் புணர்ந்த ஆடவர்களை யொத்தது.—(எ-று) (உக)

பட்பகையாகுந்தீஞ்சொற்கடைச்சியர்பவளச்செவ்வாய்க் ..*
குட்பகையாம்பலென்றுமொண்ணறுங்குவளைநீலங் ......*
கட்பகையாகுமென்றுங்கமலநன்முகத்துக்கென்றுந் ....*
திட்பகையாகுமென்றுஞ்செறுதல்போற்களைதல்செய்வார். *

(இ-ள்) இராகத்துக்குப் பகையாகும் மதுரமுள்ள சொல்லையுடைய பள்ளஸ்திரீகளின் செவ்வாய்க்குச் செவ்வல்லிமலர்கள்- உட்பகையாமென்றும் கண்களுக்கு நீலோற்பல மலர்களும்- செங்கழுநீர்மலர்களும் பகையாமென்றும்- நன்மையுள்ளமுகங்களுக்குச்செந்தாமரைமலர்கள்- எந்நாளும் உறுதியான பகையாமென்றும் சேதித்தல்போல அவைகளைப்பறித்துப்போடுகிறார்கள்.—(எ-று) (உஉ)

கடைசியர்முகமுங்காலுங்கைகளுங்கமலமென்றார் .......*
படைவிழிகுவளையென்றார்பவளவாய்குமுதமென்றா ......*
ரடையவுங்களைந்தார்மள்ளர்பகைஞராயடுத்தவெல்லை.. ...*
யுடையவனுணையாற்றாலொறுப்பவர்க்குறவுண்டாமோ. ...*

(இ-ள்) உழத்தியர்களுடைய முகங்களையும் கால்களையும்- கைகளையும்- செந்தாமரைமலர்கள் ஒத்திருக்கின்றனவென்று கருதாமலும்-வேல்போன்ற விழிகளை நீலோற்பலமலர்கள் ஒத்திருக்கின்றன வென்று கருதாமலும்-பவளம்போன்ற வாய்களைச்செவ்வல்லிமலர்கள் ஒத்திருக்கின்றனவென்று கருதாமலும்-அவைகளையெல்லாம்களைந்துவிட்டார்கள்-பகைவர்களாய்நேரிட்டகாலத்தில்- எசமானுடைய ஆக்கினையின் முறைமைப்படி- கண்டிப்பவர்களுக்குச் சுற்றத்தாரென்று தாக்ஷிணியப்படுதலு முண்டோ அது உண்டாகாது.—(எ-று) (உங)

புரையறவுணர்ந்தோர்நூலின்பொருளினுள்ளடங்கியநூல் *
வரையறைகருத்துமானவளர்கருப்புறம்புதோன்றிக் ;.....*
களையமைகல்விசாலாக்கவிஞர்போலிறுமாந்தநூ ......*
லுலாயெனவிரிந்துகற்பின்மகளிர்போலொசிந்ததன்றே ...*

(இ-ள்) குற்றமற ஓதியுணர்ந்த சான்றோரால் செய்யப்பட்ட நூலின் பொருள்போல் உள்ளடங்கி அந்நூலினது அளவுபட்ட கருத்துரைபோல் வளர்கின்ற கருவானது வெளியில் தோன்றி இலக்கணமாகிய கரையமைந்த கல்வி நிரம்பாத கவிஞர்போல் இறுமாந்து மேற்சொல்லிய நூலின்பொருளைப் போல் விரிந்து கற்புள்ள ஸ்திரீகள்போல் வளைந்தது.(எ-று) ஈண்டுக்கருவென்றது - கதிர் - ஒசிதலை - மகளிரிடத்துவணக்கமாகக்கொள்க. (உச)

அன்புறுபத்திவித்தியார்வநீர்பாய்ச்சுந்தொண்டர்க்.......*
கின்புருவானவீசனின்னருள்விளையுமாபோல்..........*
வன்புறுகருங்காண்மள்ளர்வைகலுஞ்செவ்விநோக்கி .....*
நன்புலமுயன்றுகாக்கவிளைந்தனநறுந்தண்சாலி........*

(இ-ள்) அன்புற்ற பத்தியாகிய விதையை விதைத்து ஆசையாகிய நீரைப் பாய்ச்சுகின்ற தொண்டர்களுக்கு - ஆனந்தமே திருமேனியாகக் கொண்டிருக்கும் பரமசிவனுடைய இனிய திருவருள் விளைவதுபோல், பலமுள்ள கருங் காலையுடைய உழவர்கள் நாள்தோறும் பருவமறிந்து நல்ல புலங்களைச்செய்யவேண்டிய முயற்சியைச்செய்து பாதுகாக்க நன்மையும் குளிர்ச்சியு முள்ள நெற்பயிர்கள் விளைந்தன.—(எ-று) (உரு)

அகனிலவேறுபாட்டினியல்செவ்வியுமறிந்துமள்ளர்........ *
தகவினைமுயற்சிசெய்யக்காமநூல்சாற்றுநான்கு.........*
வகைநலார்பண்புசெவ்வியறிந்துசேர்மைந்தர்க்கின்ப ....*
மிகவிளைபோகம்போன்றுவிளைந்தனபைங்கூழெல்லாம்...*

(இ-ள்) உழவர்கள் - அகன்றநிலங்களுடைய வேறுபாட்டினியல்பையும் அந்த நிலங்களில் பயிர்செய்யுங் காலத்தையுமறிந்து அவைகட்குத் தகுதியான தொழில் முயற்சிகளைச் செய்யக் காமநூலில் சொல்லப்பட்ட நாலுவகையாகிய ஸ்திரீகளின் குணத்தையும்பருவத்தையும்அறிந்து அவர்களைப்புணர்கின்ற ஆடவர்களுக்கு இன்பமானது அதிகமாகவிளையாநின்ற போகத்தைப்போல் பசுமையாகிய பயிர்களெல்லாம் விளைந்தன.—(எ-று) நாலுவகைஸ்திரீகள் யாவெனில் - பதுமினி - சித்தினி - சங்கினி - அத்தினி. (உசா)

கொடும்பிறைவடிவிற்செய்தகூனிரும்பங்கைவாங்கி.......*
முடங்குகால்வரிவண்டார்ப்பமுள்ளரைக்கமலநீல.........*

மடங்கவெண்சாலிசெந்நெல்வேறுவேறரிந்திடாக்கி ..[தார்*
நெடுங்களத்தம்பொற்குன்றநிரையெனப்பெரும்போர்செய்

(இ-ள்) வளைவான பிறையின்வடிவம் போலச் செய்யப்பட்ட அரிவாட்களை உழவர்கள்கையிலெடுத்துக்கொண்டு வளைவாகியகால்களை யுடையனவைகளாய் இசைபாடும் வண்டுகள் ஆர்த்துமேலெழும்படி முள்ளரையையுடைய தாமரை மலர்களையும் நீலோத்பல மலர்களையும் சேரப்பிடித்துவெண்சாலிவிளைச்சல்களையுஞ்செந்நெல்விளைச்சல்களையும்வெவ்வேறாக அரிந்துதரம் ஏற்படுத்திநெடியதாகியகளத்தில் அழகிய பொன்மலைகள் போல் வரிசைவரிசையாகப் பெரியபோர்கள் செய்தார்கள். (எ-று) (உஎ)

கற்றைவைகளைந்துதூற்றிக்கூப்பியூர்க்காணித்தெய்வ .....*
மற்றவர்க்கற்றவாறீந்தளவைகண்டாறிலொன்று..... ....*
கொற்றவர்கடமைகொள்ளப்பண்டியிற்கொடுபோய்த் தென்னு
டுற்றவர்சுற்றந்தெய்வம்விருந்தினர்க்கூட்டியுண்பார்.......*

(இ-ள்) கற்றையாகிய வைக்கோல்களை நீக்கி நெற்களைத் தூற்றி அம்பாரமாக்கிக்கிராம தேவதைகளுக்கும் ஏழைகளுக்கும் முறைமைப்படிகொடுத்து அதன்பின்பு அளந்துதொகையேற்படுத்தி ஆறிலொன்று அரசர்கடமையை எடுத்துக்கொள்ளமிகுதியைப்பண்டியிற்கொண்டு போய்ப் பிதிரர்களுக்கும் சுற்றத்தாருக்கும் தெய்வங்களுக்கும் விருந்தினர்க்கும் பகுந்து தாங்களும் உண்பார்கள்.—(எ-று) (உஅ)

சாறடுகட்டியெள்ளுசாமைகொள்ளிறுங்குதோரை.......*
யாறிடுமதமால்யானைப்பழுக்குலையவரையேனல்.... ....*
வேறுபல்பயறுடின்னபுன்னிலவிளைவுமற்று...........*
மேறுடுபண்டியேற்றியிருநிலங்கிழியவுய்ப்பார்........*

(இ-ள்) கருப்பஞ்சாற்றினைக் காய்ச்சுதலாலுண்டாகியவெல்லம்- எள், சாமையரிசி- கொள்- சோளம் - மலைநெல் - ஆறுபோற் பெருகாநின்ற மதநீரையுடைய யானையின் முகம் போன்ற பழுக்கத்தக்க வாழைக்குலைகள் - அவரைகள் - தினையரிசி- என்னும் இவ்வகைகளையும் பலபல வகையாகிய பயறுகளுடன் இன்னும் இத்தன்மையுள்ள புன்னிலத்தில் விளைந்த தான மற்றைப் பொருள்களையும் எருதுகளின்மேலும் பண்டிக

ளின்மேலுந் ஏற்றிப், பெருமைபொருந்தியபூமிவிளக்கும்படி
செலுத்திக்கொண்டு போவார்கள்.—(எ-று) [பழுக்குலையெ
ன்பது- பாக்குக்குலைக்குமாம், யானைப்பழுக்குலையென்றிருப்
பதினால் வாழைக்குலையென் றுரையெழுதப்பட்டது- பாக்குக்
குலையென் றிருப்பதைச் சிந்தாமணியிற்காண்க.] (௨௯)

துறவினரீசனேசத்தொண்டினர்பசிக்குநல்லூண்........*
டிறவினைப்பிணிக்குத்தீர்க்குமருந்துடற்பனிப்புக்காடை...*
யுறைவிடம்பிறிதுநல்கியவரவரொழுகிச்செய்யு..........*
மறவினையிடுக்கணீக்கியருங்கதியுய்க்கவல்லார் ..........*

(இ-ள்) இருவகைப் பற்றினையும் விட்டுத் துறந்தவர்களும்
பரமசிவனிடத்தில் அன்புவைத்திருக்கும் அடியார்களுமாகிய
இவர்களுடைய பசிக்குநல்ல ஆகாரமும் நீக்குதற்கரிதாகிய பூர்
வவினைகளால்நேரிடுகின்றவியாதிகளுக்குத்தீர்க்கும்படியான
அவுஷதமும் உடல்நடுங்கும் குளிருக்கு வஸ்திரமும் வாசஞ்செ
ய்ய இடமும் மற்றவைகளும் கொடுத்து அவரவர்கள் ஒழுகி
ச்செய்யும் தருமங்களுக்கு நேரிடுகிற இடுக்கங்களை நீக்கி அ
ரிதாகிய மோக்ஷத்தில் செலுத்தவல்லவர்கள்.—(எ-று) (௩௰)

நிச்சலுமீசனன்பர்நெறிப்படிற்சிறார்மேல்வைத்த.........*
பொச்சமிலன்புமன்னர்புதல்வரைக்கண்டாலன்ன.........*
வச்சமுங்கொண்டுகூசியடிபணிந்தினியகூறி..............*
யிச்சையாறொழுகியுள்ளக்குறிப்பறிந்தேவல்செய்வார்.....*

(இ-ள்) நாள்தோறும் சிவனடியார்கள் மார்க்கத்தில் நே
ர்பட்டால் தங்கள் புத்திரர்கள் மேல்வைத்திருக்கும் உண்மை
யான அன்பைப்போல் அன்பும் அரசர்களுடைய புத்திரர்க
ளைக்கண்டால் உண்டாகும் அச்சம்போல் அச்சமும் கொண்டு
கூசி அவர்கள் பாதங்களைப் பணிந்து மதுரமாகிய வசனங்க
ளைச்சொல்லி அவர்க ளிச்சையின்படி நடந்து அவர்கள் மன
தின் குறிப்பை யறிந்து ஏவற்பணியுஞ் செய்வார்கள்.-(எ-று)

நறைபடுகனிதேன்பெய்தபாலொடுநறுநெய்வெள்ள......*
நிறைபடுசெம்பொன்வண்ணப்புழுக்கலாணிமிர்ந்தசோறு..*
குறைவறவுண்டுவேண்டும்பொருள்களுங்கொண்மினென்ன*
மறைமுதலடியார்தம்மைவழிமறித்தருத்துவார்கள்........*

(இ-ள்) சிவனடியார்கள், மார்க்கத்தில் நேர்பட்டால் அப்

புறம்போகவொட்டாமல் தடுத்துத் தங்கள்வீட்டிற்கு அழைத்துவந்து தேன்பொருந்திய கனிகளும், தேன்கலந்தபாலுடன் வாசனையுள்ள நெய் வெள்ளமும் நிறைந்த செம்பொன்வண்ணத்தையுடைய பருப்புடன் ஒக்கிய அன்னமும் நிறைய வுண்டு வேண்டும்பொருள்களும் பெற்றுக்கொள்ளுங்களென்றுகொடுத்துப் போசனஞ்செய்விப்பார்கள்.(எ-று) (௩௨)

பின்னைவனுரைப்பதந்தப்பெருந்தமிழ்நாடாங்கன்னி.... *
தன்னிடையூர்களென்னுமவயவந்தாங்கச்செய்த ........ *
பொன்னியற்கலனேகோயின்மடமறப்புறநீர்ச்சாலை..... *
யின்னமுதருத்துசாலையென்னவுருத்திரிந்ததம்மா ........ *

(இ-ள்) இப்படிப்பட்டதன்மையையுடையஅந்தப்பெரியதமிழ்நாடாகியகன்னியினிடத்திருக்கும் மற்றவூர்களாகியஅவயவங்கள்தாங்கச்செய்த சொர்ணாபரணங்களே ஆலயமும் மடமும் தருமசத்திரங்களும் தண்ணீர்ப்பந்தல்களும் இனிதாகிய அன்னமுண்ணச்செய்யும் சத்திரங்களுமாக உருவம்வேறுபட்டதென்று சொல்வதையன்றி வேறே யாது சொல்லத்தக்கது. (எ-று) (௩௩)

(திணைமயக்கம்.)

இன்றடம்புனல்வேலிசூழிந்நிலவளாப்பிற் ............ *
குன்றமுல்லைதண்பணைநெய்தல்குலத்திணைநான்கு ...... *
மன்றவுள்ளமற்றவைநிற்கமயங்கியமரபி .............. *
னொன்றொடொன்றுபோய்மயங்கியதிணைவகையுரைப்பாம். *

(இ-ள்) இனியதாகிய நீருள்ள பெரிய வயல்கள்சூழ்ந்த இந்தநாட்டினிடத்தில் குறிஞ்சி, முல்லை, குளிர்ச்சிபொருந்திய மருதம், நெய்தல்,, என்னும்சிரேஷ்டமாகிய நான்கு திணைகளும் பிரசித்தமாக உள்ளன- அவற்றின் வளப்பங்களைச்சொல்லுதல்விட்டு மாறுபட்ட தன்மையினையுடையதாக் ஒரு திணைப்பொருள் மற்றொருதிணைப் பொருளிற் சேர்ந்திருக்கும் திணைமயக்கத்தைச் சொல்லுகின்றோம்.—(எ-று) (௩௪)

கொல்லையானிரைமேய்ப்பவர்கோழிணர்க்குருந்தி ...... *
னெல்லைதாயதிற்படர்கறிக்கருந்துணருகுப்ப .......... *
முல்லைசோறெனத்தேன்விராய்முத்திலைசிற்றி .... .... *
லெல்லையாயமோடாடுபவெயின்சிறுமகளிர் ....... .... *

(இ-ள்) முல்லைநிலத்தில்பசுக்கூட்டத்தை மேய்க்கும் ஆயர்

கள்கொழுமையாகியபூங்கொத்துகளையுடைய குருந்தமரத்தி ன்மேல்விளைவில்லேறி அதில்படர்ந்திருக்கும்கருமையாகியமிள குக்கொத்துகளை உதிர்ப்பார்கள் - குறிஞ்சிநிலத்திலிருக்கும் வேடுவப்பெண்கள் முத்தினாற்செய்யப்பட்ட சிறுவீட்டினிட த்தில்முல்லையரும்புகள் சோறாக அலவகளுடன் தேனைக்க லந்துபெண்கள் கூட்டத்துடன் விளையாடுவார்கள்.—(எ-று)

கன்றொடுங்களிவண்டுவாய்நக்கவீர்ங்கரும்பு............. *
மென்றுபொன்சொரிவேங்கைவாயுறங்குவமேதி......... *
குன்றிளந்தினைமேய்ந்துபூங்கொழுநிழன்மருதஞ்......... *
சென்றுறங்குவசேவகமெனமுறச்செவிமா............ *

(இ-ள்) மருதநிலத்திலிருக்கும் எருமைகள் தங்கன்றுகளு டன்களிப்புற்ற வண்டுகளும் வாயைநக்கும்படி குளிர்ச்சியுள் ள கரும்புகளைத்தின்று குறிஞ்சிநிலத்திலிருக்கும் பொன்னைச் சொரிதல்போல மலர்களைச்சொரிகின்ற வேங்கைமரங்களினி டத்தில் நித்திரைசெய்வன - முறம்போன்ற காதுகளை யுடைய யானைகள் குறிஞ்சி நிலத்திலிருக்கும் இளந்தினைகளை மேய்ந் துமருதநிலத்திற் சென்று மலர்களையுடைய கொழுமையாகி யமருதமரங்களினிழலே சேவகமாக உறங்குவன.—(எ-று)
[சேவகம் என்பது, யானை துயிலுமிடம்.] (௩௬)

எற்றுதெண்டிரையெறிவளையெயிற்றியரிழைத்த.......... *
சிற்றில்வாய்நுழைந்தழிப்பவச்சிறுமியர்வெகுண்டு....... *
பற்றிலாரெனச்சிதறியமணவணிபரதர்................ *
முற்றிலாமுலைச்சிறுமியர்முத்தொடுங்கோப்ப.......... *

(இ-ள்) நெய்தனிலத்தில் வீசுகின்ற தெளிவாகிய அலைகள் எறிகின்ற சங்குகள் குறிஞ்சி நிலத்திலிருக்கும் வேடுவப்பெண் கள்செய்த சிறுவீடுகளில் நுழைந்து அழிக்க அந்தப்பெண் கள் கோபங்கொண்டு பற்றற்றவர்கள்போல்சிதறிய மணவும ணிகளாகிய அணிகளை நெய்தனிலத்திலிருக்கும் இளமையாகி ய ஸ்தனங்களை யுடைய நுளைப்பெண்கள் முத்துகளோடுங் கோப்பார்கள்.—(எ-று) (௩௭)

முல்லைவண்டுபோய்முல்லையாழ்முளரிவாய்மருதம்.......... *
வல்லவண்டினைப்பயிற்றிப்பின்பயில்வனமருதங்.......... *
கொல்லையான்மடிபெறிந்திளங்குழவியென்றிரங்கி......... *
யொல்லையூற்றுபால்வெள்ளத்துளுகள்வனவாளை.......... *

(இ-ள்) முல்லைநிலத்திலிருக்கும் வண்டுகள்மருத நிலத்திற் போய்த் தாமரைமலரிலிருக்கும் மருதப்பண்பாட வல்லவண் டுகளுக்குத் தாம்பாடுகின்ற முல்லைப்பண்ணினைக் கற்பித்துப் பின்பு அவ்வண்டுகளிடத்தில்மருதப்பண்ணினைக் கற்றுக்கொள் ளுவன-மருதநிலத்திலிருக்கும்வாளைமீன்கள்-முல்லைநிலத்தி லிருக்கும்- பசுவின்மடியில்மோதிப்(பசுவானது தன் னிளங்கன் றுமுட்டிற்றென்று) இரங்கியிளாவாகச்சொரிகின்றபால் வெள் ளத்தி னிடத்தில் புரள்வன.—(எ-று) (௩௮)

கரும்பொதிர்கோட்டிளம்புன்னைவாய்க்கள்ளுண்டுகாளைச் .. *
சுரும்புசெவ்வழிப்பாண்செயக்கொன்றைபொன்சொரிவ .. *
வருந்தடங்கடல்வளையெடுத்தாழியான்கையி ........... *
லிருந்தசங்கெனவிறைகொளப்பூவைமேலெறிவ........... *

(இ-ள்) நெய்தல்நிலத்திலிருக்கும், இரும்பையொத்த கொ ம்புகளையுடைய இளமையாகிய புன்னைமலர்களினிடத்தில் ம துவையுண்டு ஆண் வண்டுகள் செவ்வழியென்னும் பண்ணி னைப்பாட (அதைக்கேட்டு மகிழ்ச்சி அடைந்து) முல்லைநிலத்தி லிருக்கும் கொன்றைமரங்கள் பொன்கொடுத்தல்போல் மல ர்களைச்சொரிவன- அளவிடுதற்கரிதாகிய பெரியகடலானது, தன்னிடத்திலிருக்கும் சங்குகளை அலையாகிய கையினால் எடுத் துச்சக்கரபாணியாகிய மகாவிஷ்ணுவின் இடக்கரத்தில் பா ஞ்சசன்னியமென்னும் பெயரையுடைய சங்கமிருப்பதுபோ ல முல்லைநிலத்திலுண்டாகிய காசாஞ்செடியின்மேல் பொரு ந்தியிருக்கும்படி எறிவன.—(எ-று) [காசாம்பூ-நீலநிறமுள் ளதாதலால், திருமாலோடு ஒப்புமைக்கவிகளால் சொல்லப்ப டுகின்றது.] (௩௯)

கழிந்ததெங்கினொண்பழம்பரீஇமுட்பலாக்கனிகீண் ...... *
டழிந்ததேனுவர்க்கேணிபாய்ந்தகற்றுவவுவரை ........ *
வழிந்ததேன்மடற்கேதகைமலர்நிழல்குருகென் ..... ...*
றொழிந்ததாமரைப்போதுபுக்கொளிப்பனகெண்டை.. .. *

(இ-ள்) குலையைவிட்டு நீங்கிய ஒளியையுடைய தேங்காய் களைத்தாங்கிப் புறத்தில் முட்களையுடைய பலாப்பழங்கள்வெ டித்து அழிதலாலுண்டாகியதேன்கள் நெய்தல்நிலத்திலிருக்கு ம்உப்புநீருள்ளகேணிகளிற்பாய்ந்து அவ்வுப்பினை நீக்குவன.-தே ன்வழிந்த வண்ணமாயேயிருக்கும் இதழ்களையுடைய தாழம்

பூவிரிழிலைக்கண்டுகொக்கென்றுபயந்து அக்கேணிகளிலிருக்கும்கெண்டைமீன்கள் அங்கிருந்து மருதநிலத்திற் பாய்ந்து கொக்குகளிருந்து போய்விட்ட தாமரைமலர்களில் ஒளித்துக்கொள்வன.—(எ-று) (சஎ)

ஆறுசூழ்கழிப்புலால்பொருதசைந்துகூன்கைதை........*
சோறுகால்வனவாம்பல்வாய்திறப்பனதுணிந்து........*
கூறுவாரெனக்குவளைகண்காட்டிடக்கூடித்............*
தூறுவாரெனச்சிரித்தலர்தூற்றுவமுல்லை..............*

(இ-ள்) நெய்தல்நிலத்தில் ஒழுங்காகச்சூழ்ந்திருக்குங்கழிகளில் உண்டாகும் புலால்நாற்றத்தைச் சகியாமல் தளர்ந்து வளைவாகிய தாழம்பூக்கள் சோற்றினைக்கக்குவன-(அதற்குநேராக மருதநிலத்திலிருக்கும்) செவ்வல்லிகள் வாய்திறப்பன-துணிந்து சொல்கின்றவர்களைப்போல் குவளைகள் கண்களைக்காட்ட, ஒன்றாகச்சேர்ந்து தூறுகின்றவர்களைப்போல் முல்லைகள் நகைத்து அவ்வாம்பலின்செய்கையை வெளிப்படுத்துவன.—(எ-று) சிரித்தல்-என்பது-மலர்தல்-அலர்தூற்றல்-என்பது-பழம்பூவைச்சொரிதல். (சஅ)

துள்ளுசேல்விழிநுளைச்சியர்சுறவொடுமருந்தக்..........*
கள்ளுமாறவுங்கூனலங்காய்த்தினையவரைக்..............*
கொள்ளுமாறவுங்கிழங்குதேன்கொழுஞ்சுவைக்கன்ன ....*
வெள்ளுமாறவுமளப்பனவிடைக்கிடைமுத்தம்...........*

(இ-ள்) துள்ளுகின்ற சேல்மீன்போன்ற கண்களையுடைய நெய்தல்நிலப்பெண்கள்- சுறாமீனோடும் உண்ணக் கள்ளினை மாறவும்- பாக்கு, தினை, அவரை, கொள்ளு, என்னும் இவைகளைமாறவும்- கிழங்கு, தேன், செழுமையான மதுரத்தையுடையகரும்பு,எள்ளு, என்னும் இவைகளைமாறவும்-அப்பொருள்களின் அளவே முத்துகள் அந்தப்பொருள்களுக்காக அளக்கப்படுவன.—(எ-று) மாறுதல், ஒரு பண்டங்கொடுத்து அதற்கீடாக மற்றொருபண்டத்தை மாற்றிக்கொள்ளுதல். கள்ளு-பாக்கு-கரும்பு- இவைமுதலாயின மருதநிலப்பொருள்-தினை-தேன்-கிழங்கு- இவைமுதலாயின, குறிஞ்சிநிலப்பொருள்-அவரை- கொள்ளு- எள்ளு- இவைமுதலாயின முல்லைநிலப்பொருள்,முத்து - சுறாமுதலானவை நெய்தல்நிலப்பொருள்.

அவமிரும்புலப்பகைகடந் துயிர்க்கெலாமன்பா ........ *
நவமிகுங்குடைநிழற்றிமெய்ச்செய்யகோனடாத்திச் ...... *
சிவமிகும்பரஞானமெய்த்திருவொடும்பொலிந்து ........ *
தவமிருந்தரசாள்வதுதண்டமிழ்ப்பொதியம் ............ *

(இ-ள்) பயனில்லாமைமிகுந்துள்ள ஐம்புலப்பகையைக்க டந்து எல்லாவுயிர்களுக்கும் மிகுந்த புதுமையையுடைய அன்பாகிய குடைநிழலைச்செய்து - உண்மையென்னும் செங்கோல்செலுத்தி நன்மையே அதிகரிக்கும் மெய்ஞ்ஞானமாகிய அழியாத செல்வத்தோடும் விளக்கமுற்றுத் தவமான திருந்தி அரசாட்சிசெய்வதற் கிடமாயிருப்பது தண்மையுள்ள தமிழ்ப் பொதியம்.—(எ-று) [ஐம்புலன்களாவன- சுவை, ஒளி, ஊறு, ஓசை, நாற்றம், என்பவைகளாம்- இவைகள் பிறவிக்குக் காரணமாகிய பயனில்லாத முயற்சியைத் தருகின்றமையால் அவமிகும் புலப்பகையென்றார்- சிவமிகும்பரஞான மெய்த் திருவொடும் பொலிந்து என விசேடித்தமையால் - ஈண்டுத் தவமென்றது, சிவயோகமெனப்படும். குடையானது, வெய்யிலால் வருத்தம் நேரிடாவண்ணம், நிழலைச்செய்வதுபோல் அன்பானது- உயிர்களுக்கு வருத்த நேரிடாவண்ணம் பாதுகாக்கவேண்டுமென்று உண்டாகின்ற தாதலால், அன்பினைக் குடையென்றார்- துறவுக்குரியது அருளாயிருக்க ஈண்டு அதனைவிட்டு அன்பினைச்சொன்ன தென்னவெனில், அன்பின்முதிர்ச்சியே அருளாதலால், அவ்வாறுசொன்னார்- அருளென்னும் அன்பீன்குழவியென்னுந் திருக்குறளினானும் அறிக. வாய்மையென்பது, மற்றொரு உயிருக்குக் கொஞ்சமாகிலும் பொல்லாங்கு நேரிடாத சொற்களைச் சொல்லுதலாம் - அதுபோல் செங்கோலென்பதும் உயிர்களுக்குப் பொல்லாங்குநேரிடாவண்ணம் செய்வதாதலால்வாய்மைச்செய்ய கோல் நடாத்தியென்றார். (குறள்) வாய்மையெனப்படுவ தியாதெனின் யாதொன்றுந் தீமையிலாத சொலல். (சங)

வானயாறுதோய்ந்துயரியமலயமேமுக்கண் .......... *
ஞானநாயகனம்மலைபோர்த்தகார்நால்வா .............. *
யானையீருரியம்மழையசும்பதன்புண்ணீர் .............. *
கூனல்வான்சிலைகுருதிதோய்கோடுபோன்றன்றே ...... *

(இ-ள்)ஆகாயகங்கையை அளாவியுயர்ந்த பொதியமலையே

சோமசூரியாக்கினி என்னுந்திரிநேத்திரங்களையுடைய ஞான நாயகனாகிய பரமசிவனும்- அம்மலையைச்சூழ்ந்திருக்கும் கரியமேகமானது, அந்தக்கடவுள் உரித்துப் போர்த்துக்கொண்ட யானையின் தோலாம்- அந்தமேகத்தின் சோனைப்பெய்ச்சல் அந்த யானையின் உதிரமாம்- அம்மேகத்தில் தோன்றுகின்ற இந்திரதனுசு அந்த யானையின் உதிரந்தோய்ந்த கொம்பாம்.—(எ-று) (சச)

பரமசிவன் - முடியில் ஆகாயகங்கையை அணிந்து எல்லாக் கடவுளர்களினு முயர்வாகி ஞானமயமான திருமேனியைக் கொண்டிருப்பதுபோல்,பொதியமலையும் ஆகாயகங்கையை முடியில அணிந்து எல்லாமலைகளினும் உயர்வாகிஞானமயமாயிருப்பதினால் அதனைப் பரமசிவனென்று சொன்னார்-பொதியம்- ஞானமயமாவதெவ்வாறெனில், அம்மலையினிடத்தில் அகஸ்தியர் முதலாகிய ஞானவான்கள் நிறைந்திருப்பதினால் என்றுணர்க. அன்றியும் அம்மலை,திருஞான சம்பந்தசுவாமிகள்முதலாகிய மூவர்பாடல்பெற்ற ஆயிரத்தெட்டுச்சிவஸ்தலங்களில் ஒன்றாயிருப்பதினால் சிவரூபமாகக் கொள்ளப்படும்- இந்தக்காரணத்தினால், பொதியமே முக்கண் ஞானநாயகனெனத்தேற்றேகாரங்கொடுத்துச் சொன்னார். பரமசிவன் வாசமா யிருக்கும் இருதயத்தையுடைய மெய்யடியாரைச் சிவசொரூபமாகக்கொள்ளும்படி சைவாகமங்களில் சொல்லப்பட்டிருக்கிறபடியினால், பரமசிவன்வாசமாயிருக்கும் ஸ்தலமாகிய பொதியமலை சிவசொரூபமாகச் சொல்லப்பட்டது சைவசமய சம்பிரதாய மென்னக் கொள்க. பொதியமலைக்குப்பாடியதேவார மிறந்துபோனபடியால், இப்போதுவைப்புஸ்தலத்தில் சொல்லப்பட் டிருக்கின்றது. (திங்களூர்பிடவூர் கோவந்தபுத்தூர் குருக்கேத்திரம் பொதியமலைதேனூர் விராடபுரஞ்சூல.) இது வைப்புத்தலத்தைக்குறித்தபாடலின் முதற்சரணம். *

(அடியார்கள்சிவசொரூபமென்பதற்குப்பாடல்.)

(சிவதருமோத்திரத்தில்-சிவஞானதானவியல்.)

ஒப்பிலாவொருவன்சிவனேயிய, ஒப்பிலாவுமைதன்னையுமாத்தகத், தொப்பிலாவுணர் வாக்கிடுமுத்தம, னொப்பிலாவர னேயெனவோர்கவே. ......................... *

பரமசிவனுக்கு நேத்திரங்களாயிருப்பவைகள் இவ்வுலகத்தில் பிரகாசிக்கின்ற சோமசூரியாக்கினிகளோ வென்றால், அல்ல- இம்மூன்றுக்கும் பிரகாசத்தைக்கொடுக்கிற காரணச் சுடர்களாம்- பார்வதிதேவியார் பரமசிவனுடைய திருக்கண்களைமூடினபோது எல்லாவுலகத்திலு மிருப்பவர்கள் கண்களினொளியுமறைந்து இருள்மூடினதே அதற்குச்சாக்ஷியாக அறிந்துகொள்க. *

(அதற்குப்பாடல் காஞ்சிபுராணத்தில்தழுவகுழைந்தபடலம்)

மூப்பான்முதலிட்டவிரண்டறமுந்தழைப்ப............*
எப்பானுலகத்தொளியாவையுமெம்பிரானார்............;*
தப்பாவிழியின்னொளிச்சால்பெனயாருங்காண.........*
அப்பார்முடியாரடித்தொண்டரகங்களிப்ப...........*

(யானையையுரித்ததற்குக்காரணம்.)

கயாசுரன்- என்னும்பெயரும் யானையுருவமுமுள்ள ஒரு அசுரன்பிரமதேவனுடையவரத்தினால் மிகுந்தவல்லமையையுடையவனாய்த்தேவர்களையுந் தன்குலத்தாரையும் வதைசெய்து திரிகின்றவன் பூலோகத்துக்குவந்துமுனிவர்களை யெல்லாம் வருத்த அதைக்கண்ட முனிவர்கள்பயந்து காசிக்ஷேத்திரத்தில் ஓட அங்கும் தொடர்ந்தான் அப்படி தொடரவே அவர்களும் அந்த க்ஷேத்திரத்திலிருப்பவர்களும் பயந்து- மணிகர்ணிகையென்னுமொருசிவாலயத்துக்குள்ஓடி யொளித்துக் கொண்டார்கள்- அந்தக்கொடியவன்- பரமசிவன் எதிரில்போனால் நீயிறந்து போவாயென்று பிர்ம்மதேவன் சொன்னதை மறந்து அந்தச்சிவாலயத்தின்முன்போய்- உள்ளேபோகவும்நினைத்தான்- அப்போது பரமசிவன் வீரரூபங்கொண்டு அவனைமிதித்து உரித்துத் தோலைப் போர்த்துக்கொண்டார். *

(அதற்குப்பாடல் தக்ஷகாண்டம்.),

ஆருநாயகனஃதறிந்துயிர்த்தொகையனைத்தும்.........*
வாளிலாதுகண்ணயர்வதுமாற்றுதல்மதித்து.............*
நீளிருங்கரியீர்த்திடுமதளினைநிமலன்..................*
தோளின்மேற்கொடுபோர்த்தனனருள்புரிதொடர்பால்..*

சுனையகன்கனைச்சூழல்வாய்ச்சுரும்புசூழ்கிடப்ப.........*
நனையவிழ்ந்தசெங்காந்தண்மேனுகிளவேங்கைச்.......*
சினையவிழ்ந்தவீகிடப்பபொன்றேய்கலத்தெண்ணீ.....*
ரனையபொன்சுடுநெருப்பொடுகரியிருந்தனைய..........*

(இ-ள்) பொதியமலையினிடத்துள்ள சுனைகளின் அகன்ற கரையிலிருக்கும் புதர்களினிடத்தில் வண்டுகள் சூழ்ந்துகொண்டிருக்கும்படி அரும்புகள்மலர்ந்த செங்காந்தட்பூவின் மேல் மிகுந்த இரணமையாகிய வேங்கை விருக்ஷங்களின் கிளைகளில் மலர்ந்தபூக்கள், விழுந்திருப்பவை பொன்னானது, நெருப்பிற் காய்த்துத் தோய்க்கும்படியான நீரினையுடைய பாத்திரத்துடனும் - அந்தப்பொன்னைச் சுடுகின்ற கரிநெருப்புடனுமிருந்ததை யொத்தன. (௪௫)

குண்டுநீர்ப்படுகுவளைவாய்க்கொழுஞ்சினைமரவம்........*
வண்டுகூட்பிடச்செம்மறாய்ப்புதுமதுவார்ப்ப .........*
வண்டர்வாய்ப்படமறைவழிபொரிசொரிந்தானெய்......*
மொண்டுவாக்கிமுத்தீவினைமுடிப்பவரனைய ............*

(இ-ள்) ஆழமாகிய நீரினுண்டாகிய செங்கழுநீர்ப்பூவினிடத்தில் வளப்பம்பொருந்திய கிளைகளையுடைய குங்குமமரங்கள் - வண்டுகள்ஒலிக்கப்பழம்பூவைத் தாவிப்புதிதாகிய தேனைச் சொரியுமவை - தேவர்கள்வாயிற்பொருந்த வேதமுறைப்படி பொரிகள் சிந்திப் பசுவினெய்யினை மொண்டுவார்த்து ஆகவனீயம் - தக்ஷணாக்கினி - காருகபத்தியம் - என்னும்மூன்று தீக்களையும் வளர்க்கும்படியான செய்கையை நிறைவேற்றுகின்ற பிராமணர்களை யொத்தன.—(எ-று) முத்தீயாலுண்டாகும் பயனாவது, ஆகவனீயம், வேதத்தை வழக்குதலாம் - தக்ஷணாக்கினி, தேவர்களுக்குத் தக்ஷணை கொடுத்தலாம் - காருகபத்தியம், பூலோகத்தை ரக்ஷிக்குதலாம் - இதனைத் திருமுருகாற்றுப்படையின் பரிமேலழகருரையிற்காண்க. (௪௬)

அகிலுமாரமுந்தழன்மடுத்தகழ்ந்தெறிந்தழல்கா..........*
றுகிருமாரமுந்தொட்டெறிந்தைவனந்தூவிப்..........*
புகரின்மால்கரிமருப்பினால்வேலிகள்போக்கி..........*
யிகலில்வான்பயிரோம்புவவெயினர்தஞ்சீறூர்..........*

(இ-ள்) அகில்களையும் சந்தனவிருக்ஷங்களையும் தீயிட்டுக் கொளுத்தி அதன்பின்பு வேருடன்கல்லிஎறிந்துவிட்டும், அழல்போல் செம்மை நிறம் விளங்குகின்ற பவளங்களையும் முத்துகளையும் தோண்டிஎறிந்துவிட்டும் - நிலத்தைத்திருத்தி - மலைநெல்லைவிதைத்து - முகத்தில் புகர்நிறத்தையும் மயக்கத்தை

யுருடையயானைத்தந்தங்களினால்வேலிகள்வைத்துயாதொருவி ரோதமுமில்லாத சிறந்த பயிர்களைவேடர்கள் தங்கள்சிற்றூர்க ளில் ஆதரிப்பார்கள்-புகரில்என்பதற்குக்குற்றமில்லாத என்று ம்)மால்கரி-என்பதற்குப்பெரியயானையென்றும்பொருள்கொ ள்ளலாம்.—(எ-று) அகிலாவது- (சதுரக்கள்ளியின் வயிர மாம்.) (சஎ)

அண்டவாணருக்கின்னமுதருத்துவோர்வேள்விக் .........*
குண்டவாரழற்கொழும்புகைகோலுமக்குன்றிற் .........*
புண்டவாதவேலிறவுளர்புனத்தெரிமடுப்ப .........*
வுண்டகாரகிற்றூமமுமொக்கவேமயங்கும் .........*

(இ-ள்) தேவர்களுக்கு இனிதாகிய அவிப்பாகந் தருகின் றபிராமணர்கள் செய்கிற யாககுண்டத்தில் நிறைந்திருக்குந்தீ யிலுண்டான கொழுமையான புகைசூழும் அம்மலையில் விர ணம்நீங்காத வேலாயுதத்தையுடைய குறவர்கள் புனங்களில் தீ யிடப்பொருந்திய கருமையாகிய அகிற்புகையும் - முன்சொ ன்ன யாகத்தீப்புகையுடன்கலக்கும்.—(எ-று) (சஅ)

கருவிவான்சொரிமணிகளுங்கழைசொரிமணியு .........*
மருவிகான்றபன்மணிகளுமகன்றலைநாகத் .........*
திரவிகான்றசெம்மணிகளும்புனங்கவரினமான் .........*
குருவிவீழ்ந்திடக்கொடிச்சியர்கோத்தெறிகவண்கல் .........*

(இ-ள்) புனங்களில்வந்து பயிர்களைக் கவர்கின்ற கூட்ட மாகியமான்களும் குருவிகளும் விழும்படி குறத்தியர் கவணி ல்கோத்து எறிகின்ற கற்கள்யாவையெனில் கூட்டமாகியமே கங்கள்பொழிகின்றரத்தினங்களும் மூங்கில்கள் சொரிகின்றமு த்துகளும் அருவிகள்கீழே கொண்டுவந்த பலவகை ரத்தினங் களும் நாகத்தின் பாந்ததலையிலிருக்கும், வெய்யிலைப்பொழி கின்ற மாணிக்கங்களுமேயாம்.—(எ-று) (சகூ)

மாயவன்வடிவாயதுவையமாலுந்திச் .........*
சேயபங்கயமாயதுதென்னாடலர்மேற் .........*
போயமெல்பொகுட்டாயதுபொதியமப்பொகுட்டின் .. *
மேயநான்முகனகத்தியன்முத்தமிழ்வேதம் .........*

(இ-ள்) இவ்வுலகம் திருமால்வடிவம்போலிருக்கின்றதுபா ண்டிநாடானது- அந்தத்திருமால் உந்தியிலுண்டான செந்

தாமரை மலர்போலிருக்கின்றது- அந்நாட்டிலிருக்கும் பொதியமலையானது அந்த மலரினிடத்தில் விளங்கியிருக்கும் பொகுட்டினையொத் திருக்கின்றது- அம்மலையின்மேலிருக்கும் அகஸ்திய முனிவரானவர்- அந்தப்பொகுட்டிற் பொருந்திய பிர்ம்மதேவனை யொத்திருக்கின்றனர்- அம்முனிவரா லுண்டானமுத்தமிழானது,பிர்ம்மதேவனிடமாக உண்டான வேதமென்றுசொல்லத்தக்கது.—(எ-று) பிர்ம்மதேவனால்உண்டாகப்பட்ட வேதம்போல் அகஸ்தியமுனிவரால் உண்டாகப்பட்ட தமிழானது, தமிழ்நாட்டிலுள்ளார் யாவருக்கும் ஞானத்தைத்தருதலால், தமிழை வேதமென்றும், அகஸ்திய முனிவரைப் பிர்ம்மதேவ னென்றும், அவரிருக்கும் பொதிய மலையைப் பொகுட்டென்றும், அம்மலை யிருக்கும் பாண்டி நாட்டை நாபிக் கமலமென்றும, அந்நாட்டுக்கிடமாகிய பூமியைத்திருமாலென்றும் கூறினனென்றுணர்க- பொகுட்டு என்பது, தாமரைப்பூங்கொட்டை.முத்தமிழாவது,இயல்-இசை-நாடகம்.

ஏகமாகியமேருவும்பொதியமேயிரும்பொ ............ *
ருதுமேருவைச்சூழ்ந்தசாம்பூநதயாறு ............ *
நாகராடுதண்பொருனையேநாவலாறுடுத்த ............ *
போகபூமியும்பொருனைசூழ்பூமியேபோலும் ........... *

(இ-ள்) பொதியமலையே தன்னுடன் வேறொரு மலையினையும் ஒப்புசொல்லக்கூடாததாய்த் தனக்குத்தானே ஒப்பாகிய மேருவென்றும் தேவர்கள்வந்து ஸ்நானஞ் செய்யும்படியான தாமிரபர்ணியே பெருமைபொருந்திய பொன்னாகியமேருமலையைச் சூழ்ந்த சாம்பூநத நதியென்றும் தாமிரபர்ணி சூழ்ந்த பாண்டிநாடே சாம்பூநத நதிசூழ்ந்த போகபூமியென்றும் சொல்லப்படும்.—(எ-று) மகமேருவானது இமயமுதலாகிய அஷ்டகுலபர்வதங்களைப் பார்க்கிலும் உயர்வானதும் திரிமூர்த்திகளும் தேவேந்திரன் முதலாகிய தேவர்களும் வாசஞ்செய்யும் ஸ்தானமாயும் இருப்பதினால்ஏகமாகியமேருவென்றார்.

(இதற்குச்செய்யுள், சிவதருமோத்திரத்தில்,கோபுரவியல்)
இந்திரனேமுதலாயவெண்டிசைப்பாலருமிவற்றித் ........ *
நந்தமக்குத்தக்கதிசைக்கொடுமுடியாற்றங்கிடுவர் ........ *
அந்தவரைக்குவட்டிருக்குநடுவாகவணியுறவே .... ....*
முந்திமுனைத்தெழுசிகரமூன்றுளவேமூவர்க்கும் ........ *

தடவரையினடுவுச்சிதனின்மூளைத்தசிகரத்தின்.......*
வடிவுடையமனோவதிதான்மலரயன்வாழ்புரியதற்குக்.*
குடதிசையிற்கொடுமுடியில்வைகுந்தங்கோவிந்த..*
னிடம்வடபாற்குணதிசையிற்சேர்திகிரியீசனிடம்.....*

பொதியமலையில் எழுந்தருளியிருக்கும் பரமசிவத்தைத்தரிசிப்பதற்குவிஷ்ணுமுதலாகிய தேவர்கள்வாசமாயிருப்பதினாலும்அகஸ்தியமுனிவர் முதலாகிய முனிவர்கள்வாசமா யிருப்பதினாலும்- பொதியமலையே மகமேருவென்று சொன்னார் (சாம்பூநதஆறுவது) மகமேருவின்மேல் நான்குதிசையிலும் நான்கு மரங்களிருக்கின்றன- அந்தநாலுக்குள் நாவன்மரம்- தென்திசையிலிருக்கின்றது - அதன்பழச்சாறுவிழுந்து சாம்பூநதயாறென்னும்பேர்பெற்றுச் சுவர்ணமயமாய் மேருவுக்குவலமாகவோடுகின்றது அந்த ஆற்றினீரை உண்பவர்கள் பொன்னிறம்பெற்றுப் பதின்மூவாயிரவருஷம் வாழ்வார்கள்- அதில் சஞ்சரிக்கும் உயிர்களும் பொன்னிறமேயாம். *

(இதற்குச்செய்யுள்-ஷீகோபுரவியல்.)

நறவணையகனியுதிருநன்னாவலெந்நாளும்............*
உறுதியுறவுயிர்க்கெல்லாநற்றென்கிரியிலோங்குதலால்....*
பெறுநவகண்டமும்பெரியநாவலந்தீவெனும்பெயரை....*
மறுவறுமக்கனித்தீநீர்வலாயுதணைவலம்வருமே-..........*

மேருவினைவலமாகிமேவியிடுமந்நீரை........*
ஆருமவர்கனகநிறமாவரயுதாயுளுறச்........*
சாரவொருமூன்றுடனுந்தங்கியவாயிரந்தழைக்க*
ஊருமுயிர்மற்றையவும்மீடதனையொளியுறுமே*

தாமிரபர்ணிநீரும் ஸ்நானஞ் செய்கின்றவர்களுக்கும் உண்பவர்களுக்கும்திவ்வியதேகத்தைக்கொடுக்குந் தன்மையை உடையதாதலால் சாம்பூநதயாற்றோடொப்பாகச்சொன்னார்,- தேவராடு தண்பொருநையென்றதே அதற்குச்சான்றும். (போகபூமியாவது.) மகமேருவைச் சூழ்ந்திருக்கும் நவகண்டங்களுக்குள் பரதகண்டந்தவிர மற்ற எட்டுக்கண்டங்களும் போகபூமியாம்- போகபூமியி லிருப்பவர்களுக்கு நரைதிரைமூப்பு- வினை- பிணி- என்னு மிவைகளில்லை, அன்றியும் கிருதயுகம் போலவே எல்லாயுகத்திலும் நன்மையுண்டாவதுமன்றிநிறைந்த அறிவும் ஆயுசுவிர்த்தியுமுண்டாகும். *

(இதற்குச்செய்யுள்-ஷீஇயல்.)

பொன்னுருவர்கிம்புருடர்புசிப்பிறலிப்புன்கனியே......*

மன்னுமயுதாயுவுளர்மனக்கவலைதனையில்லார் ............*
கின்னமிலார்நரைதிரையுங்கிளருடலிற்பிணிவினையும் .......*
இன்னமுறைமற்றையவேழ்கண்டத்துமெண்ணுகவே ....*

ஈங்குரைத்தவிருநான்குகண்டத்துளெல்லோர்க்கும் .. ..*
ஓங்கியிடுகிருதயுகம்போலொழிந்தயுகமெல்லாம் .........*
நீங்கரியநன்மையினைநிறுத்தியிடுநிறையறிவு .... .......*
தாங்கிடுவரவருடலினுரமாதிதன்னையுமே .... ........*

பாண்டிநாடானது, தன்னிடத்தி லிருப்பவர்களுக்கு இன்பத்தைத்தருந்தன்மையையுடையதென்று விளங்கப் போகபூமியோ டொப்பாகச் சொன்னார். (௫௧)

சிறந்ததண்டமிழாலவாய்சிவனுலகாகும் .............*
புறந்தயங்கியநகரெலாம்புரந்தரன்பிரமன் ............*
மறந்தயங்கியநேமியோனாதியவானோர் ........ .......*
அறந்தயங்கியவுலகுருவானதேயாகும்..................*

(இ-ள்) சிவனுலகமானது, சிறப்புற்ற தண்மையுள்ள தமிழ்ச்சங்கமிருந்ததிருவாலவாயென்னும்ஸ்தலரூபமானதாம்.அது அப்படியானால் தேவேந்திரன் - பிர்ம்மதேவன்- வீரம் விளங்கிய சக்கரபாணியென்னும்மகாவிஷ்ணுமுதலாகிய தேவர்களுடையதருமம் விளங்குகின்றஉலகமெல்லாம் அந்தத் திருவாலவாயின் புறத்தில் பிரகாசமுற்ற நகரரூபமானதாம்.(எ-று) கற்பவர்களுக்கு இன்பந்தருதலின் தண்டமிழென்று சொல்லப்பட்டது. (௫௨)

வளர்ந்தநுண்ணிடைமடந்தையர்வனமுலைமெழுகிக் ......*
களைந்தகுங்குமக்கலவையுங்காசறைச்சாந்து............*
மலைந்ததெண்டிரைப்பொருனையோவந்நதிஞாங்கர்.....*
விளைந்தசெந்நெலுங்கன்னலும்வீசுமவ்வாசம்..........*

(இ-ள்) வளர்கின்ற நுண்ணிய இடையையுடைய மாதர்களின் அழகுபொருந்திய ஸ்தனங்களில் பூசிக் களையப்பட்ட குங்குமப்பூசேர்ந்த கலவையும் - கஸ்தூரிசேர்ந்த சந்தனமும் கலந்த தெளிவாகிய அலைகளையுடைய தாம்பிரபர்ணி நதிமாத்திரமோ அந்தவாசனையை வீசுகின்றது- அந்நதியின் இரண்டுபக்கத்திலும் விளைந்திராநின்ற செஞ்சாலிகளும் கரும்புகளும் வீசுகின்றனவாம்.—(எ-று) (௫௩)

பொதியிலேவிளைகின்றனசந்தனம்பொதியி .. .... ..... *
னதியிலேவிளைகின்றனமுத்தமந்நதிசூழ் ................ *
பதியிலேவிளைகின்றனதருமமப்பதியோர் .............*
மதியிலேவிளைகின்றனமறைமுதற்பத்தி .............. *

(இ-ள்) பொதியமலையி னிடத்தில் சந்தனவிருக்ஷங்கள் விளைகின்றன - அம்மலையிலிருந்து வருகின்ற தாமிரபர்ணி நதியினிடத்தில் முத்தங்கள் விளைகின்றன - அந்நதிசூழ்ந்த பதிகளிலே தர்மங்கள் விளைகின்றன - அந்தப் பதிகளிலிருப்பவர்களுடைய புத்தியினிடத்தில் சிவபத்திகள் விளைகின்றன.—(எ-று) பத்தியென்பது, சொல்லினால் ஒன்றாயிருந்தாலும் கிரியையால் பலபிரகாரமா யிருப்பதினால் பன்மையிற் சொல்லப்பட்டது - அவா வென்பதொன்றேயானாலும் விஷய பேதத்தினால் ஐந்துவகைப்படுவது போலென்றுணர்க - இதனை, (ஐந்தவித்தானாற்றல்) என்னுங் குறளுரையிற்காணலாம். (ருச)

கடுக்கவின்பெறுகண்டனுந்தென்றிசைநோக்கி ........... *
யடுக்கவந்துவந்தாடுவானுடலினிளைப்பு................ *
விடுக்கவாரமென்காறிருமுகத்திடைவீசி ............. *
மடுக்கவுந்தமிழ்திருச்செவிமாந்தவுமன்றோ............. *

(இ-ள்) விஷந்தங்கிய அழகுள்ள கண்டத்தையுடைய பரமசிவனும் தெற்குத்திசையை நோக்கிக்கொண்டு ஒருஸ்தலத்தில் நடனஞ்செய்து அதைவிட்டு அதற்குச்சமீபமாக மற்றொருஸ்தலத்தில்வந்து நடனஞ்செய்து அதைவிட்டு அதற்கடுத்ததாகிய மற்றொருஸ்தலத்தில் வந்துநடனஞ்செய்கின்றார் - (அப்படியேநடனஞ்செய்கின்றாரொன்றால்) நடனஞ்செய்தலால் உண்டாகும் இளைப்பானது நீங்குவதற்காகச் சந்தனவிருக்ஷத்தின் வாசனையைப்படிந்து வருகின்ற மெத்தென்ற தென்றற்காற்றானது தமது திருமுகத்தினிடத்தில் வீசிப்பொருந்தவும்—தமிழைத்திருச்செவியினால்உண்பதற்குமாம்.—(எ-று) (ருரு) நடனஞ்செய்த ஸ்தானமும்- அதற்குக்காரணமும் யாதெனில் தேவர்களுக்காகக் கயிலாசத்தில் நடனஞ்செய்தருளினார் - அதற்குத் தெற்காகிய திருவாலங்காட்டில் காளிக்காக நடனஞ்செய்தருளினார் - இதற்கு ஊர்த்ததாண்டவமென்றும் சண்டதாண்டவமென்றும் பெயர் - அதற்குத் தெற்காகிய சிதம்பரத்தில் பதஞ்சலிபகவானுக்கும், வியாக்கிரபாத முனிவருக்கும் அ

ருள் செய்யும்பொருட்டு நடனஞ்செய்தருளினார் - இதற்கு ஆனந்தத்தாண்டவமென்று பேர் - அதற்குத்தெற்காகிய மதுரையில் தடாதகைப்பிராட்டியாரது திருக்கல்யாண மகோத்சவ தரிசனத்துக்குவந்த மேற்சொல்லிய முனிவர்களுக்காக நடனஞ்செய்தருளினார். திருப்பாற்கடலைக் கடையும்போது உண்டான விஷத்தினால் விஷ்ணுமுதலான தேவர்கள் வருத்தமுற்றுச்சரணென்றடைய அந்தவிஷத்தைப்பானஞ்செய்துயாவரையும் ரக்ஷித்த கடவுளாதலால் அவருடைய கிருபையுந் தலைமையுந்தோன்றக் (கடுக்கவின் பெறுகண்டனும்) எனச் சிறப்புடைமைகொடுத்துக் கூறினார் - அவரதுபெருமை கூறவே தென்றிசையின் பெருமைகூறாதே அமையும் - விஷமுண்டகாலத்தில் கயிலாசத்தில் நடனஞ்செய்தருளினார். *

(ஆகமத்திரட்டு.)

பொங்குங்கங்காதரன் காளம்மயின் றேயொன்றும் புகலாமலிருந்தனனோர் கணப்பொழுது புலவோர், அங்கவனே யிடைவிடாதருச்சனைமுன் புரிந்தாரத்திதியேகாத சியாமடுத்த திதியதனிற், புங்கவர்பாரணம்புசித்தே பூர்த்தியுற்றாரிதன்மேற் பொருந்துதிதிதனி லிமவான்பொற் கொடியைவைத்துச், சங்கரன்சூலஞ் சுழற்றிநடித்தனனே ரியாமஞ்சது மறைநூலிதுபிரதோடம் மெனவேசாற்றும். *

திருவாலங்காட்டுப்புராணத்தில் - நிருத்தசருக்கம்.

இன்சுவைபொழியுஞ்சாய லவிநய மிலங்கச்செவ்விப், புன்சிறுமுறுவல்பூப்பப்புரணவானந்தம்பூரித், தன்புறுமவையோருள்ளமயர்தரவியங்கட்கேற்ப, விண்படுநடனங்காளி யோடரன்விளைத்தவேலை ......................... *

கோயிற்புராணத்தில் - நடராசசருக்கம்.

பொருவில்புய்ங்கப்புனிதநடங்கட்புலன்மேவத் ........ *
தெரிபொழுதங்கத்தொருசெயலின்றிச்சிரமேவக் ...... *
கரமலர்மூத்திப்புனல்விழிகம்பித்துளைகாண ........ *
திருவருமின்பக்கடலுளலைந்தாரொன்செய்வார் ........... *
விடையுகைத்தவன்பாணினிக்கிலக்கணமேனாள் .......... *
வடமொழிக்குரைத்தாங்கியன்மலயமாமுனிக்குத் ....... *
திடமுறுத்தியம்மொழிக்கெதிராக்கியதென்சொன் ....... *
மடமகட்காங்கென்பதுவழுதிநாடன்றோ ............. *

(இ-ள்) ரிஷபவாகனத்தைச் செலுத்துகின்ற பரமசிவன் - வடமொழியாகிய சமஸ்கிர்த பாஷைக்கு இலக்கணமாகிய வியா

கரண சூத்திரத்தைப் பாணினியென்னும் பெயரையுடைய ஒரு முனிவருக்கு முன்னாளில் சொன்னதுபோல் தவ இயல்பினையுடையவராய்ப் பொதியமலையிலிருக்கும் பெருமைபொருந்திய அகஸ்திய முனிவருக்குத் திடமாகச்சொல்லி அந்தவடமொழிக்கு எதிர்மொழியாக்கிய தென்மொழியெல்லும் மடப்பந்தங்கிய மாதுக்கு நாடகசாலையென்று சொலப்படுவது பாண்டி நாடாம்.—(எ-று) சோளநாடும் சேரநாடும் தமிழ்வழங்குமிடமா யிருப்பினும் பாண்டிநாடு சங்கப்புலவர்களாகிய நக்கீரர் முதலானவர்களிருந்து தமிழாராய்ச்சி செய்தற்கிடமாகியிருந்த மேன்மையைப்பற்றி அந்நாட்டினைத் தமிழ்மகட்கு அரங்கென்றுசொன்னார் - தமிழானது, கற்பவர்களுக்குத் தாய்போலத் தலையளிசெய்வ தாதலின் தமிழ்மகளென்றார்.

கண்ணுதற்பெருங்கடவுளுங்கழகமோடமர்ந்து .......... *
பண்ணுறத்தெரிந்தாய்ந்தவிப்பசுந்தமிழேனை .......... *
மண்ணிடைச்சிலவிலக்கணவரம்பிலாமொழிபோ .......... *
லெண்ணிடைப்படக்கிடந்ததாவெண்ணவும்படுமோ .... *

(இ-ள்) நெற்றிக்கண்ணினையுடைய சோமசுந்தரக் கடவுளும் சங்கப்புலவருடன் ஒரு புலவராக விருந்து பாடல்களியலுறத் தெறிந்து ஆராய்ச்சிசெய்யப்பட்ட தாகிய இந்தப் பசிய தமிழானது மற்றநாட்டில் வழங்கா நின்ற இலக்கண வரம்பில்லாத சிலபாஷைபோல் எண்ணத்திற் பொருந்தக் கிடந்ததாக நினைக்கவுங் கூடாது.—(எ-று) (ருஎ)

தொண்டர்நாதனைத்தூதிடைவிடுத்ததுமுதலை .......... *
யுண்டபாலனையழைத்ததுமெலும்புபெண்ணுருவாக் .... *
கண்டதும்மறைக்கதவினைத்திறந்ததுங்கன்னித் .......... *
தண்டமிழ்ச்சொலோமறுபுலச்சொற்களோசாற்றீர் ...... *

(இ-ள்) சுந்தரமூர்த்திசுவாமிகள் பரமசிவனைப் பரவைநாச்சியாரிடத்துக்குத் தூதாக அனுப்பியதும் - முதலைஉண்ட ஒருபிராமணப்பிள்ளை உருவம்பெற்று வரும்படி அழைத்ததும் - திருஞானசம்பந்தசுவாமிகள் எலும்பு பெண்ணுருவமாகச்செய்ததும்வேதமூடின கதவை அப்பர்சுவாமிகள் திறந்ததும் பாண்டிநாட்டில் வழங்குகின்ற தன்மையுள்ள தமிழ்ப்பாஷையினாலோ மறுதேசத்துப் பாஷைகளினாலோ புலவர்களே சொல்லுங்கள்.—(எ-று) (ருஅ)

வெம்மையால்விளைவஃகினும்வேந்தர்கோல்கோடிச் .... *
செம்மைமாறினும்வறுமைநோய்சிதைப்பினுஞ்சிவன்பாற்.*
பொய்ம்மைமாறியபத்தியும்பொலிவுகுன்றாவாத்........*
தம்மைமாறியும்புரிவதுதருமமந்நாடு.....................*

(இ-ள்) மழைபெய்யாமல் வெப்பமானது மேலிடுதலால் நெல் முதலிய விளைவுகுறைந்தாலும் அரசர்களுடைய செங்கோல்முறை மாறுபட்டு ஒழுக்கங்கள் தவறினும்வறுமைநோய் வருத்தினாலும் பரமசிவனிடத்தில் வைத்திருக்கும் உண்மையான பத்திகளும் பொலிவு குறைவுபடாமல் முன்போலவேயிருக்கக்கொண்டு அந்நாட்டிலுள்ளவர்கள்-தம்மைவிற்றுவது தருமத்தையுஞ் செய்வார்கள்.—(எ-று) (௫௯)

உலகம்யாவையுமீன்றவளும்பருளுயர்ந்த ................*
திலகநாயகிபரஞ்சுடர்சேயெனமூன்று ....................*
தலைவரான்முறைசெய்தநாடிஃதன்றிச்சலதி ................*
சூல்வுபாரினுண்டாகுமோதுறக்கத்துமஃதே ............*

(இ-ள்) எல்லா வுலகங்களையும் பெற்ற வளாகித் தேவர்களுக்கெல்லாம் மேலாகிய திலகம்போன்ற நாயகியாகிய மீனாக்ஷியம்மையும் மேலாகிய சோதி சொரூபத்தை யுடையவராகிய சோமசுந்தரக்கடவுளும் சுப்பிரமணியருமாகிய இம்மூன்றுதலைவர்களால்செங்கோன்முறை செலுத்தப்பட்டநாடு, இந்தப்பாண்டிநாடே யன்றி இந்தச்சமுத்திரஞ் சூழ்ந்த பூலோகத்தில் வேறொரு நாடுமில்லையாம்- சுவர்க்கலோகத்தி லிருக்குமோவென்றால் அவ்விடத்து மில்லையாம்.—(எ-று) (௬௰)

நாட்டுப்படல முற்றியது. ஆ படலம் உ-க்கு-
திருவிருத்தம்-௬௰.



(௪) வதுபாடலில் வளையுச்சி மேன்முழங்கிவானிவந்து என்பதற்குச் சூல்முதிருமளவுமலையினுச்சியைச்சேர்ந்து அதன்பின்பு விண்ணிலேயேறி முழங்கி, எனப்பொருளுரைத்துக்கொள்க. (௮) வதுபாடலில்- செவிவாய்தேக்கி என்பதற்குஅழகு வாய்த்தலெனப் பொருள்கூறுங்கால்-செவியென்பது இடைக்குறைப்பதமாகக்கொள்க. (௫௨) நறைபடு என்னும் பாடலில் செம்பொன்வண்ணப் புழுக்கல் என்பதற்குப்பருப்புச்சோறெனப் பொருள்கொள்ளவேண்டும் - இதனைச் சிந்தாமணி ௪-வது இலம்பகத்திற் காண்க. *



# நகரப்படலம்.

மங்கலம்புனைபாண்டிநாடாகியமகட்குச் ............... *
சங்கலம்புகைதோளிணைதடமுலையாதி ..... ........... *
யங்கமாம்புறந்தழுவியநகரொலாமனைய ............. *
நங்கைமாமுகமாகியநகர்வளம்பகர்வாம் .............. *

(இ-ள்) நன்மைபொருந்திய பாண்டிநாடாகியஸ்திரீக்குப் புறத்திலிருக்கும் நகரங்களெல்லாம் வளையல்கள் அசைகின்ற கைகள் தோளிணைகள் பெரியஸ்தனங்கள் முதலாகிய அவயவங்களாம்-அத்தன்மையுள்ள ஸ்திரீயின் பெருமைபொருந்திய முகமாகிய மதுரைநகரத்தின் வளப்பத்தைச் சொல்லுகிறோம்.—(எ-று) நாட்டுக்கு நன்மையாவது, எல்லா வுணவுகளும் நிறைய வுளவாகப் பயிர்த்தொழில் செய்கின்றவர்களும் பிராமணர்களும், துறவினர்களும், நிறைந்த செல்வமுள்ளவர்களும்,எக்காலத்திலும்வாழ்வதுமாய்-மிகுந்தபசியும், மிகுந்தநோயும், புறத்திலிருந்துவந்துஅழிவுசெய்யும்பகையும் இல்லாததுமா யிருப்பதாம். *
(தள்ளாவிளையுளுந்தக்காருந்தாழ்விலாச் செல்வருஞ்சேர்வது நாடு) (உறுபசியுமோவாப்பிணியுஞ்செறுபகையுஞ் சேராதியல்வது நாடு. என்னுங்குறள்களா லுணர்க. *

சிரசு முதலாகிய அவயவங்களின் சேர்க்கையே சரீரமென்று சொல்லப்படுவதன்றி அந்த அவயவங்களை விட்டுவேறே சரீரமென்ப தொன்றில்லாமைபோல-நாடாவது, பலஊர்கள் சேர்ந்து நாடென்று சொல்லப்படுவதேயன்றி அவ்வூர்களின்றித் தனியே நாடென்பதொன்றில்லையாதலால்-மதுரை முதலாகிய ஊர்களையெல்லாம் அங்கமாகச்சொன்னார். *
நாட்டினைஸ்திரீயாகச்சொன்னதற்குக் காரணமென்னவெனில் இல்வாழ்க்கையிலிருப்பவன் அவ்வில்லறம்வழுவாமல் நடப்பதற்கும் சந்ததி விர்த்தியாகித் தன்வமிசம் அழிவுபடாமல் நிலைபெற்றிருப்பதற்கும் அவன்மனைவி காரணமா யிருப்பதுபோல் அரசனுக்கு எல்லாச்சிறப்பும் நாட்டினால் உண்டாகவேண்டுதலால் அவ்வாறுசொல்லியதென்றுணர்க. *
இதற்குத்திருவள்ளுவநாயனார் நாட்டினை ஓரதிகாரத்தாற் கூறிய தேசான்றாகக்கொள்க, அரசனும், அமைச்சனும், கொ

ண்டுய்க்கப்படுவதாய் எனை ஆள்முதலிய அங்கட்கு இன்றிய மையாச் சிறப்பிற்றாயது நாடு என்றுபரிமேலழகர் உரைசெய் திருப்பதினாலும் எல்லாச்சிறப்பும்-அரசனுக்கு நாட்டினால் வருமென்பதனை அறிக. (க)

கொங்கையேபரங்குன்றமுங்கொடுங்குன்றுங்கொப்பூ....*
ழங்கமேதிருச்சுழியலவ்வயிறுகுற்றாலஞ் ..............*
செங்கையேடகமேனியேபூவணந்திரடோள்...........*
பொங்கர்வேய்வனந்திருமுகமதுரையாம்புரமே..........*

(இ-ள்) திருப்பரங்குன்றமும்திருக்கொடுங்குன்றமும் ஸ்தனங்களாம்- திருச்சுழியல என்னும் ஸ்தலமானது, நாபியென்னும் அங்கமாம் - திருக்குற்றாலம் என்னும் க்ஷேத்திரம் அவ்வயிறாம்- திருஏடகமென்னும் க்ஷேத்திரம் கையாம் - திருப்பூவணம் என்னும் ஸ்தலமானது, திருமேனியாம் - திருநெல்வேலியென்னும் ஸ்தலமானது, திரண்டதோளாம்- மதுரையென்னும் ஸ்தலமானது, திருமுகமாம்.—(எ-று) ஸ்தனம் மலையோடொப்பாகச் சொல்லப்படுவதாதலின் கொங்கையே பரங்குன்றமுங் கொடுங்குன்றும் எனவும் - தொப்புள் - நீர்ச்சுழியோடொப்பாகச் சொல்லப்படுவதாதலின் கொப்பூழ் அங்கமே திருச்சுழியல் எனவும் - வயிறு, ஆலிலையோடொப்பாகச்சொல்லப்படுவதாதலின்-வயிறுகுற்றாலம் எனவும்- கை; செந்தாமரைமலருடனாவது செங்காந்தட் பூவுடனாவது ஒப்பாகச் சொல்லப்படுவதாதலின் -செங்கையேடகம் எனவும்- மேனி, சம்பகமலர்களுடன் ஒப்பாகச் சொல்லப்படுவதாதலின் மேனியே பூவணம் எனவும்- தோள்,மூங்கிலோடொப்பாகச் சொல்லப்படுவதாதலின்-திரடோள் பொங்கர் வேய்வனம் எனவும் கூறினார்- (முகம் சந்திரனோடொப்பாகச் சொல்லத்தக்கது) குலசேகர பாண்டியன் கடம்பவனத்தை அழித்து நகரமேற்படுத்தி அந்நகரத்துக்குச் சாந்திசெய்யக் குறித்தபோது சோமசுந்தரக்கடவுளானவர்- தம்முடைய சடாமகுடத்தில் தரிக்கப்பட்ட அமுதகிரணனென்றும்பெயருள்ள இளஞ்சந்திரனிடத்திலிருக்கும் அமுதத்தை உகுத்தனர்- அது அந்நகரமெங்கும் பரந்து சாந்திசெய்தது- அந்த அமுதமானது மதுரமயமான தன்மையினால் அந்நகரம் மதுரா நகரமெனப் பெயர்பெற்றது- இந்தக்காரணத்தைப்பற்றி அந்நகரத்துக்குச் சந்திரசம்பந்தமிருப்பதினால் திருமுகம் மதுரையாம்புரமென்றார்-உமர என்னும் வடமொழி, தமிழ்மொ

பூமியில் உமை என்ருயதுபோல் மதுரா என்னும் வடமொழி தமிழில் மதுரையென்ருயது, மதுரைநகரமென்றதனைத் திருநகரங்கண்ட படலத்தில் (சஉ) பாடலிற்காண்க. எல்லா உறுப்புகளிலுஞ் சிறந்தது முகமாதலின் நாட்டிற்சிறந்த நகரத்தை முகமென்று கூறுதலுமுண்டு- முன்னம் தொப்புளைச் சொல்லிப் பின்பு வயிற்றினைச் சொன்னமையால் அவ்வயிறென்று சுட்டிச்சொன்னர்- வேய், நெல், இவ்விரண்டும் மூங்கிலின்பெயர்- பொங்கர் என்பது, கொம்பு-ஏடு என்பது, பூவினிதழ். (உ)

வடுவின்மாநிலமடந்தைமார்பிடைக்கிடந்திமைக்கப்...... *
படுவிலாரமேபாண்டிநாடாரமேற்பக்கத் ............. *
திடுவின்மாமணியதன்புறநகரொலாமிவற்று ............ *
ணடுவிஞயகமாமணிமதுரைமாநகரம் ......... ...... *

(இ-ள்) குற்றமில்லாத பெருமைபொருந்திய பூமிதேவியின் மார்பினிடத்திலிருந்து பிரகாசிக்கப்படுகின்ற ஒளியினையுடைய மதாணிப்பதக்கமே பாண்டிநாடு, அந்தப் பதக்கத்தினிடத்தில் நாலுபக்கங்களிலும் பதித்திருக்கும் பிரகாசியாநின்ற பெருமையையுடைய ரத்தினங்களே அந்த நாட்டின் புறங்களிலிருக்கும் நகரெல்லாம்-மேற்சொன்ன ரத்தினங்களின் மத்தியில் நடுநாயகமாயிருக்கு மாணிக்கமே செல்வந்தங்கிய மதுரைநகரம். —(எ-று) (ங)

திருமகட்கொருதாமரைக்கூடமேதிருமான் ............. *
மருமகட்குவெண்டாமரைமாடமேஞானந் .... ..... ..... *
தருமகட்கியோகத்தனிப்பீடமேதரையாம் ............ *
பெருமகட்கணிதிலகமேயானதிப்பேரூர் .............. *

(இ-ள்) இந்தப்பெரிய மதுரைநகரமானது, மகாலட்சுமிக்கு ஒப்பற்ற செந்தாமரைமலர்க் கோயிலாம் -, மகாவிஷ்ணுவின் மருமகளாகிய சரஸ்வதிக்கு வெள்ளைத்தாமரை மலர்க்கோவிலாம்- ஞானசத்திக்கு ஒப்பற்ற யோகபீடமாம் - பெருமைபொருந்திய பூமிதேவிக்கு அணியும்படியான திலதப்பொட்டே யென்று சொல்லலானது.—(எ-று) (ச)

திக்கும்வானமும்புதையிருடின்றுவெண்சோதி .... .... *
கக்குமாளிகைநிவப்புறுகாட்சியந்நகருண் .... .. ...... *
மிக்கவாலிதழ்த்தாமரைவெண்மகளிருக்கை .............. *
யொக்குமல்லதுபுகழ்மகளிருக்கையுமொக்கும் ........ *

(இ-ள்) அஷ்டதிக்குகளையும் ஆகாயத்தையு மறைத்த இருளைத்தின்று வெண்சோதியைக் கக்குகின்ற வீடுகள் ஓங்கிஇருக்கிற காட்சியானது அந்த மதுரைநகரத்தினிடத்தில் மிகுந்த வெண்மையான இதழ்களையுடைய தாமரைமலரில் வீற்றிருக்கும் வெள்ளைமேனியாளாகிய சரஸ்வதியின் ஆசனம்போ லிருக்கின்றது- அன்றியும் கீர்த்தியென்னும் ஒருஸ்திரீயின் ஆசனமும்போலிருககின்றது.—(எ-று) (௫)

நெற்கரும்பெனக் கரும்பெலா நெடுங்கமுகென்ன ...... *
வர்க்கவான்கமுகொலிகலித்தெங்கெனவளர்ந்த .... .... *
பொற்கவின்குலைத்தெங்குகார்ப்பந்தரைப்பொறுத்து .... *
நிற்கநாட்டியகாலெனநிவந்ததண்பணையே ............ *

(இ-ள்) குளிர்ச்சிபொருந்திய வயல்களில் நெற்பயிர்களைக் கண்டவர்கள் இவைகள் கரும்புகளென்றுசொல்லவும்-கரும்புகளை நெடிய கமுகமரங்களென்று சொல்லவும்- பந்திபந்தியாயிராநின்ற பெருமைபொருந்திய கமுகமரங்களை ஒலிக்கும் ஓசையை யுடைய தென்னமரங்களென்றுசொல்லவும்அவைகள்வளர்ந்திருக்கின்றன-பொன்னிறமுள்ளனவாய் அழகுபொருந்திய குலைகளையுடைய தென்னமரங்களானவை மேகமாகிய பந்தலைத் தாங்கிக்கொண்டு நிற்கும்படி நாட்டிய ஸ்தம்பங்கள்போல் ஓங்கி யிருக்கின்றன.—(எ-று) தென்னமரத்தின் ஓசையாவது, காற்றினால் மடல்களிலுண்டாகு மோசையென்றுணர்க. (௬)

சிவந்தவாய்க்கருங்கயற்கணாள்வலாரியைச்சீறிக் ........ *
கவர்ந்தவான்றருக்குலங்களேகடிமணம்வீசி .... ....... *
யுவந்துவேறுபல்பலங்களும்வேண்டினர்க்குதவி ........ *
நிவந்தகாட்சியேபோன்றதுநிழன்மலர்ச்சோலை .......... *

(இ-ள்) நிழலுள்ள சோலையிலிருக்கும் மலர்களையுடைய விருக்ஷங்கள் (ஓங்கியிருக்குங் காட்சி)சிவந்தவாயினையும் கருமையாய்ச் சேற்கெண்டையையொத்த கண்களையும் உடைய தடாதகைப் பிராட்டியார்தேவேந்திரனைக் கோபித்துப் (போர்செய்து வென்றநாளில் அவனிடத்திலிருந்து) கவர்ந்துவந்த கற்பகவிருக்ஷக் கூட்டங்கள் நறியமணம் வீசி வகைவகையாயிராநின்ற பலபழங்களையும் விரும்பினவர்களுக்குச் சந்தோஷித்துக்கொடுத்து ஓங்கியிருக்குங்காட்சியையே ஒத்திருக்கின்

றது.—(எ-று) குலங்களே என்பதினீற்றிலிருக்கும் ஏகாரம். இசைநிறை; ஏகாரமெனப்படும். (எ)

ஒல்லொலிக்கதிர்ச்சாலிகள்புறந்தழீஇயோங்க .......... *
மெல்லிலைப்பசுங்கொடியினால்வீக்குறுபூக .......... *
மல்லெனுங்களத்தண்ணறனணிவிழாத்தருப்பைப் ....... *
புல்லொடும்பிணிப்புண்டபொற்கொடிமரம்போலும் .... *

(இ-ள்) ஒல் என்னும் ஓசையையுடையவைகளாய்க்கதிர்விட்டிருக்கும் சம்பாப் பயிர்கள் புறத்தில் தழுவியோங்க மென்மையான இலைகளையுடைய பசியகொடிகளால் கட்டப்பட்டகமுகமரமானது இருள்போல்கருமையாகிய கண்டத்தையுடையபரமசிவனது அழகுள்ளதிருவிழாவில் தருப்பைப்புல்லோடு கட்டப்பட்ட பொன்னாற்செய்ததாகிய துசஸ்தம்பம்போலிருக்கின்றது.—(எ-று) (அ)

சீதவேரியுண்டளிமுரல்கமலமேற்செருந்தி .......... *
போதவேரியுமலர்களுஞ்சொரிவனபுத்தேள் .......... *
வேதவேதியர்செங்கரம்விரித்துவாய்மனுக்க .......... *
ளோதவேமமுமுதகமுமுதவுவாரனைய .......... *

(இ-ள்) குளிர்ச்சிபொருந்திய மதுவையுண்டு வண்டுகள் இசைபாடுகின்ற தாமரை மலர்கள்மேல் மதுவையும், மலர்களையும், மிகுதியாகச் சொரிகின்றவைகளாகிய செருந்திச்செடிகள் தெய்வத்தன்மையையுடைய வேதமுணர்ந்த பிராமணர்கள் சிவந்த கைகளை விரித்துக்கொண்டு வாய் மந்திரங்கள் சொல்ல (அவர்கள் கையில்) சுவர்ணமும் அதைத் தத்தஞ்செய்ய நீரும் கொடுக்கின்றவர்களை யொத்தன.—(எ-று) (கூ)

விரைசெய்பங்கயச்சேக்கைமேற்பெடையொடுமேவி.... *
யரசவன்னநன்மணஞ்செயவட்புயப்பொய்கை ........ *
திரைவளைக்கையானுண்டுளிசெறிந்தபாசடையா ........ *
மரகதக்கலத்தரளநீராஞ்சனம்வளைப்ப .............. *

(இ-ள்) வாசனைபொருந்திய தாமரை மலர்களாகிய சேக்கைகளின்மேல் அரச,அன்னங்கள் தத்தம்பெட்டை யன்னங்களுடன் பொருந்தி நல்லவிவாகஞ்செய்துகொள்ள அதைக்கண்டு தாமரைத்தடாகங்கள் அலைகளாகிய வளைபொருந்தியகைகளால் நுண்ணிய நீர்த்துளிகளாகிய முத்துகள் நிறைந்தபசிய

தாமரையிலைகளாகிய மரகதத்தட்டிலுல் நீராஞ்சனம் வளைப்பன.—(எ-று) (ம)

இரும்பினன்னதோள்வினைஞரார்த்தெறிந்துவாய்மடுக்குங் *
கரும்புதின்றிடியேற்றெலிகாட்டியின்சாறு .............. *
சுரும்புசூழ்கிடந்தாற்றிடச்சொரிந்துவெஞ்சினத்தீ ...... *
யரும்புகட்களிறொத்தனவாலையெந்திரங்கள் .......... *

(இ-ள்) கரும்பாலைகள் இரும்பினையொத்த பலம்பொருந்திய புசங்களையுடைய மள்ளர்கள் ஆரவாரித்துத் தறித்துத்தன்னிடத்திற் கொடுக்கும் கரும்புகளைத்தின்று கோடையிடிபோல் முழங்கி வண்டுகள்சூழ்ந்திருந்து ஒலிக்க இனிதாகிய சாற்றினைப்பொழிந்து வெவ்விதாகிய கோபாக்கினியுண்டாகாநின்ற கண்களையுடைய யானைகளை யொத்தன.—(எ-று) (யானையைச்சொல்லுமிடத்து) வினைஞர், எது- பாகர்கள்- இடியேற்றொலி, எது இடிமுழக்கம்போன்ற- கர்ச்சனை - சாறுபொழிதலாவது, கரும்பைத்தின்னும்போது அதன்வாயிலிருந்து ஒழுகுதல். (மக)

பள்ளநீர்குடைந்தஞ்சிறைப்பாசிபோர்த்தெழுந்த ...... *
வெள்ளையன்னத்தைக்காரனமெனப்பெடைவீழ்ந்த .... *
வுள்ளமீட்டலமரச்சிறகுதறியுள்ளன்பு ................ *
கொள்ளவாசையிற்றழீஇக்கொடுகுடம்பைசென்றணையும் .. *

(இ-ள்) பள்ளமாகிய குளங்களிலிருக்கும் நீரில்மூழ்கி அழகிய சிறைகளில் பாசி மூடியெழுந்த வெள்ளைநிறமுள்ள ஆணன்னத்தைக்கரிய அன்னமென்று கருதிப் பெட்டையன்னமானது அதனிடத்தில் விருப்பமுற்றிருந்த மனதை மீட்டுக்கொண்டு மயங்க அதைக்கண்ட அவ்வாண் அன்னம் சிறகினையுதறிப் பழையபடிபெட்டை உள்ளத்தில் அன்புகொள்ளக்கண்டு அதனைத் தழுவிக்கொண்டு கூண்டினிடத்தில் போய்ச்சேரும்.—(எ-று) (மஉ)

இரவியாழியொன்றுடையதேரீர்த்தெழுமிமைபாப் ...... *
புரவிதாநிமிர்த்தயில்வனபொங்கர்வாய்த்தளிர்கள் ....... *
கரவிலாமகத்தெழுபுகைகற்பகநாட்டிற் ................ *
பரவிவாட்டுவபனியெனப்பங்கயப்பொய்கை .......... *

(இ-ள்) சூரியனது ஒருவண்டில் பூண்ட தேரை இழுத்துக்கொண்டு செல்லாநின்ற இமையாத கண்களையுடைய குதிரை

கள் நாவை நீட்டிச் சோலைகளினிடத்திலிருக்குந் துளிர்களை உண்பன- வஞ்சகமின்றிச் செய்கின்ற வேள்வியிலிருந்து எழுகின்றபுகையானது கற்பகச்சோலையையுடைய தேவர் நாட்டிற்பரந்துபனிலையைப்போலத் தாமரைத் தடாகத்தை வாட்டுவன. (எ-று) மனவாக்குக்காயங்க ளொத்திருந்து செய்கின்றார்களென்பது விளங்கக் கரவிலாமகமென்றார்- இதுவரையில் புடைநகர்வளங்கூறி இனி இடைநகர்வளங் கூறுகின்றார் - புடைநகராவது, மருதநிலமேயாம்- உழிஞைதானே மருதத்துப்புறனே என்னுந் தொல்காப்பியப்புறத்திணைச் சூத்திரத்தி னுரையில் மதில்; பெரும்பான்மையு மருதத்திடத்தது என்றிருக்கும் வாக்கியத்தினாலு முணர்க- இடைநகராவது, மதிலாதியாக ரதகச துரகபதாதிகளும் அவைகளுக் குரியவர்களு மிருக்குமிடமாம். (௰௩)

பிறங்குமாலவாயகத்துளெம்பிரானருளால்வந் ....... *
தறங்கொடீர்த்தமாயெழுகடலமர்ந்தவாநோக்கிக் ......*
கறங்குதெண்டிரைப்பெரும்புறக்கடலும்வந்திவ்வூர்ப் ....*
புறங்கிடந்ததேபோன்றதுபுரிசைசூழ்கிடங்கு ..........*

(இ-ள்) மதிலைச்சூழ்ந்திருக்கும் அகழியானது பிரகாசியாநின்ற திருவாலவாயினிடத்தில் சோமசுந்தரக் கடவுளுடைய திருவருளால் எழுகடலும்வந்து புண்ணியதீர்த்தமா யமர்ந்திருப்பதை நோக்கிச் சத்தியாநின்ற தெளிவாகிய அலைகளையுடைய பெரும்புறக்கடலும் வந்து இந்த மதுரைநகரத்தின் புறத்தில் இருந்ததையே யொத்தது.—(எ-று) (௰௪)

புண்ணிய தீர்த்தமாகவேண்டுமென்கிற எண்ணங்கொண்டு வந்து காத்துக்கொண்டிருப்பதாகப் பொருள்கொள்ளப்படும்- பெரும்புறக் கடலாவது, எழுசமுத்திரத்துக்கும் அப்புறத்தில் சக்கரவாளகிரியைச் சூழ்ந்திருக்கின்றது. *

(காந்தத்தில் அண்டகோசமுரைத்த அத்தியாயம்)

பரவுமிவ்வுலகிலுப்புப்பாறயிர்நெய்யேகன்ன ...........*
விரதமாமதுநீராகுமெழுகடலேழுதீவும் .... .... ....*
வரன்முறைவிரவிச்சூழுமற்றதற்கப்பாற்சொர்ணத் .....*
தரையதுசூழ்ந்துநிற்குஞ்சக்கரவாளசையம். ..........*
அன்னதற்கப்பால்வேலைக்கரசனும்புறத்திலாழி .........*
பின்னதுதனக்குமப்பாற்பேரிருள்சேர்ந்தஞாலம் ......*

மன்னவா காண்டியப்பால்வலிகெழுமண்டத்தோடு . . . [றே.
துன்னுமிப் பொருள்கள்யாவுஞ் சூழ்ந்துகொண்டிருக்கு மன்

எறியுமீன்வாளையுமடிக்கடியெழுந்துடல்பரப்பிப் . . . . . . . . . *
பறியுமாமையும்வாளொடுகேடகம்பற்றிச் . . . . . . . . . . . *
செறியுநாண்மலரகழியுஞ்சேண்டொடுபுரிசைப் . . . . . . . . *
பொறியுமேயன்றியுடன்றுபோர்புரிவதுபோலும் . . . . . . *

(இ-ள்) வெட்டுகின்ற வாளைமீன்கள் (அடிக்கடிஎழும்புவது ம்) அவ்வண்ணமே ஆமைகள் மேலெழுந்து தலை- கால்- கைக ளாகிய உறுப்புகளைப்பரப்பி மீட்டும் உள்ளேபோவது மான செய்கை-காலத்துக்குரியமலர்கள் நிறைந்த அகழியும் அதிதூ ரத்தி லிருப்பதாகிய தேவருலகத்தைத் தொடும்படியான மதி லின்மேலிருக்கும் பொறிகளுமே வாளாயுதத்துடன் கேடக மும்பற்றிப்பகைத்துக் கோபங்கொண்டுபோர்செய்தலையொ த்தது.—(எ-று) பொறிகளிடத்தில் வாளுங்கேடகமு மிருப் பது இயல்பு- அஃதுமேல்வருஞ் செய்யுட்களால் விளங்கும்.

கண்ணிலாதவெங்கூற்றெனக்கராங்கிடந்தலைப்ப . . . . . . . . . *
மண்ணினோவரோனுமிம்மடுவிடைவீழ்ந்தோர் . . . . . . . . *
தெண்ணிலாமதியிலைந்தவர்க்கொப்பெனச்சிலரை . . . . . . . *
யெண்ணினாரிருணரகநீத்தேறினுமேறார் . . . . . . . . . . . . . *

(இ-ள்) இரக்கமில்லாத கொடிய யமனைப்போல் முதலைக ள் வருத்துவதினாலே இவ்வுலகத்தி லிருப்பவர்கள் எத்தன்மை யை உடையவர்களே யானாலும் இந்த அகழியில் விழுந்தவர் கள் தெளிவான நிலவினையுடைய இளந்திங்களை அணிந்த பர மசிவனுக்கு ஒப்பெனச் சிலதேவர்களை நினைத்தவர்கள் இருள் நரகத்தி லிருந்து கரையேறினாலும் ஏறமாட்டார்கள்.(எ-று) கராம், மெலித்தல்விகாரம். (௰௬)

குமிழலர்ந்தசெந்தாமரைக்கொடிமுகிழ்கோங்கி . . . . . . *
னுமிழ்தரும்பரஞானமுண்டுமிழ்ந்தவாய்வேதத் . . . . . . . . . *
தமிழறிந்துவைதிகமுடன்சைவமுநிறுத்து . . . . . . . . . . . . *
மமிழ்தவெண்டிரைவையையுமொருபுறத்தகழாம் . . . . . . . . *

(இ-ள்) குமிழம்பூ மலர்ந்திருக்கும் செந்தாமரைமலரையு டைய ஒருபூங்கொடியி லரும்பினகோங்கின் அரும்பைப்போ ல் நாசிவிளங்கும் முகத்தையுடைய பார்வதிதேவியார் மார்பி

னுண்டான ஸ்தனங்கள் பொழிந்த பரஞானமாகிய பாலை உண்டுமீட்டும் அதனை உமிழ்ந்ததுபோ லொளிராநின்ற திருஞானசம்பந்த சுவாமிகள் திருவாய்மலர்ந்தருளிய வேதப்பயனாகிய தமிழின் பெருமையை அறிந்துவைதிகநெறியையும் சைவநெறியையும் நிலைபெறச் செய்யும் அமிர்தம்போன்ற வெண்மையாகிய அலைகளையுடைய வையைநதியும் ஒருபுறத்தில் அகழாம்.—(எ-று) இது உபமேயப்பொருளாகிய அவயவத்தை அதன்சொல்லாற் சொல்லாமல் கோங்கம்பூமுதலாகிய உபமானச்சொல்லினால் இலக்கணையாகச் சொன்னமையால், உருவக உயர்வு நவிற்சியலங்காரமென்று சொல்லப்படும். *

(திருச்சிற்றம்பலக்கோவையார்.)

திருவளர் தாமரைசீர்வளர் காவிகளீசர்தில்லைக், குருவளர் பூங்குமிழ்கோங்குபைங்காந்தள்கொண் டோங்குதெய்வ, மருவளர் மாலையோர்வல்லியினொல்கியனநடைவாய்ந், துருவளர் காமன்றன் வென்றிக்கொடிபோன் றொளிர்கின்றதே .......... *

இச்செய்யுள்- தாமரைமலரையொத்தது முகம்- நீலோற்பலத்தையொத்தது-கண்கள், குமிழம்பூவையொத்தது-மூக்கு, கோங்கரும்பையொத்தது- ஸ்தனம், காந்தண்மலரையொத்தது-கை, எனச்சொல்லப்படுகின்றது- இதனாலு மறிக, (தமிழின்அருமையை அறிந்ததாவது) திருஞானசம்பந்தசுவாமிகள் மதுரையில் சமணர்களுடன் வாதுசெய்தபோது மேற்சொன்னசுவாமிகள் கட்டளையிட்டருளிய திருப்பாசுரமென்னும் பதிகத்தை வையைநதியி லிட்டபோது அவ்வேடு எதிரிட்டோடக்கண்டதென்றுணர்க. (௰௭)

பிள்ளையும்பெடையன்னமுஞ்சேவலும்பிரியாக் .... .... *
கள்ளமுண்டகச்செவ்வியாற்கண்டவர்கண்ணு .......... *,
முள்ளமுந்திரும்பாவகைச்சிறைபடுத்தோங்கும் .......... *
புள்ளலம்புதண்கிடங்கிதுபுரிசையைப்புகல்வாம், .......... *

(இ-ள்) அன்னக்குஞ்சுகளும், பெட்டையன்னங்களும், ஆண் அன்னங்களும், பிரியாமல் வாசமாயிருக்கும்படியான தேனையுடையவைகளாகிய தாமரைமலர்கள் நிறைந்திருக்கும் அழகினால் பார்த்தவர்களுடைய, கண்களும், மனமும், திரும்பாவண்ணஞ் சிறைபடுத்து மேன்மைகொண் டிராநின்ற பக்ஷிசாதிகள் இடைவிடாது ஒலித்துக்கொண்டிருக்கும் குளிர்ச்சிபொருந்திய அகழி இத்தன்மையதாம்-இனிமதிலின் சிறப்பைச் சொல்லுகிறோம்.—(எ-று) (௰௮)

மாகமுந்தியகடிமதின்மதுரைநாயகர்கைந் ............. *
நாகமென்பதேதேற்றமந்நகர்மதில்விழுங்கி .......... *
மேகநின்றசைகின்றதவ்வெஞ்சினப்பணித ............. *
னாகமொன்றதோலுரிபடநெளிவதேயாகும் ........... *

(இ-ள்) தேவருலகவளாயில் சென்றிருக்கின்ற (நகரத்துக்குரிய நால்வகைக்காவலில்) ஒருகாவலாகிய மதிலானது சோமசுந்தரக் கடவுளுடைய திரு அஸ்தத்தில் அணிந்திருக்கும் கங்கணமாகிய சர்ப்பமென்றுசொல்வது நிச்சயமே, அந்தமதிலைமறைத்துநின்று மேகமானது அசைகின்றது- கொடிதாகிய கோபத்தையுடைய அந்தச் சர்ப்பமானது தன்னுடைய சரீரத்தில் பொருந்திய தோல் உரிபடும்படி நெளிவதையொப்பாகும் —(எ-று) மேகம் அசைவது சர்ப்பமென்றுசொல்வதற்கேதுவாயிருக்கின்றதெனக் கொள்க. (௰௬)

(நகர்க்காவல் நான்காவது)

மலை, காடு, நீர், மதில், என்னும் நான்குமாம்- இவைகளுக்குள் நீர் என்றது அகழியையென்றுணர்க- மேகநின்றசைவது, நாகம் நெளிகின்றதுபோலிருக்கின்றதென்று சொன்னமையால் அந்நாகம் கருநாகமென்று சொல்லப்படும்- (நாகங்களை ஆபரணமாக அணிந்த காரணம் யாதெனில்) தாருகாவனத்துரிஷிகள் அபிசார ஓமம்செய்து அதிலே உண்டான சர்ப்பங்களைப்பரமசிவத்தின்மேலேவ அந்தநாகங்களை ஆபரணமாகத்தரித்துக்கொண்டார்- இவைகளைக்கருநாகமெனக்கொள்க- இதுவுமல்லாமல் ஆதிசேஷன் முதலாகிய நாகங்கள் கருடனுக்குப் பயந்து அடைக்கலமென்றுட்குத அவைகளைக்காக்கும் பொருட்டு ஆபரணமாகத் தரித்துக்கொண்டார். *

(இவைகட்குச்செய்யுள், தக்ஷகாண்டத்தில்உத்தரப்படலம்.)

எந்நியபின்னர்வேள்வியெரியதற்கிடையேயெண்ணில் .... *
பாந்தளங்கொழுந்துதீயோர்பணியினாற்சீற்றத்தோடு .... *
போந்தனவவற்றைமாயோன்புள்ளினுக்கஞ்சித்தன்பால் .. *
சேர்ந்ததோர்பணிகளோடுசெவ்விதிற்புனைந்தானெங்கோன்.

(கருநாகமென்பதற்குச்செய்யுள்)

(காரைக்காலம்மையருளிச்செய்த அற்புதத்திருவந்தாதி)

(வெண்பா)

மிடற்றில்விடமுடையீரும்மிடற்றைநக்கி ............. *
மிடற்றில்விடங்கொண்டவாறே-மிடற்றகத்து .......... *

மைத்தாமிருள்போலும்வண்ணங்கரிதாலோ .......... *
பைத்தாடுநும்மார்பிதீபாம்பு ........................ *
புரங்கடந்தபொற்குன்றுகோபுரமெனச்சுருதிச் ........ *
சிரங்கடந்தவர்தென்னராயிருந்தனர்திருந்தா .......... *
ருரங்கடந்திடவேண்டினுமுதவிசெய்தவரால் .......... *
வரங்கடந்திடப்பெறவெதிர்நிற்பதுமானும் .............. *

(இ-ள்) அம்மதிலோடு கோபுரமிருப்பது, திரிபுரத்தைவென்ற வில்லாகிய மகமேருவானது வேதமுடிவையுங் கடந்த பரமசிவன் (மதுரைநகர்த்தில்) பாண்டியராசனுகி யிருத்தலால் சத்துருக்களுடைய வலியைக்கடப்பதற்கு இப்போது வில்லு வேண்டியதா யிருந்தாலும் உதவிசெய்து அவரால்வரங்கள் கொடுக்கப் பெற்றுக்கொள்ளவந்து நிற்பதை யொத்திருக்கின்றது. —(எ-று) (௰௧)

(மகமேருவில்லான தெவ்வாறெனில்)

தான்மாலி, தாருகாக்கன், கமலாக்கன், என்னும் மூன்று அசுரர்கள் பிர்ம்மதேவனை நோக்கித் தவஞ்செய்து வரம்பெற்றுக்கொண்டபோது தங்கள் மூன்றுபேருக்கு மூன்று ஊர் வேண்டுமென்றும் அந்த ஊர்கள் தாங்கள் செல்லுமிடத்துக்கெல்லாம் தங்களோடு கூடவரவேண்டுமென்றும் வரம்பெற்றுக்கொண்டு அவ்வாறே இரும்பு, வெள்ளி, பொன், என்னுமிவைகளால் மூன்றுகோட்டை யேற்படுத்திக்கொண் டிருப்பவர்கள் அவ்வூர்களுடன், விண்ணிலெழுந்து சென்று ஒருநகரத்தில் தங்கி அது அழிந்தபின்பு மற்றொருநகரத்திற் போய்த் தங்குவது இப்படியாக விஷ்ணுலோக முதலாகியதுகளை யெல்லாம் அழிக்கவே அவர்களெல்லாரும் பரமசிவனைத் தோத்திரஞ்செய்தார்கள் - அப்போதுபரமசிவனது கட்டளையின்படிதேவர்கள் தேர் முதலானவைகளை யேற்படுத்தி மகமேருவை வில்லாக ஏற்படுத்தினார்கள். (உ௰)

அதற்குச்செய்யுள்,

(உபதேசகாண்டத்தில்- திரிபுரவிஜயம்.)

எழுதிருமறையனைத்தையும்பரியெனவியற்றி .......... *
வழுவறக்குறைநிரப்பினாரிமுதல்வானோர் .......... *
ஒழுகுமாயிரங்கொடுமுடிவடதிசையோங்கல் .......... *
தழுவுசாகையிற்பிணைமொத்தமைத்தனர்தந்தார் ......... *
சண்டபானுவுந்திங்களுந்தடைபடத்திசையு .............. *
மண்டகோளமும்பரந்துநீண்டகன்றகோபுரங்கள் ........ *

விண்டவாயிலால்வழங்குவவிடவராவங்காந் ............. *
துண்டபோல்பவுமுமிழ்வனபோல்பவுமுழலா........... *

(இ-ள்) வேகமாகச்செல்லுகின்ற சூரியனும்,சந்திரனும்,தடைபடுவதினால் அஷ்டதிக்குகளிலும் அண்டகோளத்தின்மேலும் சென்று திரிந்து வழிகாண்பதின்றி உழலாமல் விஷத்தையுடைய ராகு, கேதுவென்னும் பாம்புகள் உண்டாற்போல்வனவாகவும் மீட்டும், உமிழ்ந்தாற்போல்வனவாகவும் - அஷ்டதிசைகள்வரைக்கும் அகன்றும் அண்டகோளவரைக்கும் நீண்டும் இராநின்ற கோபுரங்களில்வழியாக விட்டிராநின்ற வாயிலால் சஞ்சரிப்பன.—(எ-று) கோபுரங்கள்உயர்ந்தும் அகன்றுமிருப்பதினால் சந்திரசூரியர்கள் வாயிலுக்குள்ளாக நுழைந்துபோகின்றார்களென் றுரைத்துக்கொள்க. (உக)

மகரவேலையென்றியானைபோன்மலைமுயருந்தகழி. .... ..*
சிகரமாலைசூழம்மதிதிரைக்கரந்துழாவி ...... .... ....*
யகழவோங்குநீர்வையையாலல்லதுவேற்றுப்.... .......*
பகைவர்சேனையாற்பொரப்படும்பாலதோவன்றே... .....*

(இ-ள்) மேகங்கள்-சுறுமீன்களையுடைய சமுத்திரமென்று நினைத்து யானைபோல் நீரையுண்ணத்தக்கதாகிய அகழியும்-சிகர வொழுங்குகளும் சூழஇருக்கும் அந்தமதிலானது அலைகளாகிய கைகளினால் துழாவிக் கல்லும்படி மிகுந்த நீரையுடைய வையைநதியால் யுத்தஞ்செய்யப்படுவதல்லது மறுதேசத்தாராகிய சத்துருக்களால் யுத்தஞ்செய்யப் படுவதோ அல்ல.—(எ-று) (உஉ)

எல்லைதேர்வழித்தடைசெயுமிம்மதிற்புறஞ்சூழ்ந் ..........*
தொல்லைமேவலர்வளைந்துழியுடன்றுபோராற்றி..........*
வெல்லமள்ளரும்வேண்டுமோபொறிகளேவெல்ல...... ..*
வல்லவம்மதிற்பொறிசெயுமறஞ்சிறிதுரைப்பாம்..... .....*

(இ-ள்) சூரியனதுதேரை ஆகாய மார்க்கத்தில் தடைசெய்யும்படியான இம்மதிற்புறத்தில் சத்துருக்கள் விரைவில்வந்து சூழ்ந்து கொள்ளும்போது கோபங்கொண்டு போர்செய்துவெல்ல வீரர்களும் வேண்டுமோ வேண்டுவதில்லை-அந்த மதிலின்மேற்செய்யப்பட்டிருக்கும் பொறிகளே வெல்ல வல்லதுகளா யிருக்கின்றன- அப்படிப்பட்டமதிற்பொறிகள் செய்யும் வீரத்தைய்ங்கொஞ்சஞ் சொல்லுகிறோம்.—(எ-று) எல்லை என்னுமொழியினீற்றிலிருக்கும்(ஐ)சாரியை. (உரு)

(வேறு)

மழுக்கள்வீசுவன நஞ்சுபூசுமுனைவாள்கள்வீசுவன முத்தலைக் *
கழுக்கள்வீசுவன குந்தநேமியெரிகாலவீசுவன காலனே *
ரெழுக்கள்வீசுவன கப்பணங்கள்விடமென்னவீசுவனவன்னெ
டுங், கொழுக்கள்வீசுவன கற்கவண்கயிறுகோத்துவீசுவன வா
ர்த்தரோ.......................................... *

(இ-ள்) மழுவாயுதங்களைவீசுவன - விஷத்தைப்பூசப்பட்ட முனையையுடைய வாள்களால் வெட்டுவன - முத்தலையையுடைய சூலங்களை யெறிவன- கைவேல்களையும், சக்கரங்களையும், தீயைக்கக்கும்படி எறிவன - யமனையொத்த எழுத்தடிகளை யெறிவன- கப்பணங்களை விஷமென்றுசொல்லும்படி யெறிவன -வலியதுகளும்நெடியதுகளுமாயிராநின்ற காறுகளைவீசுவன - கவண்களில கயிறுகோத்துக்கல்லைவைத்து ஆரவாரித்துக்கொண்டு வீசுவன.—(எ-று) ஆர்த்து என்னுமொழியை வீசுவன என்னும் மொழிகளோடெல்லாம் ஒட்டிக் கூறவேண்டும். (௨௪)

நஞ்சுபில்குதுளைவாளெயிற்றரவுநாநிமிர்த்தெறியுமலையரா; வெ
ஞ்சினங்கொண்முழைவாய்திறந்துபொருவாரைவிக்கிடவிழுங்
குமாற், குஞ்சரங்கொடியமுசலம்வீசியெதிர்குறுகுவார்தலைக
ள்சிதறுமா, லஞ்சுவெம்பொறி விசைப்பினுங் கடுகியடுபுலிப்
பொறியமுக்குமால்.......................................... *

(இ-ள்) விஷத்தைத்துளிக்கும் துளைகளைப்பொருந்தி வாள்போற் கூர்மையாகிய பற்களையுடையசர்ப்பங்கள் நாவுகளை நீட்டிக்கொண்டு பல்லாற்கடித்துக் கொல்லும்- மலைப்பாம்புகள் கொடிதாகிய கோபத்தைக்கொண்டு மலைக்குகைபோன்ற வாயைத்திறந்து யுத்தஞ்செய்கின்றவர்களைத் தொண்டையில்விக்கும்படி விழுங்கும்-யானைகள் கொடியஇருப்புலக்கைகளை வீசி எதிரில்வருகின்றவர்கள்தலைகளைச்சிதறும்- ஐம்பொறிகளின் வேகத்தினும் அதிவேகமாகச்சென்று கொல்லுகின்ற புலிப்பொறிகள் அமுக்கும்.—(எ-று) பொறியென்பதனை அரவுமுதலிய வற்றோடு சேர்த்துரைத்துக்கொள்வதுமன்றிமேல்வருஞ்செய்யுட்களிடத்துஞ் சேர்த்து உரைத்துக்கொள்க.

எள்ளியேறுநரையிவுளிமார்பிறவெறிந்துகுண்டகழி யிடைவி
ழுத்; தள்ளியீளுமுருள்கல்லிருப்புமுளீதந்து வீசியுடல்சிந்து

மாற், கொள்ளிவாயலகைவாய்திறந்துகனல்கொப்புளிப்பவு
டல்குப்புறத், துள்ளியாடுவன கைகள்கொட்டுவனதோள்பு
டைப்பசிலகூளியே,.................................. *

(இ-ள்) எளிதெனவிகழ்ந்து ஏறுகின்றவர்களைக் குதிரைகள் உதைத்து ஆழமுள்ள அகழியினிடத்துத் தள்ளிவிட்டுமீண்டுவரும் உருள் கல் இருப்புமுளை, அரிகயிறு, இவைகளையெறிந்து சத்துருக்களுடைய உடலைத் துணித்துவிடும்- கொள்ளிவாய்ப்பேய்கள் வாயைத்திறந்து தீயைக்கொப்புளிப்பன- சிலபூதங்கள் சரீரந்தலைகீழாகத் துள்ளி யாடுகின்றன- சிலபூதங்கள் கைகளைக்கொட்டுவன- சிலபூதங்கள் புசங்களைக் கொட்டுவனவாம்.—(எ-று) (௨௬)

துவக்குசங்கிலியெறிந்திழுக்குமரி தொடர்பிடித்தகையறுக்க
விட், டுவக்குமொன்னலர்கடலைகளைத்திருகியுடனெருக்குமா
நிலைகளாற், கவைக்கொழுந்தழல் கொளுத்திவீசுமெதிர்கல்லு
ருட்டியடுமொல்லெனக், குவைக்கடுங்கன்மழைபெய்யுமட்ட
மணலகொட்டுமேவலர்கள்கிட்டவே............. ... *

(இ-ள்) சத்துருக்கள் சமீபிக்கும்போது பூட்டப்பட்டசங்கிலிகளை யெறிந்திழுக்கும் அந்தச் சங்கிலிகளைப் பிடித்துக்கொள்ளுகிற கைகளை அறுக்கும்படி சக்கரங்களை விட்டுச்சந்தோஷிக்கும்-மாநிலைகளால் சத்துருக்களுடைய தலைகளைத் திருகி உடல்களை நெருக்கும், பிரிவாகிய சிகைகளையுடைய தீயைக்கொளுத்தி வீசும்; எதிரில்கல்லுகளை யுருட்டிக்கொல்லும் ஒல் என்கிற ஓசையுடன் கூட்டங் கூட்டமாகக் கொடிய சிலா வருஷத்தைப் பெய்யும் வறுத்த மணலை வாரிக்கொட்டும். (எ-று) (௨௭)

உருக்கியீயமழைபெய்யுமாலயவுருக்குவட்டுருகுசெம்பினீர் *
பெருக்கிவீசும்விடு படையெலாமெதிர் பிடித்துவிட்டவர் த
மைத்தெறச், செருக்கிவீசுநடைகற்றமாடமொடு சென்றுசெ
ன்றுதுடிமுரசொடும், பெருக்கிமீளுநடை வையமேனட வி
யெய்யும்வாளிமழைபெய்யுமால்........................ *

(இ-ள்) ஈயங்களை உருக்கி மழைபோற்பெய்யும்- பகைவர்யாவரும் ஒருங்கேயிறப்பதற்குக் காரணமான வட்டுருக்கினையும், செம்புருகிய நீரையும் பெருக்கிவீசும்- விடுகின்ற படைகளையெல்லாம் எதிரில் பிடித்துக்கொண்டு அந்தப் படை

களைவிட்டவர்களையே கொல்லும்படி இருமாப்புடன்வீசும்- நடைகற்ற மாடங்களுடன் போய்ப்போய்த் துடிகளின் ஓசையைப்பெருக்கியும் பேரிகையின் ஓசையைப்பெருக்கியுந்திரும்பும் நடையையுடைய தேரைப் பகைவர்மேல் செலுத்திப் பிரயோகஞ் செய்யாநின்ற பாணவருஷங்களைப் பெய்யும். (எ-று) (௨௮)

வெறிகொளைம்பொறியைவெல்லினும்பொருது வெல்லுதற்கரியகாலனை, முறியவெல்லினும்வெலற்கருங்கொடியமூரணவாயமராரணைலா, மறிவினுனிறுவுகம்மியன்செயவு மரியவாயவைர்புரியுமிப்,பொறிகள்செய்யு ம்வினையின்னபொன்னணிபுரத்துவீதிகளுரைத்துமால்...... ...... .... .... ......*

(இ-ள்) மயக்கங்கொண்ட ஐம்பொறிகளை வென்றாலும் போர்செய்து வெல்லுதற்கரிய யமனை முறிந்தோட வென்றாலும் வெல்லுதற்கரிய கொடிதாகியவலியை யுடையதுகளாய்த் தேவர்களுடைய நகரங்களையெல்லாம் தன்னறிவினால் நிருமிக்கத்தக்க தேவதச்சன்செய்தற்கு மரியதுகளாகச் சிற்பிகளால்செய்யப்பட்ட இந்தப்பொறிகள் செய்யுந்தொழில்கள் இத்தன்மையதுகளாம்-இனிப்பொன்னினால்அலங்காரஞ்செய்திருக்கும் நகரத்தின்வீதிகளுடைய சிறப்பினைச் சொல்லுகின்றேம்.— (எ-று) ஈண்டுக்கூறிய அரண் - மூழு அரணென்று சொல்லப்படும்- மூழு அரணாவது - மலையும், காடும், நீரும் அல்லாத அகநாட்டுமதில்- அது வஞ்சனைபலவும் வாய்த்துத் தோட்டிமுன் முதலியன காவற்காடு புறஞ்சூழ்ந்து அதனுள்ளே- முதலைகள் முதலாயின வுள்ளுடைத்தாகிய அகழிபுறஞ்சூழ்ந்து புவனரியற்றிய பலபொறிகள் முதலாயினவைகளை யுடையதாம்-இதனை உழிஞையென்னுஞ் சூத்திரத்துக் கடுத்த சூத்திர உரையிற்காண்க - இனி அகநகரஞ் சொல்லுகின்றார் - உண்ணகரமென்றுஞ் சொல்லப்படும். (௨௯)

(வேறு.)

கழையுந்தாம்முஞ்சுண்ணமுமணிநிழற்கலனுங்........... *
குழையுந்தூபமுந்தீபமுங்கும்பமுந்தாங்கித்.... .. ....*
தழையுங்காதலர்வரவுபார்த்தன்பகந்ததும்பி.. .. ......*
விழையுங்கற்பினுமொத்தனவிழாவறுவீதி.... .. ........*

(இ-ள்) திருவிழாக்கள்மாறுவண்ணம் விளங்கும்வீதிகள்கரும்புகளையும்பூமாலைகளையும்வாசனைப்பொடிகளையும் பிரகாசம்

பொருந்தியரத்தினக்கோவைகளையும் மாங்கொழுந்துகளையுந் தூபதீபங்களையும் பூரணகும்பங்களையுந்தாங்கி மிகுந்த ஆசையையுடைய தத்தங்கணவர்கள்வருவதைப்பார்த்து அன்பானதுஉள்ளத்தில் நிறைய விருப்பமுறுகின்றகற்புள்ள ஸ்திரீகளையொத்திருக்கின்றன.—(எ-று) என்னவேவீதிகளில் பந்தல்சமைத்துக்கரும்பு முதலானவைகளைக் கட்டிப்பூமாலைகளுடனும்ரத்தினக்கோவைகளுடனும்மாவிலைத்தோரணங்களுங்கட்டிவேதிகைகள்தோறும் தூபதீபங்களையும் பூரணகலசங்களையும் வைத்துவாசனைப்பொடிகளையும் தூவிஅலங்காரஞ்செய்யப்பட்டிருக்கின்றனஎனக்கொள்க-கற்புள்ள ஸ்திரீகள்தத்தங்கணவர்கள்வருவதைக்கண்டால்ஸ்தனங்களினிடத்தில்மன்மதன் கரும்புவில்லைப்போல்ரேகைகளை யெழுதிக்கொண்டு பூமாலைகளையுங் குண்டலமுதலான அணிகளையுந் தரித்துக்கொண்டு தூபதீபங்களையுங் கும்பங்களையும் ஏந்திக்கொண்டு தாதிகள் புடைசூழ்ந்திருப்ப எதிரேற்பர் எனவும் கொள்க- ஸ்திரீகளுடைய கற்பாவது,கணவனைப்பார்க்கிலும் சிறந்ததெய்வமில்லையென்றும் அவனை யிவ்வாறு வழிபடவேண்டுமென்றுந் தாய்தந்தையர் கற்பிப்பதையும் பிராமணர்களிடத்தும் சான்றோரிடத்தும் முனிவரிடத்தும் தேவர்களைக் குறித்தும் நடக்கவேண்டிய ஒழுக்கம் இப்படிப்பட்டதென்று கணவன் கற்பிப்பதையும் உட்கொண்டு அவ்வாறேநடப்பதாம்- இதனைத்தொல்காப்பியக் கற்பியல் முதற்சூத்திர வுரையிற்காண்க. (௫௰)

(இவைகட்குச்செய்யுள்,)

காசிகாண்டம்கற்பிலக்கணமுரைத்தஅத்தியாயம்.

எரிமணிப்பொலம்பூண்சுமந்தினனுயிர்க், குரியகேள்வருவப்
பமுன்னெய்துவார், பிரியுங்காலையிற்பெய்கலன்யாவையும், ஒ
ருவிமாசுடனுண்டிடவைகுவார் ........................*
வாள்விழிக்குலமங்கையரன்பர்பொற், றாள்விளக்கிய தண்புன
ல்கங்கையைக், கேள்வரோகிளர்தேவர்கண்மூவரில், ஆருமெய்ம்
மையடிகளென்றெண்ணுவார் .. ...................*
விழவுகண்ணுறல்மேதகுநோன்புறல், பழுதில் தூநதியாடுதல்
பண்ணவர்த், தொழுதுவாழ்த்துதலேமறுகற்பினோர்,கொழு
நரேவலின்றிக்குறிக்கொளார் .......................*

ஆலநின்றமாமணிமிடற்றண்ணலானந்தக் ............ ....*
சோல்நின்றசேவடிநிழற்குறுகினார்குணம்போல் ..........*

வேலைநின்றெழுமதியெதிர்வெண்ணிலாத்தெண்ணீர் .. .... *
காலநின்றனசந்திரகாந்தமாளிகையே..... ..... ...... *

(இ-ள்) விஷந்தங்கியபெருமைபொருந்தியகாளகண்டத்தையுடைய பரமசிவனது ஆனந்தமென்னும் அழகுநிறைந்த சிவந்தபாதங்களாகிய நிழலையடைந்த திருத்தொண்டர்களுடைய தன்மையைப்போல் சமுத்திரத்தில் நின்று உதயமாகின்ற சந்திரனுக்கெதிரில் வெண்மையான ஒளியையுடைய தெளிவாகிய நீர்பெருகும்படி சந்திர காந்தத்தினால் கட்டிய வீடுகளிருக்கின்றன.—(எ-று) (௫௧)

குன்றநேர்பளிக்குபரிகைநிரைதொறுங்குழுமி ..... ..... *
நின்றபல்சராசரமுமந்நிழல்வாய்வெள்ளி .... .. .... .. *
மன்றகம்பொலிந்தாடியமலரடிநிழல்புக் ..... .... .... *
கொன்றியொன்றறக்கலந்தபல்லுயிர்நிலையனைய..... .... .. *

(இ-ள்) பளிங்கினாற்கட்டப்பட்டு மலைகளுக்கு ஒப்பாய் வரிசையாயிராநின்ற உபரிகைகளிருக்கு மிடந்தோறும் கூட்டமாய் நிற்கும் பலவாகிய சராசரங்கள் அந்த உபரிகைகளின் நிழலினிடத்தில் தோன்றுமவை-வெள்ளியம்பலத்தில் சோதி சொரூபமா யமர்ந்து நடனஞ்செய்தருளிய சோமசுந்தரக் கடவுளுடைய செந்தாமரைமலர்போன்ற திருவடிகளாகிய நிழலைச் சென்றடைந்து ஒன்றென்னுந்தன்மையு மிரண்டென்னுந் தன்மையுமின்றிப் பலவுயிர்கள் கலந்திருக்குந் தன்மையை யொத்தன.—(எ-று) சரம், சஞ்சரிக்கு முயிர்கள்- அசரமாவது, மரங்கள் மலைகள்முதலாகிய சஞ்சரியாத உயிராம். (௫௨)

கறித்தருந்துபுற்குவைசழீஇக்காற்றொடர்பரியத் ........ *
தெறித்தகன்றயன்மரகதசித்திரத்தெற்றி..... ..... ..... *
யெறித்தபைங்கதிர்க்கொழுந்தையுமெட்டிநாவளைத்துப் ...*
பறித்துமென்றுவாயசைப்பனபசலையான்கன்று ......... *

(இ-ள்) மிகுந்த இளமையாகிய பசுவின்கன்றுகள் கடித்து உண்ணுகின்ற புற்குவையைக்கழித்துவிட்டுக்காலிற்கட்டிய கயிறும் அறும்படி துள்ளிப் பக்கத்திலிருக்கும் மரகதரத்தினத்தினாற்செய்யப்பட்ட சித்திரங்களையுடைய திண்ணைகள் வீசுகின்ற பசுமையாகிய கதிர்க்கொழுந்தையும் எட்டிநாவினால்வளைத்துப் பறித்துமென்றுவாயை அசைப்பன.—(எ-று) மரகதரத்தினங்களின் கதிரைக்கண்டு தாம் உண்ணுகின்ற புல்லைப்

பார்க்கினும் நல்லபுல்லென்று நினைத்து எதிரிலிருந்த புல்லை யுங் கழித்துவிட்டுக் காலிற்கட்டியிருக்கிற கயிறும் அறும்படி தாவி அந்தக் கதிரை நாவினால்வளைத்துப்பறித்து அருந்துகின்றனவென்று நேராகப்பொருள்பட வுரைத்துக்கொள்க. கொழுந்தையும், என்பதினீற்றிலிருக்கும் உம்மை, கன்றுக்குப்புல்லைப்போல் கொழுந்து ஆகாரமாகாத இழிவைச்சிறத்தலால் இழிவு சிறப்பும்மையெனக் கொள்ளப்படும். (௬௩)

சிறுகண்ணவாய்க்காற்றெறிசெவியவாய்ப்பாச.......*
மிறுகாலவாய்க்கோட்டுமானினம்வழங்காறுங் ........*
குறுகுநுண்மருங்கிறுத்தெழுகோட்டுமானினம்போ......*
மறுகும்வண்டுசூழ்ந்திறைகொளுமான்மதநாறும்........*

(இ-ள்) சிறிய கண்களையுடையவைகளாயுங் காற்றைவீசுகின்ற காதுகளையுடையவைகளாயும்; கயிறுகட்டிய கால்களையுடையவைகளாயும், இராநின்ற கொம்புகளையுடைய யானைக்கூட்டங்கள் சஞ்சரிக்கிற மார்க்கத்திலும் சிறியநுண்மையாகிய இடையினை யொடிக்கும்படிவளர்ந்து மலையின் சிகரம்போன்ற ஸ்தனங்களையுடைய ஸ்திரீகள் செல்லுகிற வீதிகளிலும்வண்டுகள் சூழ்ந்து மொய்க்கும்படி (மான்மதநாறும்) யானையைக்குறித்துச் சொல்லும்போது மான்மதநாறு மென்பதனைப்பெருமைபொருந்தியமதநீர்நாறுமெனவும்- ஸ்திரீகளைக்குறித்துச்சொல்லும்போது மான்மதநாறுமென்பதனைக் கஸ்தூரிகமழுமெனவும் உரைத்துக்கொள்க.—(எ-று) இறுத்தெழு என்பது மிகுதிபற்றி எதிர்காலமிறந்தகாலமாயிற்று- மிகுதியாவது, ஸ்தனத்தின்வளர்ச்சி. (௬௪)

மாடமாலையுமேடையுமாளிகைநிரையு...........*
மாடரங்கமுமன்றிவேளன்னவர்முடியு...........*
மேடவிழ்ந்ததாரகலமுமிணைத்தடந்தோளுஞ்......*
சூடுமாதரார்சீறடிப்பஞ்சுதோய்சுவடு..........*

(இ-ள்) வரிசையாயிராநின்ற வீடுகளும் மேடைகளும் பத்திபத்தியாயிராநின்ற அரசர்வீடுகளும் ஸ்திரீகளுடைய சிற்றடிகளில் பூசிய செம்பஞ்சிக்குழம்பு தோய்ந்த தழும்பினைச் சூடுவதுமன்றி- அழகினால் மன்மதனை யொத்தவர்களாகிய ஆடவர்களுடையசிரசுகளும் இதழ்கள்விரிந்த பூமாலையணிந்தமா

ரீபும் பெரிய இரண்டு தோள்களும் தரித்துக்கொள்வனவா ம்.—(எ-று)ஸ்திரீகளுடையபாதச்சுவடுகள் ஆடவர்களுடையசி ரசுமுதலான இடங்களில்படுதல் ஊடற்காலத்திலென்றுணர்க- இவ்வாறுபடுவது கற்பினுக்குவழுவாமே யெனின்- ஆசிரியர் தொல்காப்பியர் வழுவமைதியாகப் பொருளியலிற்கூறினமை யின் வழுவன்றெனக்கொள்ளப்படும்- (சூ) மனைவியுயர்வுங்கி ழவோன்பணிவு நினையுங்காலைப் புலவியுளுரிய- என்றார்.(ங-ரு)

மருமச்செம்புன்லாறிட்மாறடுகோட்டுப் ...............*
பருமச்செங்கண்மால்யானையின் பனைக்கையுமறைநூ. .... *
லருமைச்செம்பொருளாய்ந்தவர்க்கரும்பொருளீவோர் . *
தருமச்செங்கையுமொழுகுவதானநீராறு.. .... ...... ..*

(இ-ள்) போர்செய்ய எதிர்த்த பகைவருடைய மார்பினிட த்தில் உதிரமானது ஆறுபோற்பெருகும்படி குத்திக்கொல்லு கின்ற கொம்புகளையும், கோபத்தினால்சிவந்த கண்களையும், ம யக்கத்தையும்உடையவைகளாய் அலங்காரத்தையுடையயானை களின் பனைமரம்போல் அடிபருத்து நீண்டதுதிக்கைகளிலும் வேதசாஸ்திரங்களின் அருமையாயும் செவ்விதாயுமிராநின்ற பொருளை ஆராய்ந்துணர்ந்த பிராமணர்களுக்கு அருமையா கியபொருளைக் கொடுப்பவர்களுடைய செம்மைநிறமுள்ள தர்மக் கைகளிலும் தானநீராறுஒழுகுவன.—(எ-று) துதிக் கைகளிலிருந்து மதநீரானது ஆறுபோலொழுகுமென்றும் தர்மச் செங்கைகளிலிருந்து தானங்கொடுக்கும் நீரானது ஆ றுபோல் பெருகுமென்றும் கொள்க - தானமென்னும் பல பொருளொருசொல் இரண்டு மதநீரையும் ஈகையினையும் விள க்கிநின்றது- வேதப்பொருள்யாவராலும் ஆராய்ந்தறிதல் அ ருமையென்பதுதோன்ற மறைநூலருமைச் செம்பொருளெ ன்றார் - தானமாகக் கொடுக்கப்பட்ட பொருள் அறத்தின்வ ழியே யீட்டப்பட்ட பொருளென்பது விளங்க அரும்பொ ருளென்றார்- மாறு என்னுஞ்சொல் பகைசெய்கின்றஞ்ருவனை யுணர்த்தினமையால்காரியவாகுபெயரொன்றுசொல்லப்படும்- பருமித்தகளிறு என்பதற்குப் பண்ணின களிறு என்று நச்சி னார்க்கினியார் உரைசெய்திருக்கின்றதை நோக்கிப் பருமம் என்றது அலங்காரம் எனப் பொருள்கூறப்பட்டது. (ஙசு)

பரியமாமணிபத்தியிற்பதித்திருட்படலம்.. ........ .... *
பொரியவில்லிடக்குயிற்றியபொன்னரமியமுந் .... ....*
தெரியமாமுரசொலிசெழுசெம்பொனாடரங்கு ....... ..*
மரியமின்பயோதரஞ்சுமந்தாடுவகொடிகள் ........ *

(இ-ள்) பருத்தமாணிக்கங்களைவரிசைவரிசையாகப் பதித்து இருட்கூட்டம் கெடும்படி பிரகாசிக்கச்செய்தபொன்மயமானநிலாமுற்றத்திலும், யாவருக்குந்தெரியும்படியான பெரியமுரசினொலிபொருந்தியசெம்பொன்னாற்செய்யப்பட்ட நாடகசாலையிலும், கொடிகள் அரிதாகிய மின்பயோதரஞ்சுமந்தாடுவன.(எ-று) நிலாமுற்றத்தில் மின்னலையுடைய மேகங்களைத் தாங்கிக்கொண்டுதுகிற்கொடிகள் ஆடுவன எனவும்-ஆடரங்கத்தில் பிரகாசியாநின்றஸ்தனங்களைத் தாங்கிக்கொண்டுபூங்கொடிபோன்றஸ்திரீகள் நடனஞ்செய்வார்கள் எனவும் பொருளுரைத்துக்கொள்க. பயோதரமென்னும் பலபொருளொரு சொல் ஈண்டு மேகத்தையும் ஸ்தனத்தையும் விளக்கிநின்றது கொடி என்னும்பலபொருளொருசொல்ஈண்டுத் துவசத்தையும் பூங்கொடியையும் விளக்க- அந்தக்கொடியென்னுஞ் சொல் அன்மொழித் தொகையாய் ஸ்திரீகளை யுணர்த்திற்று - அரமியம் என்பது வீட்டின்மேலுலாவும்வெளி. (௩௭)

வலம்படும்புயத்தாடவர்மார்பமேற்புலவிக் ............*
கலம்படர்ந்தபூண்முலையினார்காலெடுத்தோச்சச் ........*
சிலம்பலம்பிசைமழுங்கமுன்னெழுமவர்தேந்தார்ப் .... *
புலம்புவண்டொரோந்தரற்றியபொங்குபேரொலியே......*

(இ-ள்) பலம்பொருந்திய புசங்களையுடைய தத்தங் கணவரிகள் மார்பினிடத்தில் ஆபரணங்களின் ஒளியானது பரந்திருக்கும் பூண்முலையையுடைய ஸ்திரீகள் ஊடலினால் காலையெடுத்து உதைத்தலால் சிலம்புகள் ஒலிக்கும் ஒலிமழுங்கும்படி அந்தக் கணவர்கள் தரித்திருக்கும் வாசனைபொருந்திய பூமாலையினிடத்தில் இசைபாடிக்கொண் டிருக்கும் வண்டுகள் நொந்து ஒலித்தமிகுந்த பேரொலியானது சிலம்பொலி உண்டாவதற்கு முன்னதாக உண்டாகும்.—(எ-று) ஊடலுண்டானதற்குக் காரணங் கூறவேண்டாவோவெனின் அது திணைக்குரிப்பொருளாதலின் ஈண்டுக்கூற வேண்டுவதின்றெனக் கூறுராயினார்-புணர்தல் பிரிதலிருத்தலிரங்கலூடலி வற்றினிமித்த மென்றிவை தேருங்காலத் திணைக்குரிப்பொருளே- என்னுந்தொ

ல்காப்பிய அகத்திணை யியற்சூத்திரத்தா னுணர்க- நச்சினார்க்கினியாரும் சிந்தாமணி நகரத்து (சு) பாடலுரையில் நகராதலின் ஊடற்குக் காரணங் கூறுராயினொன்றார். தத்தங்கணவர்களோடு டின்புறத்திருக்கும் ஸ்திரீகள் இடைவிடாது- ஆபரணம் அணிந்திருப்பது இயல்பென்பதுதோன்றப் பூண்முலையென்றார். (கூஅ)

மையலார்மதிமுகங்களுந்தடங்களுங்குழைய ..........*
மையளாவியவிழிகளுமாடமுங்கொடிய ...............*
கையுநாண்மலர்ப்பொதும்பருங்கறங்கிசைவண்ட ...... *
நெய்யவோதியுவீதியுநீளறநெறிய ...................*

(இ-ள்)ஸ்திரீகளுடைய சந்திரனையொத்தமுகங்களும், தடாகங்களும், குழைகளையுடையவைகளா யிருக்கின்றன-மைபொருந்தியநேத்திரங்களும், வீடுகளும், கொடியவாம்-கைகளும் காலத்தில்மலரும் மலர்களையுடைய சோலைகளும் ஒலிக்கா நின்ற வண்டுகளை யுடையவைகளா யிருக்கின்றன — வாசனை நெய்பூசிய அந்தஸ்திரீகளின் அளகங்களும், வீதிகளும், நீளற நெறியவாம்.—(எ-று) ஸ்திரீகளைக் கூறுங்கால் முகங்களினிடமாகியகாதுகள்குழையென்னும் ஆபரணத்தை அணிந்திருக்கின்றன-கண்கள் கொடிய செய்கையை உடையவைகளா யிருக்கின்றன-கைகள்ஒலிக்காநின்ற ஓசையையுடைய வளையல்களை அணிந்திருக்கின்றன - அளகங்கள் நீட்சியும் கருமணல்போல் கருநிறமும் உள்ளன எனவும்- தடாகங்கள் தளிர்களையுடையவை யிருக்கின்றன - வீடுகள் துசங்களை யுடையவைகளா யிருக்கின்றன - சோலைகள் இசைபாடுகின்ற வண்டுகளை யுடையவைகளா யிருக்கின்றன- வீதிகள் தருமநெறிகளை யுடையவைகளா யிருக்கின்றன- எனவும் பொருளுரைத்துக்கொள்க- கறங்கல் என்பது சுழலல்என்னும் பொருளுடைய தாதலால் சுழலும் வளை, சுழலும்வண்டு என்றும் பொருள்கூறலாம்- நெய்ய ஓதியென்றதற்குப் புழுகு அணிந்த ஓதியென்றும் பொருள்கூறலாம் - நச்சினியார்க்கினியார் இவ்வாறு உரைசெய்திருக்கின்றனர்- மையளாவிய என்பது மாடத்துக்குங் கூறப்படும் - அவ்வாறு கூறுங்கால் மேகம் பொருந்திய வீடுகள் எனப் பொருள் உரைத்துக் கொள்க. குழை என்னும் பலபொருளொருசொல் ஈண்டுக்குண்டலத்தையும், துளிர்களையும், உணர்த்திநின்றது- கொடுமை எ

ன்னும் பண்புச்சொல் கொடியவென்றாயிற்று- வண்டு என்னும் பலபொருளொருசொல் ஈண்டு வளையல்களையும் வண்டுகளையு முணர்த்திநின்றது- அறனெறியவென்னுஞ் சொல் பிரிமொழிச் சிலேடையாய்க் கருமணலைக் குறிக்கும்போது அறல் என்றும் தர்மத்தைக் குறிக்கும்போது அறன் என்றும்சொல்லப்படும். (ருகூ)

மலருந்திங்கடோய்மாடமுஞ்செய்வனமணங்க ........ *
னலருந்தண்டுறையுங்குடைந்தாடுவதும்பி ........ *
சூலவுஞ்சோலையுமாதருந்தூற்றுவவலர்கள் ........ *
குலவும்பொய்கையுமனைகளுங்குறைபடாவன்னம் ....... *

(இ-ள்) மலர்கள் வாசனையைத்தரும் சந்திரமண்டலத்தை அளாவிய வீடுகளில் விவாகங்கள் செய்யப்படுவன - மலர்களிடத்தில் வண்டுகள் குடைந்தாடுவன- குளிர்ச்சிபொருந்திய நீர்த்துறைகளில் வந்து யானைகள்குடைந்தாடுவன- சூழ்ந்திருக்குஞ்சோலைகள் மலர்களைச்சொரிவன- சூழ்ந்திருக்கும் மாதர்கூட்டங்கள் அலர்தூற்றுவன- பிரகாசியாநின்ற தடாகங்களில் அன்னப்பக்ஷிகள் நிறைந்திருக்கும் - பிரகாசியாநின்ற வீடுகளில் சோறுகுறைவுபடாம லிருக்கும்.—(எ-று) அந்நகரத்திலிருப்பவர்கள் தங்களிடத்துக்கு வந்துண்டு செல்லும் விருந்தினருக்கு உபசாரஞ்செய்து இன்னமும் வருகின்ற விருந்தினருடன் உண்ணலாமென்றிருக்குந் தன்மையை உடையவர்களாதலால் அவர்கள் வீட்டில் சோறு குறைவுபடாம லிருக்குமென்றுணர்க. (வருவிருந்துவைகலு மோம்புவான்வாழ்க்கை பருவந்துபாழ்படுதலின்று. என்னுந் திருக்குறளானுமுணர்க.) மணம் என்னும் பலபொருளொருசொல் ஈண்டு வாசனையையும் விவாகத்தையும் உணர்த்திநின்றது- தும்பி என்னும்பலபொருளொருசொல் ஈண்டு வண்டுகளையும் யானைகளையும் உணர்த்திநின்றது- அலர் என்னும்பலபொருளொருசொல் ஈண்டு மலர்களையும் பழிமொழியையும் உணர்த்திநின்றது- அன்னம் என்னும் பலபொருளொருசொல் ஈண்டு அன்னப்பக்ஷிகளையும் சோற்றினையும் உணர்த்திநின்றது (சுய)

ஊடினொறிகலன்களுமம்மனையுடன்பந் ............... *
தாடினர்பரியாரமுமடியினூர்சிற்றில் ............... *
சாடினொடுவெகுண்டுகண்டதும்புமுத்திறைப்ப ...... *
வாடினர்பரிதித்திலமாலையுங்குப்பை ............... *

(இ-ள்) தத்தங்கணவர்களுடன் ஊடினஸ்திரீகள் எறிந்துவிடுகின்ற ஆபரணங்களும் அம்மனையுடன் பந்தாடுகின்றஸ்திரீகள் எறிந்துவிடுகின்றமாலைகளும் கால்களால் சிறுவீட்டைக்குலைத்துவிடுகின்ற சிறுவர்களுடன் கோபித்துத் தங்கள் கண்கள் ததும்புகின்ற முத்துப்போன்ற நீரைச் சிந்தும்படி மெலிகின்ற சிறுமியர் நீக்கி விடுகின்ற முத்துமாலைகளுமே அந்நகரத்துவீதிகளெங்குங் குப்பையாயிருப்பன.—(எ-று) சாடினூர் என்பது பொதுவினையாயினும்-சிற்றில் சிதைப்பது ஆண்மக்களது செய்கையாதலின் பெண்பாலையொழித்து ஆண்பாலைக்குறிப்பாலுணர்த்திற்று-சிற்றிலிழைப்பதும் அதனையழித்தலால் வாடுவதும் சிறுமியரது செய்கையாதலின் வாடினூர் என்பது பெண்பாலை புணர்த்திற்று. (கக)

ஐயவென்னுரைவரம்பினதாகுமோவடிய................*
ருய்யமாமணிவரிவளைவிறகுவிற்றுழன்றோன் ..........*
பொய்யில்வேதமுஞ்சுமந்திடப்பொருதகன்றாற்றுஞ் ....*
செய்யதாண்மலர்சுமந்திடத்தவஞ்செய்ததெருக்கள் ,,.... *

(இ-ள்) அடியார்களுய்யும்பொருட்டு மாணிக்கம் விற்றும் வரிபொருந்திய வளையல்விற்றும் விறகுவிற்றும் திரிந்த சோமசுந்தரக் கடவுளுடைய உண்மையாகிய வேதமும் தாங்கப்பெறுமல் நீங்கிமுறையிடும்படியானசிவந்ததாமரைமலர்போன்ற திருவடிகளைத் தாங்கும்படி தவஞ்செய்த வீதிகளின்பெருமைக்கு என்னுடைய சொல்லானது அளவுபடாது.—(எ-று) ஐய என்பது-வியப்புச்சொல். (சஉ)

(வேறு.)

தோரணநிரைமென்காஞ்சிசூழ்நிலைநெடுந்தேரல்குற் .....*
பூரணகும்பக்கொங்கைப்பொருவின்மங்கலமாமங்கை ....*
தாரணிந்தாரந்தூக்கிச்சந்தகிறிமிர்ந்துபாலிச் ..............*
சீர்ணிமுளைவெண்மூரல்செய்துவீற்றிருக்குமன்றே ..... *

(இ-ள்) தோரணவரிசைகளாகிய மெத்தென்றதொழில்புனைந்த மேகலாபரணஞ்சூழ்ந்தநெடிய நிலைத்தேரொன்னும் அல்குலையும்பூரணகும்பமாகியஸ்தனங்களையுமுடையவொப்பில்லாதமங்கலமாகியஸ்திரீயானவள் பூமாலைகளணிந்து ரத்தினக்கோவைகளைத் தொங்கவிட்டுச்சந்தனமும் அகிலும்பூசிப்பூரண கும்பத்தைச்சூழவைத்திராநின்ற பாலிகையிலிருக்கும்சீர்பொருந்திய முளைகளாகிய வெண்மைநிறமுள்ள தந்தங்கள் தோன்ற

நகை செய்துகொண் டிருக்கின்றாள்.—(எ-று) பந்தலிட்டுத் தோரணங்கள் கட்டி அவைகளில் பூமாலைகளும் ரத்தினக்கோவைகளுந் தொங்கவிட்டு நிலைத்தேர்கள் வைத்துப் பாலிகைகளும் பூரணகும்பங்களும்வைத்திருப்பதினால்- நகரம், மங்கலமுள்ளதாயிருக்கின்றது என்பது கருத்து-நிலைத்தேரென்றது- அலங்காரத்தின்பொருட்டு நிலையாயிருக்கும்படி செய்துவைக்கிற தேர்- காஞ்சி என்பது,எண்கோவைமணி- இது அரையின்மேலணியப்படும் ஆபரணமாம்- திருமுருகாற்றுப்படையில் பல்காசுநிரைத்த சில்காழல்குல் என்னு மொழிக்குப் பரிமேலழகியா ரெழுதிய வுரையில் அல்குல் என்பதற்கு அரையென் றிருப்பதினாலு முணர்க-பாலிகையென்னுஞ்சொல் ஈறுகெட்டுப் பாலியென நின்றது. (௪௩)

திங்களைச்சுண்ணஞ்செய்துசேறுசெய்தாட்டியன்ன .... *
பொங்குவெண்மாடப்பந்திபுண்ணியம்பூசுந்தொண்டர் .... *
தங்கண்மெய்வேடந்தன்னைத்தரித்தனசாலக்கண்கொண் .. *
டங்கணன்விழவுகாண்பானடைந்தெனமிடைந்தவன்றே .. *

(இ-ள்) சந்திரனை நீறுசெய்து அந்நீற்றினைத் தேவாமிர்தம்விட்டுச் சேருக்கிப் பூசியதை யொப்பப் பொலிவினையுடைய வெண்மையாகிய மாடவரிசைகள் விபூதிதரித்திராநின்ற சிவனடியார்களுடைய உண்மையான வேடத்தைத் தாங்கிக்கொண்டவைகளாய் மிகுந்த நேத்திரங்களைப்பெற்றுக்கொண்டு அழகுபொருந்தியதிரிநேத்திரங்களையுடைய பரமசிவனது திருவிழாவைக் காணவந்ததுபோல் நெருங்கியிருக்கின்றன.(எ-று) சந்திரனை நீறுசெய்தமைக்கேற்பத் தேவாமிர்தமென்னும் ஒருசொல் வருவிக்கப்பட்டது. மாடங்களுக்குக் கண்களாவன, பல்கணி வாயில்களாம். (௪௪)

தேரொலிகலினப்பாய்மான்கிரிப்பொலிபுரவிபூண்ட .... *
தாரொலிகருவியைந்துந்தழங்கொலிமுழங்குகைம்மான் .. *
பேரொலியெல்லாமொன்றிப்பெருகொலியன்றியென்றுங் *
காரொலிசெவிமடாதுகடிமணிமாடக்கூடல் .... ..... *

(இ-ள்) தேரினது ஒலியும் கடிவாளம்பூட்டிய தாவுகின்ற குதிரைகள் கனைக்கும் ஒலியும் குதிரைகளுக்கு அணிந்திருக்கும் கிங்கிணிக் கோவைகளின் ஒலியும் பஞ்சவாத்தியங்களும் ஒலிக்காநின்ற ஒலியும் யானைகள்முழங்குகின்ற பேரொலியும் ஆகிய எல்லா ஒலியும்ஒன்றாகச்சேர்ந்து அதிகரிக்குமொலிகேட்குமேயல்லது விளக்கம்பொருந்திய ரத்தினங்களாற் செய்யப்ப

ட்ட வீடுகள் நெருங்கிய கூடல் என்றும் ஒருபெயரையுடைய மதுரைப்பட்டணத்தில் எந்நாளும் மேசமுழக்கமானது ஒருவர் காதிலும் படாது.—(எ-று) (பஞ்சவாத்தியங்களாவன) தோற்கருவி, இது பேரிகை, முழவம்முதலான வாத்தியமாம்- துளைக்கருவி, இது நாகசுரம், வேய்ங்குழல் முதலானவாத்தியமாம், நரப்புக்கருவி- இதுவீணைமுதலாகிய வாத்தியமாம், கஞ்சக்கருவி- இதுதாளமுதலானதாம், மிடற்றுக்கருவி- இதுகண்டத்தினால் தொனியுண்டாகப் பாடுதலாம். இதுவரையில் வீதிகளைப் பொதுவாகச்சொல்லி இனித் தனித்தனியேசிறப்பாகச் சொல்கின்றார். (சஓ)

(பரத்தையர்வீதி.)

இழிபவருயர்ந்தோர்மூத்தோரிளையவர்கழியாநோயாற் ..*
கழிபவர்யாவரேனுங்கண்வலைப்பட்டுநெஞ்ச ..........*
மழிபவர்பொருள்கொண்டெள்ளுக்கெண்ணெய்போலளந்து
காட்டிப்,பழிபடுபோகம்விற்பாராவணப்பண்புசொல்வாம்.*

(இ-ள்) இழிந்தசாதியரும் உயர்ந்தசாதியரும் வயசுமுதிர்ந்தவர்களும் இளையவர்களும் நீங்காநவியாதியினால் கழியத்தக்கவர்களுமாகிய இவர்களில் எவர்களேயானாலும் தங்கள் கண்களாகிய வலைகளில் அகப்பட்டுக்கொண்டு மனநிலை கெடுகின்றவர்களுடைய திரவியங்களை வாங்கிக்கொண்டு எள்ளுக்குத்தக்க எண்ணெய்காண்பதுபோல் பொருளுக்குத் தக்கதாகக் காட்டிப் பழிபட்டிராநின்ற போகத்தை விற்காநின்ற தாசிகளுடைய வீதிகளின்தன்மையைச் சொல்லுகிறேம்.—(எ-று) பரத்தையராதுபோகம் திருவள்ளுவநாயனார் முதலாகிய சான்றோர்களால்கடியப்பட்டதாதலால்பழிபடுபோகமென்றார்- வலையிலகப்பட்டுமனவருத்தங்கொள்ளும்பகுத்தறிவில்லாதபுள்முதலியசெந்துகள்போல் - அறிவில்லாதவர்கள்.பரத்தையரின்பத்தை விரும்பிச் சிக்கிக்கொள்வார்களென்பது விளங்கக் கண்வலைப்பட்டுநெஞ்சம் அழிபவரென்றார். (சசு)

மெய்படுமன்பினார்போல்விரும்பினார்க்கருத்துந்தங்கள் ...*
பொய்படுமின்பம்யார்க்கும்புலப்படத்தேற்றுவார்போன் .*
மைபடுகண்ணார்காமன்மறைப்பொருள்விரங்கத்தீட்டிக் ..*
கைபடச்சுவராய்த்தோன்றச்சித்திரங்காணச்செய்தார் ....*

(இ-ள்) உண்மையாகிய அன்பினை உடையவர்கள் போலத் தங்களை யிச்சித்த ஆடவர்களுக்கு அனுபவிக்கக் கொடுக்கும்

பொய்யாகிய இன்பத்தை எல்லாருக்குந்தெரியும்படி தெளிவிப்பவர்களைப்போல் மைபொருந்திய கண்களையுடையதாகிக்கள் மன்மத சாஸ்திரத்தின் பொருள்களாகிய லீலாபேதங்கள்விளங்கும்படி யெழுதிக் கைப்பட்டால் சுவரென்று தெரியும்படி சித்திரங்கள் விளங்கச் செய்தார்கள்.—(எ-று) பரத்தையர்க்குப் பொருளிச்சையே யன்றிப் பொருள் கொடுக்கும் ஆடவரிடத்து இச்சையில்லாமையினால் பொய்படு மின்பமென்றார்- பொருட்பெண்டிர் பொய்ம்மைமுயக்கம் என்னும் திருக்குறளானுமுணர்க. (சஎ)

திருவிற்கான்மணிப்பூணகம்பலகையாத்தெண்முத்தார ...*
வருவிக்கால்வரைமென்கொங்கைச்சூதொட்டியாடிவென்று *
மருவிக்காமுகராத்தங்கள்வடிக்கண்வேன்மார்பந்தைப்பக் .*
கருவிச்சூதாடிவென்றுங்கைப்பொருள்கவர்தல்செய்வார் ..*

(இ-ள்) அழகுபொருந்திய பிரகாசத்தைக் கக்குகின்ற ரத்தினாபரணங்கள் அணிந்திருக்கும் மார்பானது பலகையாகத்தெளிவுள்ள முத்துகளையும் சந்தனத்தையுமுடைய அருவியினது ஒழுக்கமுள்ள மலைபோலப் பூரித்திராநின்ற மெல்லிய ஸ்தனங்களாகிய சூதினையொட்டியாடிவென்றும்- கலந்து காமுகர்களைத் தங்களுடைய மாம்பிஞ்சின் பிளவையொத்த கண்களாகிய வேல்கள் அவர்களுடைய மார்பிலே தைக்கும்படி கருவிச் சூதினை ஆடிவென்றும்- அந்தக்காமுகர் கையிலிருக்கும் பொருள்களைக் கவர்ந்து கொள்வார்கள்.—(எ-று) சூதென்னும் சொக்கட்டானைப் பலகையில்வைத்து ஆடுதல் மரபாதலால் ஸ்தனத்தைச் சூதென்று சொல்லியதற்கேற்ப மார்பினைப் பலகையென்றார்- ஒட்டியாடுதலாவது பந்தயம்வைத்து ஆடுதல்- ஈண்டு ஒட்டியாடுதலென்னவெனில் தங்கள்ஸ்தனம் காமுகர்மார்பில் பொருந்தும்படி கூடுதலாம்- காமுகர்க்குத் தங்களின்பத்தைத் தருவதின்றி அவர்கள் பொருள்களைமாத்திரம் கவர்ந்துகொள்ளுகின்றார்க ளென்பதுதோன்றக் கொங்கைச் சூதொட்டியாடி வென்றெனவும் தங்களுடைய பார்வையினால் காமுகருடைய மதியைமயக்கிவெற்றி அடைகின்றார்களென்பது தோன்ற வடிக்கண்வேன் மார்பந்தைப்பக்கருவிச் சூதாடிவென்று- எனவும் கூறினார். (சஅ)

தண்பனிநீரிற்றோய்த்தமல்லிகைத்தாமநாற்றி .........*
விண்படியதியந்தீண்டும்வெண்ணிலாமுற்றத்திட்ட .....*

கண்படைடயணைமேற்கொண்டுகாமனுங்காமுற்றெய்தப்.... *
பண்பலபாடிமைந்தராவியைப்பரிசில்கொள்வார் .... .. *

(இ-ள்) குளிர்ச்சிபொருந்திய பனிநீரில் தோய்த்த மல்லிகைப் பூமாலைகளைத் தொங்கவிடப்பட்டு ஆகாயத்திற் பொருந்தியசந்திரனைத் தொடும்படியுயர்ந்தவெண்ணிலாமுற்றத்திலிட்டிராநின்ற தூங்குமஞ்சத்தின் மேலிருந்துகொண்டுமன்மதனும்ஆசைப்பட்டுவரும்படிபல இசைகளைப்பாடிஆடவர்களுடைய உயிர்களைப் பரிசில்களாகவாங்கிக்கொள்வார்கள்.(எ-று) மன்மதன்மிகுந்த அழகுள்ளவனும் யாவருக்குமோகத்தைத்தருகின்றவனுமாதலால காமனும் என உயர்வுசிறப்பும்மைகொடுத்துக்கூறினர்- இதனால் அந்தப்பரத்தையர் பாடல் ஆடல், அழகு, இவைகளில் சிறந்தவர்களென்பது தானே விளங்குகின்றது. (சகூ)

குரும்பைவெம்முலையிற்சிந்துசாந்தமுங்குழலிற்சிந்து .... *
மருப்பவிழ்மாலைத்தாதுமளிநுகர்ந்தெச்சிலாகிப் ........ *
பொரும்பரிக்கால்ிற்றூளாய்ப்போயரமாதர்மெய்யு...... *
மிருங்குழற்காடுஞ்சூழ்போயியன்மணம்விழுங்குமன்றே . *

(இ-ள்) தென்னங்குரும்பையையொத்து விருப்பத்தைத்தருகின்ற அவர்களுடைய ஸ்தனங்களிலிருந்து சிந்துகின்ற சந்தனமும்அளகபாரத்திலிருந்து சிந்துகின்ற அரும்புகள் மலர்ந்த பூமாலையிலிருக்கு மகரந்தங்களும் (சேருகி)வண்டுகளால் உண்ணப்பட்டு எச்சிலாகி வீதியில் செல்லுகின்ற குதிரைகளின் கால்களால் தூளாகி மேலேசென்று தேவஸ்திரீகளுடைய சரீரத்தையும் பெருமைபொருந்திய அவர்கள் அளகமாகிய காட்டையும் சூழ்ந்துகொண்டு அந்த அளகத்துக்கு இயல்பாகிய வாசனையை மறைத்துவிடும்.—(எ-று) தூளாய் என்றமையின் சேருகி யென்னு மொருசொல் வருவிக்கப்பட்டது. (ருo)

ஆலவாயுடையானென்றுமங்கயற்கண்ணியென்றுஞ் .. ......*
சோலைவாழ்குயிலினல்லார்சொல்லியாங்கொருங்குசொல்லும்
பாலவாங்கிளிகள்பூவைபன்முறைகுரவனேது.. ..... .. ... *
நூலவாய்ச்சந்தைகூட்டிநுவன்மறைச்சிறாரையொத்த .. ..*

(இ-ள்) திருவாலவாயிலேதிருக்கோவிலாகவீற்றிருக்குங் கடவுளென்றும் அழகிய கயல்போன்ற நேத்திரங்களையுடைய

மீனாக்ஷியென்றும் சோலையில்வாழ்கின்ற குயிலின்மொழியை யொத்த மொழியையுடைய ஸ்த்ரீகள்சொல்லியதுபோல் எல்லாமொன்றாகச்சொல்லும் பாண்மையை உடையவைகளாகிய கிளிகளும்நாகணவாய்ப்பக்ஷிகளும், பலதரம் ஆசிரியன்சொல்லுகின்ற வேதத்தைவிரும்பி இசைகூட்டிச்சொல்லுகின்ற பிராமணச்சிறுவர்களையொத்தன.-(எ--று)இழிந்தோராயும் இளையோராயும் வரைவின்றிப் பொருள் அபேக்ஷையினால் கூடுகின்றவர்களே யாயினும் சோமசுந்தரக்கடவுளிடத்து மீனாக்ஷி யம்மையிடத்தும் அன்புள்ளவர்க ளென்பது தோன்ற ஆலவாயுடையா னென்றும் அங்கயற்கண்ணியென்றும் இடைவிடாது துதி செய்வார்களென்றார். (அன்றியும்) சிவநேசமுள்ளவர்களென்பது தமது கருத்திற் பதிந்தமையால். அவர்கள்தொழிற்குரிய பெயரைக்கூறாது மாங்குயிலி னல்லாரென உபசாரமாகவுங்கூறினார். இதனால் மெய்யன்புடையவர்களாயிருப்பவர்கள்- சிவனடியார்களைக்கண்டால் அவ்வடியார்கள் நற்செய்கையை யுடையவர்களே யாயினும், தீயசெய்கையையுடையவர்களே யாயினும்; அவைகளை நோக்காது பத்திசெய்வார்களென்பது விளங்குகின்றது. (ருக)

(இதற்குச்செய்யுள்-குலச்சிறைநாயனார்புராணம்.)

உலகர்கொள்ளுநலத்தினராயினும் ........*
அலகிறீமையராயினுமம்புலி ...........*
யிலகுசெஞ்சடையாரடியாரெனில் ...... *
தலமுறப்பணிந்தேத்துந்தகைமையார் .....*

ஒளவியமதர்வேற்கண்ணாரந்தளிர்விரனடாத்துந் ........*
திவ்வியநரம்புஞ்செவ்வாய்த்தித்திக்குமெழாலுந்தம்மிற் ..*
கௌவியநீரவாகிக்காளையர்செவிக்காலோடி ........ ..*
வெவ்வியகாமப்பைங்கூழ்விளைதரவளர்க்குமன்றே.......*

(இ-ள்) பொறாமைக்குணமுள்ளவர்களாய்க்களிப்புற்றவேல்போன்றகண்களை யுடைய பரத்தையர்தங்கள் விரல்களால்வாசிக்கும் திவ்விய யாழினரம் போசையும் செவ்வாயினிடத் துண்டாகின்ற தித்திக்கும் நரம்போசையும் ஒன்றுபட்டதன்மையையுடையவைகளாய் இளைஞர்களின்காதின் வழியாகஓடி(அவர்களுள்ளமாகியநிலத்தில்) வெவ்வியகாமமாகியபசியபயிர் விளையும்படிவளர்க்காநின்றது.—(எ-று) விரனடத்து

மென்பதற்கு எழுதிய உரையைக்குறித்து-விரறவழ்ந்த வாறும் என்கிற பதத்துக்குவிரல்வாசித்தபடியுமெனச் சிந்தாமணியில் நச்சினார்க்கினியார் உரைசெய்திருப்பதைக் காண்க-இது யாழினரம்போசையென்றும் இது மிடற்றினோசை யென்றும் தெளியாவண்ணம் ஒன்றுபட்டிருக்குந் தன்மையைப்பற்றி மிடற்றோசையினையும் எழாலென்று கூறினார்- பயிர் விளையச் செய்யு மென்றதற்கேற்ப நீரவென்றும் செவிக்கா லோடியென்றுங் கூறினார் - கௌவுதல் என்பது பற்றுதல்- காமம் சுடுந்தன்மையதாதலின் வெவ்வியகாமமென்றார்- குன்றேறியொளிப்பினுங் காமஞ் 'சுடுமென்னுங் குறளானு முணர்க- பொறாமையாவது, பிறருடைய பொருளைக் கண்டவிடத்துண்டாவதோர் தீயகுணம் - இத்தீயகுண முள்ளவ ராதலின் காமுகரது பொருளை அபகரித்துக்கொள்ளவேண்டு மென்கிற விருப்பமும் உள்ளவர்களென்பது தோன்ற- ஔவியமதர் வேற்கண்ணா ரென்றார். காமம் - ஐம்புலன்களுக்கும் இன்பநுகர்ச்சியைத்தருவதாதலின் பைங்கூழென்றார் -நிலம், வருவிக்கப்பட்டது. (ருஉ)

கட்புலனாதியைந்துமுவர்ப்பறக்கனிந்தகாமம்...... ..*
விட்புலத்தவரேயன்றிவீடுபெற்றவரும்விழைந்து.... .....*
வெட்பமுற்றமுதுங்கைப்பப்பெருங்குலக்கற்பினார்போ..*
னட்பிடைப்படுத்திவிற்குநல்லவரிருக்கையீதால்.. .. ...*

(இ-ள்) கண்-முதலாகிய பஞ்சேந்திரியங்களும்வெறுப்பு நீங்க முதிர்ந்த காமநுகர்ச்சியைச் சுவர்க்கலோகத்தி லிருப்பவர்கள் விரும்புவதுமல்லாமல் இருவகைப்பற்றினையும் விடப்பெற்ற சீவன்முத்தர்களும் விரும்பி ஆசையைப் பொருந்தி மோக்ஷத்தையும் வெறுக்கும்படி பெரியகுலத்தில்வந்த கற்புள்ள ஸ்திரீகள்போலத் தங்கள் நட்பில் அகப்படுத்திக்கொண்டு விற்கா நின்ற பரத்தைய ரிருக்கும் வீதி யித்தன்மையதாம். (எ-று) காமநுகர்ச்சியை விற்பனெனக்கூட்டுக - வெறுப்புநீங்கவெனவே இன்பம்பொருந்தவெனப் பொருள்படுமாறறிக உப்பமைகாமம் என்பதற்கு உவர்ப்பில்லாத காமநுகர்ச்சியென்றார் நச்சினார்க்கினியார் - கற்புள்ள ஸ்திரீகள் தத்தங்கணவர்களை தங்களுக்குத் தெய்வமென்ன வுட்கொண்டு மெய்யன்பைச் செலுத்தி அவர்களைத் தங்கள் நட்பிற் படுத்திக்கொள்வதுபோல்பரத்தையர் மெய்யன்பினாலன்றி ஆடல்பாடல்அழ

குழுத்லியவற்றால் காமுகர்களைத் தங்கள் நட்பிற் படுத்திக்கொள்கின்றார்களென்று கொள்க- சீவன்முத்தர்கள் விரும்புவரோவெனின் இவ்வாறு ஆச்சரியப்படத்தக்க தாகவும் பொய்யாகவும் புகழ்ந்துகூறுவது அதியுக்தி அலங்காரமாம். ஒருபொருளைக் கண்டமாத்திரத்தி லுண்டாவது விருப்பம்- பின்பதனை அனுபவிக்கவேண்டுமென வளர்தல்- ஆசை- பெட்பம் என்றுமொழியி னிற்றிலிருக்கும் அம், சாரியை-அழகுள்ளவனென்பது விளங்க நல்லவனென்றார். (ருக)

(வேளாளர்விதி)

வழுக்கறுவாய்மைமாண்புங்கங்கைதன்மரபின்வந்த...... *
விழுக்குடிப்பிறப்புமூவரேவியவினைகேட்டாற்று ...... *
மொழுக்கமுமமைச்சாய்வேந்தர்க்குறுதிசூழ்வினையுங்குன்ற•
விழுக்கறுமேழிச்செல்வர்வளமறுசியம்பலுற்றாம் ...... *

(இ-ள்) குற்றமற்றவாய்மையின்பெருமையிலும்கங்கைகுலத்தில்வந்தமேன்மைபொருந்தியகுடிப்பிறப்பிலும்பிராமணர்-க்ஷத்திரியர்-வைசியர்-என்னுமிம்மூன்றுவருணத்தாரும் ஏவியதொழில்களைக்கேட்டுச்செய்யு ம்ஒழுக்கத்திலும் மந்திரித்தொழில்களை யுடையவர்களாய் மன்னவர்கட்கு உறுதிபயக்குங் காரியத்தையோசித்துச்செய்யுஞ்செய்கையிலும்குறைவுபடாது பழுதகன்ற மேழிச்செல்வமுடைய வேளாளர்க ளிருக்கும் வளப்பம் பொருந்திய விதியின் பெருமையைச் சொல்லுகின்றோம்.—(எ-று) தங்கள் வருணத்திற்கு வகுக்கப்பட்ட ஒழுக்கத்தில்வழுவாதவர்களென்பது தோன்ற மூவரேவிய வினைகேட்டாற்று மொழுக்கமுள்ளவர்களென்றார் - உழவு - வாணிபம்- சேவகம்- என்னு மூன்றுதொழிலில் உழவே சிறந்ததென்பார் - இழுக்கறுமேழிச்செல்வ ரென்றார் - என்னவே மற்றையிரண்டும் இழுக்குற்றதாயிற்று. (ருச)

வருவிருந்தெதிர்கொண்டேற்றுநயனுரைவழங்குமோசை..*
யருகிருந்தடிசிலூட்டிமுகமனன்கறையுமோசை...... ....*
யுரைபெறுதமிழ்பாராட்டுமோசைகேட்டுவகைதுள்ள......*
விருநிதியளிக்குமோசையெழுகடலடைக்குமோசை.....*

(இ-ள்) தம்மைநோக்கிவந்த விருந்தினரை இன்முகத்துடன் எதிர்கொண்டுபோய் அழைத்துவந்து இனிய சொற்களைச் சொல்லுமோசையும் அவ்விருந்தினர் அருகிலிருந்து சோறுண்ணச் செய்து உபசாரவசனங்களை நன்மையுடன் சொல்லு

மோசையும் உரைபெற்ற தமிழ்க்கவிதைகளைப் பிரசங்கஞ் செய்கின்ற ஓசைகேட்டுச் சந்தோஷமானது மேலிட்டோங்கும்படி (அந்தப்பிரசங்கிகளுக்குப்) பெருமைபொருந்திய நிதிகளைக் கொடுப்பவர்கள் ஓசையும், ஏழுசமுத்திர ஓசையையும் அடக்கும்படியான ஓசைகளாம்.—(எ-று) விருந்தேற்பவர்கட்கு இன்முகம்- இன்சொல் - நன்றாற்றல் - என்னும் இம்மூன்றும் இன்றியமையாதவைகளாதலால் இன்முகமும் உரையிற் சொல்லப்பட்டது - அருகிருந்தடிசில்ஊட்டுதலே நன்றாற்றலாகக்கொள்ளப்படும் - (மோப்பக்குழையும் அனிச்சமுகந்திரிந்து நோக்கக்குழையும் விருந்து.) என்னுங்குறளுக்குப் பரிமேலழகர் செய்த உரையில் - இதனால் விருந்தோம்புவார்க்கு முகத்கண் இன்முகம் வேண்டுமென்பது கூறப்பட்டது - என்றிருப்பதினாலுமுணர்க - நிதிகொடுப்பவர்கள் ஓசையாவது பிரசங்கிப்பவர்களைப் புகழ்தலாலும் உபசாரவசனங்கள் சொல்லுதலாலும் உண்டாகும் ஓசையென்றுணர்க. (ருரு)

அருந்தினரருந்திச்செல்லவருந்துகின்றருமாங்கே ....... *
யிருந்தினிதருந்தாநிற்கவின்னமுதட்டுப்பின்னும் ........ *
விருந்தினர்வரவுநோக்கிவித்தெலாம்வயலில்வீசி ...... *
வருந்திவிண்ணோக்குமோரோருழவர்போல்வாடிநிற்பார் ... *

(இ-ள்) உண்டவர்கள் உண்டு செல்லப்பின்னும் மகிழ்ச்சியுடன் உண்பவர்கள் உண்டுகொண்டிருக்க இனிதாகிய சோறு சமைத்து மேலும் விருந்தாளிகள் வருதலைநோக்கித்தாமும் அவரோடுண்ணவிருப்பவர் - வித்துகளையெல்லாம் வயலில் விதைத்து வருத்தமுற்று எப்போது மழைபெய்யுமோவென்று ஆகாயத்தைப் பார்த்துக்கொண்டிருக்கும் ஒரு ஏருள்ள உழவர்கள்போல் வாடியிருப்பார்கள்.—(எ-று) விருந்தினர் வரவில்லையே யென்று மனவருத்தமுற்று வாடிநிற்பாரென்றுரைத்துக்கொள்க. (செல்விருந்தோம்பி வருவிருந்துபார்த்திருப்பா னல்விருந்துவானத் தவர்க்கு.) என்னுங் குறளுரையில் செல்லக்கடவ விருந்தினைப் பார்த்துத் தான் அதனோடுண்ண விருப்பான் என்றிருக்குதலை நோக்கி இவ்வுரையில் விருந்தினரோடுண்ண இருப்பவரென்று எழுதியதெனக்கொள்க. (ருசு)

வானமுந்திசையும்பொங்கும்புகழ்மையும்வானம்பேணு .. *
ஞானமும்பொறையுங்குன்றாநன்றியுமூக்கப்பாடு .......*

தானமுங்கொடையுமன்பும்வரிசையுந்தகைசாலன்பு . . . . *
மானமுந்தவஞ்செய்தீன்றமகவுபோல்வளர்க்கவல்லார் . . . . *

(இ-ள்) (பூலோகத்திற்பரந்திருப்பதுமன்றி)வானத்திலும் அஷ்டதிசைகளிலும் பரந்திருக்கும் புகழ்ச்சியையும் வானவரும் ஆதரிக்கத்தக்க ஞானத்தையும், பொறுமையினையும், குன்றாத நன்றியினையும், மன உறுதிப்பாட்டையும், தானத்தினையும், கொடையினையும், அன்பினையும், ஒழுக்கத்தினையும், தகுதிசான்றநட்பினையம், மானத்தையும்,தவஞ்செய்துபெற்றஒருபுத்திரனை வளர்ப்பதுபோல் வளர்க்க வல்லவர்கள்.—(எ-று) தவஞ்செய்தீன்ற மகவுக்கு ஒரு குறைவருமாயின் தம்முயிரைப்பேணார்- அதுபோல வேளாளரும் புகழ்முதலாய தங்கள் செய்கைக்கு ஒருகுறைவருமாயின் தம்முயிரை விடுவரெனக்கொள்க-புகழாவது இல்லறத்தில்வழுவாதார்க்கு இம்மைப்பயனாயிருக்குங்கீர்த்தியாம்- அதுகல்வி-வீரம்-ஈகை-என்னும் இம்மூன்றினுல்வரத்தக்கது-ஆயினும்,பெரும்பான்மையும் ஈகையைப்பற்றிவரும்,அப்புகழ்எங்கும்பரத்தலாவது-எல்லாராலும்இடைவிடாதுசொல்லப்படுதல்-ஞானமாவது,சோமசுந்தரக்கடவுளேமுதற்கடவுளென்றுணர்ந்துஅவருக்கும்அவருடைய அடியார்களுக்குந் தொண்டு செய்யும்படியான மெய்யறிவு-பொறையாவதுபிறர்செய்ததீங்கினைப்பொறுத்தல்-நன்றியாவது-தனக்குப்பிறர்செய்த நன்மையைமறவாமை-ஊக்கப்பாடாவது-மனம்ஒருகாரியத்திலும் சோர்வுபடாம லிருப்பது—தானமாவது, ஐம்பொறிகளுந் அடங்க நோற்குமுனிவர் முதலாகிய பிராமணர்களுக்கு நீரோடுபொருள்கொடுத்தல்-அதுவே சோடசதானமென்று சொல்லப்படும். கொடையாவது வறியராயேற்றூர்க்குமாற்றுதுகொடுத்தல்- அன்பாவது,மனைவிமுதலிய சுற்றத்தாரிடத்தும்- பிறவுயிர்களிடத்தும்-உண்டாகும்நேயம், ஒழுக்கமாவது - தங்கள்தங்கள்வருணத்திற்கும்நிலைமைக்கும், சொல்லப்பட்டநிலையில்மாறுபடாமல்நடத்தல்-அது, ஆசரித்துவருதலென்றும் சொல்லப்படும்- நண்பாவது ஒருஇடையூறுவருங்காலத்தில் உதவிசெய்வதாகிய சிநேகம் மானமாவது - எந்நாளுந் தந்நிலைமையில்தாழாமையும், தெய்வத்தால்தாழ்வுவந்துழி-உயிர்வாழாமையுமாம்,இங்ஙனஞ்சொல்லிவந்தநிலைமைகளிலெல்லாம்-வழுவாது, நிற்பதரிதாதலின் வளர்க்கவல்லாரென்றூர் - என்னவே, வேளாளரையன்றி, மற்

றைவருணத்தார் புகழ் முதலானவற்றிற் சில்வழுவினும் வழுவு வொனக்கொள்க. (ருஎ)

(வணிகர்வீதி.)

புல்லியோர்பண்டங்கொள்வார்வினவினப்பொருடம்பக்க..*
லில்லெனினினமாயுள்ளபொருளுரைத்தெதிர்மறுத்து, மல்ல
தப் பொருளுண்டெனின் விலைசுட்டி யறுத்துநேர்ந்துஞ்;
சொல்லினுமிலாபங்கொள்வார்தொன்மரபிருக்கைசொல்வாம்

(இ-ள்) தங்களிடத்தில் பொருந்தி ஒரு பண்டங்கொள்ளு கின்றவர்கள் (இன்னபொரு ளிருக்கின்றதோவென்று) கேட்டால் அப்பொருள் தங்களிடத் தில்லாவிடின் அஃதில்லை யென்றுது கேட்டபொருளுக்கு இனமாகிய பொரு ளிருக்கிற தாகச் சொல்லி அச்சொல்லைக் கொண்டே முதல் கேட்ட பொருள் தங்களிடத்தி லில்லையென்று குறிப்பாகக் காண் பித்தும் அல்லது அப்பொருள் தங்களிடத்தி லிருந்தால் விலைகுறித்துத் தீர்மானித்துக் கொடுத்தும் சொல்லினும் இ லாபங் கொள்கின்றவர்களாகிய பழமையான மரபினையுடைய வணிகரிருக்கு மிடத்தைச் சொல்லுகின்றோம்.—(எ-று) பொ ருளினால் இலாபங்கொள்வதுமன்றிச் சொல்லினாலும் இலாப ங்கொள்வதினால் சொல்லினும் என இறந்தது தழீஇய எச்ச வும்மை கொடுத்துக் கூறினார்- இனமாயுள்ள பொருளுரைத் தலாவது, பயறுண்டோ வணிகீரோயென்றால், உழுந்துண்டு எனச் சொல்வதாம்-இவ்வாறு கூறாமல் பயறுண்டோவெனி ன் அஃதில்லையென்றால்- உழுந்தாவது துவரையாவதுண்டா வெனவினுவப்பட்டுமேலுமேலும் சொல்விரியும் அவ்வாறுவி ரியாமல் சொற்சுருங்குதற்பொருட்டு இனமாயுள்ளபொருளு ரைக்கவேண்டுமெனக்கொள்க- சொற்களை வீணிற் செலவழி யாமையினால்சொல்லினுமிலாபங்கொள்வாரென்றார்- இதனை த்-தம்பாலில்லதில் லெனினினனுயுள்ளது கூறிமாற்றியு முள்ள து சுட்டியுமுரைப்பர் சொற்சுருங்குதற்கே - என்னும்நன் னூற்பொதுவியற் சூத்திரத்தானுமுணர்க. (ருஅ)

(வேறு.)

நீலவேதிமேற்பளிங்கினுனிழற்சுவர் நிரீஇமின் .... .... ..*
காலவாலியவைரவாட்கானிரைத்தும்பர்க் .... ..... ....*
கோலவாணிலாச்சொரிமணிகுயிற்றிவெண்மாட .... .....*
மாலைபோல்வகுத்தியற்றினயிடிலகமறுகு .... .... ....*

(இ-ள்.) கடைவீதிகளில் நீலரத்தினத்தினாற் கட்டப்பட்ட திண்ணையின்மேல் பளிங்கினால் ஒளியையுடைய சுவர்கள் சமைத்துப் பிரகாசத்தைக் கக்கும்படி பரிசுத்தமான வயிரமணியால் ஒளிபொருந்திய தூண்கள் வரிசையாக வைத்து மேலே அழகுபொருந்திய வெண்மையாகிய ஒளியைப் பொழிகின்ற சந்திரகாந்தங்களைப் பதித்து வெண்மைநிறமுள்ள மாடங்கள் மாலைபோல் ஒழுங்காகக் கட்டப்பட்டிருக்கின்றன.—(எ-று) (ருக)

திரையளிப்பவுந்திரைபடுதீம்புனல்வேலிக் .... .... ....*
கரையளிப்பவுங்கரையிலாநிரைபடுதானத் .... .... ....*
தரையளிப்பவுந்தரைகிழித்தூன்றிவிண்டாங்கும் .........*
வரையளிப்பவும்வாங்கிவாய்மடுப்பனமாடம் .........*

(இ-ள்) சமுத்திரமானது தருகின்ற பொருள்களையும் அலைகள் பொருந்திய மதுரமான நீர்நிறைந்திருக்கும் மருதநிலங்கள் கொடுக்கும் பொருள்களையும் அளவில்லாத பசுக்கூட்டங்கள் பொருந்திய முல்லைநிலந்தருகின்ற பொருள்களையும் தரையைக்கிழித்து ஊன்றி ஆகாயத்தைத் தாங்குவதுபோல் உயர்ந்திராநின்ற மலைகள் தருகின்ற பொருள்களையும் வணிகர்வீதிகள் வாங்கித் தம்மிடத்தில் வைத்துக்கொள்வன.—(எ-று) அவ்வீடுகள் மிகுந்த இடத்தையுடையனவாயிருக்கின்றன என்பது தோன்றவாய்மடுப்பன என்றுளெளிதுபடக்கூறினார்-அன்றியும் நானிலப்பொருளும் ஐம்புலனுகர்ச்சிக்குரிய பொருளாதலால் சொன்னயப்பெறக்கூறினுமமையும்-கடல்கொடுக்கும்பொருளாவது- உப்பு-முத்து-பவளம்- சங்கு-ஒக்கோலை மருதநிலந்தரும்பொருளாவது செந்நெல்-சிறுபயறு- கரும்பு-வாழை - செவ்விளநீர் - முல்லைநிலந்தரும் பொருளாவது இறால்-தேன்-அரக்கு-மயிர்ப்பீலி-நாவி- மலைதரும்பொருளாவது-மிளகு-கோஷ்டம்-அகில்-தக்கோலம்-குங்குமம்-என்பவைகளாம். (கூ௰)

கரியகம்பலக்கிடுகின்மேற்கதிர்விடுபவளத் .......... ......*
தெரியல்பொன்னரிமாலிகைதெண்ணிலாச்சொரியும் .. ..*
பரியநித்திலமணிவடமரகதப்பசுந்தார் ......... .... ..*
விரியவிட்டனவிந்திரவில்லினிரையனைய .. ..... .... ..*

(இ-ள்) கருமையாகிய கம்பலத்தில் வேய்ந்தசட்டத்தின்மேல் மிகுதியாகத் தொங்கவிட்டிருக்கின்ற ஒளிவிடுகின்ற பவள

மாலையும் பொன்மாலையும் தெளிவான நிலவைச் சொரிகின்றபருத்த முத்துமாலையும் பசுமையாகியமரகத ரத்தினமாலையும் இந்திரவில்லின் கூட்டம்போ லிருக்கின்றன.—(எ-று) இந்திரவில்லாவது-மேகத்தில் தோன்றும்வில் அது பலநிறமுள்ளதாதலால்மாலைகளுக்குவமையாகக்கூறப்பட்டது. (சுக)

நாள்களுங்குளிர்திங்களுஞாயிறுமேனைக்.... ..... ....*
கோள்களுங்குளிர்விசும்பொரீஇக்குடிபுகுந்தாங்கு......*
வாள்கிடந்திராப்பகலொளிமழுக்கலால்வணிக.. .... ....*
ராள்கலம்பகர்மிடிகைதுறக்கநாடனைய ...............*

(இ-ள்) நக்ஷத்திரங்களும் குளிர்ச்சியையுடைய சந்திரனும் சூரியனும் மற்றைக்கோள்களும் குளிர்ந்த ஆகாயத்தைவிட்டு நீங்கிக்குடிவந்திருப்பதுபோல்ஒளிபொருந்தி யிராவையும் பகலின்,ஒளியையுமழுக்குவதினுல்யாவரும்பூணத்தக்க ஆட்சியையுடைய அணிகளை வணிகர் விற்கும்படியான கடைவீதிகள்சுவர்க்க லோகத்தை யொத்திருக்கின்றன.—(எ-று) மற்றைக்கோள்களாவன-செவ்வாய்-புதன்-பிரகஸ்பதி-சுக்கிரன்-என்பவைகளாம்- இராகுகேதுக்கள், சாயாகிரகங்களாதலால் - ஈண்டுஒழிக்கபட்டனவெனக்கொள்க- இராவைமழுக்குதல்- இருளை நீக்குதல். (சுஉ)

பன்னிறத்தபல்பெருவிலைப்பட்டெலாமவண.... ......*
வன்னபட்டின்மேம்படுவிலைப்பருத்தியுமவண .... ....*
வெற்றிலத்தரும்பொருள்பதினெழுபுலவணிகர்.... ....*
மன்னிருக்கையுமரும்பெறல்வரனெலாமவண..... ....*

(இ-ள்) பலநிறத்தை யுடைய அதிகவிலைபெறத்தக்க பலபட்டாடைகளெல்லாம் அந்தக்கடையி லிருக்கின்றன- அத்தன்மையுள்ள பட்டாடையினும் அதிகவிலைபெறத்தக்க பருத்திநூலாடைகளும் அவிடத் திருப்பன- எந்தநாட்டினுங் கிடைப்பதற்கரிய பலபண்டங்களும் பதினெழுதேசத்தி லிருக்கும் வணிகர் நிலையா யிருக்கும் இருப்பிடங்களும், பெறுதற்கரியஎல்லாவளப்பங்களும் அவிடத்தி லிருக்கின்றன.—(எ-று)பலபண்டமாவது- உண்ணும்பண்டம், ஆளும்பண்ட முதலானவைகளென்றும்- வளமாவது, ரத்தினங்கள்-ஆபரணங்கள்-பொன் முதலானவைகளென்றுங் கொள்க - பதினெழுதேசத்துவணிகரும் தங்கள்தங்கள் நாட்டிலிருக்கும் பொருள்களை அ

ழைப்பித்துவர்த்தகஞ்செய்துகொண்டு மதுரைக்கடைவீதியி லேதானேகுடியா யிருக்கிறார்களென்பது விளங்க - வணிகர் மன்னிருக்கையுமவணவென்றார்-பதினேழுதேசமாவது, அங் கம், அருணம், கலிங்கம், கௌசிகம், காம்போசம், கொங் கணம், கோசலம், சாவகம்,சிங்களம், சிந்து, சீனம், சோனக ம், துளுவம், பப்பரம், மகதம், மராடம், வங்கம் என்பவைக ளாம்- இவைகளுடன் திரவிடமென்பதனையுஞ் சேர்த்தால் பதி னெட்டுத் தேசமென்று சொல்லப்படும்- திரவிடதேச மாவது தமிழ்த்தேசமாம்- பாண்டிநாடு- திரவிடதேசத்தைச் - சேர் ந்ததாதலால்- அதனை யொழித்துப் "பதினெழுபுல வணிகரெ ன்றார் - ஈண்டுக்கூறிய - பதினெண் தேசத்தில்வழங்கும், பா ஷைகளே- பதினெண்பாஷைகளெனச் சொல்லப்படுகின்றன பதினேழுதேசத்து வணிகர்களும் - இந்நகரத்துக் கடைவீ தியில் வந்திருந்து வர்த்தகஞ் செய்வார்க ளென்றமையால்- இந்த நகரம்சிறந்ததென்க. (கூரு)

மரகதத்திலம்மிகள்வைரவாலுலக்கை............ *
யுரல்கள்வெள்ளியாலடுப்பகில்விறகுலைபனிநீ.......... *
ரரிசிமுத்தழல்செம்மணியடுகலன்பிறவு............. *
மெரிபொனாலிழைத்தாடுபவிவர்சிறுமகளிர்............... *

(இ-ள்) மரகதரத்தினத்தினால் அம்மிகளும் குழவிகளும் ஒ ளிபொருந்திய வயிரமணியால் உலக்கைகளும்உரல்களும்,வெ ள்ளியினால் அடுப்புகளும், அகிற்கட்டைகள் விறகுகளாகவும், பனிநீர் உலைநீராகவும், முத்துக்கள் அரிசியாகவும், மாணிக்கங் கள் அக்கினியாகவும், பொன்னினாற் சமையற்பாத்திரமு மற் றவைகளும் அமைவித்துக் கொண்டுவணிகருடைய பெண்கள் விளையாடுவார்கள்.—(எ-று) அம்மிகளைச் சொன்னமையால் அவைகட்கின்மாகிய குழவிகள் வருவித்துச்சொல்லப்பட்டன.

செயிரிற்றீர்ந்தசெம்பொன்னினாற்றிண்ணிலைக்கதவம் .....*
வயிரத்தாழுடைத்தவர்கடைவாயிலுமென்று.......... *
லயிரிற்றீர்ந்தபேரறிஞருமனையர்தஞ்செல்வத்.......... *
தியலிற்றுமெனவலாயறுத்திலசப்பதையெவனோ...... *

(இ-ள்) அந்த வணிகர்வீட்டுக் கடைவாயிலும் குற்றத்தினி ன்றும் நீங்கிய செம் பொன்னால்செய்யப்பட்ட திண்ணிதாகி யநிலையையுடைய கதவினையும் அவைகட்கு வயிரமணிகளா

தீசெய்யப்பட்ட தாழக்கோலையும் உடையதா யிருக்கின்றதெ ன்று சொன்னால் ஐயத்தினின்றும் நீங்கியபேரறிவினை உடை யவர்களும் அந்த வணிகர்களுடைய செல்வத்தின் தன்மை இ ப்படிப்பட்டதென்று அளவுபடுத்திச்சொல்வதெப்படி (எ-று) இசைப்பதை என்பதனீற்றிலிருக்கும் (ஐ) சாரியை - தாழக்கோ லென்பது இக்காலத்தில் தாழ்ப்பாள் என்றுசொல்லப் படுகி ன்றது - உள்ளிருக்கும்வாயில்முதலானவைகளெல்லாம்பொன் னினால் செய்யப்பட்டிருத்தலுமன்றிக்கடைவாயிலும் பொன் னினால் செய்யப்பட்டதென்று இழிவைச்சிறப்பித் தமையால் உம்மை இழிவு சிறப்பும்மையென்று சொல்லப்படும் - கடை வாயிலாவது, தலைக்கடைவாயில் - முத்திவிக்கினமாகியமூன்றில் ஐயமென்னும் ஒன்றனைச் சொன்னமையால் (ஒருமொழியொ ழிதன்னினங் கொளற்குரித்தே) யென்னுஞ் சூத்திரவிதியால் மேற்சொல்லிய ஐயத்துடன் அறியாமை திரிபு என்னுமிரண்டி னையும் நீங்கிய பேரறிவென உரைத்துக்கொள்க - அறிஞருமெ ன்றதனீற்றிலிருக்கும் உம்மைஉயர்வுசிறப்பும்மை. (௬௫)

எரிக்குறும்பொறியனையசெம்மணிசுடரொறிபொன் .... ..*
வரிச்சுரும்புநேர்மரகதமுத்துவாள்வைரந் ........ ... ..*
தெரிப்பருந்துகிர்சிந்தினசெல்லுநாளொன்றுக் .. ..... ..*
கரிப்பர்கையகப்படுவனவாயிரத்திரட்டி ...............*

(இ-ள்) வீதியிற்சிந்தியிருக்கிற சிறியதீப்பொறிபோலிருக் கின்ற மாணிக்கங்களும் ஒளியையெறிக்கின்ற சுவர்ணமும் இ சைபாடுதலையுடைய வண்டுகளையொத்த மரகத ரத்தினங்களு ம் முத்துகளும் ஒளிபொருந்திய்வயிரமணிகளும் விலைதெரிந் துசொல்லுதற்கரிய பவளமும் அரிப்பர்கள்கையில் செல்லுநா ளொன்றுக்கு இரண்டாயிர மிரண்டாயிரமாக அகப்படுகின் றன.—(எ-று) (௬௬)

பாயதொன்மரப்பறவைபோற் பயன்கொள்வான் பதினெண்
டேயமாந்தருங்கிளர்ந்தசொற்றிரட்சிதான்றாய .... ....*
மாயைகாரியவொலியன்றிவான்முதற்கருவி ....... .. .. ..*
ருபகாரியவோசையேயாய்க்கிடந்தன்மேற ...... ...... ....*

(இ-ள்) பரவியிராநின்ற ஆலமரத்தில்பக்ஷிகள்வந்து அதன்ப ழத்தைக்கொள்ளுதல்போல அந்தக்கடையிலிருக்கும்பண்டங் களைக்கொள்ளப் பதினெட்டுத்தேசமனிதர்களும் வசனிக்கும்

சொல்லின்மிகுதியான துமாயைகாரணமாகஉண்டாகும்காரிய ஓசைபோலன்றி ஆகாயமுதலாகிய காரணத்தினு லுண்டான காரியவோசைபோலவே ஒலித்துக்கொண்டிருந்தது.-(எ-று) மாயையாகியகாரணத்தினுலுண்டாகும் ஓசையாவது அகாமுத லாகிய எழுத்துகள்- மற்றஓசைஎழுத்தாகாது- தான், இடை ச்சொல். (சுஎ)

ஒழிவில்வேறுபல்பொருளுமேழுலோகமும்பிறவும்.....*
வழுவில்வேறுபல்கலைகளுமாபுளிவகுத்துத்...........*
தழுவிவேண்டினர்தாங்கொளத்தக்கவாபகரா .... ....*
வழிவிலாமறைபோன்றனவாவணவீதி..................*

(இ-ள்) ஒழிவில்லாதவைகளாய் வேறுயாயுள்ள பலபொரு ள்களையும் ஏழுலோகங்களையும் மற்றவைகளையும் குற்றமில் லாத வெவ்வேருகிய பலகலைகளையுர் முறைமைப்படி வகுத் துத் தழுவி விரும்பினவர்கள் கொள்ளும்படி தக்கவாறுபகர் ந்த கடை வீதிகள் அழிவில்லாத வேதங்களை யொத்தன.(எ று) கடைகளைக்குறிக்கும்போது-பொருள்கள்-என்பது-பலபண் டங்கள்-(லோகம் என்பது,) பொன், வெள்ளி, இரும்பு, செம் பு, ஈயம்,வெண்கலம், தரா, (பிறவும் என்பது) பித்தளை, ஏழு முதலானவைகள்- (கலைகள்என்பது)வஸ்திரங்கள்- (மாபுளிவ குத்தலாவது) கிரமப்படி யிடமறிந்து பொருள்களை வைத்து- (தழுவி என்பது) ஒருபண்டங் கொள்ளவந்தவர்களை வெறுப் பானவார்த்தைகள் பேசி விட்டுவிடாமல் (தக்கவாபகரா என் பது) தகுதியான விலைப்படிவிற்று எனவும் -(வேதத்தைக்கு றிக்கும்போது பொருள் என்பது) கடவுளர் பேதங்கள், (ஏழு லோகமும்பிறவும் என்பது) கீழேழு லோகமும், மேலேழு லோகமும்- அண்டங்களும்- (கலைகள் என்பது) அறுபத்து நா லுகலைகள், (தழுவிவேண்டினர்தாங்கொள என்பது) ஒழுக்கத் தைப்பொருந்தி விரும்பினவர்களுக்குத் தகுதிப்படி சொல்லி னவும் பொருளுரைத்துக்கொள்க. பொருள் என்பதற்கு அ றம்- பொருள்- இன்பம்- வீடு- என்னும் உறுதிப்பொருள்க ளென்று கூறினு மமையும்- தாம்-இடைச்சொல். (சுஅ)

திக்கெலாம்புகழ்மதுரையைச்சிவபுரமாக்கி..............*
முக்கணுயகனரசுசெய்முறையினுக்கேற்பத்..........*
தக்கதோழமைநடைகைமாநகருறைதயக்க.............*
மொக்குமந்நகர்வாணிகருறையுள்சூழ்தியமம்.........*

(இ-ள்) அந்த நகரத்திலிருக்கும் வணிகர் வாசஞ் செய்யும் வீடுகளையுடைய கடைவீதி-அஷ்டதிக்குகளிலுள்ளவர்களும் புகழும்படியான மதுரையைச் சிவபுரமாக்கித்திரிநேத்திரங்களை யுடையபரமசிவன்சௌந்தரபாண்டியராசனுகி அரசாட்சிசெய்த முறைமைக்கேற்ப அந்தக்கடவுளுக்குத்தகுதிபெற்றதோழனுகிய குபேரனோடு அவனுடையபட்டணமாகிய அளகைமாநகரமானது வந்து பிரகாசத்துடன் பொருந்தியிருக்குதலையொத்திருக்கின்றது.—(எ-று) சிவபுரமாக்கி யென்றமையால் கைலாசபதியானவர் சௌந்தரபாண்டிய ராசனுகி அரசாட்சி செய்ததுமுதல் மதுரை யானது சிவபுரமெனப் பெயர்பெற்றதெனக்கொள்க - அளகையானது கைலாசமாகிய சிவபுரத்துக்குச் சமீபத்தி லிருக்கின்றதென விளங்குகின்றது. (௬௬)

(மன்னவர் வீதி)

ஒற்றையாழியானுலகிருளொதுக்குமாபோலச் ........ *
செற்றநேமியாற்கலியிருடின்றுகோலோச்சி .... .. .... *
மற்றடம்புயவலியினுன்மாறடுசீற்றக் ........ .... .... *
கொற்ற[illegible]ன்னவர்விழுக்குடிக்கோமறுகுரைப்பாம் ...... .. *

(இ-ள்) ஒருவண்டில் பூண்ட தேரையுடைய சூரியன் உலகத்தைமூடுகின்ற இருளைநீக்கு முறைமைபோல் (கொடியவரிடத்துச்)சலஞ்சாதிக்குந் தன்மையையுடையஆக்கினைச்சக்கரத்தினுல் பாவமாகிய இருளைத்தின்றுசெங்கோல்செலுத்திப்பலத்தினையும் பெருமையினையுமுடைய தங்கள்புசத்தின் வன்மையினுல்மாறுபாடுகொண்டவர்களாகிய பகைவரைப் போர்செய்துகொல்லும்படியான கோபத்தையும் வெற்றியையுமுடைய மேன்மைபொருந்திய க்ஷத்திரியகுலத்தாரிருக்கும் இராசவீதியின் சிறப்பினைச் சொல்லுகிறேம்.—(எ-று) இருளைத்தின்று என்பது இருளைப்போக்கி யெனப் பொருள்பட நின்றது பாயிருள்பருகிப் பகல்கான்றெழுதருபருதியென்பதனுனுமுணர்க. (௬௭)

தரங்கவேலைகட்டம்மையேதாளுறப்பிணித்துத் ........ ....*
துரங்கமாவெனத்தொகுத்தமர்துரைபலவருவி...... .... ....*
யிரங்குமோரறிவுயிர்வரையாவையும்பெயர்த்து... ...... ..*
மரங்கொல்யானைபோற்பிணித்தகூட்டம்பலமன்றே ... ..*

(இ-ள்) அலைகளையுடைய எழுசமுத்திரங்களையே கயிற்றினுல் பொருந்தக்கட்டிக்குதிரையென்று சொல்லும்படி கூட்டங்

கூட்டமாகச்சேர்த்திருக்கும்படியான இலாயங்கள் பலவாயிருக்கின்றன-அருவிகள் ஒலிக்கா நின்றதாரதிவுயிராகியமலைகளையெல்லாம் பெயர்த்துக்கட்டுத்தறியைமுறிக்காநின்றயானைபோல் கட்டியிருக்கும்படியானகூடங்கள் பலவாயிருக்கின்றன எ-று) குதிரை தாவுதலைப்பற்றி அலையுவமானமும் பிகுதியைப்பற்றிக்கடல் உவமானமுமாயின-பலநிறமுள்ள குதிரைகள் தொகுக்கப்பட்டிருக்கின்றன என்பதுதோன்ற வேலைகள்எனப் பன்மையாகக் கூறினுரெனினுமமையும் தம்மை (இடைச்சொல்) துரங்கம்-மா-என்பதிரண்டுசொல்லாயினும் குதிரையென்னு மொருபொருளைக்குறித்து நின்றது- யானைஉருவத்திற் பெரிதும் பலமுள்ளதுமாயிருப்பதைப்பற்றி மலையுவமானமாகச் சொல்லப்பட்டது- நால்வகைச்சேனையில் குதிரையும், யானையும், சிறந்ததாதலின் அவ்விரண்டையுமுதற்கட்கூறினுர் - ஊருங்கவி மாவுரனுடைமைமுன்னிநிதேனவும்-யானையுடையபடை காண்டல் முன்னினிதெனவும் கூறினுர்-பிறரும். (௭௧)

மழுக்கள்வச்சிரங்கார்முகம்வாள்முக்குடுமிக் . . . . . . . . . . *
கழுக்கள்சக்கரமுடம்பிடிகப்பணநாஞ்சி . . . . . . . . . *
லெழுக்கணுந்தகம்பலகைதண்டிவைமுதற்படையின் . . . *
குழுக்களோடிகல்விந்தைவாழ்கூடமும்பலவால் . . . . . . . . *

(இ-ள்) மழுவாயுதங்கள்- வச்சிராயுதங்கள்- வில்லுகள்- பாணங்கள் - சூலாயுதங்கள் - சக்கராயுதங்கள் - வேல்கள் - கப்பணங்கள்- கலப்பைகள் -எழுத்தடிகள்- வாளாயுதங்கள்- கேடகங்கள்- தண்டாயுதங்கள் என்னும் இவைகள்முதலாகிய ஆயுதக்கூட்டங்களுடன் செயலட்சுமி வாசஞ்செய்யும்படியானபல ஆயுதசாலைகளுமிருக்கின்றன.(எ-று) (௭௨)

துளையகல்லைமாலெனக்கொண்டுசுழற்றியுஞ்செந்து . . . . . *
ரளையும்யானைபோற்பாய்ந்துமல்லாற்றியுமாற்றல் . . . . . . *
விளைபவாளொடுகேடகம்வீசியும்வென்றி . . . . . . . . . . . *
யிளையராடமர்பயில்வனவெண்ணிலாக்கூடம் . . . . . . . . . . . *

(இ-ள்) துளையையுடைய கல்லைக்கையிலேந்திக்கொண்டு திருமால் சக்கராயுதத்தைச் சுழற்றுவதுபோல் சுழற்றியும் செந்தூளைப் பூசிக்கொள்ளாநின்ற யானைபோல் முன்னும் பின்னுமாகப் பாய்ந்துமற் போர்புரிந்தும் பலமானது மேலு மேலும் விர்த்தியாகும்பொருட்டு வாள்களும் கேடகங்களும்பற்றிக்கொண்டு ஒருவர் மேலொருவர் வீசியும் ஐயமடையத்தக்க வாலிபர்கள் போர்செய்தலைப்பயிற்சிசெய்யப்படுவன வாகிய

அளவில்லாத ஆயுதசாலைக ளிருக்கின்றன.—(எ-று) ஆடம்பர மென்பதனை ஒருமொழியாகக்கொள்க. (எங)

(வேறு.)

தேசவிர் நீலமாடஞ்செம்மணிச்செவ் விமாடங்.........*
காசறுகனகமாடஞ்சந்திரகாந்தமாட..............*
மாசறவிளங்குமிம்மைமாட நீண் மாலைகூடந் ..........*
பாசிழைமடந்தைபூண்டபன்மணிக்கோவையன்ன......*

(இ-ள்) பிரகாசம் விளங்குகின்ற நீலரத்தினங்களால் கட்டப்பட்ட வீடுகளும் மாணிக்கத்தினல் கட்டப்பட்டசிகரங்களையுடையவீடுகளும் குற்றமற்றசுவர்ணத்தினல் கட்டப்பட்டவீடுகளும் சந்திரகாந்தத்தினல்கட்டப்பட்டவீடுகளும்குற்றமறப்பிரகாசியாநின்றன - இத்தன்மையையுள்ள நீடிய அவ்வீடுகளினொழுங்குகள் கூடலென்னும் பசும்பொன்னுற் செய்யப்பட்ட ஆபர்ணங்களணிந்த ஸ்திரீயானவள் பூண்டபலரத்தினங்களால்கோக்கப்பட்டமாலையை யொத்தன.—(எ-று)பாசிழையென்றதனுல் பொன் வருவித்துரைக்கப்பட்டது. (எச)

விளையகல்கதுப்பினல்லார் வீங்கிளங்கொங்கைபோழ்ந்த..*
வளையகன்மார்பமன்றிவடுப்படார்தமக்கன்பில்லா.....*
ருளையகன்மானவாற்றுலொழுகுவார்பகைகையொள்வாட் ..*
களையகல்விஞ்சைவீரர்கண்ம்பயில்காட்சித்தேங்கும்......*

(இ-ள்) அவ்வரசர்வீதியெல்லாம் வாசனைமிகுந்த அளகபாரத்தையுடைய ஸ்திரீகளின் பருத்த இளமையாகிய ஸ்தனங்களால் போழப்பட்ட மலைபோன்ற பரந்தமார்பத்தி லன்றிவடுப்படாதவர்களும் தம்முயிரிடத்தில் அன்பில்லாதவர்களும் சொல்லுக்கடங்காதமானமாகிய மார்க்கத்தில் நடப்பவர்களுமாய்க்கேடகமும் ஒளிபொருந்தியவாளும் உடையுகளையகன்ற வில்வித்தையைக்கற்காநின்றவர்களுமாகியசுத்தவீரர்களின் கூட்டம்சஞ்சரித்துக்கொண்டிருக்குங் காட்சியினையுடையது. (எ-று) (எரு)

மின்னைவாளென்னவீசிவீங்குகார்தம்மிற்போர்மூண் ....*
டென்னவான்மருப்புநீட்டியெதிரொதிர்புதையக்குத்தி....*
யன்னவாயென்னவாய்விட்டதுவெஞ்செந்நீர்சோரப் ....*
பொன்னவாமகன்றமார்பர்பொருகளிறூட்டுவார்கள் .....*

(இ-ள்) மிகுந்தமேகங்கள் மின்னலைவாளாக வீசித் தமக்கு

ள்போர்செய்யத்தொடங்கினதுபோல் வெண்மையாகியதந்த
ங்களைநீட்டிஎதிரொதிர்புதையும்படிகுத்தி அந்தமேகம்முழங்
குவதுபோல் முழங்கிஅதுமழைபொழிதல்போல் உதிரம்பெ
ருகத்திருமகள்விரும்பத்தக்க பரந்தமார்பையுடையவீரர்கள்
போர்செய்யும்இயல்பினையுடைய யானைகளைப்பொருவிப்பா
ர்கள்.—(எ-று) (எசு)

தூண்டுவாருளமுந்தங்கள்பின்னிடத்துவக்குண்டூர்த்துத் ...*
தாண்டுமாறொற்றையாழித்தேரினுந்தள்ளித்துள்ளப் ....*
பாண்டில்வாய்ப்பசும்பொன்றேயப்பார்மகண் முதுகுகீண்டு
சேண்டிசைபோய்மடங்கச்செல்வத்தேர்நடத்துவார்கள் ...*

(இ-ள்) செலுத்துகின்ற பாகர்களுடைய மனமும் தங்களு
க்குப்பின்னிடும்படி கட்டுப்பட்டு இழுத்துக்கொண்டு தாவுகி
ன்றகுதிரைகள் ஒருவண்டில்பூண்ட சூரியனுடைய தேரினும்
விரைவாகச்சென்றுதுள்ளவும் பண்டியினிடத் திராநின்றபசு
ம்பொன்தேயவும் பூமிதேவியினுடைய முதுகினைக்கிழித்துக்
கொண்டு ஆகாயத்திலுந் திக்குகளிலும் போய்த் திரும்பும்ப
டிரத்தினங்களால் அலங்காரஞ்செய்திராநின்ற தேரினைச்செ
லுத்துகிறார்கள்.—(எ-று) (எஎ)

மைந்தர்தந்நெருக்கிற்சிந்துகலவையும்மகளிர்கொங்கைச் ...*
சந்தமுங்கூந்தல்சோர்ந்ததாமமுஞ்சிவிறிவீசு ..........*
சிந்துரப்பொடியுநாறத்தேனொடுமெழுந்துசெந்து .....*
ரந்தரவயிறுதூர்ப்பவடுபரிநடத்துவார்கள் .............*

(இ-ள்) ஆடவர்கள் போக்கிடம்பெறாமல் ஒருவரோடொ
ருவர் நெருங்கும் நெருக்கத்தினால் சிந்துகின்ற கலவையும் ஸ்
திரீகளுடைய ஸ்தனங்களிலிருந்து கழித்துவிடுகின்ற சந்தன
மும் அவர்களுடைய அளகத்திலிருந்து சோர்ந்த பூமாலையும்
சிவிறியினால் வீசப்படுகின்ற சிந்துரப்பொடியும் தேனொடுக
மழும்படிசெந்தூளெழுந்து ஆகாயவெளியைத் தூர்க்கப்போ
ரில்எதிர்த்தவர்களைச் செருக்கத்தக்க குதிரைகளை நடத்துகின்
றார்கள்.—(எ-று) அந்தரவயிறுதூர்ப்ப என்பதற்கு அந்தர
வாசிகளாகிய தேவர்களுடைய வயிறுநிறையத் தூர்க்கும்படி
என்றும் ஒருவாறுபொருள் கூறலாம்- சிவிறி என்பது ஒருவ
கைத் துருத்தி. (எஅ)

தம்முயிர்க்கிரங்காராகித்தருக்கொடுமானமீர்ப்பத், தெம்மு
னை யெதிர்ந்தாராற்றுஞ் செருவெனக் குருதிச்செங்கேழ்க்,

கொய்ம்மலர்க் குடுமிச்சேவல்கோழிளந்தகர் போர்முட்டி,
வெம்முனைநோக்கிநிற்பார்வேறவற்றூறுநோக்கார் .... *

(இ-ள்) தங்களுயிருக்கு இரங்காதவர்களாய் வலிச்செருக்கொடுமானமும் இழப்பதினால்பகைவர்போரில் எதிர்த்தசுத்தவீரர்கள் செய்யுர்யுத்தம்போல் உதிரமென்னச் செம்மைநிறமுள்ளதாய் நிவிற்கொய்தமலரையொத்தஉச்சிக்கொண்டையிணையுடையசேவல்களையும் கொழுமையும் இளமையுமுள்ளஆட்டுக்கடாக்களையும் போர்செய்யவிட்டு அவைகளுக்குக் காயங்கள்படுமேயென்றும்இறந்துபோகுமேயென்றும்எண்ணாதவர்களாய் அவைகளுக்குண்டானவெவ்வியபகையைப் பார்த்துக்கொண்டிருக்கின்றார்கள்.(எ-று)யுத்தம்நேரிட்டகாலத்தில்தம்முயிர்ப்பொருட்டு அஞ்சாதவீரர்களென்பதுதோன்றத்தம்முயிர்க்கிரங்காரென்றார்இதனை(உறினுயிரஞ்சாமறவர்)என்னுந்திருக்குறளானுமுணர்க-பகைவரைக்கடிதிற்கொன்று நிற்றலும்அரசனுக்குத்தாழ்வுவராமற்காத்தலுமாகிய நிலைமையும் உள்ளவர்களென்பதுதோன்றத் தருக்கொடுமான மீர்ப்பவென்றார்,சேவலுடன்சேவலும் ஆட்டுக்கடாவுடன்ஆட்டுக்கடாவும்போர்செய்வதில்எதுவெற்றியடையுமென்றுநோக்குதலேயன்றி,அவைகட்கு ஊறுவருமென்று கருதும் எண்ணமிலார் என்பதுதோன்ற வேறவற்றூறுநோக்கார் என்றும்கூறினார்-அவைகள்செய்யும்போர் வீரர்செய்யும்போரினையொக்குமென்றமையின் அவர்கள்போலத்தம்முயிர்க் கஞ்சாமையும் தம்பகையைக்கொன்றுநிற்றலும் தம்மைவளர்ப்பவர்க்கு இழிவுவராப்பின்னிடாமையு முள்ளனவெனக் கூறல்வேண்டும். (௭௧)

பெண்முத்தமனையபேதைச்சிறுமியர்பெருநீர்வையை .... *
வெண்முத்தமிழைத்தசிற்றில்சிதைபடவெகுண்டுநோக்கிக் *
கண்முத்தஞ்சிதறச்சிந்துங்கதிர்முத்தமாலைதட்பத் .... .. *
தெண்முத்தினகைத்துச்செல்வச்சிறார்கடேருருட்டுவார்கள் *

(இ-ள்) கன்னிப் பெண்களாகிய முத்தினையொத்த பேதைப்பருவத்தினையுடைய சிறுமியர்கள் மிகுந்தநீரையுடைய வையைநதியிலுண்டான வெண்முத்தினால் செய்யப்பட்ட சிறுவீடுகள் அழிதலால் கோபித்துப் பார்த்துக் கண்களிலிருந்து முத்துப்போல நீர்த்துளிகள்சிந்த, உண்டானதுயரத்தினால் அழுத்தெறிந்து விடுகின்ற ஒளியினையுடைய முத்துமாலைகள் த

டுக்கக்கண்டு தெளிவுள்ள முத்துகள்போலப் பற்கள்விளங்க ந
கைத்துக்கொண்டு செல்வத்தினை யுடைய சிறுவர்கள்தேரை ந
டத்துவார்கள்.—(எ-று) சிறுமிய ரிழைத்த சிறுவீட்டைச் சி
றுவருருந்தேர்அழிக்கின்ற தென்றும் அதனால் அச்சிறுமியர்
கோபங்கொண் டாம்அணிந்திருக்கும் முத்துமாலைகளை அறு
த்தெறிகின்றார்களென்றும்-அம்மாலைகள் சிறுதேர்களைத்தடுக்
கின்றனவென்றும் அதைக்கண்ட சிறுவர்கள் நகைக்கின்றார்க
ளென்றும்பொருளுரைத்துக்கொள்க. முத்தம்- சமுத்திரத்தி
ல் வலம்புரிச்சங்க முதலாகிய சங்கினிடமாக உற்பத்தியாகின்ற
து,அதுபோல இச்சிறுமியரும் பெருங்குலத்திற் பிறந்தவர்க
ளென்றும் சங்கமீன்றமுத்தம்பிறருக்குப்பயன் படுவதுபோ
ல ஈன்றவர்கட்குப்பயன்படுவதின்றித் தீமுன்னர் வேட்டோர்
க்குப்பயன்படுந் தன்மையை யுடையவர்களென்றும்தோன்ற
முத்தமனையசிறுமியர் என்றார்-மேன்மையைப்பற்றி வலம்பு
ரிச்சங்கமீன்றதென்க - இதனை முறையேபௌவம்-பணிமணி
யென்னுங் கோவையார் (௩௱௪) செய்யுளுரையிலும்- (சி) ௬
இலம்பகம் (௭௪) செய்யுளுரையிலுங்காண்க - பேதைப்பரு
வம் - எழுவயதளவுள்ளது, மாதர்களுக்கு இப்பருவத்துடன்
பெதும்பை - மங்கை- மடந்தை- அரிவை - தெரிவை- பேரி
ளம்பெண்-என எழுபருவமாம் அவைகளிளுண்டினை வந்துழி
வந்துழி யுரைக்குதும்- சிறுமியர்க்குச் சிற்றில் முதலிய செய்
கையுரித்தென்றும் சிறுவர்க்குச் சிறுதேருருட்டுதல் முதலிய
செய்கை உரித்தென்றுங்கொள்க, இதனைக்- குழவிமருங்கினு
ங் கிழவதாகும் என்னும் (தொல்காப்பியப்புறத்திணையியற்சூ
த்திர உரையிற்காண்க.) தம்மின்வலியார் மேல்சினமுண்டா
யின் தம்மையே ஒறுத்துக்கொள்வ தியல்பாதலின்,முத்துமா
லையைச் சிந்துவனெனக்கொள்க-நாயனாரும் செல்லாவிடத்துச்
சினந்தீதென்றார் - சிற்றிலை அழித்த தம்மைவிட்டு அச்சிறுமிய
ர் தாமணிந்திருக்கு முத்துமாலையைச் சிந்தும் பேதைமையை
நோக்கிச் சிறுவர்க்கு நகைதோன்றலின் - நலகநான்கினுள்
அந்நகை பிறர்பேதைமையாற்றோன்றின நகையெனக்கொள்
க-இதனை எள்ளலிளமைபேதைமை மடனென்றுள்ளப்பட்ட ந
கைநான்கென்ப என்னுந் தொல்காப்பிய மெய்ப்பாட்டியற்
சூத்திரத்தானுணர்க - வெண்முத்த மென்றமையால் வையை
யினூருஞ் சங்கமீன்ற முத்தமெனக் கொள்க- இதற்கு இந்நூ
லாசிரியர் மாணிக்கம்விற்றபடலத்தில் முத்துக்குதிறஞ் சொல்

னுமிடத்துக் கோடுகாலமுத்தம் வெள்ளைநிறத்ததென் றுசொல்லியிருப்பதே சான்றாம்- முத்தம்போன்ற கண்ணீர்த்துளிகளைக் கண்முத்தமென்றது, உவம ஆகுபெயர். (அ௰)

கொடிமுகிறுழாவுமிஞ்சிக்கோநகர்வடகீழ்ஞாங்கர் ......*
முடிமிசைவேப்புநாறமுருகவிழாரும்போந்து ......*
மடிமிசைநாறத்தென்னர்வழிவழியரசுசெய்யு ........*
மிடிமுரசுறங்காவாயிலெழுநிலைமாடக்கோயில் ........*

(இ-ள்) துவசங்கள் மேககூட்டத்தைத் தடவும்படியான மதில்சூழ்ந்த அரசநகரத்தின் வடகிழக்கான ஈசான திசையினிடத்தில் கிரீடத்தின்மேல் வேப்பம்பூமாலை கமழவும் வாசனைவிரிகின்ற ஆத்திமாலையும், பனம்பூமாலையும், பாதத்தின்மேற்கமழவும் பாண்டியர்கள் பரம்பரையாக அரசு செய்யும்படியான இடிபோல் ஒலிக்காநின்ற பேரிகையோசையானது அந்சாதவாயிலாகியஎழுநிலைக்கோபுரத்தையுடைய கோவிலிருக்கின்றது.—(எ-று) கொடிமுகிறுழாவும் என்றவிசேஷணம் இஞ்சியினது உயர்வைச் சிறப்பித்து நின்றது - குலசேகரபாண்டியன் கடம்பவனத்தை யெறிந்து நகரமாகச் செய்தபோது தானிருப்பதற்கு ஈசானதிசையில் கோயில் கட்டுவித்ததுமுதல் அதுவே பாண்டியர்களுக்கெல்லாம் இடமாயிருத்தலின் வழிவழி யரசுசெய்யுங் கோயிலென்றார்- ஆத்திப்பூமாலையும் பனம்பூ மாலையும் அடிமிசை நாறவென்றது - சோழராசன்பணிதலால் அவ்வரசன்முடியிற் சூடியிருக்கும் ஆத்திமாலையுஞ் சேரராசன்பணியும்போது அவ்வரசன்முடியில் அணிந்திருக்கும் பனம்பூமாலையும் பாண்டியராசனுடைய பாதங்களில் படுமென்றுணர்ந்துகொள்க - முரசுறங்கா என்னும் எதிர்மறை விழித்துக்கொண் டிருக்குமென்னும் பொருள்பட நின்று- இடைவிடாது ஒலித்துக்கொண் டிருக்குமென்பதாயிற்று- உறங்குதல் முதலான செய்கைகள் உயிரில்லாத அஃறிணைப் பொருளுக்கின்றேயெனின் - (கேட்குநபோலவுங் கிளக்குநபோலவுமியங்குநபோலவு மியற்றுநபோலவு மஃறிணைமருங்கினு மறையப்படுமே) என்னுஞ்சூத்திரவிதியா லுரைக்கப்படுமெனக்கொள்க. இல்வாய் என்று சொல்லத்தக்கது வாயில் என மருவிநின்றது- அதனைவிரித்துரைக்குமிடத்து வீட்டுக்குள்போக வர வழியாயிருக்கு மிட்மெனச் சொல்லப்படும்- அவ்வாறே நகரத்துக்குள் போகவரவழியா யிருக்குமிடத்து

க்கும் வாயிலென்ன வழங்குகின்றது- அங்ஙனம்வழங்குமாயினு ம், வீட்டினைச் சேர்ந்ததற்கு வீட்டுவாயிலென்றும் நகரத் தைச்சேர்ந்ததற்குக் கோபுரவாயிலென்றும் வழங்குமென்று ணர்க- கோபுரம் என்பதற்கு, ராசநகரம் எனப்பொருள்படு ம்- நகரமென்பது, அரசனுக்குரிய ராசதானியென்னும் பெ யரையுடைய தாதலின்- புறநகரிடத்தும் இடைநகரிடத்தும் இருக்கும் கோபுரங்களுக்கும் இதுவேபொருளாகக் கொள்ள ப்படும்- கோவில் என வகரவுடம்படு மெய்பெற்று வரத்தக் கது கோயில் என மருவிற்று- அதன்பொருள் அரசன்வீடு எ ன்றும் பெருமைபொருந்தியவீடு என்றும் சொல்லப்படுமெ ன்க- கடவுளானவர் அரசன்முதலிய யாவர்க்கும் இறையாத லின்கடவுளாலயத்துக்குங்கோயிலென வழங்குகின்றது. (அக)

(மறையர்வீதி.)

ஆத்திகருண்டென்றோதுமறமுதற்பொருள்களுன்கு......*
நாத்திகம்பேசும்வஞ்சர்நாவரிகருவியாக.... ... .....*
வாத்தனுனுரைத்தவேதவரவுகண்டுள்ளநதேறித்..........*
தீர்த்தராய்முத்திவேட்குஞ்செல்வர்தம்மிருக்கைசொல்வாம்.*

(இ-ள்) ஆத்திகருண்டென்று சொல்லுகின்ற அறமுதலாகி ய உறுதிப்பொருள்கள்நான்கினையும் நாத்திகஞ்சொல்லுகின்ற வஞ்சகருடைய நாக்களை அரியும்படியான ஆயுதம்போலப்பர மசிவனால் சொல்லப்பட்ட வேதங்களின் அளவினைக்கண்டு ம னந்தேறிப் பரிசுத்தர்களாய் முத்தீக்களை ஓம்புகின்ற செல்வ த்தையுடைய பிராமணர்களிருக்கும் வீடுகளின் பெருமையை ச்சொல்லுகின்றோம்.—(எ-று) ஆத்திகராவார் கடவுளொருவ ருண்டென்பவர்கள்- நாத்திகராவார் கடவுளில்லை யென்பவர்க ள்-அறமுதற்பொருள்களாவன அறம்பொருள் இன்பம் வீடு என்பவைகளாம்-வேதமானது கடவுளொருவ ருண்டென்று அனேகமேற்கோள்களை யெடுத்துக்காட்டிவஞ்சகர் நாவெடா வண்ணம் அடக்குவதாதலால் அவ்வேதத்தைநாவரிகருவியெ ன்றார்- முத்தீ;ஆகவனீயமுதலாயினவை - அந்தணர் குலத்துக் குஒழுக்கமே சிறப்புடையதாதலின் முத்தீச்செலவ மொன்றார் மறப்பினு மோத்துக்கொள லாகும் பார்ப்பான் பிறப்பொ ழுக்கங்குன்றக்கெடும் என்னுந்திருக்குறளானுமுணர்க - (நீள னற்பாலது- தி) எனக்குறுகிநின்றது. (அஉ)

மூஞ்சிநாண்மருங்கின்மின்னப்பொன்செய்தமுளரிவேய்ந்த*
குஞ்சிநான்றசையத்தானைச்செருக்குமுன்கொய்துதூங்கப்.*

பஞ்சினாண்கலைத்தோன்மார்பும்பலாசக்கோல்கையுந்தாங்கி *
யெஞ்சினான்மறைநூல்கற்போர்கிடைகளேயில்லமெல்லாம் *

(இ-ள்) முஞ்சிப்புல்லால் பின்னப்பட்ட அரைநாண் இடையினிடத்தில் மின்னவும் - தாமரைமலர்போல் பொன்னாற்செய்யப்பட்ட உச்சிப்பூவென்னும் அணியணிந்த குடுமியானது தொங்கி அசையவும் வஸ்திரச்செருக்கானது முன்புறத்தில்கொய்சகமாய்த்தொங்கவும் மார்பினிடத்தில் மான்தோல்கட்டப்பட்ட பஞ்சினாலாகிய பூணநூலையும் கையினிடத்தில் பலாசக்கோலையுந் தாங்கிக்கொண்டு குறைவில்லாத வேதசாஸ்திரங்களைக் கற்கின்றசிறுவர்களிருக்கும் வேதப்பள்ளிக்கூடங்களே வீடுகளிலெல்லாம்இருக்கும். (எ-று) முஞ்சி ஒருசாதிநாணற்புல்; (தானைமுன் தூங்கவென்றதனால்) கோவண வுடையனென்க.

தீவினையந்தணாளர்சிறார்பயில்தெய்வவேத ................ *
நாவுருவேற்றக்கேட்டுக்கிளிகளோநவிலும்வேற்றுப் ...... *
பூவையும்பயின்றபுத்தேளுலகுறைபுதுமந்தாரக் .... .. *
காவுறைகிளிகட்கெல்லாங்கசடறப்பயிற்றுமன்றே.... .. *

(இ-ள்) முத்தீவளர்க்கும் வினையாகிய வேள்விசெய்தல்முதலாகிய அறுதொழிலையுடைய பிராமணர்களுடைய சிறுவர்கள் பயிற்சிசெய்கின்ற தெய்வத்தன்மைபொருந்திய வேதத்தை நாவினால் உருவேற்றலைக்கேட்டுக் கிளிகள்மாத்திரமோ சொல்லுகின்றன - அவையுமன்றிவேறாயிருக்கின்ற நாகணவாய்ப்பக்ஷிகளும்கற்றுக்கொண்டுதேவருலகத்திற் பொருந்திய புதியமலர்களையுடைய மந்தாரச்சோலையில் வாசஞ்செய்கின்ற கிளிகளுக்கெல்லாம் ஐயமறக் கற்பிக்காநின்றன.—(எ-று) புத்தேளுலகுறை புதுமந்தாரமென - ஐந்தருவினுளொன்றனைச் சொன்னமையான் - சந்தானம், அரிச்சந்தனம், பாரிசாதம், கற்பகம் என்னும் மற்றநான்குவிருக்ஷங்களையுங் கூறிக்கொள்க. (௮௬)

வேதமுமங்கமாறுமிருதியும்புராணநூலின் ........ .. *
பேதமுந்தெரிந்தோராலும்பிறமதங்களையவல்ல .... .... *
வாதமுமதமேற்கொண்டுமறுத்தலுநிறுத்தவல்ல ........ *
போதமுமுடையோராலும்பொலிந்தனகழகமெல்லாம் ... *

(இ-ள்) நாலுவேதங்களையும், ஆறுவேதாங்கங்களையும், பதினெட்டுஸ்மிருதிகளையும், பதினெண்புராண சாஸ்திர பேதங்களையும், (ஆராய்ந்து) தெளிந்திருப்பவர்களாலும் பிறர் கொ

ண்டிருக்குங் கோட்பாட்டை நீக்க வல்லவாதமும் பிறர்கோட்பாட்டுக்கு உடன்பட்டுப் பின்பு மறுத்தலும் தமது கோட்பாட்டை நிச்சயிக்கத்தக்க போதமும் உள்ளவர்களாலும் கழகங்கள் விளக்கமுற்றிருக்கின்றன —(எ-று) ஈண்டு நாலுவேதமுதலானவைகள் விரித்துரைப்பிற் பெருகுமென்பது பற்றி விடப்பட்டன. (௮௫)

உறிபொதிகரகக்கையரொளிவிடுசெங்கற்றோய்த்த...... *
வறுவையருயிர்க்கூறஞ்சுநடையினரவிச்சைமாள........ *
வெறிசுடர்மழுவாளென்னக்கோவணமார்த்தகோலர்...... *
மறைமுடிவன்றித்தேருமாதவர்மடங்களெங்கும்........ *

(இ-ள்) உறிபொதிந்த கரகத்தைக்கையில் வைத்துக்கொண்டிருப்பவர்களும் பிரகாசம்பொருந்திய காவிவஸ்திரத்தைத் தரித்துக்கொண்டிருப்பவர்களும் (பூமியிலூரும்) உயிர்களுக்கு இடையூறு வருமென்று பயந்து மெத்தென்று நடக்கும் நடையையுடையவர்களும் அஞ்ஞானங்கெடும்படி வெட்டுகின்ற கோடாலிபோலக் கோவணங்கட்டியிருக்கும் தண்டத்தையுடையவர்களும் உபநிடதங்களை ஆராய்ந்து தெளிவதேயன்றி மற்றொன்றையும் ஆராய்ச்சி செய்யாதவர்களுமாகிய முனிவர்கள் வாசஞ்செய்யு மடங்கள் (அவ்வீதிகளெங்கு மிருக்கின்றன).—(எ-று) (௮௬)

அட்டில்வாய்ப்புகையுமாடத்தகில்படுபுகையும்வேள்வி..... *
விட்டெழுபுகையுமொன்றிவிரிசுடர்விழுங்கக்கங்குல்....... *
பட்டதுபலருந்தித்தம்பயில்தொழிலிழக்கநங்கை....... *
மட்டவிழ்கடுக்கையான்கண்புதைத்தநாண்மானுமன்றே.. *

(இ-ள்) சமையல்வீட்டில் உண்டாகும்புகையும் உப்பரிகைகளில் அகிற்கட்டைகளால் உண்டாகும் புகையும் யாககுண்டத்தினின்றும் எழுகின்ற புகையும் ஒன்றாகக்கலந்து பரந்தவெயிலை மறைப்பதினால் இருள் உண்டாக - அதனால் அவ்விடத்திருக்கும் யாவரும் தாந்தாம் செய்யும் தொழிலை விட்டிருத்தலால் தினமெல்லாம்பார்வதிதேவியார் தேனொழுகுகின்ற கொன்றைப் பூமாலையை அணிந்த பரமசிவனுடைய திருக்கண்களை மூடப்பட்ட தினத்தை யொக்கும்.—(எ-று) அகிற்புகை - மாதர்கூந்த லீரம்புலர்த்தல் முதலிய வற்றின் பொருட்டெழுவதெனக் கொள்க. (௮௭)

(சைவர்வீதி-வேறு.)

தெய்வநீறுமைந்தெழுத்துமேசிதைக்கலனாக ..........*
வெவ்வமாசிருவினையுடம்பெடுத்துழல்பிறவிப் .........*
பௌவமேழைபுங்கடத்தரன்பதமலர்க்கரைசேர் .........*
சைவமாதவருறைமடத்தனிமறுகுரைப்பாம் .........*

(இ-ள்) தெய்வத்தன்மையையுடைய விபூதியும் பஞ்சாக்ஷரமூமே பாய்கட்டிய கப்பலாகத் துன்பத்தைத்தருகின்ற குற்றமாகிய இருவினையாலுண்டாகின்ற உடலெடுத்து உழல்கின்ற பிறவியாகிய ஏழுசமுத்திரத்தையும்நீந்திப் பரமசிவனதுபாதமலராகிய கரையில்சேரும்படியான சைவமாதவர்கள்வாசஞ்செய்யு மடங்கள் நிறைந்த ஒப்பற்றவீதியின் சிறப்பினைச் சொல்லுகின்றோம்.—(எ-று) இருவினையாவது - நல்வினை - தீவினை-பிறவிமேழாவது, தேவர்-மானிடர்- விலங்குகள்-புள்- நீர்வாழ்வன-ஊர்வன-தாபரம்- என்பவைகளாம்-மிருதிதோன்றப் (பிறவிப்பௌவமென்றார்) விபூதியினையும் பஞ்சாக்ஷரத்தையுங்கூறினமையின் உருத்திராக்ஷமும் அணிவதொன்கொள்க- இவ்வாறணிவது சைவசமய முறைமையாம்-விபூதியணிவதுமன்றி உருத்திராக்ஷந்தரிப்பதற்குக் காரணமென்னவெனின் வியர்வையினாலும் நீரில் ஸ்நாநஞ் செய்வதினாலும் மழையினாலும் ஒருவரோடொருவர் நெருங்கும் நெருக்கத்தினாலும் விபூதிகுலைந்து போவதுண்டு-உருத்திராக்ஷந்தரித்திருந்தால் விபூதிகுலைந்தாலும் குற்றமில்லையாம்.—(எ-று) (அஅ)

(இதற்குச்செய்யுள்உபதேசகாண்டம் உருத்திராக்ஷமான்மியம்.)

மெய்யரும்பியவேர்வையின்விரிபுனலாட்டின் ..........*
மையரும்பியமழையினின்மக்கண்மெய்ந்நெருக்கிற் ........*
றெய்வவெண்டிருநீற்றணிசிதைதருஞ்சிதைந்தால் ........*
வெய்யபூதவெங்கழுதராலரக்கரான்மெலிவார் ..........*
அலங்குமாமணியுருத்திரவக்கமொன்றணியின் ..........*
விலங்கெயிற்றுவேம்பூதமேமுதலியமேவா ............*
பொலங்கொண்மாமணிபுனைதரிற்போக்குறுதிதனுல் ........*
இலங்குமாமணிநீற்றொடும்புனைவதற்கிசையும் ..........*
எங்குமீசனைப்பூசைசெய்திகபரமடைவா ..............*
ரொங்குமன்பரைப்பூசைசெய்தெழுபிறப்பறுப்பா ..........*
ரொங்குமாகமஞ்செவிமடுத்தெதிர்வினைதடுப்பா .........*
ரொங்குநாயகன்வடிவுணர்ந்திருண்மலங்களைவார் ........*

(இ-ள்) சிவபூசைசெய்து இம்மைப்பயனையு மறுமைப்பயனையும் அடைகின்றவர்கள் எவ்விடத்துமிருக்கிறார்கள் சிவனடியார்களைப்பூசித்து எழுபிறப்பினையும்நீக்குகின்றவர்கள் எவ்விடத்து மிருக்கின்றார்கள் ஆகமவாக்கி யங்களைக்காதினால் கேட்டு ஆகாமியமாகிய மேல்வரும் வினையைத் தடுப்பவர்கள் எங்குமிருக்கிறார்கள் பரமசிவனது திருவுருவத்தைச் சிந்தித்துணர்ந்து ஆணவமல இருளை நீக்குகின்றவர்களெங்குமிருக்கிறார்கள். (எ-று) (௮௯)

அழிவிலா னுரையாகமமிலக்கமாய்ந்தவற்றுள் . . . . . . . . . *
விழுமிதாகிய விதியிலும்விலக்கிலு மடியைத் . . . . . . . . . . . . *
தழுவுதொண்டர்கண் மைந்தர்கள்சாதகர்பாசங் . . . . . . . . . *
கழுவிவீடருள் போதகக்காட்சியர்பலரால் . . . . . . . . . . . . *

(இ-ள்) நித்தியனாகிய பரமசிவனருளிச்செய்த ஆகமங்களிலே லக்ஷஞ்சுலோகமாராய்ந்து அவைகளுக்குள் இன்னவை செய்யத்தக்க மேன்மைதங்கியவை யென்றுசொல்லும்விதியிலும் இன்னவை செய்யத்தக்கதல்லவென்று நீக்கியிருக்கும்விலக்கிலும் தவறாமல் தங்களுடைய பாதங்களைப்பணிந்து தொண்டுசெய்கின்றதொண்டர்களுடையவும், மைந்தர்களுடையவும்சாதகருடையவுமான பாசங்களை நீக்கி மோக்ஷந்தரத்தக்கவர்களாய் ஆசாரியார்கோலங் கொண்டிருப்பவர்களும் பலரிருக்கிறார்கள்.—(எ-று) போதகக்காட்சிய ரென்றதனால் சிவபூசை செய்வதும் அன்பர் பூசைசெய்வதும் ஆகமவிசாரணை செய்வதும் சிவயோகநிலையி லிருப்பதுமன்றிப் பக்குவர்களுக்குஉபதேசிக்கத்தக்கஆசாரியஅபிஷேகங்கொண்டவர்களாய் ஆகமங்களிலேலக்ஷஞ்சுலோகம்வாசித்து ஆறுகட்டிகொத்துத்தாவடமுதலான சிவசின்னமுமுடையவர்களெனக்கொள்க- இருபத்தெட்டாகமங்களுக்குள் எந்தஆகமத்திலாவது லக்ஷஞ்சுலோகம்வாசித்தவன்உத்தமதேசிகனென்றும்ஐம்பதினாயிரம்சுலோகம்வாசித்தவன் மத்திமதேசிகனென்றும் இருபத்தையாயிரம்சுலோகம்வாசித்தவன் அதமதேசிகனென்றும் சொல்லப்படுகிற முறைமையினால் இச்செய்யுளில் சொல்லப்பட்டிருக்கிறதேசிகர் உத்தமதேசிகரென் றுணர்க. (௯௰)

இதற்குச்செய்யுள்-சிவபுண்ணியத்தெளிவு.

ஆகமத்திலிருபத்தையாயிரநற்சுலோக மறைந்ததேசிகன் கனி
ட்டனைம்பதினாயிரந்தரன் . . . . . . . . . . . . . . . . . . . . *

மோகமற வாராய்ந்த தேசிகன் மத்திமனே முறைமையினு
லோரிலக்கமுயன்றவனுத்தமனே .. ............. .....*
ஏகனைமலேசனருள் காமிகமுன்னாக வியம்பியிடுமிருபத்தெட்
டாகமத்துமிஃதே....... .... ...... .... ..... ..*
பாகமிகுசாராசாரம்மெனவோரியலைப் படித்துணர்ந்தோனி
யல்களெல்லாம்படித்துணர்பண்டிதனே .. .... ......*

மறைகளாகமம்பொதுச்சிறப்பெனச்சிவன்வகுத்த... .... *
முறையுமோதியவ்விதிவிலக்குணர்களுமுடிவி ...... ....*
லறையும்வீடுமொன்றிரண்டெனும்பிணக்கறவமைந்த .. ..*
குறைவிலாச்சிவயோகியர்குழாங்களும்பலவால்.. ..... ..*

(இ-ள்)வேதங்கள்பொதுவாகவும் ஆகமங்கள்சிறப்பாகவும் பரமசிவன்வகுத்த முறையையும் அவைகளில் இன்னதுசெய்ய லாமென்று விதிக்கப்படுகிற விதியாகிய வாக்கியங்களையும் இன்னது செய்யலாகாதென்று விலக்கப்படுகிற விலக்காகியவாக்கியங்களையும் ஓதியுணர்ந்து வேதங்களின்முடிவில் மோக்ஷம் ஒன்றென்றுசொல்லுவதும் ஆகமங்களின்முடிவில் இரண்டென்றுசொல்லுவது மானமாறுபாடு நீங்கத்திருவருளால்உணர்ந்தமைதிபெற்ற சிவயோகிகளும் பலரிருக்கிறார்கள்.—(எ-று) முறையையோதி யுணர்தலாவது-வேதங்களிருக்க ஆகமங்களை யோதியதின்னகாரணம்பற்றி யென்றும்-இன்றோர்க்கோதியதென்றும்அறிதல்- சைவம்வைஷ்ணவமுதலாகியசமயங்களுக்குப் பொதுவாயிருத்தலினால்வேதங்களைப்பொதுவென்றும்-சைவ சமயத்துக்குச் சிறந்ததா யிருத்தலினால் ஆகமங்களைச் சிறப்பென்றுங்கூறினர்-மோக்ஷமானது தத்துவங்கள் நீங்கினவிடத்து நின்றசிவனும் திருவருளால் தானறியாதறிகின்ற அனுபவங்களாகிய எதிருங்கழன்ற விடத்துண்டாவதன்றிச் சொல்லுக் கடங்காத தன்மையதாதலின் பிணக்கறவமைந்த என்றார்- ஓதியுணரப்புகின் ஒருவன்தன்னிழலை அளக்கலுற்றாற் போலாமென்றுணர்க- சரியை, கிரியை, யோகம், ஞானம், என்னும் இந்நான்குபாதங்களையும்கிரமமாக அனுஷ்டித்துநிறைவுற்றவர்களென்பது தோன்றக் குறைவிலாச்சிவயோகியென அடைமொழிகொடுத்துக்கூறினர். (கக)

குழலுந்தும்புருநாரதர்பாடலுங்குனித்துச் .... .........*
கழலுங்கொம்பனாராடலுமூவர்வாய்த்துதியும்... ......*

விழவின்செல்வமுஞ்சுருதியுந்திசையெலாம்விழுங்கு......*
முழவுங்கண்டுயிலாததுமுன்னவன்கோயில்.............*

(இ-ள்) (இத்தன்மையுள்ள சைவர் வீதிக்குச் சமீபத்தில்) வேய்ங்குழலும் தும்புருநாரதர் என்னுமுனிவர்கள் பாடுகின்ற இசைப்பாட்டும் நடித்துப்பவுரிவருகின்ற பூங்கொம்பையொத்த ஸ்திரீகளாடுகின்ற ஆடலும் திருஞானசம்பந்த சுவாமிகள் முதலாகிய மூவர்முதலிகள் அருளிச்செய்த துதியாகியதேவாரவோசையும் உற்சவத்தின்பெருமையும் வேதவோசையும் திக்குகளையெல்லாம் விழுங்கும் படியான முழவின்னோசையும் இடைவிடாதுஒலித்துக்கொண்டிருக்கத்தக்கதாகிய சொக்கநாத சுவாமி யெழுந்தருளியிருக்கும் சிவாலயமிருக்கின்றது(எ-று)

மடங்கலின்றிவிண்பிளந்துமேல்வளர்ந்துவெள்ளேற்று....*
விடங்கர்வெள்ளிமன்றிமைத்தெழுவெண்சுடர்நீட்ட......*
முடங்கல்வெண்பிறைக்கண்ணியான்கயிலைமூவுலகு......*
மொடுங்குகின்றநாளோங்கியவோக்கமேயொக்கும். ....*

(இ-ள்) மடங்குத லில்லாமல் ஆகாயமுகட்டைப் பிளந்துகொண்டு அதன்மேலும்சென்றுவெள்ளை நிறமுள்ள ரிஷபவாகனத்தையுடைய சோமசுந்தரக்கடவுள் வீற்றிராநின்றவெள்ளியம்பலமானது பிரகாசித்து மேலோங்குகின்ற வெண்சுடரினைநீட்சி - வளைவாகிய வெண்பிறைமாலையை யணிந்த பரமசிவன் வீற்றிராநின்ற கயிலாசகிரியானது சுவர்க்கலோகம் பூலோகம் பாதாலலோகமென்னுந் திரிலோகங்களும் அழியும் நாளில் மேலோங்குகின்ற உயர்வையொத் திருக்கின்றது.— (எ-று) (விடங்கர் என்பது) அழகினையுடையவனெனப் பொருள்படுமாறறிக. (கூரு)

சுரந்துதேன்றுளித்தலர்களுஞ்சொரிந்துவண்டரற்ற......*
நிரந்துசுந்தரற்கொருசிறைநின்றலர்கடம்பு..........*
பரந்துகட்புனலுகப்பலமலர்கடுய்ப்பழிச்சி..........*
யிரந்துநின்றருச்சனைசெயுமிந்திரனிகரும்..........*

(இ-ள்) தேன்சுரந்து துளித்துமலர்களையுஞ் சொரிந்து வண்டுகள் நிறைந்து இசைபாடத்தழைந்துசொக்கநாத சுவாமிக்கு ஒருபுறத்தில் நின்றுமலரா நின்றகடம்பவிருக்ஷமானது - பரந்துகண்ணீர்விருந்து ஆனந்தபாஷ்பம்பெருகும்படி மிகுந்த அன்புடன்) பலமலர்களைத்தூவித் துதிசெய்து குறையிரந்துநி

ன்று அருச்சனைசெய்ததேவேந்திரனையொப்பாகும்.-(எ-று) இ ரந்துநின்றதாவது தனக்கு நேரிட்டபழிநீங்கவேண்டுமென்று விண்ணப்பம்பண்ணிக்கொண்டதாம். கூய் - என்பது, இகரத்தி [ரிவு. ௯௪)

உழல்செய்தீவினையருப்பறவுயிர்க்கெலாமடியி .... ....*
னிழல்செய்வார்க்குநீணிழல்செயாநின்றபூங்கடம்பின் ....*
குழல்செய்வண்டுகதிபகமதுக்கொணர்ந்துவந்தூட்டித் .. *
தழல்செய்காமமென்பேடையினூடலோய்தணிக்கும் ....*

(இ-ள்) பிறந்தும் இறந்தும் உழலச்செய்யாநின்ற தீவினை களின் வெப்பம்நீங்கும்படி ஆத்துமகோடிகளுக்கெல்லாம் த மதுதிருவடியாகிய நிழலைத்தருகின்ற சொக்கநாதருவாயிக்குயி குந்தநிழலைத்தருகின்றமலர்களையுடையகடம்பமரத்திலிருக்கு ம்வேய்ங்குழல்போலிசைபாடுகின்றவண்டுகள்கற்பகவிருக்ஷத் தின்மலர்களிலிருக்குந் தேனைக்கொண்டுவந்து மகிழ்ச்சியடை ந்துஊட்டி அக்கினிபோல் வெப்பத்தைத்தருகின்றகாமத்தை யுடைய மென்மையாகிய பெட்டையின் ஊடலாகிய நோயை த்தணிக்கும்.—(எ-று) (௯௫)

ஆருநீர்க்கடலன்றதுவெனநிறையகழ்கா.. .. .... ....*
ரேருமாழியன்றதுவெனவோங்கெயிலெட்டாய்ச் ........*
சாருநேமியன்றதுவெனச்சூழ்ந்தகோபுரம்பொன் .... *
பேருவன்றதுவெனச்சுடர்விசும்பிழிவிமானம் .... ....*

(இ-ள்) நீர்நிறைந்த கடல்அதுவன்றுஇதுதான்அத்தன்மை யுள்ள கடலென்றுசொல்லத்தக்கஅகழியும்-மேகங்கள்தழுவும் படியான உன்னதத்தையுடையசக்கரவாளகிரியதுவல்லஇதுதா ன் அத்தன்மையுள்ள சக்கரவாளகிரியென்று சொல்லத் த க்கமதிலும். எட்டென்னுந்தொகைகளையுடையவைகளாய்ச்சா ர்ந்தமலைகள் அவையல்ல இவைகளே அஷ்டகுலபர்வதங்களெ ன்றுசொல்லும்படி அமைந்திராநின்றகோபுரங்களும்- பொ ன்மலையதுவல்ல இதுதான்பொன் மலையென்று சொல்லும்ப டி பிரகாசியாநின்ற விசும்பினின்றும் இழிந்தவிமானமும்.— (எ-று) (௯௬)

வேதவந்தமுந்துளக்கறமெய்ப்பொருள்விளங்கு .... ....*
நாதவந்தமுங்கடந்ததோர்நடுநிலைப்பொருளின் ........*
பாதவந்தனைப்பத்தியின்பாலராய்ப்பயில்வோர்.. ......*
மாதவந்தருபயனெனத்தழைத்தயல்வளனும்.........*

(இ-ள்) வேதங்களின் முடிவையுங் குற்றமறமெய்ப் பொருள்விளங்காநின்ற நாததத்துவத்தின் முடிவையும் கடந்ததாகிய ஒப்பற்றநடுநிலைப் பொருளாகிய பரமசிவத்தினுடையதிருவடிகளுக்குப்பத்திசெய்யும் நிலைமையின் பகுதியையுடையவர்களாய் அம்முறைமையில்வழுவாமல் நடப்பவர்களுக்கு அவர்களுடைய பெரியதவமானது உதவுகின்றபயனைப்போலத்தழைந்தபலவளப்பமும்.—(எ-று) (கூஎ)

பொறிகளைந்தினுக்கூட்டுபல்போகமுமிதப்பச் .... .....*
செறிகொணிரவாலுவப்பவத்திருநகர்மாக்க .... ..... ..*
நெறிகொள்செஞ்சடைப்பிறைமுடிநிமலக்கொழுந்தின் ..*
வெறிகொளுண்மலரடிதபூஇவீடுபெற்றூர்போல் .. ....*

(இ-ள்) நெறித்திராநின்ற செஞ்சடையில் பிறையினைமுடித்தநிர்மலக் கொழுந்தாகிய சோமசுந்தரக்கடவுளுடைய வாசனைபொருந்திய காலத்தின் மலர்ந்தசெந் தாமரைமலர் போன்றதிருவடிகளை இடைவிடாது தியானித்துக் கொண்டிருந்து மோக்ஷ மடைந்த முத்தர்கள் பேரின்பம் அடைந் திருப்பது போல்சிறப்புற்றதாகிய அம்மதுரைமா நகரத்திலிருக்குமாந்தர்கள் மகிழ்ச்சி அடையும்படிஐம்பொறிகளுக்கு ஊட்டும்படியான பலவகைப்பட்ட போகங்களும் நிறையப் பொருந்தியிருக்குந்தன்மையையுடையவைகளாம்.—(எ-று) (கூஅ)

மூன்னவன்னரசிருக்கையாலந்நகர்முளரிப் .... .. ......*
பொன்னையின்றதாலதுபலபொருணிறைசெல்வந் ..... ..*
தன்னையின்றதாலதுபலதருமமென்றுைாக்கு .... ......*
பின்னையின்றதஃதீன்றதால்விழுத்தகுபுகழே ..........*

(இ-ள்) சோமசுந்தரக் கடவுள் அரசாட்சி செய்துகொண்டிருந்தமையால்அம்மதுரை நகரமானதுசெந்தாமரைமலரில் வீற்றிருக்குந்திருமகளைத்தந்தது அத்திருமகள்பலபொருள்கள்நிறைந்த செல்வத்தைத்தந்தாள் அந்தச்செல்வமானது பல தருமமென்று சொல்லுகின்ற ஒருபெண்ணைப் பெற்றது அந்தப்பெண்மேன்மைபொருந்தியபுகழினைப் பெற்றது.(எ-று)

எழுக்கடந்ததோளுருத்திரவுலகமென்மியாரும் .. ... .. *
வழுத்தநின்றவிந்நகர்யியினும்பரின்மாண்ட .... .. ..*

விழுந்தகும்பலசெல்வமும்வியந்துபார்த்துள்ளத் ... ....*
அழுக்கறுமையாலின்னுமமரர்கண்ணுறங்கார் .. ... ...*

(இ-ள்) எழுவினது வலிமையுங் கடந்ததோளிணையுடைய உருத்திரரிருக்கும் லோகமென்று யாவருந் துதிசெய்யும்படி நின்ற இந்த மதுரைநகரத்தினிடத்துச்சுவர்க்கலோகத்திலுள்ள செல்வத்திலும்மாட்சிமைப்பட்டமேன்மைதங்கியபலவகையாகியசெல்வத்தையுமகிழ்ச்சியுடன் பார்த்து உள்ளத்திலுண்டான பொறாமை யினால்தேவர்கள் இன்னமும் கண்ணுறங்காதவர்களா யிருக்கிறார்கள்.—(எ-று) (௯)

விளையவிழ்ந்ததார்மீனவர்வாகைவேல்விடுத்துத் ........*
திரையைவென்றதுமுடிதகர்த்திந்திரன்செருக்குக் .... ..*
களையவென்றதுங்கார்தளையிட்டதுங்கனக ............*
வரையைவென்றதுமிந்நகர்வலியினலன்றே .... .. .....*

(இ-ள்) வாசனைபரந்தபூமாலையணிந்தஉக்கிரபாண்டியதேவர்வெற்றிபொருந்தியவேலாயுதத்தைவிட்டுச்சமுத்திரத்தைவென்றதுவும் தேவேந்திரனுடைய கிரீடத்தைத் தள்ளிஅவனுடைய செருக்குக்கெட வென்றதுவும் மேகங்களைத் தளையிலிட்டதுவும்மகமேருமலையைவென்றதுவும் இந்தநகரத்தின்வன்மையினாலல்லவோ.—(எ-று) (௯௧)

எங்குநாவுமாயெங்கணுங்கண்ணுமாயெங்குந் .... .......*
தங்குபேரொளியல்லதுதனிநகர்ச்செல்வஞ் ......... ...*
செங்கணாயிரநாவினான்செப்பவுமெதிர்கண் ............*
டங்கணாயிரமுடையவனளக்கவும்படுமோ .... .... ....*

(இ-ள்) எவ்விடத்துநாவுகளை யுடையதுமாய்எவ்விடத்தும் கண்களையுடையதுமாய் எவ்விடத்திலும்பொருந்தியிராநின்ற பேரொளியாகியபரமசிவம் அளவிட் டறியலாமேயன்றி இந்த ஒப்பற்றமதுரைநகரத்தின் செல்வம் இவ்வளவை யுடையதென்று சிவந்த நேத்திரங் களையுடைய ஆயிரநாவினானாகிய ஆதிசேஷனால் சொல்லப்படுவதுமன்று அழகிய ஆயிரங்கண்களை யுடைய தேவேந்திரனா லளக்கப்படுவதுமன்று.—(எ-று) ஆதிசேஷனுக்கு ஆயிரநாவுகளும், தேவேந்திரனுக்கு ஆயிரநேத்திரங்களும்இருப்பினும், அவைகளோடு எங்கு நிறைந்திராமையானும் அவ்விருவர்க்குஞ் சோதிசொரூபமின்மையானும், அவர்களால் சொல்லவும் அளக்கவும்படாதென்றார். (௯௨)

புண்ணியம்புரிபூமியாரதில்வருபோக........ ........*
நண்ணியின்புறுபூமிவானுடென்பநாளும்.... ..... .....*
புண்ணியம்புரிபூமியுமதில்வருபோக........,, .........*
நண்ணியின்புறுபூமியுமதுரைமாநகரம்....... .........*

(இ-ள்) புண்ணியத்தைச்செய்கின்ற பூமியிலிருப்பவர்களந்தப்புண்ணியத்தினால் வருகின்ற போகங்களைப் பொருந்தியின்பம் அடைகின்ற பூமியாவது தேவலோகமென்று முன்னோர்கள் சொல்லுவார்கள்-நாள்தோறும் புண்ணியஞ்செய்கின்ற பூமியும் அதனால்வருபோகங்களைப்பொருந்தியின்பம்அடைகின்றபூமியும் மதுரைமாநகரமேயாம் — எ-று) புண்ணியம்புரிந்தவர்கள் வானுடைவென்றமையால ஈனமிலாத்த புண்ணியம் பசுபுண்ணிய மெனப்படும்-பதிபுண்ணியப்பயனாவது மோக்ஷமாம்-போகமாவது- பெண் ஆடை அணிகலம் போசனம் தாம்பூலம் பரிமளம் பாட்டு பூவமளி எனப்படுவனவாம்.

(வேறு.)

பண்கனிந்தனையசொல்லார்நரம்பிசைப்பாணிதேவ.....*
ருண்கவியமுதங்கைப்பச்செவிதுளைத்தூட்டவுண்டும்...*
பெண்களினமுதமன்னார்பெருமிதநடனமுண்ணக்.. ....*
கண்களைவிடுத்துங்காலங்கழிப்பவரளவிலாதார்..... ..*

(இ-ள்) பண்ணானது கனிந்தன்னதொத்த மதுரமுள்ள சொல்லையுடையஸ்திரீகள் யாழினரம்பினுக்குச் சரியாகப் பாடுகின்றஇசையினாதத்தைத்தேவர்களுண்ணுகின்ற மதுரமுதிர்ந்த அமிர்தமுங்கசக்கும்படி தங்கள்காதுகளைத்துளைத்து அருத்த உண்டும் மாதர்களுக்கும் இனிய அமிர்தம்போன்றவர்களாகிய கூத்தியர்கள் நடிக்கும் பெருமிதத்தையுடைய நடனத்தையுண்ணும்படிபார்வையைச் செலுத்தியும் காலங்கழிப்பவர்கள் அநேகராம்.—(எ-று) பெண்களினமுதமன்னாரென்றது-மாதர்களும் ஆடவர்தன்மையைத் தாங்கள் பெறவிரும்பத்தக்க அழகுமுதலிய உள்ளவர்களென்னுங்கருத்தைக் கொண்டிருக்கின்றது- பெண்டிருமாண்மைவெஃகிப் பேதுறுஞ்சாயலினளை- என்னுஞ்சிந்தாமணிச்செய்யுளானுமுணர்க- ஆடவர்களுக்கு இன்பந்தருந் தன்மையினால் மாதர்களுக்குள் அமுதமனையாரென்றுபொருள் கூறினுமமையும்- பெருமிதமாவது, கல்வி-தறுகண்-புகழ்- கொடை- என்னும் இந்நான்கினையும் பற்றியுண்டாவது அவற்றுள் ஈண்டுரைத்தபெருமிதம் கல்வியைப்பற்

நியுண்டாயது. இதனைக் கல்வி தறுகண் இசைமை கொடை யெனச் சொல்லப்பட்ட பெருமிதநான்கே என்னுந் தொல்காப்பிய மெய்ப்பாட்டியற் சூத்திரத்தா னுணர்க. (௱௪)

கலவிவித்தாக வூடிக்கட்புனல் குளிக்குநல்லார் .... ..... .. *
புலவிதீர் செவ்வி நோக்கிப் புணர்முலைப் போகந்துய்த்து .. *
நிலைநிலையாமை நோக்கி நெறிபடு தருமதானங் ...... .... *
கலைஞர் கைப்பெய்துங் காலங்கழிப்பவ ரெண்ணிலாதார் .... *

(இ-ள்) கலவி காரணமாக ஊடிக் கண்கள் சொரிகின்ற நீரில் குளிக்கும் ஸ்திரீகளின் ஊடல் நீங்கும் சமையம் பார்த்து நெருங்கிய ஸ்தனங்களிலே புணருகின்றபடியான போகத்தை நுகர்ந்தும் நித்தியா நித்தியங்களை விசாரித்து முறைமை யாகிய தர்மதானங்களைச் சாஸ்திரவிசாரணையுள்ள சான்றோர்கள் கையிற்கொடுத்தும் காலங்கழிப்பவர்கள் அநேகராம்.—(எ-று) போகமென்பது உண்ணப்படும்பொரு ளன்றேயெனின்- உண்டற்குரிய வலலாப் பொருளை யுண்டனபோலக் கூறலுமரபே-என்னுஞ் சூத்திர விதியாலவ்வாறு கூறப்படுமென்க. (௱௫)

சந்தித்துமீனை நோக்கித் தலைவனை மூன்றுபோதும் ...... ... *
வந்தித்துமீசன் பூசைமரபுளிமுடித்தும் வேத ............. *
மந்திரத்துமறியான் செய்த திருவிளையாடல் கேட்டுஞ் ....... *
சிந்தித்துமன்பர் பூசைசெய்து நாள்கழிப்பார் பல்லோர் .... *

(இ-ள்) சந்திசெய்தும் மீனாக்ஷியின் தலைவனாகிய சோமசுந்தரக்கடவுளைக்-காலை- உச்சி-மாலை என்னு மூன்றுகாலத்திலும் பணிந்தும் ஆகமவிதிப்படி சிவபூசைசெய்தும் வேதங்கள் தேடியுங் காணாத கடவுள் செய்த திருவிளையாடல்களைப் பெரியோர்சொல்லக்கேட்டும் அவ்வாறே தியானஞ் செய்தும் தொண்டர் பூசைசெய்தும்பல பேர்காலங் கழிப்பார்கள்.-(எ-று)

கற்பவைகற்றுங்கேட்டுங்கேட்டவைகருத்துளூறச் .. * [ர்த்து
சொற்பொருளினைந்துங்கேட்போர்க்குணர்த்தியுட்டெளக்கந்தி
மெற்பகலிரவுநீங்குமிடத்துமெய்யறிவானந்த .......... *
வற்புதவெள்ளத்தாழாதாழ்ந்துநாள்கழிப்பார்சில்லோர் .... *

(இ-ள்) கற்கத்தக்க நூல்களைக் கற்றும் கேள்விப் பட்டும் கேட்டவைகள் கருத்திற்பதியும்படி சொல்லையும் பொருளையும் சிந்தித்தும் கேட்பவர்களுக்குப் போதித்து அவர்கள் உள்ளத்

தில் உண்டாயிருக்கும் ஐயத்தைத் தீர்த்தும் ஒளிபொருந்தி
ய பகலு மிரவுமற்றவிடத்து மெய்ஞ்ஞானந்தமாகிய அற்பு
தவெள்ளத்தில் ஆழாமலாழ்ந்து சிலர்காலங் கழிப்பார்கள்.—
(எ-று) கற்கத்தக்கநூல்களானவை-உபதேசகலைகண்முதலிய க
லைகளாம் (பகலிரவு நீங்கியவிடமாவது) சகலகேவல நீங்கிய
விடமாம்- கேள்வியாவது, கற்பதினால் உண்டாகும் அறிவான
து உறுதிப்படு மாறு நூற்பொருளைக் கற்றறிந்தார்கூறக்கேட்
குதல். (௱௭)

தன்னிகருயர்ச்சியில்லான்காப்பியத்தலைவனாக.........*
முன்னவர்மொழிந்ததேனோர்தமக்கெலாமுகமனன்றே...*
வன்னதுதனதேயாகுமண்ணைமேலபாண்டிவேந்தா.. .. ..*
யிந்நகர்க்கரசனாவானிக்கவிக்கிறைவனாவான் ... ..... ..*

(இ-ள்) தனக்குஒப்பும் உயர்வுமில்லாதவன் காப்பியத்தலை
வனெனச்சொல்லியிருக்க அம்முறையைவிட்டு முன்னோர்கள்
காப்பியத்தலைவர்களாகச்சொல்லியதுமற்றையர்க்கெல்லாமு
பசாரமேயாம்- மேற்சொல்லியஇரண்டுதன்மையும்தனக்கியல்
பாகவுள்ள பரமசிவம் பாண்டியராசனாகி இந்தநகரத்துக்கு இ
றைவனாவன் இக்கவியாகியகாப்பியத்துக்கு மிறைவனாவன்.
(எ-று) காப்பியமாவது பெருங்காப்பியம் காப்பியம் என இர
ண்டுவகைபடுமென்றும் அவ்விரண்டனுள் பெருங்காப்பிய
மாவது-வாழ்த்து வணக்கம் வருபொருள் மொழிதல் அறமுத
ற்பொருள்களைப்பயத்தல் தன்னோடொப்பாரும் மிக்காரும்
இல்லாதானை நாயகனாக வுடைத்தாதல்முதலானவைகளைக்கொ
ண் டிருத்தலாம்-பெருங்காப்பிய நிலைபேசுங்காலை வாழ்த்து
வணக்கம் வருபொருளிவற்றி னொன்றேற்புடைத்தாகி முன்வ
ரவியன்றுநாற் பொருள்பயக்கு நடைநெறித்தாகித்தன்னிகரி
ல்லாத் தலைவனையுடைத்தாய் மலை கடல் நாடுவளநகர் பருவமி
ருசுடர்த்தோற்றமென் றினை யனபுனை தன்மணம்புணர்தல்
பொன்முடி கவித்தல் பூம்பொழி னுகர்தல்புனல் விளையாட
றேம்பொழி மதுக்களி சிறுவரைப் பெறுதல்புலவியிற்புலத்த
ல் கலவியிற்களித்தலென் றின்னன புனைந்தநன் னடைத்தாகிம
ந்திரந்தூது செலவிகல்வென்றிசந்தியிற்றொடர்ந்து சருக்கமி
லம்பகம்பரிச்சேதமென் னும் பான்மையின்விளங்கிநெருங்கி
ய சுவையும், பாவமும் விரும்பக்கற்றோர் புனையும், பெற்றிய
தென்ப- என்னுந் தெண்டிஅலங்காரச் சூத்திரத்தில் காப்பிய

த் தலைவன திலக்கணங்கூறி யிருப்பதைக்காண்க - இந்தத்திருவிளையாடற்புராணம், பெருங்காப்பியமென்பது தோன்ற மேற்சூத்திரமுழுவதும் ஈண்டுக் காட்டப்பட்டது - பெருங்காப்பியமென்பது, பொருட்டொடர் நிலைச்செய்யுளென்றுஞ்சொல்லப்படும்-ஆயின் இப்பொருட்டொடர்நிலைச் செய்யுளானது, பெருங்காப்பியத் துக்குரைத்த உறுப்புகளிற் குறைவின்றி யிருக்குமோவெனின் அங்ஙனங் குறைவுபட்டிருப்பினும் பெருங்காப்பியமென்றேகூறப்படும்- இதனைக்,கூறியவுறுப்பிற் சிலகுறைந்தியலினும் வேறுபாடின்றென விளம்பினர்புலவர் -என்னுஞ்சூத்திரத்தானுணர்க-சக்கரவர்த்திகள் தன்னிக ருயர்ச்சியில்லாரெனி னமையாதோவெனின் தேவேந்திரன்முதலாயினோர் அவரினுமுயர்ந்தவராதலி னமையாதென்க. (௱அ)

என்னவுரைப்பேனந்தவிறைமகன்பண்பையேனை.....*
மன்னவர்வானோர்போலமதித்துரைவிரிக்கற்பாற்றே....*
வன்னவனுணையாற்றானடப்பதிவ்வுலமென்றான்.... ....*
முன்னவன்செய்தவாடல்வரவினைமுறையிற்சொல்வேன் .. *

(இ-ள்) அத்தன்மையுள்ளகடவுளுடைய ஆக்கினையின்முறைமைப்படி இவ்வுலகம் நடக்குமென்றால் அந்தத்தலைவனதுதன்மைஎத்தன்மையதென்று (மதித்துச்)சொலவேன் மற்றைஅரசரதுதன் மையைப் போலவும் தேவர்களது தன்மையைப் போலவும் (எளிதாக) மதித்துச் சொல்விரிக்கும் பான்மையையுடையதன்று- ஆதலால்,அதனையொழித்து க்காப்பியத்தலைவனாகிய அந்தச்சோமசுந்தரமூர்த்தி செய்தருளியதிருவிளையாடலின் வரவை முறைமைப்படி சொல்லுகின்றேன்.(எ-று)
தன்வலியாணை தாங்கி முவண்ணல் தன்சன்னிதி முத்தொழில் செய்யவாளா மேவண்ணலாதலின் விரித்துரைக் கற்பாற்றே வென்றார்- அவனது திருவிளையாடலின் தன்மையினையும் விரித்துரைப்ப தரிதென்பார்- ஆடல்வரவினைமுறையிற் சொல்வேனென்றார் - ,என்னவே, இன்னதிருவிளையாடலின் பின் இன்னதிருவிளையாடலென்று கூறுவேனென்றாரெனக் கொள்க.

நகரப்படல முற்றிற்று.

ஆகப்படலம்-௩-க்குத்-திருவிருத்தம், ௱கக.

(திருத்தமும்-சேர்க்கையும்.)

(௫) பக்கத்தில் வென்றுமேள- என்னுட்பாடலுரையில் திருவருளையென் றிருக்கின்றதனைச் சிவத்தின் றிருவருளை யெனவும் ரிஷபவாகனரூடராய்வந்து (என்பதனை) ரிஷபவாகனத்திலிடத்திலிருந்து (எனவும்) உரைத்துக்கொள்க- ௬பக்கத்தில் சுரும்புமுரல் (என்னும்) பாடலில்உத்தரியம் என் றிருக்கின்றது, குறுக்கல்விகாரம். (௯) பக்கத்தில் பூவண்ணம்(என்னும்) பாடலுரையில் திருமேனி கொண்டவனென்றும் அசைவற்றிருக்குங் கடவுளென்றும்இருப்பவைகளைத்திருமேனிகொண்டவரும்தொழிலற் றிருப்பவருமாகிய கடவுளென வுரைத்துக்கொள்க- (அன்றியும்) அந்தப்பாடலைச் சொக்கலிங்கமூர்த்தி துதியாகக் குறித்திருக்கின்றது அதனைப்பரசிவமெனக் குறித்துக் கொண்டு, எ- பக்கத்திலிருக்கும் பூவிருயகன் என்னும் பாடலைச் சொக்க லிங்க மூர்த்தி துதியாகக் குறித்துக் கொள்க. (௰அ) பக்கம் - (௰௫) வரியில் - நெற்றிசண் - என்றிருக்கின்றதனை - நெற்றிக்கண்ணென் றுரைத்துக்கொள்க. (௨௯) பக்கத்தில்-ஊறுசெயென்னும் பாடலில் தெய்வந்தொழுதுஎன்றிருக்கின்றது அதற்குப் பூமிதேவியைத் தொழுது எனப் பொருள் கூறினுமமையும் - வீடேறு விளைகெனத் தொழுது வித்துவார் என்றசிந்தாமணிச் செய்யுட்கு நிலமகளைத்தொழுதென நச்சிறுர்க்கினியார் உரைசெய்திருக்கின்றனர் (௪௫) பக்கத்தில் கண்ணுதலென்னும்பாடலினுரையில் தெறிந்து என் றிருக்கின்றதனைத் தெரிந்து எனக்கூறிக் கொள்க.(௫௪) பக்கத்தில் எறியும்வாளையும் என்னும்பாடலுக்குப்பொறிகள்போர் செய்வதுமல்லாமல்(அகழியும்)வாளைமீன்களும்ஆமைகளுமாகிய வாளாயுதத்தையும் கேடகத்தையும்பற்றிக் கொண்டுபோர் செய்யத்தக்கதுபோ லிருக்கின்றது எனப்பொருள் கூறினும் அமையும் (௫௭) பக்கத்தில் (௰௧) இலக்கமிட்டிருக்கின்றதுபிழை-(௬௭) பக்கம்(௫௰)வரியில் நச்சினியார்க்கினியா ரென்றிருப்பதனை நச்சிறுர்க்கினியாரென வுரைத்துக்கொள்க. (௭௫) பக்கம்(௰)வரியில் குறளானுமென் றிருக்கின்றதனை நாலடியாறுமென் றுரைத்துக்கொள்க.

நாலடி-பிறர்மனைநயவாமை.

ஊருளொழுந்தவுருகெழுசெந்தீக்கு.... .... .... ....*

நீருட்குளித்துமுயலாகும்-நீருட்........ .... ....*

குளிப்பினுங்காமஞ்சுடுமேகுன்றேறி ........ ........*
யொளிப்பினுங்காமஞ்சுடும் ................*

(அரு) பக்கத்தில் கிளர்ந்த - என்றிருப்பதனைக்- கிளந்த எனவும்- (அசு) பக்கத்தில்- மாயையென் றிருப்பதனைச்- சுத்த மாயையெனவும்- அ௬-பக்கத்தில் பருதியென்றிருப்பதனைப் பரிதியெனவும்- (அசா) பக்கத்தில் தம்மையென்றிருப்பதனைத்- தம்- எனவும்- (அஅ) பக்கத்தில்- ஏந்தா என்றிருப்பதனை ஏந்தரவெனவும்- (கூ௰) பக்கத்தில் கோபங்கொண என்றிருப்பதனைக் கோபங்கொண்டு - எனவும் - (கூக) பக்கத்தில்- கோவணவுடையன்றொங்க என்றிருப்பதனைக் - கோவணவுடையனறெங்க எனவும் உரைத்துக்கொள்க. தான் - தாம் - தன் - தம்- என்னும் இடைச்சொற்கள் எல்லாவிடங்களிலும் வருகிற அசைச்சொற்களாகக் கொள்க- இவைகள்சிலபாடல்களின் உரைகளில் இடைச்சொல்லெனக் குறிக்கப் பட்டிருக்கின்றன- அவைகளையும் சிலபாடல்களி னுரையிற் குறிக்கப்படாம லிருக்கின்றவைகளையும் இனிவருஞ் செய்யுட்களி லிருக்குமாயின் அவைகளையும் ஆங்காங்கு அசைச்சொல்லெனக் கூறிக்கொள்க-மற்று என்பது- வினைமாற்றுப்பொருளினும் பிறிதெனும் பொருளினும் அசைநிலையாகவும் வரும்-பாடலினீற்றில்-ஏ-அரோ-ஆம்-போலும்- எனவருவனவெல்லாம் ஈற்றசையெனவும்- மன்னே எனவரின்-மன்- அசையெனவும்-ஓ-ஈற்றசையெனவும்- அன்றே எனவரின்- அன்று அசையெனவும் - ஏ- ஈற்றசையெனவும் - மாதோ எனவரின்-மாது- அசை எனவும், ஓ ஈற்றசையெனவும்- ஆங்காங்குரைத்துக் கொள்க - பணிவாம்; தொழுவாம், என்பனபோல வருவனவற்றைத் தன்மைப்பன்மை யெனக்கொள்க.



# திருக்கைலாசப்புகழ்ச்சி.



(வேறு.)

வரங்கடந்தருளெனமுதுவானவர்முனிவோர் .... ....... *
கரங்கடந்தலைமுகிழ்த்திடக்கருணைசெய்தவிச்சை ......... *
யுரங்கடந்துரையுணர்வெலாங்கடந்தருமறையின் ......... *
சிரங்கடந்தவனிருப்பதுதிருக்கயிலாயம் .... ..... .... *

(இ-ள்) வரங்கள் அளித்தருளு மென்றமுதியதேவர்களும் கைகளைத்தமது சிரசுகளின்மேற் குவித்துவைத்துக் கொண்டு துதிசெய்யக் கிருபைசெய்து அஞ்ஞானவலியைக்கடந்துமனவாக்குகளையுங்கடந்து அரியவேதத்தின் சென்னியையுங்கடந்தபரமசிவன் வீற்றிருப்ப தற்குஸ்தானமாயிருப்பது கைலாசமென்னுந்திருமலை.—(எ-று)முதுவானவராவார்திருமால்-பிரம்மதேவன் முதலாயினோராம். (௧)

புரந்தராதிவானவர்பதம்போதுறைபுத்தேள் ....... .. .. *
பரந்தவான்பதஞ்சக்கரப்படையுடைப்பகவன் .. .... .. *
வரந்தவாதுவாழ்பதமெலாநிலைகெடவருநா .... ....... .... *
ளுரந்தவாதுநின்றூழிதோறோங்குமவ்வோங்கல் ........ *

(இ-ள்) அந்தக்கைலாசமலையானது தேவேந்திரன் முதலாகிய தேவர் உலகங்களும்-தாமரைமலரில் வாசஞ்செய்யும்பிரம்மதேவனுடைய பரந்த [இடத்தையுடைய] பெருமைபொருந்தியசத்தியலோகமும்-சக்கராயுதத்தை யுடைய திருமாலானவர் மேன்மைகெடாமல்வாழ்கின்றவைகுந்த லோகமும்- ஆகிய இவைகளெல்லாம் நிலைகெடும்படி வருகின்ற காலத்திலும் தன்வலிகெடாமல் நிலையாகநின்று ஊழிதோறு மோங்காநிற்கும்.—(எ-று) (௨)

அரம்பைமாதராராடலினரவமும்பாட ......... ... .. ...*
னரம்பினோசையுமுழவதிர்சும்மையுநால்வாய் ....... .... *
வரம்பிலோதையுமருவிவீழொலியுமாறாது ........ .... *
நிரம்பிவானமுந்திசைகளுநிமிர்வனமாதோ ...... .. .. *

(இ-ள்) தேவமாதர்களாடுகின்ற ஆடலினோசையும் அவர்கள்பாடும்பாட லோசையும் யாழ்நரம் போசையும் மத்தளங்களொலிக்கும் ஓசையும் யானைகளின் அளவில்லாத ஓசையும் அ

ருவிவீழ்கின்ற ஓசையும் மாறுமல்நிறைந்து ஆகாயத்திலும்திசைகளிலும் செல்லுவன.—(எ-று) (௩)

வெந்தநீற்றொளிவெண்மையும்விமலனையகங்கொண் .... *
டந்தமின்றியேயசைவறவிருக்கையுமருவி .... .... .... *
வந்தகண்களுங்கொண்டவணிருக்குமாதவர்க்குத் .... .. *
தந்ததாலரன்கயிலையுந்தனதுசாரூபம் ................ *

(இ-ள்) வெந்தவிபூதியினது பிரகாசமுள்ள வெண்மைநிறமும் பரமசிவனை அகத்திற்கொண்டு ஈறின்றிஅசைவற்றிருக்கையும் அருவிவந்தகண்களும் பெற்று அவ்விடத்திருக்கு மாதவர்களுக்குக் கயிலாயகிரியும் தனது சாரூபத்தைக் கொடுத்தது. (எ-று) பரமசிவன் அடியார்களுக்குச் சாரூபந்தருவது மன்றிக் கயிலாய கிரியும் சாரூபந்தந்ததெனப் பொருள் படுதலின் உம்மையிறந்ததுதழீஇயஎச்சவும்மை- இழிவுசிறப்பும்மையாகக்கொள்ளினுமமையும் - சாரூபமாவது, பரமசிவனது திருமேனிபோல் சடைமுடிகாளகண்டம்திரிநேத்திரம் மான்மழுமுதலானவைபெறுதல்-கயிலாயகிரியானது வெண்மை நிறமும்பரமசிவன்தன்னிடத்திருக்கப் பெற்றபேறும்அழிவும்அசைவில்லாமையும் அருவியிழிகின்ற கண்ணுமுள்ளதா யிருப்பதுபோல அவ்விடத்து நிஷ்டை கூடியிருப்பவர்கள் விபூதியணிந்திருக்கும் வெண்மை நிறமும் பரமசிவன் வீற்றிருக்கும் உள்ளமும் அழிவும் அசைவுமின்றி ஆனந்தபாஷ்பம்பெருகுகின்ற கண்களும் உடையவர்களா யிருக்கின்றார்களாதலால் சாரூபந்தந்தது என்றார்- அகம் என்னும் பலபொருளொருசொல் ஈண்டுக் கயிலையைக்குறிக்கும்போது இடத்தையும் மாதவரைக்குறிக்கும்போது உள்ளத்தையும் காட்டிநின்றது-கண்- என்னும் பலபொருளொருசொல் ஈண்டுக்கயிலையைக் குறிக்கும்போது இடத்தையும் முனிவரைக்குறிக்கும்பொழுது நேத்திரத்தையும் உணர்த்திநின்றது. (௪)

ஆங்குவெண்டுகில்விரித்தெனக்கல்லெனவார்த்து .... .... *
வீங்குகாலருவித்திரள்வெள்ளமேயன்றி .. ... ........ *
யோங்குநான்மறைக்குடுமியினுள்ளொளிநோக்கித் ..... *
தூங்குமாதவர்கண்களுஞ்சொரிவனவெள்ளம் .... .... *

(இ-ள்) அவ்விடத்துநின்று வெண்மை நிறமுள்ள வஸ்திரத்தைவிரித்ததுபோல் கல்லென்கிற ஒலிக்குறியுடன்ஆரவாரித்துக்கால்போலப் பெருகாநின்ற அருவியாகிய திரண்ட வெள்ள

முடிவில்லாமல் ஓங்கிய நான்கு வேதங்களினுச்சியினிடத்திராநின்ற மேசாதிசொரூபமாகியகடவுளைத்தரிசித்துக்கொண்டு தூங்காமல் தூங்குகிற முனிவருடைய கண்களினின்றும் நீர் வெள்ளம்பெருகுவன.—(எ-று) (௫)

கோட்டுமாமலர்நிலமலர்குண்டுநீரொடுத்துக் .. .... ....*
காட்டுமாமலர்கொடிமலர்கொண்டுமுட்கனைந்த .... ....*
பாட்டுமாமலர்கொண்டுநம்பரஞ்சுடரடியிற் ...... ....*
சூட்டுமாதவர்தொகுதியுஞ்சூழ்வனவொருபால் .... ....*

(இ-ள்) பெருமைபெற்ற கோட்டுப்பூ நிலப்பூ ஆழமாகிய நீரானது எடுத்துக் காட்டுகின்றபூ கொடிப்பூ ஆகியநால்வகைமலர்களைக்கொண்டும் (அன்பினால்) உள்ளங்கனைந்தபெருமைபொருந்திய பாடலாகியமலர்களையுங்கொண்டு நம்முடையகயிலாயபதியின் திருவடிகளில் சூட்டுகின்ற மகத்தாகியதவத்தையுடையவர்களாகிய திருத்தொண்டர்கூட்டமும்ஒருபுறத்தில் சூழ்ந்திருப்பன.—(எ-று) (௬)

கையநாகமுங்காய்சினவுழுவையுங்கடுவாய்ப் ... .. ......*
பையநாகமுந்தங்கிளைப்ரவியமுக்க.. .... .... ......*
ஐயனாகமெய்யருந்தவர்தமையடைந்தன்பு .... .. ....*
செய்யநாகமுமவையமும்புகழ்வதச்சிலம்பு..............*

(இ-ள்) துதிக்கையையுடைய யானைகளும்சீறுகின்ற கோபத்தையுடையபுலிகளும் விஷந்தங்கிய வாயையும் படத்தையுமுடையசர்ப்பங்களும் உண்மையாகிய தவத்தினையுடையமுனிவர்களை (நோக்கித்) தங்கள்சுற்றத்தினால் பூர்வம் துதிசெயப்பட்டதிரிநேத்திரங்களையுடைய பரமசிவனாக உட்கொண்டு அவர்களிடத்தடைந்து அன்புசெய்ய அதைக்கண்ட தேவலோகத்தாராலும் பூலோகத்தாராலும் அந்தக்கயிலாசகிரியானது புகழப்படுகின்றது.—(எ-று) யானைதுதிசெய்தது - திருவானைக்கா-புலிதுதிசெய்தது-பெரும்பற்றப்புலியூர்- அதுவேசிதம்பரமெனக்கொள்க-சர்ப்பந்துதிசெய்தது-திருக்காளத்தி அந்தஸ்தலத்தில்யானையும்பூசித்தது. (௭)

திருக்கைலாசப்புகழ்ச்சி-முற்றுப்பெற்றது.

ஆ படலம், ௯-க்குத்-திருவிருத்தம், ௨௱௬.

# புராணவரலாறு.



## வேறு.

அளந்திடற்கரிதாயவக்குன்றின்மேற் ........ .... ......*
களங்கறுத்தவின்காத்தவன்கோயின்முன் .. ..........*
விளம்பருஞ்சிவதீர்த்தத்தின்மிக்கதாய் ........ .. .. ..*
வளம்பெறுஞ்சிவதீர்த்தத்தின்மாடது ..... ... .... ...*

(இ-ள்) அளப்பதற் கரியமகத்துவங்களையுடையவைகளாய் ஸ்தலங்களிலிருக்கின்ற சிவதீர்த்தங்களுக்கெல்லா மேலானதாய் அளவிடுதற்கரிதாகிய பெருமையினையுடைய அந்தக்கயிலையின் மேல்கண்டங்கறுத்துப் பிர்ம்மதேவன்முதலாகிய தேவர்களைரக்ஷித்த காளகண்டமூர்த்திவீற்றிருக்கும் திருக்கோவிலுக்கு முன்னிருக்கும் சிவதீர்த்தத்தின் அருகிலிருக்கின்றது. (எ-று) (க)

தண்டருங்கதிர்ச்சந்திரகாந்தத்திற் .................. ..*
பண்டயங்கநவமணிபத்திசெய் .. .... ................*
தண்டர்தச்சனேகதவஞ்செய்து .. .. .. .... .. ....*
கண்டதாயிரக்கான்மண்டபமரோ ........ ..........*

(இ-ள்) குளிர்ச்சியைத்தருகின்ற கிரணங்களையுடைய சந்திரகாந்தத்தில் (நுண்ணிய) தொழில்விளங்க நவரத்தினங்களை வரிசை வரிசையாகப்பதித்துத் தேவதச்சனானவன் பலபலமுறையாகத் தவஞ்செய்து (அந்தப் பலத்தினால்) நிருமிக்கப்பட்டது ஆயிரக்கான்மண்டபம்.—(எ-று) (உ)

ஆனபான்மையினாலந்தமண்டப ........ .... .. ....*
ஞானநாயகனாண்மலர்த்தாடொழ .......... ........*
வானமீனொடுவந்துபதங்குறித் .......................*
தூனமின்மதிவைகுவதொத்ததே ........... .... ....*

(இ-ள்) சந்திரகாந்தத்தின்மேல் நவமணிகளும் பதித்திருக்கும் பான்மையினால் அந்தமண்டபமானது ஞானசொரூபமுள்ளபரமசிவனுடைய காலத்தின்மலரும் செந்தாமரை மலையொத்த திருவடிகளைத் தொழ நக்ஷத்திரங்களுடன் குற்றமில்லாத சந்திரன்வந்து காலங் குறித்துக்கொண்டிருப்பதையொத்திருக்கின்றது.—(எ-று) காலங்குறித்தலாவது - சமயம்பார்க்குதல். (௩)

அன்னமண்டபந்தன்னுளருந்தவ ..... ..*
மென்னவேங்கையதண்மேலிருந்தனன் ..*
பன்னுங்கேள்விப்பதினெண்புராணமுஞ் ..*
சொன்னமாதவச்சூதமுனிவனே .... ..*

(இ-ள்) சொல்லுகின்ற கேள்வியையுடையவராய்ப்பதினெண்புராணமுஞ் சொன்னவராகிய மாதவத்தையுடைய சூதமுனிவரானவர் அத்தன்மையுள்ள மண்டபத்தினிடத்தில் அரியதவமானது உருவங்கொண்டிருந்ததுபோல் புலித்தோலாசனத்தின்மே லிருந்தனர் — (எ-று) (௪)

அந்தவேலையிலச்சிவதீர்த்தத்தில் ....*
வந்துமூழ்கியம்மண்டபத்தேறியே..*
சந்தியாதிதவமுடித்தீறிலா .......*
விந்துசேகரன்றாண்ணைந்தேத்தியே. •*

(இ-ள்) அப்போது அவ்விடத்தில்வந்து மேற்சொல்லிய தீர்த்தத்தில் ஸ்நானஞ்செய்து அந்தமண்டபத்திலேறியிருந்து சந்திமுதலாகிய தவங்களை நிறை வேற்றிக்கொண்டு அழிவில்லாதசந்திரசேகரனாகியகயிலாயபதியினுடையதிருவடிகளை தியானித்துத் துதிசெய்து.—(எ-று) (௫)

சம்புபத்தன்சதானந்தனுத்தம ....*
னம்புயத்தனையமகோதர.. ....*
னும்பரஞ்சியவுக்கிரவீரிய..........*
னம்புகேள்விப்பிரசண்டநற்றவன் ..*

(இ-ள்) சம்புபத்தன்-சதாநந்தன்-உத்தமன் - பிரமதேவனையொத்த மகோதரன்-தேவர்களும் அஞ்சத்தக்க (தவத்தையுடைய) உக்கிரவீரியன்-நம்பும்படியானவேதசாஸ்திரக்கேள்வியையுடைய பிரசண்டனென்னும் நல்லதவன்.—(எ-று)(௬)

ஆதிமாதவர்யாவருமன்புமை ......*
பாதியாய்முற்றுமாகும்பராபரச் .. •*
சோதிபால்வைத்தசூதனைத்தோத்திர *
மோதியஞ்சலித்தொன்றுவினாவினார் *

(இ-ள்) இவர்கள்முதலாகிய மகத்தாகிய தவமுனிவர்களெல்லாரும்பார்வதியினிடத்துப் பாதியாகிமுழுவதுமாயிராநின்ற பராபரச் சோதியினிடத்து அன்புவைத் திருக்கும் சூதமுனிவ

ஸ்தோத்திரஞ்சொல்லி அஞ்சலிசெய்து ஒன்று விஞ்ஞாபித்தார்கள்.—(எ-று) (எ)

வேதவாகமபுராணஸ்மிருதியேமுதலா.. ............ *
வேறுநூல்களின்றுணிபொருளுலகெலாம்பயந்த .. ... *
பேதைபாகனைப்பரமனைத்தேர்ந்துணர்பெரிய.... ....*
போதமாதவமுனக்கியாட்புகல்வதொன்றுளதால் .. ..... *

(இ-ள்) வேதங்கள்-ஆகமங்கள்-புராணங்கள்-ஸ்மிருதிகள் முதலாகச்சொல்லப்பட்ட சாஸ்திரங்களின் றுணிபொருள் உலகங்களையெல்லாம்பெற்ற பார்வதிபாகனாகிய பரமசிவனை ஆராய்ந்தறிந்த ஞானத்தையுடைய பெரிதாகிய மாதவத்தையுடைய முனிவரே உமக்குநாங்கள் சொல்லுவதொன்றிருக்கின்றது —(எ-று) (அ)

மேருமந்தரங்கயிலைப்பர்ப்பதமுதல்விடைமே...... ....*
லூருமந்தரநாடனுறைபதியனந்த ... ........... ..*
மாருமந்தமிலபோகம்வீடடைவதென்றவற்றின் .. ..... ..*
காரணங்களோடோததனீகருத்திலக்கிசைய..... .......*

(இ-ள்) அதென்னவெனில் மேருகிரி-மந்தரகிரி-கைலாசகிரி-ஸ்ரீசைலம்-ஆதியாகரிஷபவாகனத்தின்மேலேறிச் செலுத்துகின்ற சிவலோகநாயகனாகிய பரமசிவன் வீற்றிருக்கின்ற ஸ்தலங்கள் அனந்தம், எல்லாரும்முடிவில்லாத போகத்தையும், மோக்ஷத்தையும், அடைவதற்கேதுவானவைகளென்று அவைகளின்காரணங்களுடன் எங்கள்கருத்துக்கிசையும்படி சொல்லினீர்.—(எ-று) (௯)

ஐயமாதிமுக்குற்றமுமகலநீயருளிச்.......... .... ....*
செய்யவுந்தெளிந்திலேங்கள்யாஞ்சிற்றறிவுடைய ........*
மையனெஞ்சினேமாகையான்மயக்கறவின்ன ...........*
முய்யுமாறருள்செய்தியென்றுரைத்தனர்மன்னோ... .. ..*

(இ-ள்) ஐயம்-முதலாகிய முக்குற்றமும் நீங்கும்படி தேவரீர் அருளிச்செய்யவும் நாங்கள் சொற்பவறிவையுடைய மயக்கம்பொருந்திய மனத்தினேமாதலால் - தெளியாதவர்களாயிருக்கின்றோம், அந்தமயக்கம்நீங்கும்படி இன்னமும் நாங்கள்கடைத்தேறச் சொல்லியருளுமென்று விண்ணப்பம் பண்ணிக்கொண்டார்கள்.—(எ-று) (௰)

தலங்கடம்மின்மிக்குள்ளதாய்த்தகுதிசாதீர்த்தக் ........*
குலங்கடம்மின்மிக்குடையதாய்க்குறையிரந்தோர்க்கு ....*
நலங்கடந்தருண்மூர்த்தியாய்நாதவேதாந்தப் ........*
புலங்கடந்தபேரொளியுறைதலமொன்றுபுகலாய் ........*

(இ-ள்) ஸ்தலங்களுக்குள்மேலானதாகியும், மேன்மைபொருந்திய பலதீர்த்தங்களுக்குள் மேலானதாகியும்; குறையிரந்தவர்களுக்கு நன்மைகளைத்தருகின்ற மூர்த்தியாய் நாதாந்தத்தையும், வேதாந்தத்தையும் கடந்த பேரொளியாகியபரமசிவம்வீற்றிருக்கத்தக்கதுமாகிய ஸ்தலம் ஒன்றுசொல்லியருளும்.—(எ-று) (௰௧)

என்றபோதெதிர்முகமலர்ந்திருண்மலவலியை ..........*
வென்றசூதனுந்தலங்களின்விசேடமாய்த்தம்பொற் .....*
குன்றவார்சிலையானிடங்கொண்டுறைபதியு ..........*
ளொன்றுகேட்கவீடளிப்பதாயுளதுமற்றதுதான் ........*

(இ-ள்) என்றுசொன்னபோது எதிரில்முகமலர்ந்து ஆணவமலத்தின் வலியைவென்ற சூதமுனிவரும் ஸ்தலங்களின் மேன்மைகளையெல்லாம் தமக்குள் ஆராய்ந்து பொன்மலையாகிய நீண்டவில்லையுடைய பரமசிவன் திருக்கோவில்கொண்டெழுந்தருளியிராநின்ற ஸ்தலங்களுக்குளொருஸ்தலம் விசேஷமானது-அதுகேட்பவர்களுக்கு முத்தியைத்தருவதா யிருக்கின்றது.—(எ-று) (௰௨)

முற்றவோதியபுராணமூவாறினுட்காந்தம் ...........*
பெற்றதாறுசங்கிதையவையாறுந்தம்பெயராற் ........*
சொற்றபேர்சனற்குமாரமாமுனிவரன்சூதன் ..........*
கற்றைவார்சடைச்சங்கரன்மாலயன்கதிரோன் ..........*

(இ-ள்) யாவைகளையுஞ்சொல்லிய பதினெண்புராணங்களுள் ஸ்காந்தமானது ஆறுசங்கிதையையுடையது அந்த ஆறுசங்கிதைகளையும் தங்கள்தங்கள்பெயரால் சொன்னவர்கள் முனிவர்களுக்குள் சிரேஷ்டராய்ப் பெருமைபொருந்தியசனற்குமாரமுனிவர்-சூதமுனிவர் - கற்றையாய்நீண்டிராநின்றசடையையுடைய சங்கரன்- திருமால்- பிரம்மதேவன்-சூரியன் என்பவர்கள்.—(எ-று) (௰௩)

இன்னவாறனுட்சங்கரசங்கிதையென்று ..............*
சொன்னநூலினையுணர்த்திடுஞ்சங்கரன்றனைவிக் .......*

கன்னபோசவன்மடியினிலிருந்துகேட்டதனை .. ..... .. *
மின்னுவேல்பணிகொண்டவேள்வெளிப்படவுணர்ந்தான் .. *

(இ-ள்) இந்த ஆறுசங்கிதைக்குள் சங்கரசங்கிதையென்று சொல்லப்பட்ட நூலைச் சங்கரன்-தன்தேவியாராகிய பார்வதிக்குச்சொன்னார்-அப்போது பிரகாசியாநின்ற வேலாயுதத்தினை ஏவல்கொண்ட சுப்பிரமணியக்கடவுள் பார்வதிதேவியின் மடியிலிருந்து கேட்டு வெளிப்பட அறிந்தார்—(எ-று)

குன்றெறிந்தவேள்வழிபடுகுறுமுனிக்குரைத்தா .. ..... *
னன்றுதொட்டகத்தியசங்கிதையாகி ........ .... *
நின்றதன்னதுகேட்பவர்க்கரனடிநீழ .............. .... *
லொன்றுமின்பவீடளிப்பதாமொருதலனுரைக்கும் .. . .. *

(இ-ள்) கிரவுஞ்சகிரியைப்பிளந்த வேலாயுதத்தையுடைய சுப்பிரமணியக்கடவுளானவர் தம்மைத் தொழுகின்ற அகஸ்திய முனிவருக்குச்சொன்னார்-அன்றுமுதல் அது அகஸ்திய சங்கிதையென்னும் பெயரையுடையதாயிருக்கின்றது - அந்தச் சங்கிதையானது கேட்பவர்களுக்குப் பரமசிவனது திருவடிநிழலிற்பொருந்தும் பேரின்பமுத்தியைத் தருவதாகிய ஒருஸ்தலத்தைச்சொல்லுகின்றது —(எ-று) (௰௩)

அதிகவப்பதியாதெனிலாலவாய்கேட்க .... .. .. .. .. *
கதியளிப்பதென்றோதியசூதனைக்கதியின் . .......... .. *
மதியைவைத்தவரன்னதைப்பகரெனவந்த ....... .... .. *
விதியினிற்புகல்கின்றனன்வியாதன்மாணாக்கன் .. .... ... *

(இ-ள்) அதிகமகத்துவத்தையுடைய அந்தஸ்தலம் எதுவென்றுகேட்கில் திருவாலவாயென்பதாம்- அதுகேட்டமாத்திரத்தில் மோக்ஷத்தைத்தருவது, என்றுசொல்லிய சூதமுனிவரை நோக்கி மோக்ஷத்தில சிந்தையை வைத்திருக்கின்ற முனிவர்கள் அந்தஸ்தலத்தைச்சொல்லுமென்னப்பெரியோர்களது ஆட்சியாக வரப்பட்ட முறைமைப்படி வியாசமுனிவருடைய சிஷ்யனாகிய சூதமுனிவர் சொல்லுகின்றார்—(எ-று) (௰௪)

புதியதாமரைமேவியபழமறைப்புத்தேள் .... .... ... *
விதியினுற்கடுநடைப்பரிமகஞ்செய்வான்வேண்டிக் ...... *
கதியையமாய்ந்தவர்க்குதவுதண்டுறைகெழுகாசிப் .... . .. *
பதியின்மைத்தோடெய்தினன்பண்டொருவைகல் ...... *

(இ-ள்) புதியதாமரைமலர்மேல் வீற்றிருக்கும் பழமையா
இ[illegible]களுக்குரிய பிர்ம்மதேவன் முறைமையினால் வேக
[illegible] நடையையுடைய அசுவமேதயாகஞ்செய்ய விரும்பித்
த[illegible]த்தால் இருந்தவர்க்கு மோக்ஷத்தைத்தருகின்ற குளிர்ச்
சியுள்ள துறை[illegible]ந்திய காசிக்ஷேத்திரத்தில் பூர்வம் ஒரு
நாள் [illegible]புத்திரர்களுடன் சென்றான் —(எ-று) (௰௭)

அகத்தியன்வியாதமுனாரதன்சனகனாதிநான்முனிவர்கோதமனா
ர், சிலைத்தெளிவுணர்ந்தபராசரன்வாமதேவன்வான்மீகியேவ
சிட்டன், சகத்தியல்கடந்தசுகன்முதன்முனிவர்தம்மொடும்ப
ரிந்துவெம்பரிமா, மகத்தொழின்முடித்தவர்க்குள்ளமகி
ழ்வுறவழங்குதவழங்கா, ......................*

(இ-ள்) அகத்தியர்-வியாசர்-நாரதர்-சனகர்முதலாகிய நா
ன்குமுனிவர்களும், கௌதமர்-நூலினது முடிவானதெளிவி
னையுணர்ந்த பராசரர்-வாமதேவர்-வான்மீகர்-வசிஷ்டர்-உல
கத்தியல்லைக்கடந்த சுகர்முதலாகியமுனிவர்களோடிருந்து ப
ரித்து அசுவமேதயாகஞ்செய்து அவர்களுக்கு மனமகிழ்ச்சிய
டையக் கொடுக்கத்தக்கவைகளைக்கொடுத்து.—(எ-று) (௰௮)

சத்தியவுலகிற்சரோருகக்கிழவன்சார்ந்தபின் புலப்பகைசாய்த்
த வத்திருமுனிவரனைவருங்காசியடிகளையடைந்தனர் பணிந்து
முத்திமண்டபத்தினறமுதனான்கு மொழிந்தருள் மூர்த்திசன்
னிதியிற், பத்தியாயிருந்துநாரதமுனியைப்பார்த்தொருவினா
வுலாபகர்வார் ..............................*

(இ-ள்) சத்தியலோகத்தில் பிர்ம்மதேவன்போனபின்பு ஐம்
புலன்களாகிய பகையைவென்ற தவச்செல்வத்தையுடைய அ
ந்தமுனிவர்களெல்லாரும் காசிவிசுவநாதர் சன்னிதியில்போய்
ப்பணிந்து முத்திமண்டபத்தில் அறம்பொருளின்பம் வீடெ
ன்னும்நான்குபொருளையுஞ்சொல்லியருளிய தக்ஷிணாமூர்த்திச
ன்னிதியில் பத்தியினையுடையவர்களாயிருந்து நாரதமுனிவரை
ப்பார்த்துஒருவினாவைசொல்லுகின்றார்கள்.—(எ-று) (௰௯)

தலமுதன்மூன்றுஞ்சிறந்ததோர்சைவதலமெனாவென்னநாரத
ன்றான், கலைமுழுதுணர்ந்தசனற்குமாரன்பால் கற்றவன்வியாத
னுமவன்பால், வலமுறக்கேண்மினெனவவன்கதிர்வேனம்பிபா
ன்மறைமுதலனைத்து, மலமறவுணர்ந்தோன் குறுமுனியாகுமவ
னிடைக்கேண்மெனவிடுத்தான் ......................*

(இ-ள்) தலமுதலாகிய மூன்றுஞ்சிறந்ததாகிய ஒருசிவஸ்த
லஞ்சொல்லுமென்ன நாரதமுனிவரானவர் சாஸ்திரங்களையெ
ல்லாமுணர்ந்த சனற்குமாரமுனிவரிடத்தில் கற்றறிந்தவர் வி
யாசமுனிவர் அவரிடத்து நன்மைபொருந்தக் கேட்டுக்கொ
ண்ட அந்தவியாசமுனிவரானவர் - ஒளிபொருந்திய வேலாயுத
த்தையுடைய சுப்பிரமணியரிடத்தில வேதங்கள்முதலாகிய சா
ஸ்திரங்களையெல்லாம் கேட்டறிந்தவர் அகஸ்திய முனிவர் - அவ
ரிடத்தில் கேளுங்களென்று சொல்லுகிறார்.—(எ-று) தலமுதல்
மூன்றாவது - தலம், தீர்த்தம், மூர்த்தி என்னுமிம்மூன்றுமா
ம். நம்பி என்பது, ஆண்பாற்சிறந்தவன்பெயர். (உ௰)

மலயமாதவனையடைந்துகைதொழுதுவாழ்த்தி வாதாவிவில்வ
லனைக், கொலைபுரிதருமமூர்த்தியேவிந்தக்குன்றடக்கிய தவக்
குன்றே, யலைகடல்குடித்தவருட்பெருங் கடலேயருந்தமிழ்க்
கொண்டலேதென்பா, லுலைபெறநிறுத்துமேககனேயென்று
சுருதியாயிரமெனத்துதித்தார் ........................ *

(இ-ள்) பொதிகைமலையில் வீற்றிருக்கும்படியான அகஸ்
தியமுனிவரைநோக்கிக் கைகுவித்துத் தொழுது வாழ்த்தி வா
தாவி வில்வலனென்னு மசுரர்களை வதைசெய்த தருமமூர்த்தி
யே, விந்தகிரியை அடக்கிய தவக்குன்றே, அலைகின்ற நீரையு
டைய கடலைக்குடித்த பெரிதாகிய அருட்கடலே, அரிதாகியத
மிழ்க்கொண்டலே, தென்பூமியானது தராசுமுள்ளைப்போலச்
சமன்பெறநிறுத்திய ஆதாரமேயென்று பலசுருதிகள்போலத்
துதிசெய்தார்கள்.—(எ-று) சூரபன்மனுடைய தங்கையாகிய
அசமுகியின் புத்திரர்களான வில்வலன் வாதாவியென்னுமசுர
ர்களிருவரும் தாங்களிருக்குமிடத்துக்குச் சமீபமாக அகஸ்திய
முனிவர் வருவதைக்கண்டு இவரைக்கொல்வோமென்னும் எண்
ணங்கொண்டுவாதாவியென்பவன் ஆடாகிமலைச்சாரலில் மேய்
பவனைபோலிருந்தான் - அப்படியிருக்கையில் அகஸ்தியமுனிவ
ர்சமீபத்தில்வர வில்வலனென்பவன் முனிவேடங் கொண்டு
போயுபசாரஞ்செய்து அழைத்துவந்து அமுதுகொள்ள வே
ண்டுமென்று மிகுந்த பரிவுடன்சொல்லி மதுரமாக அன்ன
முதலானதுகளையெல்லாஞ் சமைத்து வாதாவியாகிய ஆட்டி
னை வதைசெய்து அதன்மாமிசத்தையும் பாகப்படுத்திப்படை
க்க அகஸ்தியமுனிவர் - இவர்கள் சூதையறியாமல் போசன
ஞ்செய்திருந்தார் - அப்படியிருக்கையில் வில்வலனென்பவ

ன் தன் எண்ணப்படி நிறைவேற்றுதற்காக வாதாபி வாவென்
றழைத்தான் அவன் உயிர்பெற்று இதோ வந்தேனெனக்கூவ-
அதனையறிந்த அகஸ்தியமுனிவரானவர் கோபங்கொண்டு இற
க்கக்கடவதென்று தம்முடைய கையினால வயிற்றினைத் தடவலு
ம் அந்தக்கொடியவன் மடிந்தான்- அதனையறிந்த வில்வலனென்
வன் ஒருதண்டமேந்திக்கொண்டு அகஸ்தியரை அடிக்கவந்தா
ன்- அவர் ஒருதருப்பையைப் பாசுபதாஸ்திரமாகப் பாவனை
செய்து அவன்மேலேவினார்- அதுவில்வலனுயிரை உண்டு
விட்டது.

(அதற்குச்செய்யுள்-காந்தத்தில்-வாதாவிவில்வலன்படலம்.)
ஊன்கொண்டகறியாகிநுகர்வுற்றவாதாவியுயிர்போகியுண்டவி
யல்பே, தான்கொண்டுமுடிகென்றுதூடரத்தையொருகாலேதமி
ழ்வல்லமுனிதடவலும், கான்கொண்டவெறிமண்டுசிறுபுன்புத
த்போலவாகழுடியோனுமுடிவாகவே, வான்தொண்டனெனவங்
கன்முன்னின்றவன்றம்பி மாய்வுற்றதுன்னிவருவான், மெய்க்
கொணர்ந்துதான் முனருகுக்கொண்டுமுனிதன்னை வெகுண்டுவெரு
ந்தண்டமசனைக், கைகொண்டுகொலையுன்னிவருபோதின் மு
னிவன் கரத்துற்றருப்பையொன்றை, மைக்கண்டர்படையாக
நினைந்துவிடவில்வலன்றனுமடிவெய்தலும், அக்கண்டகக்
கள்வருறைவுற்றவிடநீங்கியப்பாலகன்றனனே ..... .. *

(விந்தகிரியை அடக்கியவிவரம்.)

அகஸ்தியமுனிவரானவர்- பொதிகைமலைக்குப் போம்போது
காசிவிசுவநாதரைத் தரிசனஞ்செய்து அப்புறஞ்சென்று வி
ந்தகிரியானது வளர்ந்திருக்கக்கண்டு அதன சமீபத்திற்போ
ய் நின்று விந்தகிரியே நான் பொதிகைக்குப் போகவேண்டு
மாதலால் சற்று வழிவிடென்று சொல்ல அம்மலையானது சூரி
யசந்திரர்கள் போவதற்கும் வழியில்லாமல் திரிவிக்கிரமாவதா
ரம்போல் நின்ற யான் மிகவுங்குறுகிய உனக்கு வழிவிடுகி
றேனோ போபோ என்றது- அதைக்கேட்ட அகஸ்தியர் கோபங்
கொண்டு பரமசிவனைத்தியானித்துத்தமதுகையை யாகாயவ
ளாவில் நீட்டி விந்தகிரியின் முடிமேல்வைத்து அழுத்தினார்-
அப்படி அழுத்தினவுடன் அம்மலையானது பூமிக்குள் அழுந்தி
ப் பாதாளலோகவளாயில் போய்விட்டது.

(அதற்குச்செய்யுள்-விந்தம்பிலம்புகு படலம்.)

அற்புதமயசர்கொள்ளுவாற்றவுங்குறியோயான் விந்த ..... .. *
வெற்பினதும்பர்தன்னின்மீயுயர்குடங்கைசேர்த்தி..... ...*

வற்புறனுன்றவல்லேமற்றதுபுவிக்கட்டாழ்ந்து.. ........*
சொற்பிலப்புகுந்துசேடன்றூன்னிலையுற்றதன்றே .. (௨௧)

மூவகைச்சிறப்புமுள்ளதோர்தானமொழிகெனமுகமலர்ந்தரு
ள்கூர்ந், தியானையுமுணர்ந்தோன் முத்திமண்டபத்தி லிரு
தொகையின்வந்திறக்குந், சேவல்கடமையு மைங்கரன்றனையு
ஞ்சேவலங்கொடியுடைவடிவேற், காவலன்றனையும்வடதிழலம
ர்ந்தகண்ணுதற்பரனையும்பணியா .... ......... ....*

(இ-ள்) தலவிசேடம், தீர்த்தவிசேடம், மூர்த்திவிசேட
ம் என்னு இம்மூன்றுவகைச் சிறப்புமுள்ளதாகிய ஒரு ஸ்தல
த்தைச்சொல்லுமென்ன எல்லாநூல்களையுமறிந்த அகஸ்தியமுனி
வாரணவர் கிருபைமிகுந்து முகமலர்ச்சியுடன் முத்திமண்டப
த்தில் நாலென்னுந்தொகையுடன் வந்திறக்குஞ் சேவல்களையும்
விநாயகமூர்த்தியையுங் கோழிக்கொடியராய் வடிவேலா
யுதத்தையுடைய சுப்பிரமணியரையும், ஆலமரத்தினிழலில் வீ
ற்றிருக்கும் நெற்றிக்கண்ணையுடைய தக்ஷிணாமூர்த்தியையும்,
பணிந்து—(எ-று) (௨௨)

(கோழியின்விவரம்.)

கீகடதேசத்திலிருக்கும் ஒருபிராமணன் சண்டாளன்-தானமா
கக்கொடுத்த திரவியத்தைப்பெற்றுக்கொண்டதினால் அவிட
த்திலிருக்கும் பிராமணர்களெல்லாரும் இவனிசபையில் தா
னம்வாங்கினபடியினாலே இவனும் நீசனேயென்று தூரத்திவி
ட-அந்தத்தேசம்விட்டுக் காசிக்கங்கையில் ஸ்நானஞ்செய்து
போகின்றவர்கள் பின்தொடர்ந்துபோய் ஒருகாட்டிலேபோகு
ந்தருதலும் அவிடத்தில் சிலவேடர்கள்வந்து அவனையும் அவ
ன் பெண்சாதியையும் பிள்ளைகளிருவரையுங் கொலைசெய்தார்க
ள்-அப்போது காசியைத் தியானித்தபடியினாலே பூர்வஞாப
கத்துடன் கோழியாய்ப்பிறந்தான்-அவன்மனைவி, பெட்டையு
ம்பிள்ளைகள் குஞ்சுகளுமானார்கள் - அப்படியிருக்கும் நாளில்
ஒருநாள் காசிக்குப்போகின்றவர்களுடன் தொடர்ந்து சென்
று முத்திமண்டபத்திலேறி அந்தக்கோழிகளிறந்தமையால் க
யிலாயகிரியிற்போய்ச் சேர்ந்தன-அன்றுமுதல் அந்தமண்ட
பத்துக்குக்குக்குடமண்டபமென்றும் ஒருபெயருண்டாயது.

அதற்குச்செய்யுள்-காசிகாண்டத்தில்-

(முத்திமண்டபத்தின் கதையுரைத்த அத்தியாயம்.)

கரும்புகுதட்டிச்சாறொழுகுங்கடைவாய்மேதிகண்படுக்கும்*

இருந்தன்புலன்றுங்காசிதனையிதயத்தெண்ணியிறந்ததனால் *
வரம்பிற்சாலிமுத்துயிர்க்கும்வயற்கீடத்தின்முதியவத்தில் .*
திருந்துமுணர்வோடவன்ரத்தச்சூட்டுச்சேவலாயினதனால் ..*
மக்களிருவர்பார்ப்பாகமடமானோக்கிபேடாக .... .....*
ஒக்கவுறையுநாளதனிற்காசிக்கேகுமவரோடுஞ்......... ... *
செக்கர்நிறத்தகூர்வாயசூட்டுச்சேவல்பெடைதொடர......*
தொக்கபார்ப்பிரெண்டுங்காசித்தொல்லைநகரிற்சென்றதுவே.*

செங்கட்கயவாய்மோட்டெருமைசெழுநீர்க்குவளைப்போதரு
பங்கப்பழனந்துளைந்துழக்கப்பண்ணிலமுழங்குங்காசியினில்(நந்திப்
திங்கடவழ்ந்துமுடியுரிஞ்சுமுத்திமாடத்திடைசேர ......*
அங்கணடைந்துபடுபெருநற்கயிலைவளையினடையுமால் ....*
அன்றுமுதலாக்குக்குடமண்டபமென்றேதுமகனுலகம்...*
மன்றவிதனைக்கேட்டோர்கண்மருள்மூத்தின்தனிலடைவார் .*
என்றுகூறத்திருநெடுமாலிதயநெகிழவிழிபனிப்பக்........*
குன்றவிலலிசேவடிக்கீழ்க்குழைந்துகுழைந்துதொழுதனால்

அங்கயற்கண்ணிதன்னையுமெந்தையாலவாயானையுமிதய, பங்கயத்திருத்திநிட்டையிலிருந்துபரவசமடைந்துபார்ப்பதிக்குச், சங்கரனருளிச்செய்தசங்கிதையைத்தாருக னுடலிரண்டாகச், செங்கைவேல்விடுத்தசேவகனெனக்குத்தெருட்டினனை யசங்கிதையில் .........................*

(இ-ள்) அங்கயற்கண்ணியையும் எம்மையாளுகிய சோமசுந்தரக்கடவுளையும் தமது மனத்தாமரைமலரிலிருத்தி நிஷ்டையிலிருந்து பரவசமாய்ப் பார்வதிதேவியாருக்குச் சங்கரனருளிச்செய்த சங்கிதையைத் தாருகாசுரனுடைய உடல் இரண்டு துண்டுபடச் செங்கைவேலைவிடுத்த சுப்பிரமணியக்கடவுள் எனக்கு அருளிச்செய்தார் அந்தச்சங்கிதையில்—(எ-று). (௨௩)

பெறற்கருந்தவஞ்செய்தகந்தெளிந்தரிதிற்பெறுங்கதிசேட்பவர்க்கெளிதா, யுறப்படுந்தலநீர்விளையமுஞ்சிறப்புமுள்ள தெத்தலத்தினுங்கழிந்த, சிறப்பினுங்கண்ணெண் டிருவிளையாடல் செய்தருள்வடிவெடுத்தென்று, மறைப்பொருள்விளங்குமால வாயதனைமண்ணின்மேற்சிவனுலகெனலாம் ............*

(இ-ள்) பெறுதற்கரிய தவஞ்செய்து மனந்தெளிந்து அரிதாகப்பெறத்தக்கதாகிய மோக்ஷத்தைக் கேட்பவர்களுக்கு

எளிதாகத் தரத்தக்கது- நீங்கள் வினாவிய மூன்றுவகைச்சிறப்புமுள்ள ஸ்தலம்- எந்தஸ்தலத்திலும் மிகுந்தசிறப்புடைய அந்தஸ்தலத்தில் அறுபத்துநாலு திருவிளையாடல்செய்து திருவருளை திருமேனியாகக்கொண்டு வேதப்பொருளாகிய பரமசிவம் விளக்கமுற்றிருக்கின்றது- அது திருவாலவாயென்னும் பெயரையுடையது- அதனை இவ்வுலகத்திருக்கும் சிவனுலகமென்றுசொல்லும். (எ-று) சங்கிதையில் சொல்லுமெனக் கூட்டுக. மூன்றுவகைச்சிறப்புமுள்ளஸ்தலம் கேட்பவர்களுக்குமோக்ஷம் எளிதிற்பொருந்தப்படும் ஸ்தலமெனப் பொருள்கொள்க.

அந்தலத்தினையமூவகைச்சிறப்புமளவிலாவுயிர்க்கெலாங் கருணை, வைத்தவன்செய்ததிருவிளையாட்டும்வரையுரங்கிழியவேலெடுத்த, வித்தகனெனக்குவிளம்பியவாறே விளம்புவனுமக்கெனவந்த, வுத்தமமுனிவர்யாவருங்கேட்க வுணர்த்துவான்கடலெல்லாமுண்டான் .... *

(இ-ள்) அப்படிப்பட்ட அந்தஸ்தலத்தின்மூன்றுவகைச்சிறப்பினையும் அளவிலாதஉயிர்களிடத்தெல்லாங்கருணைவைத்திருக்கும் பரமசிவஞ்செய்தருளிய திருவிளையாடலையுங்கிரவுஞ்சகிரியின் மார்புகிழிய வேலாயுதத்தைச்செலுத்தியருளிய சுப்பிரமணியக்கடவுள் எனக்கு அருளிச்செய்த முறைமைப்படி உங்களுக்குச் சொல்லுகிறேனென்று அந்த உத்தமமுனிவர்கள் யாவருங்கேட்கும்படி கடல்நீரையெல்லாம் உண்ட அகஸ்தியமுனிவர் சொல்லுகின்றார்.—(எ-று) (௨௫)

புராணவரலாறுமுற்றிற்று.

ஆகப்படலம்-௫-க்குத், திருவிருத்தம்-௨௩௧.

# தலவிசேடம்.

நாட்டமொருமூன்றுடைய நாயகனுக்கன்புடையீர் நயந்துநீவிர், கேட்டதலமீண்டுரைத்த திருவாலவாயதனுட் கிளைத்துப்பொன்னந், தோட்டலர்தாமரைமுளைத்ததொருகடமுஞ்சுந்தரச்செஞ்சோதிஞான, விட்டமெனமுளைத்தசிவலிங்கமுமொன்றுரைதின்னுமிசைப்பக்கேண்மின் .... *

(௧)

(இ-ள்) திரிநேத்திரங்களையுடையபரமசிவனுக்கு அன்புடையமுனிவர்களே நீங்கள் விரும்பிக்கேட்ட தலமாவது இப்போதுசொல்லிய திருவாலவாயாம் அந்தத்தலத்தினிடத்தில் நிறைந்த பொன்னிறமாகிய அழகிய இதழ்களையுடையதாய் மலராநின்ற தாமரைமுளைத்த ஒருதடாகமும் அழகையுடையசெஞ்சோதி சொரூபமாகிய ஞானக்கூட்டம்போல உண்டாகியஒரு சிவலிங்கமுமிருக்கின்றது - இன்னமுஞ் சொல்லக்கேளுங்கள்.—(எ-று) (௪)

திருவாலவாய்க்கிணையாமொருதலமுந்தெய்வமணஞ்செய்யப்
பூத்த, மருவார்பொற்கமலநிகர்தீர்த்தமுமத்தீர்த்தத்தின்மருங்
கின் ஞான, வுருவாகியுறைசோமசுந்தரன்போலிகபரந்தந்துல
வாவீடு, தருவானுமூப்புவனத்திலுமில்லை யுண்மையிதுசாற்றி
னமன்றே .... .... .... .... .. .... .... ..*

(இ-ள்) திருவாலவாய்க்கொப்பாகுமொருஸ்தலமும்தெய்வத்தன்மைவிளங்கப்பூத்ததாகிய வாசனைநிறைந்தபொற்றாமரைத்தீர்த்தத்தையொத்ததீர்த்தமும் அந்தத்தீர்த்தத்தினருகில் ஞானசொரூபங்கொண்டு வீற்றிராநின்ற சோமசுந்தரக்கடவுள் போல இம்மைப்பயனையும்மறுமைப்பயனையும்அருளிச்செய்து அழியாதமோக்ஷத்தையும்அருளிச்செய்கின்றகடவுளும்திரிலோகங்களிலுமில்லைசொல்லுமிடத்துஇதுசத்தியமாம்.(எ-று)

அவ்வகையமூன்றின்முதற்றலப்பெருமைதனைச் சுருக்கியறை
யக்கேண்மி, னெவ்வகைய வுலகத்துந்தருமதலமதிகமவற்றி
லாத, சைவதலமதிகமவற்றறுபத்தெட்டதிகமவைதமிலொட்
டுத், தெய்வதலமதிகமவற்றதிகதலநான்கவற்றைச்செப்பக்கே
ண்மின் .... .. .. ... .... .... .. .. .. .. ..*

(இ-ள்) அத்தன்மையாகியஸ்தலமுதல்மூன்றில் முன்னதாகஸ்தலவிசேஷத்தைச் சுருக்கிச் சொல்லக்கேளுங்கள்திரிலோகத்திலும்தருமஸ்தலங்கள் அதிகமாம்அவைகளுக்குள்அழிவில்லாதசிவஸ்தலங்கள் அதிகமாம்அவைகளுக்குள்அறுபத்தெட்டுஸ்தலங்களதிகமாம் அந்த அறுபத்தெட்டுக்குள் தெய்வத்தன்மையையுடைய பதினாறுஸ்தலமதிகமாம் அந்தப்பதினாறுக்குள் நான்குஸ்தலமதிகமாம் அந்தநான்குஸ்தலங்களையும்சொல்லக்கேளுங்கள்.—(எ-று) (௫)

அன்னமலிவயற்புலியூர்காசிநகர்காளத்தியாலவாயா .... *
மின்னவரம்பதினான்கிற்றிருவாலவாயதிகமெவ்வாறென்னின்,

மின்னவிரம்பலங்காணக்காசிநகர்வதிந்திறக்கவியன்காளத்திப்
பொன்னகரம்பத்தியினல்வழிபாடுசெயவளிக்கும்போகம்வீடு

(இ-ள்) அன்னங்கள் நிறைந்தவயல்களையுடைய-சிதம்பரம் காசி-திருக்காளத்தி-திருவாலவாயென்னும்ஸ்தலங்களாம் வளப்பம்பொருந்திய இந்நான்குஸ்தலங்களில்திருவாலவாயானது அதிகமாம் அது எவ்வாறென்னில் ஒளிவிளங்குகின்ற சிதம்பரமானது தரிசிப்பவர்களுக்கும் காசிநகரமானது அதனிடத்தில்வாசஞ்செய்து இறப்பவர்களுக்கும் மேன்மைபொருந்திய திருக்காளத்தியென்னும் அழகியஸ்தலமானது பத்தியுடனே ஆராதனைசெய்கின்றவர்களுக்கும் போகத்தையு மோக்ஷத்தையுங்கொடுக்கும்.—(எ-று) (௪)

அறந்தழையுந்திருவாலவாய்கேட்டவுடன்போக மளிக்குமீண்
டு, பிறந்திறவாப்பேரின்பக்கதியளிக்குமிதுவன்றிப்பிறழாதெ
ங்கு, நிறைந்தபரனெத்தலமும்படைப்பானித்தலத்தைமுத
லிருப்பித்தங்க, ணுறைந்தருளினனன்றியின்னமுளததன்பெரு
மையுணாட்டக்கேண்மின் .... .... .... .. .... ..*

(இ-ள்) தருமந்தழைந்ததிருவாலவாயானது தன்பெயரைக் கேட்பவர்களுக்குப்போகத்தைக்கொடுக்கும்- மறுபடியும்பிறந்திறவாத பேரின்பக்கதியைக்கொடுக்கும். இதுவுமல்லாமல் மாறுபடாமலெங்கும் பரிபூரணமாய்நிறைந்திருக்கும் பரமசிவன் எல்லாஸ்தலங்களையுஞ் சிருஷ்டிப்பதற்காக இந்தஸ்தலத்தைமுன்னே சிருஷ்டித்து அவ்விடத்திலே தானும் வாசமாயிருந்தார், இன்னமும் அதன் பெருமை அதிகமாயிருக்கின்றது- அதனையுஞ் சொல்லுகிறேன் கேளுங்கள். (எ-று) (௫)

திருவாலவாயென்றுகேட்டவரேயறம்பெறுவர் செல்வமோங்
குந், திருவாலவாயென்றுநினைத்தவரேபொருளடைவர் தேவ
தேவைத், திருவாலவாயிடத்துக்கண்டவரேயின்பநலஞ்சேர்வ
ரொன்றுந், திருவாலவாயிடத்துவதிந்தவரேவீட்டுநெறிசேர்
வாரன்றே .. .... .. .. .. .. .. ... ... ... ... *

(இ-ள்) திருவாலவாயென்று ஒருவர்சொல்லக்கேட்டவர்களே அறப்பயனைப் பெறுவார்கள் செல்வமிகுந்ததிருவாலவாயென்று நினைத்தவர்களே பொருட்பயனையடைவார்கள் திருவாலவாயிடத்தில் வீற்றிருக்கும் சொக்கலிங்கமூர்த்தியைத்தரி

சித்தவர்களே இன்பப்பயனை அடைவார்கள் - திருவாலவாயிடத்து வாசமாயிருந்தவர்களே மோக்ஷநெறியை யடைவார்கள்.— (எ-று) (சு)

சுரநதிசூழ்காசிமுதற்பதிமறுமைக்கதியளிக்குந் தூநீர்வையை,
வரநதிசூழ்திருவாலவாய்சீவன்முத்திதரும்வதிமேலோர்க்கீது ..*
திரமதிகம்பரகதியும்பின்கொடுக்குமாதலினிச்சீவன்முத்தி..*
புரமதிகமென்பதெவனதற்கதுவேயொப்பாமெப்புவனத்
துளொன்றும் .... .... .... .... .... .... .... .. *

(இ-ள்) தேவநதியாகிய கங்கைசூழ்ந்திராநின்ற காசிமுதலான சிவஸ்தலங்கள் சுவர்க்கமுதலாகிய கதிகளைக்கொடுக்கும் பரிசுத்தமாகியசலத்தையுடையதாய்மேன்மைபொருந்திய வையைநதி சூழ்ந்த திருவாலவாயானது தன்னிடத்தில் வாசஞ்செய்பவர்களுக்குச்சீவன்முத்தியைக்கொடுக்கும் - இதுநிச்சயம்பின்பு அதிகமாகப் பரமுத்தியையுங்கொடுக்கும் ஆதலால் இந்தச்சீவன்முத்திஸ்தலம் அதிகமென்று சொல்லுவது எவ்வாறு அதற்குச்சமானமாகியஸ்தலம்) எவ்வுலகத்திலுமில்லை அதற்கு அதுவே ஒப்பாகும்.— (எ-று) அதிகமென்று நாம்சொல்லவேண்டுவதில்லையென்பது-கருத்து. (எ)

ஆதலினிப் பதிவிட்டுப் பிறபதியிற்போய்நோற்போ ரங்கை
கொண்ட, தேவரானமுதேய்ப்பத்தித்திக்கத் தேம்பெய்து
செய்ததீம்பா, லோதனத்தைக்கைவிட்டுப்புறங்கையை நக்கு
வாரொப்பாரிந்த, மாதலத்தின்பெருமையிதனையாவரேயளவிட்
டுமுத்தற்பாலார் .... .. .. .... .. .. .... .. .. *

(இ-ள்) ஆதலால் இந்தத்தலத்தில் தவஞ்செய்யாமல்வேறொரு ஸ்தலத்திலேபோய்த் தவஞ்செய்கின்றவர்கள் குளிர்ச்சியாகிய தேவாமிர்தம்போல்மதுரிக்கத்தக்கதாகத் தேன்கலந்து சமைத்ததித்திக்கும்பாற்சோறு உள்ளங்கையிலிருக்க அதனையுண்ணாமல் புறங்கையைநக்குகின்றவர்களையொப்பாவர்கள் - இந்தமகத்தாகியதலத்தின்பெருமையை யார் அளவிட்டுச் சொல்லத்தக்கவர்கள்.— (எ-று) (அ)

மற்றையதலங்கடம்மிற்பரிமகம்வாசபேய .... .... ..*
மற்றமில்சோடசாகமக்கினிட்டோமம்யார்க்கு .... .... *
முற்றருமிராசசூயமுதன்மகமுடித்தபேறுஞ் .... .... *
செற்றமிறரிசபூர்ணமுதலிட்டிசெய்தபேறும் .. .. .... *

(இ-ள்) மற்றஸ்தலங்களில் அசுவமேதம்-வாசபேயம்- சோ

ர்வில்லாத சோடசாகம் - அக்கினிஷ்டோமம் - ஆர்க்குஞ்செய்த ற்கரிய இராஜசூயம் முதலாகிய யாகங்களைச் செய்து முடித்தலால் அடையும் பேறும் மறையில்லாத தரிசபூர்ணம் முதலாகிய இஷ்டிகள் செய்தலால் கிடைக்கும் பேறும்.—(எ-று) (௯)

எள்ளிழுதன்னங்கன்னிபரிவுரிதேரியானையில்லம் .. .. .. *
வெள்ளிபான்பொன்பூணுடைவிளைவொடுபழனமுன்றாத்... *
தள்ளருமடிமையாந்தானங்கள்செய்தபேறும் .... .. .. *
வள்ளறன்காசியாதிபதிகளில்வதிந்தபேறும் .. .... .. . *

(இ-ள்) எள்ளு - நெய் - சாதம் - கன்னிகை - குதிரை - தேர் - யானை - வீடு - வெள்ளி - பசு - பொன் - ஆபரணம் - வஸ்திரம் - விளைச்சலுடன் வயல்கள் - நினைத்தற்குத்தகரிய அடிமை முதலாகச் சொல்லப்பட்ட தானங்கள் செய்வதால் கிடைக்கும் பேறும் பரமசிவன் வீற்றிராநின்ற காசிமுதலாகிய ஸ்தலங்களில் வாசஞ்செய்வதால் கிடைக்கும் பேறும் —(எ-று) (௰)

கங்கைகாளிந்திவாணிகாவிரிகன்னவேணி .... ... .. . *
துங்கபத்திரிதீம்பாலிதூயதண்பொருனைமுற்சொச். .. .. *
சங்கையினதிகண்முற்றுமாடியதவத்தின்பேறு .... .. . *
மங்கலமதுரைதன்னில்வைகலும்வதிந்தோர்க்கெய்தும் ... *

(இ-ள்) கங்கை - காளிந்தி - சரஸ்வதி - காவிரி - கன்னவேணி துங்கபத்திரி - மதுரமுள்ளபாலி - பரிசுத்தமாகிய குளிர்ச்சிபொருந்திய தாமிரபர்ணி முதலாகச் சொல்லப்பட்ட சங்கையில்லாத நதிகளிலெல்லாம் ஸ்நானஞ்செய்த தவத்தினால் கிடைக்கும் பேறும் நன்மையையுடைய மதுரையில் நாடோறும் வாசஞ்செய்பவர்களுக்குக் கிடைக்கும்.—(எ-று) (௰௧)

அன்னியதலங்கடம்மிலாற்றியபிரமகத்தி .... .... .... *
பொன்னினைக்களவுசெய்தல்கள்ளுண்டல்புனிதவாசான் .. *
பன்னியைப்புணர்தலின்னபாதகமனைத்துமென்றுந் .... *
தன்னிகராலவாயில்வதிபவர்தமைவிட்டேகும் .... .. .. *

(இ-ள்) மற்றஸ்தலங்களிற் செய்த பிரமகத்தி - பொன்னினைக்களவுசெய்தல் - மதுபானஞ்செய்தல் - பரிசுத்தமுள்ள குருபத்தினியைப்புணர்தல் என்னும் இந்தப்பாதகங்களெல்லாம் தனக்குத்தானே ஒப்பாகிய திருவாலவாயென்னுந் தலத்திலெந்நாளும் வாசஞ்செய்கின்றவர்களை விட்டு நீங்கும்.—(எ-று)

மற்றையதலத்திற்சாந்திராயணமதியந்தோறு .... .... *
முற்றபேறிங்குக்கங்குலுண்டியாலடைபேறாகு ..... .. *
மற்றையதலத்தின்மாதப்பட்டினிப்பலத்தின்பேறிங் .... *
குற்றொருநவைகலுண்டியொழிந்தவர்பெறும்பேறாகும் .... *

(இ-ள்) மற்றஸ்தலங்களில் மாதந்தோறும் சாந்திராயண விரதம் அனுஷ்டித்தலால் வரும்பேறு - இந்தஸ்தலத்தில் இராத்திரியில் ஆகாரங்கொள்ளத்தக்கதாகிய விரதத்தினால் அடைகின்ற பேறாகும் - மற்றஸ்தலங்களில் மாத உபவாச விரதத்தினால் வருகிறபேறு இந்தஸ்தலத்தில் ஒருதினம்வாசஞ்செய்து ஆகாரமில்லாமல் விரதம் அனுஷ்டிப்பவர்கள் அடையும் பேறாகும்.— எ-று) (௰௩)

அயனகரடைந்துநான்குதிங்களேனாற்றும்பேறிவ் .. . *
வியனகரடைந்துநோற்குமட்டமிவிரதநல்கு .. .. .. - *
மயனகரெய்தியாறுதிங்களேனாற்றும்பேறிவ் .. .. .. *
வியனகர்ச்சோமவாரவிரதமேயளிக்குமன்றே .... .. .. *

(இ-ள்) மற்றஸ்தலங்களிற்சென்றுநான்குமாதம் விரதம் அனுஷ்டிக்கும் பேறுகளை இந்த மேன்மைபொருந்திய தலத்திற்சென்று அனுஷ்டிக்கும் அஷ்டமிவிரதமானதுகொடுக்கும் - மற்றஸ்தலங்களிற் சென்று ஆறுமாதம் விரதம் அனுஷ்டிப்பவர்கள் அடையும்பேறுகளை இந்த மேன்மைபொருந்திய திருவாலவாயில் அனுஷ்டிக்கும் சோமவாரவிரதமானது கொடுக்கும்.—(எ-று) (௰௪)

ஏனையதலத்திலோராண்டுணவொழிந்தியற்றுநோன்பா .. *
லானபேறிங்குநோற்குஞ்சிவனிராவளிக்குமிங்கே .... .. *
யூனவைம்பொறியும்வென்றோன்முப்பொழுதுண்டுவைகித் - *
தானமர்ந்தாலுங்காலுண்டியற்றுமாதவத்தோனாகும் .. .. *

(இ-ள்) மற்றஸ்தலங்களில்ஒருவருஷம்ஆகாரம்நீங்கிச்செய்யும் விரதத்தினால் உண்டாகும் பேறுகளை இந்தஸ்தலத்தில் அனுஷ்டிக்கும் சிவராத்திரி விரதமானதுகொடுக்கும் குற்றமுள்ளதாகிய ஐம்பொறிகளையும்வென்ற தபசியானவன் மூன்றுகாலமும் போசனஞ்செய்து இந்தஸ்தலத்திலேதானே வாசமாயிருந்தாலும் வாய்வுபக்ஷணஞ்செய்து கொண்டு மேன்மையாகிய தவத்தைச்செய்யுந் தன்மையையுடையவனாவன் — (எ-று) (௰௫)

இந்தநான்மாடமோங்குமாலவாயிடத்தியாரேனு .. .. .. *
மந்தணர்தமக்கோர்முட்டியருந்தவர்தமக்கோர்பிச்சை .. *
தந்தவர்புறம்புசெய்தசோடசதானந்தம்மால் .. .... .. *
வந்தபேறடைவர்பல்வேறுரைப்பதென்மறியான்மிக்கீர் .. *

(இ-ள்) இந்த நான்மாடமென்னும் பெயரோடும் ஓங்கிய திருவாலவாயென்னுந் தலத்தில் எவர்களே யானாலும் பிராமணர்களுக்கு ஒருபிடி அரிசியும் அரிதாகிய தபசிகளுக்கு ஒருபிச்சையுங் கொடுத்தவர்கள் மற்றைய தலங்களிற் செய்த சோடசதானங்களால் வந்தபேறுகளை அடைவார்கள் விவேகத்தினால் மிகுந்தமுனிவர்களே இனி நாம்பலபலவாக வெவ்வேறு காரியங்களையெடுத்துச் சொல்லத்தக்கதுயாது.—(எ-று) (௰௬)

பல்வகைத்தலங்களெல்லாம்வைகியபயனுமென்றும் .... *
பல்வகைத்தீர்த்தமெல்லாமாடியபயனுமென்றும் .. .. .*
பல்வகைத்தானமெல்லாநல்கியபயனுமென்றும் .. .. .... *
பல்வகைத்தானபூசைபண்ணியதவத்தின்பேறும் .... .... *

(இ-ள்) பலவகையாகிய தலங்களிலெல்லாம் எந்நாளும்வாசஞ்செய்பவர்கள் அடையும் பலன்களையும் பலவகையாகிய தீர்த்தங்களிலெல்லாம் எந்நாளும் ஸ்நானஞ் செய்தலால்வரும் பயன்களையும் அந்த இடங்களில்பலவகையாகிய தானங்களையெல்லாம் நாள்தோறுங்கொடுத்தலாலுண்டாகும்பயன்களையும் எந்நாளும்பலவகையாகிய பூசைகளைச்செய்த தவத்தினாலுண்டாகும் பயன்களையும்.—(எ-று) (௰௭)

பல்வகைத்தவங்களெல்லாமுற்றியபயனுந்தூய .. , ...... *
பல்வகைமந்திரத்திலெய்தியபயனுநூலின் .. .. ..... .. *
பல்வகைக்கேள்வியெல்லாமாய்ந்துணர்பயனும்யோகம் .. *
பல்வகைஞானமெல்லாம்பயின்றுணர்ந்தடங்கும்பேறும் . *

(இ-ள்) பலவகையாகிய தவங்களையெல்லாம் செய்தலால் உண்டாகும் பயன்களையும் பரிசுத்தமாகிய பலமந்திரங்களால் உண்டாகும் பயன்களையும் சாஸ்திரங்களின்பலவகையாகியகேள்விகளையெல்லாம் ஆராய்ந்தறிகிற பயன்களையும் பலவகை யோகங்களையும் பயின்று ஞானநிலையை உணர்ந்து அடங்கும் பயன்களையும்.—(எ-று) (௰௮)

அனையதொல்பதியிலென்றும்வைகுவோரடைவரொன்றோ .. *
வினையதொல்பதிக்குநேர்வேறில்லையிப்பதியின்மேன்மை .. *

தனையறிபவராரீசனென்றறியாதலாலே ............ *
வினையைவெல்பவனங்கெய்திவதிவதேவேண்டுமாதோ ....*

(இ-ள்) அந்தப்பழமையாகிய திருவாலவாயில் எந்நாளும் வாசமாயிருப்பவர்கள் அடைவார்கள் என்றால் இத்தன்மையுள்ள பழமையாகிய ஸ்தலத்துக்கு ஒப்பானதொன்றுமில்லை இந்தத்தலத்தின் பெருமையையறிகின்றவர்கள் யார் - பரமசிவனென்றுணருங்கள் - ஆதலால் தீவினையை வெல்லவேண்டுமென்னும் கருத்துடையவன் அந்தஸ்தலத்திற்சென்று வாசமாயிருக்கவேண்டும்.—(எ-று) (௰௬)

(வேறு)

கைத்தலநான்கிரண்டுடையமலர்க்கடவுள்மேலொருநாட்கயிலையாதி, யெத்தலமுமொருதுலையிட்டித்தலமுமொருதுலையிட்டிரண்டுந்தூக்கி, யுத்தமமாந்திருவாலவாய்மிகவுங்கனத்ததுகண்டிலகின்மேலா; வைத்தலமிதுவென்றுவிதன்பெருமையாவரோவழுத்தற்பாலார் ....... *

(இ-ள்) எட்டுக்கைகளையுடையபிரமதேவன் முன்னொருநாள் கைலாசமுதலாகிய ஸ்தலங்களையெல்லாம் ஒருதராசிலிட்டு இந்தஸ்தலத்தையும் ஒருதராசிலிட்டு இரண்டையுந்தூக்கி உத்தமமாம் திருவாலவாயானது மிகவும் கனத்திருந்ததைக்கண்டு திரிலோகங்களினும் மேலாகச்சொல்லப்பட்ட தலமிதுவேயென்று நிச்சயித்தான் ஆதலால் இதன்பெருமையை எவர்கள் எடுத்துச் சொல்லத்தக்கவர்கள்.—(எ-று) (௨௰)

அத்திருமாநகரின்பேர் சிவநகரங்கடம்பவனமமர்ந்தோர்சீவன், முத்திபுரங்கன்னிபுரந்திருவாலவாய்மதுரைமுடியாஞானம், புத்திதரும்பூவுலகிற்சிவலோகஞ்சமட்டிவிச்சாபுரந்தென்கூடல், பத்திதருதுவாதசாந்தத்தலமென்பேர்தகவினாற்பகர்வர்நல்லோர்

(இ-ள்) செல்வமும் பெருமையுமுள்ள அந்தத்தலத்தின் பெயர் சிவநகரம் கடம்பவனம் வாசஞ்செய்கின்றவர்கள் சீவன்முத்தியை அடையத்தக்க சீவன்முத்திநகரம் கன்னிபுரம் திருவாலவாய் மதுரை அழியாதஞானத்தையும் போகத்தையுந்தருகின்றபூலோகத்திலிருக்குஞ் சிவலோகம் சமட்டிவிச்சாபுரம் தென்னாட்டிலிருக்கும் கூடல் பத்தியைத்தருகின்ற துவாதசாந்தத்தலம் என்று ஒவ்வொருதகுதியினால் நல்லோர்கள் சொல்வார்கள்.—(எ-று) (௨௧)

என்றுதலச்சிறப்புரைத்தகுறுமுனிவனெதிரறவோரிறும்பூதெய்தி;நன்றுதலப்பெருமையருள்செய்தனைகேட்டுடலெடுத்தநயப்பாடெல்லா, மின்றடைந்தேமினிச்சுவணபுண்டரிகச்சிறப்பதனையிசைத்தியென்னக், குன்றமடக்கியகருணைக்குன்றனையான்வரன்முறையாற்கூறுகின்றான் ...................*

(இ-ள்) என்று தலமகிமையைச்சொல்லிய அகஸ்தியமுனிவனெதிரில் மற்ற முனிவர்கள் ஆச்சரியமடைந்து தலப்பெருமையைவிசேஷமாக அருளிச்செய்தீர் அதனைக்கேட்டு இவ்வுடலெடுத்த நன்மையையெல்லாம் இன்று அடைந்தோம். இனிப்பொற்றாமரையின் சிறப்பினை அருளிச்செய்யுமென்ன விந்தகிரியை அடக்கிய கிருபைக்குன்றத்தையொத்த அகஸ்தியமுனிவர் வரன்முறைப்படி சொல்லுகின்றார்.(எ-று) (௨௨)

(வேறு.)

விரதமாதவத்தீர்காணின்வெவ்வினையெல்லாம்வீட்டிச் .. *
சரதமாப்போகநல்குந்தமனியமுளரிவந்த .. .. .. .. *
வரவுமக்கனகக்கஞ்சப்பெருமையும்வளனுநன்கா ........*
வுரைசெய்துங்கேண்மினென்றுமுனிவரனுரைக்குமன்றே.*

(இ-ள்) விரதங்களையனுஷ்டிக்கும்முனிவர்களே தரிசித்தால் கொடியவினைகளையெல்லாம்கெடுத்து உண்மையாகப்போகத்தைக்கொடுக்கும்படியான பொற்றாமரையானது வந்தவரவையும் அந்தப்பொற்றாமரையின்பெருமையையும் அதன்வளப்பத்தையும் நன்மையாகச் சொல்லுகிறோம் கேளுங்களென்று அகஸ்தியமுனிவர்சொல்லுகின்றார்.—(எ-று) (௨௩)

தலவிசேடம்-முற்றிற்று.

ஆக படலம்-௩, க்கு-திருவிருத்தம்-௨௱௫௪.



# தீர்த்தவிசேடம்.



கண்ணகன்குடுமிமாடக்கடிபொழிலாலவாயி .... .... ..*
வண்ணறன்பெருமையாரோயளப்பவரவிர்ந்தமுத்த ..... *
வெண்ணகையுமையாளன்புவிளைமுகச்செவ்விபோலத்... .*
தண்ணறுங்கமலம்பூத்ததடப்பெருந்தகைமைசொல்வாம். .*

(இ-ள்) இடமகன்றசிகரங்களையுடைய வீடுகளையுடையவர் சோலைகள்சூழ்ந்த திருவாலவாயில் வீற்றிராநின்ற சோமசுந்தரக்கடவுளுடையபெருமையை எவர்கள்அளவிட்டுச்சொல்லத்தக்கவர்கள்பிரகாசமுற்றமுத்தம்போல்வெண்மையாகியநகையையுடைய பார்வதிதேவியின் அன்புவிளைகின்ற திருமுகத்தின் அழகினைப்போலக் குளிர்ச்சிபொருந்தியபரிமளியாநின்ற தாமரைமலர்பூத்த தீர்த்தத்தினது மிகுந்தபெருமையைச்சொல்லுகின்றோம்.—(எ-று) (௧)

ஆற்றினுக்கரசாங்கங்கைகாவிரியாதியாறும் ....... *
வேற்றுருவாயமூன்றுநீர்வேலையும்பிறவுங்காரும் .... .. .. *
தோற்றமுன்றன்னையாட்டச்சுந்தரமூர்த்திசெங்க .... .. *
ணேற்றினன்கண்டதீர்த்தமாகுமீதெவ்வாறென்னின் ...... *

(இ-ள்) நதிகளுக்கு அரசாகியகங்கை காவிரிமுதலாகிய நதிகளும் வேறுருவமாகிய மூன்றுவகைநீரினையுடைய சமுத்திரமும் மற்றநதிகளும் மேகங்களும் உண்டாவதற்குமுன் னமே தன்னைத் திருமஞ்சனஞ்செய்விப்பதற்காகச்சிவந்தகண்களையுடைய ரிஷபவாகனத்தை யுடையவராகிய சொக்கலிங்கமூர்த்தியானவர் உண்டாக்கிய தீர்த்தமாம். அஃதெவ்வாறென்னின். (எ-று) மூன்றுவகைநீராவது, ஊற்றுநீர்-வேற்றுநீர்- ஆற்றுநீர் என்பவைகளாம். (௨)

அகளமாயுலகமெல்லாமொடுக்கியநெறியேயார்க்கு.. .. *
நிகளமாம்விருத்திதோன்றநினைவறநினைந்துநிற்குந் .... *
றுகளிலாவறிவானந்தசுந்தரச்சோதிமேனாட் .... .. ...*
சகளமாமுருவங்கொண்டுதானொருவிளையாட்டாலே .... *

(இ-ள்) நிட்களசொரூபமாய் உலகங்களையெல்லாம் லயப்படுத்தி அந்த முறைமைப்படி எல்லார்க்கும் பந்தமாகிய விர்த்தியுண்டாக நினைப்பின்றி நினைந்து நிற்கும் குற்றமில்லாதஅறிவானந்தமயமாகிய சொக்கலிங்கமூர்த்தியானவர் முன்னாளில் சகளரூபங்கொண்டு ஒரு திருவிளையாட்டினால்.—(எ-று)

முக்கணனரவப்பூணநூலினன்முகிழ்வெண்டிங்கட் .. ...*
செக்கரஞ்சடையான்சூலகபாலத்தன்செங்கணேற்றன் ....*
மைக்கருங்கயனுண்கண்ணிவாமத்தன்முன்னும்பின்னும் .. *
பக்கமுநந்தியாதிகணநிரைபரவிச்சூழ ...... .. .. ........*

(இ-ள்) திரிநேத்திரங்களையுடையவரும், சர்ப்பமாகிய பூணூலினையுடையவரும், வெண்மையாகிய பிறைக்கொழுந்தை அணிந்த செவ்வானம்போன்ற அழகிய சடையையுடையவரும், சூலகபாலத்தையுடையவரும், சிவந்தகண்களுள்ள ரிஷபவாகனத்தையுடையவரும், மையணிந்த கருமையாகிய சேற்கெண்டையையொத்த கண்களையுடைய மீனாக்ஷியம்மையை இடப்பாகத்திலுடையவருமாகிய சோமசுந்தரக்கடவுளானவர் எதிரிலும் புறத்திலும் பக்கங்களிலும் நந்திதேவர்முதலாகிய கணாதிபர்கள் துதிசெய்துபுகழ்ந்துவரும்படி.—(எ-று) (௪)

சென்றுதன்மேனித்தேசாற்றிசையெலாம்விளங்கச்செங்கண்.
வென்றிகொணாகரேயந்தனகரமும்விபுதர்வேந்தன் .. ....*
பொன்றிகழ்நகரும்வேதன்புரமுமால்புரமுமேலைத் .... .*
தன்றிருநகருஞ்சென்றுசஞ்சரித்தாடிமீள்வான் ...... .. *

(இ-ள்) புறப்பட்டுத் தமது திருமேனியின் பிரகாசத்தினால் திக்குகளெல்லாம் விளங்கும்படி சிவந்த கண்களையுடைய வெற்றி பொருந்திய நாகராசனாகிய ஆதிசேஷனுடைய உலகத்திலும் தேவேந்திரனுடைய பிரகாசியாநின்ற பொன்னுலகத்திலும், பிர்ம்மதேவனுடைய உலகத்திலும், மகாவிஷ்ணுவினுடைய உலகத்திலும், இவைகளுக்குமேலாயிராநின்ற தம்முடைய உலகத்திலும்போய்ச் சஞ்சரித்துத் திருவிளையாடல் செய்துவருவார்.—(எ-று) (௫)

அன்னபோதயனுந்தேவர்க்கரசனுமாழிவேந்து .... ....*
முன்னர்வந்திறைஞ்சியேத்தமுனிவரும்பேறுநல்கித் ....*
தன்னகரடைந்துநீங்காத்தனிப்பெருங்கணத்தினோரை ....*
யின்னருள்சுரந்துநோக்கியிலிங்கத்துட்புகுதுமெல்லை ....*

(இ-ள்) அப்போது பிர்ம்மதேவனும் தேவேந்திரனும் மகாவிஷ்ணுவும் எதிரில்வந்து பணிந்து துதிசெய்ய- அவர்களுக்கு அழிவில்லாத பேறுகளைக் கொடுத்தருளித் தம்முடைய நகரத்தில் அடைந்து தம்மைவிட்டுநீங்காத ஒப்பற்ற பெருமை பொருந்திய கணாதிபர்களைநோக்கி இனிதாகிய அருளைத்தந்து சிவலிங்கத்துக்குள் செல்லும்போது.—(எ-று) (௬)

வேத்திரப்படையோனாதிகணாதிபர்வீழ்ந்துபால ..........*
நேத்திரவன்பர்க்கன்பநிரஞ்சனநிருத்தானந்த .... ....*
சாத்திரமுடிவுந்தேறத்தனிமுதலொருவவென்றுத் .... ..*
தோத்திரவகையாலேத்தித்தொழுதெழுந்தேவல்செய்வார்

(இ-ள்) பிரம்பாகிய படையையுடைய நந்திதேவர்முதலா ன கணநாதர்கள்பணிந்து நெற்றிக்கண்ணையுடையவனே அன்ப ர்க்கன்பனே-நிரஞ்சனனே-ஆனந்தக்கூத்தனே-சாஸ்திரமுடி வுந்தேறாத ஒப்பற்றமுதலாகியஒருவனேயென்று தோத்திரவ கையால் துதிசெய்து தொழுதுநின்று விண்ணப்பஞ்செய்வார்கள். (எ-று) (எ)

ஐயவிவ்விலிங்கமூர்த்திக்காட்டவுமடியேமூழ்கி .... ... *
யுய்யவுங்கங்கையாதிநதிகளுமுலகத்துள்ளோர் .... .... *
மையறுதடாகநீருமற்றிலையிருமைப்பேறுஞ் ...... .... *
செய்யவோர்தீர்த்தமிங்குண்டாக்கெனச்செப்பலோடும் .. *

(இ-ள்) ஐயனே இந்தச்சிவலிங்கமூர்த்திக்குஅபிஷேகஞ்செ ய்யவும், அடியேங்கள் ஸ்நானஞ்செய்து உய்யவும், கங்கைமுத லாகிய நதிகளும் உலகத்திலிருப்பவர்களுடைய பாவங்களை நி விர்த்திசெய்யும்படியான தடாகதீர்த்தங்களும் இல்லை- ஆத லால் இம்மைப்பயனையு மறுமைப்பயனையும் தரத்தக்கதாகஒ ருதீர்த்தம் இங்குண்டாகும்படி செய்தருளுமென்று சொல் லவும்.—(எ-று) (அ)

அத்தகையிலிங்கமூர்த்திக்கடுத்ததென்கீழ்சாராக ......... *
மூத்தலைவேலைவாங்கிநாட்டினன்முதுபார்கீண்டு .... ..... *
மைத்தலைப்பாந்தள்வேந்தன்பாதலங்கீண்டுபோயெண் .. *
கைத்தலப்பிரமனண்டகடாகமுங்கீண்டதவ்வேல் ........ *

(இ-ள்) அந்தப்பெருமைபொருந்திய இலிங்கமூர்த்திக்குத் தென்கீழ்த்திசைப்பக்கமாகச்சூலத்தையெடுத்துப்பூமியில்நா ட்டினார் அப்படிநாட்டினவுடன் பழமையாகிய பூமிகிழிந்து படத் தலையையுடைய சர்ப்பங்களுக்கு அரசனாகிய ஆதிசேஷ னிருக்கும்பாதாளத்தையுங்கிழித்துக்கொண்டுபோய்(அங்கிரு ந்துமேலெழும்பி) எட்டுக்கைகளையுடைய பிர்ம்மதேவனுடை யஅண்டகடாகத்தையும் கிழித்தது அந்தச்சூலம்.(எ-று) (கூ)

அவ்வழிப்புறம்புசூழ்ந்துகிடந்தபோழிபூழிப் ..... .... *
பௌவநீரொன்னவோங்கப்பாணியாலமைத்துவேணித் .... *
தெய்வநன்னீராத்தாவிக்கலந்துமாதீர்த்தமாக்கிக் ..... .. *
கைவனாகபாலிநந்திகணத்தினைநோக்கிக்கூறும் .. .. .. *

(இ-ள்) அந்த இடத்திலிருந்து நீரானது சக்கரவாளகிரிக்கு ப் புறத்தில் சூழ்ந்திராநின்ற பெரும்புறக்கடல்போலவும் ஊ

ழிக்காலத்துச் சமுத்திரநீரைப்போலவும் மேலே யோங்கக்கண்டு தமது திருக்கரத்தால் அந்தநீரை அமைத்துச்சடைமுடியிலிருக்குங்கங்கை நீரை அதில்தெளித்துக்கலந்து பெருமைபொருந்திய தீர்த்தமாக்கிக் கையினிடத்துக்கபாலத்தையுடைய பரமசிவன் நந்திதேவர்முதலாகிய கணங்களைநோக்கிச் சொல்லுகின்றார்.—(எ-று) (௰)

இன்னமாதீர்த்தந்தன்னையெனைப்பலதீர்த்தங்கட்கு.. .. *
முன்னம்யாமிங்குக்கண்ட முதன்மையாலாதிதீர்த்த ......*
மென்னலாமினியுண்டாகுந்தீர்த்தங்களைவைக்குமேலாய் *
மன்னலாற்பரமதீர்த்தமெனப்பெயர்வழங்கலாகும் .. ..*

(இ-ள்) இத்தன்மையுள்ள பெருமைபொருந்திய தீர்த்தத்தை மற்றையதீர்த்தங்கள்யாவும் உண்டாவதற்குமுன் நாம் இவிடத்து உண்டாகச்செய்த முதன்மையினால் ஆதிதீர்த்தமென்றுசொல்லலாம் இனியுண்டாக்கப்படுந் தீர்த்தங்களுக்கெல்லா மேலானதாயிருப்பதினால் பரமதீர்த்தமென்னப் பெயர் சொல்லலாம்.—(எ-று) (௰௧)

மருட்கெடமூழ்கினோர்நன்மங்கலம்பெறலானும. .. .. *
மருட்சிவதீர்த்தமாகும்புன்னெறியகற்றியுள்ளத் .... ... *
திருட்கெடஞானந்தன்னையீதலான்ஞானதீர்த்தந் .... ..*
தெருட்கதிதரலான்முத்திதீர்த்தமென்றிதற்குநாமம் .... *

(இ-ள்) மயக்கம்நீங்கும்படி ஸ்நானஞ்செய்தவர்கள் நல்ல நன்மைகளை அடைவதினால் அருளையுடைய சிவதீர்த்தமென்னும் பெயரையுடையதாகும் புன்மையாகிய நெறிகளைமாற்றி மனத்திருளாகிய அஞ்ஞானம்நீங்கும்படி மெய்ஞ்ஞானத்தைத் தருவதினால் ஞானதீர்த்தமென்றும் மோக்ஷத்தைத்தருவதினால் முத்திதீர்த்தமென்றும் இதற்குப் பெயராம்.—(எ-று)

குடைந்துதர்ப்பணமுஞ்செய்துதானமுங்கொடுத்தம்மாடே.
யடைந்தெழுத்தைந்துமெண்ணியுச்சரித்தன்பாலெம்மைத் *
தொடர்ந்துவந்திறைஞ்சிச்சூழ்ந்து துதித்தெமையுவப்பச் செ
ருடம்பெடுத்ததனாலெந்தவுறுதியுண்டதனைச்சேர்வார்[ய்தோ

(இ-ள்) இந்தத்தீர்த்தத்தில் ஸ்நானஞ்செய்து தர்ப்பணமுஞ் செய்து தானங்களுங்கொடுத்து அவிடத்திலிருந்து பஞ்சாக்ஷரத்தையுஞ்செபித்து அன்புடனே நம்மையுமவணங்கி வலஞ்செய்து துதித்து மகிழச்செய்தவர்கள் சரீரமெடுத்ததினால் எந்த

உறுதியை அடையவேண்டுமோ அந்த உறுதியைஅடைவார்கள்.—(எ-று) (௰௩)

இந்தநீராம்மையாட்டினேயிரண்டுலகின்மிக்க .... ... *
வந்தமிதீர்த்தமெல்லாமாட்டியபயன்வந்தெய்தும் ... *
வந்திறன்மூழ்கியிங்குலவுநங்குறியையுங்கள் .... .... *
சிந்தையிலார்வம்பொங்கப்பூசனைசெய்மினென்று .... .. *

(இ-ள்) இந்த நீரினால் நமக்கு அபிஷேகஞ் செய்தால்பதினாலுலோகங்களிலும் மேன்மையுள்ளமுடிவில்லாத தீர்த்தங்களிலெல்லாம் அபிஷேகஞ்செய்த பலன் வந்தடையும் ஆகையினால் இந்தத்தீர்த்தத்தில் ஸ்நானஞ்செய்து இவிடத்தில் பொருந்திய நமதுகுறியாகியசிவலிங்கத்தை உங்கள்மனதில் அன்பு அதிகரிக்கும்படி பூசைசெய்யுங்கள்.—(எ-று) (௰௪)

விண்ணவர்தம்மின்மேலாம்வேதியனாகிநின்ற .... ..... *
பண்ணவன்றானந்நீரிற்படிந்துதன்னுரையாலே .. .. *
யண்ணலங்கணத்தினோடாமூழ்குவித்தனாதியாய .... .. *
புண்ணியலிங்கந்தன்னுட்புகுந்தினிதிருந்தான்மன்னே .. *

(இ-ள்) தேவர்களுக்குள் மேன்மையான பிராமணனாகிய பரமசிவன் அந்தத்தீர்த்தத்தில் ஸ்நானஞ்செய்து தம்முடைய கட்டளையினாலே பெருமைபொருந்திய அழகியகணங்களையும் ஸ்நானஞ்செய்வித்து அனாதியாகியபுண்ணியசிவலிங்கத்துள்புகுந்து இனிதாகவீற்றிருந்தார்.— எ-று) (௰௫)

அந்தமாதீரானந்தியாதியோர்விதியாற்சோம .. .. .... *
சுந்தரன்முடிமேலாட்டித்துயரறப்பூசையாற்றிச் .. .... *
சிந்தையில்விழைந்தவெல்லாமடைந்தனர்செம்பொற்கஞ்சம்.
வந்தவாறிதுவத்தீர்த்தமகிமையுமுரைப்பக்கேண்மின் .... *

(இ-ள்) அந்தப்பெருமைபொருந்திய நீரினால் நந்திதேவர் முதலாகிய கணங்கள்முறைமைப்படி சோமசுந்தரக் கடவுளுடைய திருமுடியின்மேல் அபிஷேகஞ்செய்து குற்றமறப்பூசையுஞ்செய்து தங்கள்உள்ளத்தில்விரும்பியபொருள்களையெல்லாம் அடைந்தார்கள்- அந்தப்பொற்றாமரையானது வந்தமுறைமை இதுவாம்- இனி அந்தத்தீர்த்தமகிமையையுஞ் சொல்லக்கேளுங்கள்.—(எ-று) (௰௬)

வளையெறிதரங்கஞானவாவியைநோக்கிற்பாவத் .. .. .. *
தளையறுமூழ்கின்வேண்டுங்காமியமெல்லாஞ்சாரு .... .. *

மூளமுறமூழ்குமெல்லைமுழுக்கொன்றற்குலகத்துள்ள..... *
வளவறுதீர்த்தமெல்லாமாடியபயன்வந்தெய்தும் .... .. *

(இ-ள்) சங்குகளையெறியும்படியான அலைகளையுடையஞான சொரூபமாகிய அர்த்தப்பொற்றாமரைத்தீர்த்தத்தைத் தரிசித் தமாத்திரத்திலேபாபத்தொடர்ச்சியறும்- ஸ்நாநஞ்செய்தால்வி ரும்புகின்றஇச்சையுள்ள பொருள்களெல்லாங்கிடைக்கும்- அ ன்றியும் மனம் ஒருமித்து ஸ்நாநஞ்செய்யும்போது ஸ்நாநம் ஒன்றுக்கு உலகங்களில் உள்ள அளவற்ற தீர்த்தங்களிலெல்லா ம் ஸ்நாநஞ்செய்த பலனுங்கிடைக்கும்.—(எ-று) (௰௭)

மெய்யைமண்ணாதிகொண்டுவிதிவழிசுத்திசெய்து ... .. *
மையறுவருணசூக்கமந்திரநவின்றுமூழ்கிற் .. ... .... *
றுய்யமாதீர்த்தமெல்லாந்தோய்ந்துநான்மறையுமாய்ந்தோ
கையிலெப்பொருளுமீந்தகாசறுபேறுநல்கும் ........[ர்

(இ-ள்) சரீரத்தை மிர்த்திகைமுதலானதுகளினால் விதிப்ப டி சுத்திசெய்து குற்றமற்ற வருணசூக்தமந்திரத்தை உச்சரித் து ஸ்நாநஞ்செய்தால் பரிசுத்தமாகிய தீர்த்தங்களிலெல்லா ம் ஸ்நாநஞ்செய்து நான்குவேதங்களையும் ஆராய்ந்தறிந்த பி ர்மணர்களுடைய கையில் எல்லாப்பொருள்களையும் தான மாகக்கொடுத்தகுற்றமற்றபலன் உண்டாகும்.—(எ-று,(௰௮)

தெய்வவித்தீர்த்தந்தன்னைநினைவின்றித்தீண்டினாலு ......*
மவ்வியவினையினீந்தியரும்பெறல்வீடுசேர்வ .. .. .... *
ரிவ்வுரைமெய்யேயாகுமென்னெனின்மனத்துறன்றி .. ..*
வெவ்வழறீண்டினுஞ்சுடுமன்றிவிடுமோவம்மா .........*

(இ-ள்) தெய்வத்தன்மையையுடைய இந்தத்தீர்த்தத்தை நி னைவின்றிப் பரிசித்தாலும் பொறாமைமுதலாகிய குற்றங்களா ல் நேரிடுகிற பாவக்கடலினின்று நீந்திப் பெறுதற்கரிய மோ க்ஷமாகிய கரையைச்சேர்வார்கள்-இந்தவார்த்தை உண்மையா கும்-எப்படியென்றால் நினைப்பில்லாமல்வெவ்விதாகிய தீயை த்தீண்டினாலும்சுடுமேயல்லது சுடாமலிருக்குமோ.—(எ-று) நீந்தியென்றதனால்- கடலுங்கரையும் உரையிற்கூறப்பட்டன.

ஆருமந்நீரிலென்றுமாடினார்சீவன்முத்தி .... .... .. .. *
சேருவரந்நீராடுஞ்சிறப்புறுபயனுக்கொவ்வா ..... ..... *
வாருணவாக்கினேயமந்திரமிலைமுன்னோ .. .. .. .. *
பேருணர்வளிக்குநானஞ்செய்தவர்பெறும்பேறெல்லாம்..*

(இ-ள்) எவ்வகைப்பட்டவர்களேயானாலும் அந்தத்தீர்த்தத்தில ஸ்நானஞ்செய்தவர்கள் சிவன்முத்தியை அடைவார்கள். வாருணமந்திரஸ்நானம், ஆக்கிநேயமந்திரஸ்நானம் என்னும் இவைமுதலாகிய மெய்ஞ்ஞானத்தை அளிக்கும்படியான ஸ்நானஞ்செய்தவர்கள் பெறும் பேறுகளெல்லாம் அந்தப்பொற்றாமரைத்தீர்த்தத்தில் ஸ்நானஞ்செய்யுஞ் சிறப்புற்ற பேற்றினுக்கொட்பாவாகாம்.—(எ-று) (௨௰)

அன்னநீர்த்தனையுமாடியாலவாயுடையநாதன் .. ..... .. *
றன்னையும்பணிவோன்மேலைப்பரகதிதன்னைச்சாரு ...... *
மென்னைநன்னூலிற்சொன்னபவித்திரமெல்லைக்குமேலாய்ப்.
பன்னரும்புனிதமானபவித்திரமாகிநிற்கும் .... .... .*

(இ-ள்) அப்படிக்கொத்த தீர்த்தத்தில் ஸ்நானமுஞ்செய்து சோமசுந்தரக்கடவுளையும் பணிகின்றவன் மேலாகிய பரகதியை அடைவன் - அந்தத்தீர்த்தமானது எவ்வகைப்பட்ட நல்ல சாஸ்திரங்களில் சொல்லிய பரிசுத்தங்களுக்கெல்லாம் மேலாய்ச்சொல்லுதற்கரிய புனிதமாகியபரிசுத்தமுள்ளதாயிருக்கின்றது.—(எ-று) (௨௧)

ஆதரவிலனாயுந்நீராடினோன்சுவர்க்கஞ்சேரு .... ..... .*
மாதரவுளனாய்மூழ்கிவானவராதியானோர்க் .... .... ..*
காதரவரிசியெள்ளுந்தருப்பணமுமையச்செய்தோ .. ... *
னாதரவேள்விமுற்றுமாற்றியபயனைச்சேரும். .. .... .. *

(இ-ள்) கதிபெறவேண்டுமென்கிறவிருப்பமில்லாதவனாய் அந்தத்தீர்த்தத்தில்ஸ்நானஞ்செய்தவனும்சுவர்க்கலோகத்தை அடைவன் விருப்பமுற்றவனாய்ஸ்நானஞ்செய்துதேவர்முதலானவர்களுக்கு ஆதரவுடனே அரிசிஎள்ளுங்கொண்டுதருப்பணம்விதிப்படிசெய்தவன் ஆதரவுடன்வேள்விகளைஎல்லாஞ்செய்தபயனை அடைவன்.—(எ-று) (௨௨)

ஏனைமாதலங்கடம்மிலிருந்துசெய்விரதம்பூசை .... ... .*
தானமாதருமமோமந்தவஞ்செபத்தியானந்தம்மா ... .. *
லானமாபயனிற்கோடியதிகமாமடைந்துமூழ்கி ..... .. *
ஞானமாதீர்த்தஞாங்கரிருந்தவைநயந்துசெய்யின். .. .. *

(இ-ள்) இலக்குமிவாசஞ்செய்யும் மற்றஸ்தலங்களில் இருந்துசெய்கின்ற விரதம் பூசை தானம் உறுதியாகிய தருமம் ஓமம் தவம் செபம் தியானம் என்னும் இவைகளால் உண்டாகும் அழகிய பயனைப் பார்க்கிலும் ஞான சொரூபமாகிய

பெருமைபொருந்திய பொற்றாமரைத் தீர்த்தத்தின்கரையில் சென்று ஸ்நானஞ்செய்து அவிடத்திலிருந்து மேற்சொல்லியவைகளை எல்லாம் விருப்பமுடன்செய்தால் கோடி அதிகமாம்.—(எ-று) (௨௱)

பிறந்தநாளந்நீர்மூழ்கின்மேலவெம்பிறவிப்பௌவ .... *
மறிந்திடுமறிதேள்கும்பமதிகளின்மூழ்கித்தென்பா, .... *
லுறைந்தவர்பொருட்டுப்பிண்டமுதவினுலவர்தாமாழ்ந்து .*
நிறைந்திடுபிறவிப்பௌவநின்றுமேலெழுவரன்றே .. .. *

(இ-ள்) ஜென்மநக்ஷத்திரத்தில் அந்தத் தீர்த்தத்தில் ஸ்நானஞ்செய்தால் பழமையாகிய கொடியபிறவிக்கடலானதுவற்றும் - சித்திரை கார்த்திகை மாசி என்னும் மாசங்களில் அந்தத் தீர்த்தத்தில் ஸ்நானஞ்செய்து பிதிரர்கள்பொருட்டுப் பிண்டமுங்கொடுத்தால் அவர்கள் ஆழ்ந்துநிறைந்த செனனசாகரத்தில்நின்று மோக்ஷமாகிய கரையைச்சேர்வார்கள்.—(எ-று)

அத்தடம்நீங்கின்யாவர்தென்புலமடைந்தோர்தங்கள் ... *
சித்தமாசகற்றவேண்டிச்செய்கடன்முடிக்கினன்னே .. .. *
யொத்தனையெண்ணேர்ந்தாலுமெள்ளுக்காயிரமாண்டாக .. *
வத்தனையாண்டுமட்டுமவரைவிண்ணுளவைப்பார் ..... *

(இ-ள்) பிதிரர்களுடைய மரணமுதலாகிய கிரிகரணங்களால் நேரிட்டபாவங்களை நீக்க விரும்பி அந்தத்தீர்த்தத்தின்கரையில் செய்யுங் கடன்களை எவர்கள்செய்தாலும் அப்போது அதைக்குறித்து அவர்கள் எத்தனை எள்ளுநேர்ந்தாலும்ஒரு எள்ளுக்கு ஆயிரம்வருஷமாக அத்தனைவருஷமட்டும்அந்தப்பிதிரர்களைச் சுவர்க்கலோகம் ஆளும்படிவைப்பார்கள்.—(எ-று)

மூவகையுலகிலுள்ளதீர்த்தமுமுறையாலென்றுஞ் ... .... *
சேவகஞ்செய்யுமிந்தத்தீர்த்தமெந்நாளுமூழ்கி .... .... *
யேவர்நீராலென்றுமீசனைப்பூசைசெய்வோ .. .. .. .. *
ராவரிப்பிறவிதன்னிலவர்கதிக்கரையைச்சார்வார் ..... .. *

(இ-ள்) திரிலோகங்களிலுமுள்ள தீர்த்தங்களெல்லாம்நாள்தோறும் சேவிக்கத்தக்க இந்தத் தீர்த்தத்தில் எவர்கள் எந்நாளும் ஸ்நானஞ்செய்து அந்தத்தீர்த்தத்தினுல் சோமசுந்தரக்கடவுளை எந்நாளும்பூசைசெய்கின்றவர்கள் ஆகிறார்களோ அவர்கள் இந்தப்பிறவியிலேதானே மோக்ஷமாகிய கரையைச்சேர்வார்கள்.—(எ-று) (௨௪)

விடுத்திடலரியநித்தவேள்விமாவிரதம்வேதந் .... .... *
தடுத்திடலரியதானந்தவமிவைதரும்பேறெல்லா .. .. .. *
மடுத்ததன்கரையில்வைகியீசனையருச்சிப்போர்க்குக் .... *
கொடுத்திடுபுண்ணியத்திற்கோடியிலொன்றுக்கொவ்வா .. *

(இ-ள்) விடுப்பதற்கு அரிதாகிய நித்தியாகுதி அனுஷ்டிப்பதற்கரியவிரதம்-வேதம்-தடுப்பதற்கரிய தானம்- தவம்-என்னும் இவைகள்தரும்பேறுகளெல்லாம்- அந்தத்தீர்த்தத்தின்கரையிற்சென்றிருந்து சோமசுந்தரக்கடவுளை அருச்சிப்பவர்களுக்குத் தானங்கொடுக்கும்புண்ணியத்தில் கோடியிலொன்றுக்குஒப்பாகாவாம்.—(எ-று) (உஎ)

உம்மைபித்பிறவிதோறுநியமநல்லொழுக்கம்பூண்டு .... *
பொய்ம்மையில்விரதந்தானந்தவஞ்செய்துபுனிதராகிச் .. *
செம்மைநன்னெறியினின்றசித்தருக்கலதித்தீர்த்த .. .... *
மிம்மையிலடைந்துநித்தமாடுதற்கெய்தாதன்றே .. .... *

(இ-ள்) பூர்வசெனனங்கள்தோறும்முறைமையுடன்நல்லொழுக்கம்பூண்டு உண்மையாகியவிரதமும்தானமும்-தவமும் செய்துபரிசுத்தர்களாய்ச்செம்மையாகிய நல்லநெறியில்நின்ற சித்தர்களுக்கல்லது இந்தத்தீர்த்தம் இப்பிறப்பிலடைந்து ஸ்நானஞ் செய்வதற்குக்கிடையாது.—(எ-று) (உஅ)

(வேறு.)

மதிகதிரோனிடத்தொடுக்குதினந்திங்கட்பிறப்பரவம்வாயங்காந்து, கதிர்கடமைவிழுங்குதினம்விதிபாதயிந்நாளிற்கருதிமூழ்கித், துதிகடருப்பணந்தானம் பூசிதன்மனுவோதுதலத்தொகையொன்றற்கொன், றதிகபலனெம்முறை நூறாயிரநூறாயிரமோரனந்தமாகும் ........................ *

(இ-ள்) சந்திரன் சூரியனிடத்து ஒடுங்குந்தினமாகிய அமாவாசை மாசப்பிறப்பு பாம்பானது வாயைத்திறந்து சந்திரசூரியர்களைவிழுங்குந்தினமாகிய கிரகணபுண்ணியகாலங்கள் வியதீபாதம் ஆகிய இந்நாள்களில் இன்னபயனை அடையவேண்டுமென்றுசிந்தித்து ஸ்நானஞ்செய்துதோத்திரங்கள் தர்ப்பணம் தானம் இவைகளைச்செய்தல் மந்திரங்களைச் செபித்தல் அந்தத்தொகை ஒன்றுக்கொன்று அதிகபலனுகும் அந்தமுறைமைப்படி நூறாயிரம் நூறாயிரமாகவிர்த்தியாகி அளவற்றதாகும். (எ-று) (உகூ)

பொருவரிய துலைத்திங்க ளொத்திங்களிலையுறுக்கும் போதுமூழ்கி, யொருபதினாயிரமடங்காஞ்சுறவுவைத்தாளலவனுதிப்பின்மூழ்கி, யிருபதினாயிரமடங்காமிந்திரவியிடத் தொங்குமிர்த்திவாசர், வருவதறிந்தாடிமனுவேரதன்மூதற் செயினைந்தமடங்குண்டாகும்.. .... .. .... .... .... ....*

(இ-ள்) ஒப்பில்லாத மேஷமாசம் துலாமாசம் என்னும் இந்தமாசங்கள் பிறக்குங்காலத்தில் அந்தத்தீர்த்தத்தில் ஸ்நாநஞ்செய்தால் மற்றநாள்களில் ஸ்நாநஞ்செய்வதினால் உண்டாகும் பலன்களைப்பார்க்கிலும் பதினாயிரம்பங்கு அதிகமான பலன் உண்டாகும் - மகரமாசம் பிரிவாகிய காலங்களையுடைய கர்க்கடகமாசம் என்னும் மாசப்பிறப்புகளில் ஸ்நாநஞ்செய்தால் இருபதினாயிரம்பங்கு அதிகபலன் உண்டாகும்-சந்திரன் சூரியனிடத்தில் ஒடுங்கும் அமாவாசையும் சோமவாரமும் வருகிறநாளறிந்து அந்தத்தீர்த்தத்தில் ஸ்நாநஞ்செய்து மந்திரம் செபித்தல் முதலானவைகளைச் செய்தால் அனந்தம்பங்கு அதிக பலன் உண்டாகும்.—(எ-று) மேற்சொல்லிய மாசங்கள்- சித்திரை-ஐப்பசி தை-ஆடி என்றுணர்ந்துகொள்க. (௯௰)

பிரயாகைதனின்மகர மதிநாண்மூப்பதுங் குடைந்தொ..றும் பேறிந்தத், தினாயர்வைந் தடத்தொருநாண் மூழ்குவோன் பெறும்விரதசீலம்பூண்டு, வோயாமலொருவருடம் படிந்துமையையுமாசிகாபதியாம்வேத, வுசாயானை வழிபடுமேன் மலடிக்குநன்மகப்பேறுண்டாமன்றே.......... .... ..,*

(இ-ள்) பிரயாகையில் மாகமாசம் முப்பதுநாளும் ஸ்நாநஞ்செய்து பெறும்பயனை இந்த அலைகள்பொருந்திய பொற்றாமரையில் ஒருநாள் ஸ்நாநஞ்செய்பவன் அடைவான். விரதமாகிய ஒழுக்கம்பூண்டு இடையில்விடாமல் ஒருவருஷம் ஸ்நாநஞ்செய்து மீனாக்ஷியையும் வேதங்களைச் சொல்லுவராகிய சோமசுந்தரக்கடவுளையும் பூசித்தால் மலடிக்கும் நல்லபுத்திரப்பேறுண்டாகும்.—(எ-று) (௯௧)

எண்டிசையநதிவாவிவடிவானமாதீர்த்த மெல்லாமிப்பொற், புண்டரிகதடத்திலொருகோடியிலோர்கூறுநிகர்போதாவிஞ்சு கண்டதனாலறநீண்டப் பெற்றதனைத்பொருளாங் கையாலள்ளிக், கொண்டதனின்பநலங்குடைந்ததனாற்பேரின்பங்கொடுக்குமன்றே ... .. .... ........ .......... ....*

(இ-ள்) அஷ்டதிக்குகளிலும் இராநின்ற நதிவடிவமும் தடாக

வடிவமுமாகியதீர்த்தங்களெல்லாம் இந்தப்பொற்றாமரைத்தீர்த்தத்தில் ஒருகோடியில் ஒருபங்குக்குஒப்பாகாவாம்- இந்தத்தீர்த்தமான்து தரிசிப்பதினால் தர்மத்தையும் பரிசிப்பதினால் அர்த்தத்தையும் உள்ளங்கையால் அள்ளி உட்கொள்வதினால் இன்பநலத்தையும்ஸ்நாநஞ்செய்வதினால்மோக்ஷத்தையுங்கொடுக்கும்.—(எ-று) (கஉ)

(வேறு)

முன்னவனருளிச்செய்தகாரணமுறையாலன்றி .. .. ... *
யின்னமிப்புனிதவாவிக்கேதுவாலெய்துநாம .... .. ... *
மின்னவிர்சடையான்சென்னிமேவியகங்கைநீரி .... .. *
பின்னதுகலந்தநீரார்பெறுஞ்சிவகங்கையென்றும் .... .. *

(இ-ள்) சோமசுந்தரக்கடவுள் அருளிச்செய்த காரணமுறையாலன்றியும் இன்னமும் இந்தப்பரிசுத்தமாகிய தீர்த்தத்துக்கு எதுவால் அனந்தம்பெயர் சொல்லப்படும்- மின்னலைப்போலப்பிரகாசியாநின்ற சடையையுடையசோமசுந்தரக்கடவுளது திருமுடியில்பொருந்திய கங்கைநீரில் பின்பு அதுகலந்ததன்மையினாலேசிவகங்கையென்றும்பெயர்பெறும்.(எ-று)

அலகிலாத்தீர்த்தந்தம்முளதிகவுத்தமமாய்த்தோன்றி ....*
யிலகலாலிதனைத்தீர்த்தவுத்தமமென்பராய்ந்தோர் .... *
பலவிதழ்விரித்துச்செம்பொற்பங்கயமலர்ந்தநீரா .... ..*
னுலகவர்யாரும்பொற்றாமரையெனவுரைப்பரன்றே .... *

(இ-ள்) அளவில்லாத தீர்த்தங்களுக்குள் -மிகுந்த உத்தமமானதாய்த்தோன்றிப் பிரகாசிப்பதினால் இதனை உத்தமதீர்த்தமென்று பெரியோர்கள் சொல்லுவார்கள்-பல இதழ்களைவிரித்துப்பொற்றாமரைமலர்ந்ததன்மையினாலே உலகத்தில் இராநின்ற எல்லாரும் பொற்றாமரை என்று சொல்லுவார்கள்.—(எ-று) (கச)

தருமமுன்னாகுநான்குந்தருதலாற்றருமதீர்த்த .... .... *
மருமைசாலருத்ததீர்த்தமரும்பெறற்காமதீர்த்த ........ *
மிருமைசேர்முத்திதீர்த்தமென்பதாமினையதீர்த்தம் ......*
வெருவருபாவமென்னும்விறகினுக்கெரியாமன்றே. .... *

(இ-ள்) தருமமுதலாகிய நான்கு உறுதிப் பொருள்களையுந் தருவதினால் தருமதீர்த்தமென்றும், அருமையாகிய அர்த்ததீர்த்தமென்றும், பெறுதற்கரிய காமதீர்த்தமென்றும், பெ

ருமைபொருந்திய மோக்ஷதீர்த்தமென்றும் சொல்லப்படும்- இத்தன்மையுள்ள தீர்த்தமானது பயப்படத்தக்க பாபமாகிய விறகுக்குத்தீயாகும்.—(எ-று) (௩௫)

இவ்வருந்தலத்தினுன்றபெருமையுமெறிகால்செம்பொற் .. *
றெய்வதபதுமதீர்த்தப்பெருமையுஞ்செப்பக்கேட்டோ ... *
ரெவ்வமில்போகம்வீடுபெறுவரென்றிசைத்தான்முந்நீர்ப் . *
பௌவமுண்டமரர்வேந்தன்பழிபவவிழுமந்தீர்த்தோன் .. *

(இ-ள்) இந்த அரிதாகிய தலத்தின்மிகுந்த பெருமையையும் ஒளியைவீசுகின்ற இந்தத்தெய்வத்தன்மையையுடைய பொற்றாமரைத்தீர்த்தப்பெருமையையுஞ் சொல்லக்கேட்டோர்கள் குற்றமில்லாத போகத்தையும் மோக்ஷத்தையும் அடைவார்கள் என்று சமுத்திரசலத்தையுண்டு தேவேந்திரனுடைய இகழத்தக்க இடும்பையைத் தீர்த்தவராகிய அகஸ்தியர் சொன்னார். (எ-று) (௩௬)

தீர்த்தவிசேட முற்றிற்று.

௮-படலம், ௭-க்கு-திருவிருத்தம், ௨௱௯௰.

# மூர்த்திவிசேடம்.

ஆலவாயலர்ந்தசெம்பொனம்புயப்பெருந்தீர்த்தத்தின். .. *
மேலவாம்பெருமைதன்னைவிளம்புவாரெவரேயங்க .... *
ணீலமாமிடற்றுமுக்கணிராமயஞானாநந்த .... .. .... *
மூலமாவிலிங்கமேன்மைமுறையினாலறையலுற்றாம் ...... *

(இ-ள்) திருவாலவாயில்மலர்ந்த பொற்றாமரைத் தீர்த்தத்தின் மேலாகிய பெருமையையெல்லாம் சொல்லத் தக்கவர்கள் யார் அந்தத்திருவாலவாயில் வீற்றிராநின்ற காளகண்டத்தையும் திரிநேத்திரங்களையும் உடையவனாய் நிராமயனாகிய சோமசுந்தரக்கடவுளுடைய ஞானாநந்தமயமாகிய பெருமைபொருந்திய மூலலிங்கத்தின் மேன்மையை முறையினாற் சொல்லுகிறேம்.—(எ-று) (௧)

பொன்னெடுமேருவெள்ளிப்பொருப்புமந்தரங்கேதாரம் .*
தன்னெடும்புரிசைசூழ்ந்தவாரணவாசியாதிப் .......... *
பன்னருந்தலங்கடம்மிற்பராபரலிங்கந்தோன்றா .. .... *
முன்னரிக்கடம்பின்மாடேமுளைத்ததிச்சைவலிங்கம் ... ... *

(இ-ள்) பொன்மயமாகிய நெடிய மகமேரு வெள்ளிமலையாகிய கயிலாசகிரி மந்தரகிரி திருக்கேதாரம் உயர்ந்தனெடியமதில்சூழ்ந்தகாசி முதலாகியசொல்லுதற்கரிய ஸ்தலங்களில் பராபரலிங்கமூர்த்திகள் தோன்றுதற்குமுன்னம் இந்தக்கடம்பவிருக்ஷத்தினிடத்தில் இந்தச்சிவலிங்கம் உண்டாயது. (எ-று)

அப்பதியிலிங்கமெல்லாமருட்குறியிதனிற்பின்பு .... .... *
கப்புவிட்டெழுந்தவிந்தக்காரணமிரண்டினாலு .. .... .. *
மொப்பிலாஞானவொளிதிரண்டன்னவிந்தத் .. .... *
திப்பியலிங்கமூலலிங்கமாய்ச்சிறக்குமன்றே .... .. *

(இ-ள்) மகாமேருமுதலாகச் சொல்லப்பட்ட அந்தஸ்தலங்களிலெல்லாமிருக்கும் சிவலிங்கங்கள் இந்தச்சிவலிங்கம்உண்டானபின்பு இதன் மூலத்தினின்றுமகப்புவிட்டெழுந்தன - இந்தஇரண்டுகாரணத்தினாலும் ஒப்பில்லாதஞான ஒளியானதுதிரண்டதையொத்த இந்தத் திவ்வியலிங்கமானது மூலலிங்கமாய்ச்சிறப்பிக்கப்படும்.—(எ-று). (௯)

இந்தமாலிங்கத்தெண்ணான்கிலக்கணவிச்சைமேனி .... *
யுந்தயிலழகம்பாகத்துமையொடுமழகுசெய்து ........ *
சுந்தரவிலக்கஞ்செய்யத்தகைமையைநோக்கிச்சோம .. *
சுந்தரனென்றுநாமஞ்சாற்றினார்துறக்கவாணர் .... .... *

(இ-ள் பெருமைபொருந்தியஇந்தச் சிவலிங்கத்தினிடத்தில் முப்பத்திரண்டிலக்ஷணங்களையுமுடைய இச்சாசத்தியான திருமேனியையுடையமுடிவில்லாத சுந்தரத்தையுடையபரமசிவன் இடப்பாகத்தில் உமையோடும்அழகுசெய்தனப்போதும் பிரகாசித்துக்கொண்டிருக்கும்பெருமையைநோக்கித்தேவர்கள் சோமசுந்தரக்கடவுள் என்றுபெயர் கூறினார்கள்.—(எ-று)

திறப்படுமுலகமெங்கும்வியாபியாய்ச்சிறந்ததிற்கு ....... *
மறப்பெருங்கடவுள்சோமசுந்தரனதனாலன்றே .... ... .. *
கறைக்கதிர்வடிவேற்றென்னன்கையிற்பொற்பிரம்புபட்ட *
புறத்தடித்தழும்புமூன்றுபுவனமும்பட்டதன்றே .... ... *

(இ-ள்) மூன்றுவகையாகிய உலகமெங்கும் வியாபியாய்ச்

சிறந்திருக்கும் பெரியதர்மக்கடவுள் சோமசுந்தரமூர்த்தியா
ம் அதுமல்லவோ உதிரந்தோயத்தக்கல்லிபொருந்தியவடித்
த வேலாயுதத்தையுடைய பாண்டியராசன்கையிற்பிடித்தபொ
ற்பிரம்படிபட்ட முதுகினுண்டான தழும்பு திரிலோகத்திலுமி
ரா நின்ற சராசரங்கள் மேலெல்லாம் பட்டது.—(எ-து) (௫)

சொற்றவிச்சமட்டியான் சோமசுந்தரனைக்காணப் .... .. *
பெற்றவர்வியட்டியானபிறபதியிலிங்கங்காண .... ...... *
னுற்றவராவரொன்னென்றுரைக்கின்வேரூட்டுநீர்போய் .. *
மற்றையசினைகளெல்லாந்தழைவிக்குமரத்தின்மாதோ. ... *

(இ-ள்) சொல்லிய இந்தச்சமஷ்டி மூர்த்தியாகிய சோமசு
ந்தரக்கடவுளைத் தரிசிக்கப்பெற்றவர்கள் வியஷ்டிமூர்த்திகளா
ன மற்றையக்ஷேத்திரங்களிலிரா நின்ற சிவலிங்கங்களையெல்லா
ம் தரிசித்தவர்ளாவர்கள் யாதுபற்றியென்றால் வேரில் ஊட்டுநீர்
போய் மற்றையகிளைகளையெல்லாம் தழையச்செய்யப்படுகி
ற மரம்போலென்க.—(எ-று) (௬)

எத்தலத்தியாவனெண்ணெண்டிருவிளையாடல்செய்தா .... *
னத்தலத்தவனுக்கொப்புமதிகமாஞ்சிறப்புப்பெற்ற.. .... *
வுத்தமனென்றுமெந்தவுலகிலுமில்லையந்த ...... ...... *
வித்தகஞானத்தன்மையினைத்தெளிவிளம்பக்கேண்மின் *

(இ-ள்) எந்தஸ்தலத்தில் எந்தக்கடவுள் அறுபத்துநாலுதிரு
விளையாடல் செய்தாரோ அந்தஸ்தலத்திலிருக்கும் அந்தக்கட
வுளுக்கு ஒப்பானகடவுளும் அதிகமாஞ்சிறப்புப்பெற்ற உத்த
மககடவுளும் எக்காலத்திலுமெந்தவுலகத்திலுமில்லைமேற்சொ
ல்லிய ஞானமூர்த்தியின் மேன்மைத்தன்மை எப்படிப்பட்ட
தென்றால் சொல்லக்கேளுங்கள்.—(எ-று) (௭)

பொருப்பினுட்டலைமையெய்தும்பொன்னெடுங்குயிமேரு
தருக்களிற்றலைமைசாருந்தண்ணறுந்தெய்வதாரு .... .. *
விருப்புறுவேள்விதம்முண்மேம்படும்புரவிமேத .. .. ... *
மருட்படுதானந்தம்முள்விழுமிதாமன்னதானம் .... .... *

(இ-ள்) மலைகளுக்குள் பொன்மயமாகிய நெடியசிகரங்களையு
டைய மகமேருவானது தலைமைபெற்றிருக்கின்றது - விருக்ஷ
ங்களுக்குள் குளிர்ச்சியையும் வாசனையையுமுடைய கற்பகவி
ருக்ஷமானது தலைமைபெற்றிருக்கின்றது-யாவரும்விரும்பங்
கொள்ளத்தக்க யாகங்களுக்குள் அசுவமேதமானது மேன்

மையுள்ளது கொடுக்கப்படுகிறதானங்களுக்குள் அன்னதானமானது மேலானதாம்.—(எ-று) (௮)

மனிதரி னுயர்ந்தோ ராதிமறையவர் தேவர் தம்மிற் ... .... *
பனிதரு திங்கள் வேணிப் பகவனை யுயர்ந்தோன் வேட்டோர்க் *
கினிதருள் விரதந் தம்முள் ளதிகமா மிந்து வாரம் .. .... .... *
புனிதமந் திரங்க டம்முட் போதவைந் தெழுத்து மேலாம் .. *

(இ-ள்) மனிதர்களில் உயர்ந்தவர்கள் முதன்மையாகிய பிராமணர்கள் - தேவர்களுக்குள் குளிர்ச்சி பொருந்திய சந்திரனையணிந்த சடையையுடைய பரமசிவனே யுயர்ந்தவன் விரும்பினவர்களுக்கு இனிதாகிய பொருளைத்தரத்தக்க விரதங்களுக்குள் சோமவாரவிரதம் மேன்மையானது - பரிசுத்தமாகிய மந்திரங்களுக்குள் பஞ்சாக்ஷரமானது மிகவுமேன்மையானது.—(எ-று) (௯)

மின்மைசான் மணியிற் சிந்தாமணிவரம் விழுப்ப நல்குந் .... *
தன்மைசா லறங்க டம்மின் மிகுஞ்சிவ தருமமென்ப .... .. *
இன்மைசா னெறியி னின்றோர்க் கேற்கு நற்றவங்க டம்மி ..... *
னன்மைசான் றவரோ முக்க ணுதனுக் கன்பு பூண்டோர் .... *

(இ-ள்) ஒளிமிகுந்த நவமணிகளில் சிந்தாமணி மேன்மையானது - நன்மையைத்தரத்தக்க தன்மையையுடைய தருமங்களுக்குள் சிவதருமமானது மேலான தருமமென்பார்கள் - இல்லறநெறியிலிருப்பவர்களுக்குள் நற்றதல்ல தவங்களால் நன்மையை அடைந்தவர்கள் திரிநேத்திரங்களையுடைய பரமசிவனுக்கு அன்புபூண்டவர்களாம்.—(எ-று) (௰)

தீயவாஞ் சுவைப்பா லாவிற் றேவரா விதிகம் பல்வே .... .... *
றாயமா தீர்த்தந் தம்முள் ளதிகமாஞ் சுவணகஞ்சம் .... ... .. *
மாயமா சறுக்க வெல்லாத் தலத்தினும் வதிந்து மன்னுந் .... *
தூயவா னவரிற் சோமசுந் தரன்சிறந் தோனாகும் .. .... .. *

(இ-ள்) மதுரமானசுவையையுடைய பால்சுரக்கும் பசுக்களில் தேவர்கள் பசுவாகிய காமதேனு மேன்மையானதாம் - பலவகைப்பட்டதாகிய பெருமைபொருந்திய தீர்த்தத்தில் பொற்றாமரைத்தீர்த்தம் மேன்மையானதாம் மாயமாகிய குற்றத்தினை அறுக்க எல்லாத்தலங்களிலும் பொருந்தி நிலையாயிராநின்ற பரிசுத்தமுள்ள கடவுளர்களில் சோமசுந்தரக்கடவுள் சிறந்தவராம்.—(எ-று) (௰௧)

அந்தமுமாதியுமில்லாவகண்டபூரணமாயார்க்கும் .. .. *
பந்தமும் வீடுநல்கும்பராபரச்சோதிதானே .... .. .. *
வந்தனைபுரிவோர்க்கிம்மைமறுமைவீடளிப்பானந்தச் .... *
சுந்தரவிலிங்கத்தென்றும்விளங்குவான்சுருதியேத்த .... *

(இ-ள்) ஈறுமுதலுமில்லாதஅகண்டபூரணமாகியாவர்க்கும் பாசபந்தத்தையும் மோக்ஷத்தையும் அருளிச்செய்யும் பராபரச்சோதியாகிய பரமசிவன் - தன்னைத் தொழுகின்றவர்களுக்கு இவ்வுலகத்தின்பங்களையும் சுவர்க்காதிபோகங்களைய மோக்ஷத்தையும் அருளிச்செய்வதற்காக அந்தச்சொக்கலிங்கத்தில் எக்காலத்திலும் வேதங்கள் துதிசெய்யும்படி விளங்குகின்றார்.—(எ-று) (௰௨)

இத்தகுசயம்புதன்னையேனையசயம்புவெல்லா ..... .... *
நித்தமுந்தரிசித்தேகுநிருமலவொளியாமிந்த ......... *
வுத்தமவிலிங்கங்கண்டோருளாயுணர்வொடுங்கவுள்ளே .. *
சித்தமாசொழியத்தோன்றுஞ்சிவபரஞ்சுடரைக்கண்டோர் *

(இ-ள்) இத்தன்மையுள்ள சயம்புமூர்த்தியை மற்றச்சயம்புமூர்த்தியெல்லாம் நித்தமுந்தரிசனைசெய்து செல்லும், நிமலசோதியாகிய இந்த உத்தமசிவலிங்கத்தைத் தரிசித்தவர்கள் மனவாக்குகள் ஒடுங்க மனக்குற்றமும் ஒழிந்தவிடத்துத்தோன்றும் சிவபரஞ்சுடரைத் தரிசித்தவராவார்கள்-(எ-று) (௰௩)

இத்தனிச்சுடரைநேர்கண்டிறைஞ்சினோர்பாவமெல்லாங் .. *
கொத்தழற்பொறிவாய்ப்பட்டபஞ்சுபோற்கோபமூள ... *
மெய்த்தவஞ்சிதையுமாபோன்மருந்தினல்வீயுநோய்போ *
லுத்தமகுணங்களெல்லாமுலோபத்தாலழியுமாபோல் .. *

(இ-ள்) ஒப்பற்றஇந்தச்சிவலிங்கத்தைநேரேதரிசித்துப்பணிந்தவர்களுடைய பாவமெல்லாம் கொத்தாகிய சிகையையுடைய தீப்பொறியினிடத்துப்பட்ட பஞ்சுபோலவும் கோபமூள்வதினல் உண்மையாகிய தவம் அழிவதுபோலவும் அவுஷதத்தினல்வியாதிகெடுவதுபோலவும்உலோபகுணத்தினல்உத்தமகுணங்களெல்லாம் அழிவதுபோலவும்.—(எ-று) (௰௪)

கலிகடவிரவிதோன்றக்கருகிருளுடையுமாபோ .... .. *
லொலிகெழுபெருங்காறள்ளவுடைபடுமேகம்போல .... *
வலிகெழுமடங்கல்சீறமாயுமால்யானைபோலக் ..... ..... *
குலிசவல்லேறுதாக்கப்பொடிபடுங்குன்றம்போல .. .. *

(௰௫)

(இ-ள்) ஒலிக்கின்ற சமுத்திரத்தினிடத்தில் சூரியனுதித்தால் கருகிய இருளானது நீங்குவதுபோலவும்-ஓசைபொருந்திய பெருங்காற்றுமோதுவதினால்மேகம்உடைபடுவதும்போலவும்-பலம்பொருந்தியசிங்கஞ்சீறுவதினால் மதவெறிகொண்டயானைகள்இறப்பதுபோலவும்வலியவச்சிராயுதமாகியஇடியானதுதாக்குவதினால்மலைகள்பொடிபடுவதுபோலவும். (எ-று)

மருட்சிசெய்காமநோயான்மதிகெடுமாறுபோல . .... *
யருட்சிவஞானநோக்கால்வலிகெடுமவிச்சைபோலத் . ... *
தருக்குறுமுவணஞ்சீறத்தழலராவிளியுமாபோற் .... .. *
செருக்குறவழியுங்கற்றகல்விபோற்சிலையுமன்றே. .. .. *

(இ-ள்) மயக்கத்தைச்செய்கின்ற காமநோயினால் மதிகெடுமுறைமைபோலவும் அருளையுடையசிவஞானப்பார்வையினால் அஞ்ஞானத்தின் வலிகெடுவதுபோலவும் தருக்குற்றகருடன் கோபித்தலால் விஷாக்கினியையுடையசர்ப்பங்கள் இறப்பதுபோலவும் அகங்காரத்தை அடைவதினால் கற்றகல்வி அழிவதுபோலவும்கெடும்.—(எ-று) (௰௬)

புலரியிற்சிவன்முத்திபுரேசனைக்காண்பெற்று .... .... *
லலைகடனான்குட்பட்டவவனிமாதானஞ்செய்த .... ....*
பலனுறுங்கதிர்காலுச்சிவைகலிற்பணியப்பெற்றாற் . .... *
கலைஞர்பானூற்றுப்பத்துக்கபிலைமாதானப்பேறும் .. .. *

(இ-ள்) விடியற்காலத்தில் சிவன்முத்தி புரேசனாகிய சோமசுந்தரக்கடவுளைத் தரிசிக்கப்பெற்றால் அலைகின்ற நீரையுடைய நாற்றிசைக்கடலுக்குட்பட்ட பெருமைபொருந்திய பூதானஞ்செய்த பலனுறும், சூரியன் கிரணங்களைவீசுகின்ற உச்சிக்காலத்தில் வணங்கப்பெற்றால் வேதமுதலாகிய சாஸ்திரங்களையெல்லாம் உணர்ந்த பிராமணர்களுக்குப் பெருமைபொருந்திய ஆயிரங்கோதானஞ்செய்தபேறுண்டாகும். (எ-று) (௰௭)

விண்ணிடைப்பரிதிப்புத்தேண்மேலைநீர்குளிக்குமெல்லை ...*
யண்ணலைவணங்கிற்கோடியானினத்தானப்பேறும் . .... *
பண்ணவர்பரவும்பாதியிருள்வயிற்பணியப்பெற்றால் .... *
வண்ணவெம்பரவிமேதமகம்புரிபெரும்பேறெய்தும் .. *

(இ-ள்) ஆகாயத்தினிடமாகச் செல்லுகின்ற சூரியதேவன் மேற்குச்சமுத்திரநீரில் மூழ்கும்அந்திப்பொழுதில் சோமசுந்

தரக்கடவுளைப்பணிந்தால் கோடிப்பசுக்கூட்டத்தைத் தானஞ்செய்த பேறுண்டாகும், தேவர்கள்வந்து துதிசெய்யும் அர்த்தசாமகாலத்தில் வணங்கப்பெற்றால் அழகுள்ளவிருப்பத்தைத்தருகின்ற அசுவமேதயாகஞ்செய்த பெரிதாகிய பலனுண்டாகும்.—(எ-று) (௰௮)

இன்னவதிகமாம்பேறறிந்துபோயெத்தேவர்க்கு .... *
முன்னவன்சமட்டிவிச்சாபுரமுறைமுதல்வன்றன்னைச். .. *
சொன்னவிக்காலந்தோறுமிறைஞ்சியுந்தொழுதுஞ்சூழ்ந்தும்
பொன்னடிக்கன்பராகிவழிபடும்புனிதசீலர் ..... .... *

(இ-ள்) இத்தன்மையுள்ள மேலானபேறுகளெல்லாமுண்டாகுமுறைமையை அறிந்து அவிடத்துக்குப்போய் எல்லாக் கடவுளர்களுக்கும் முன்னவனாகிய சமஷ்டிவிச்சாபுரத்தில் வீற்றிராநின்ற சோமசுந்தரக்கடவுளை மேற்சொல்லிய இந்தக்காலங்கள்தோறும்பணிந்தும் நமஸ்கரித்தும் பிரதக்ஷணஞ்செய்தும் அழகுள்ள திருவடிகளுக்கு அன்புள்ளவர்களாய் ஆராதனைசெய்யும் புனிதமான நல்லொழுக்கத்தையுடையவர்கள்.—(எ-று) (௰௯)

உம்மையில்வினைகளென்னும்பிணியவிழ்ந்தொருவித்தூய *
செம்மையாகியாருந்திருவொடுசெல்வமோங்க .. ... *
வெம்மையில்போகமூழ்கிமலவிருள்விக்கநீந்தி .... .. *
மைம்மலிகண்டத்தெங்கோன்மலரடிநீழல்வாழ்வார் .... *

(இ-ள்) முற்பிறப்பிற்செய்த வினைகளாகிய கட்டவிழ்ந்து நீங்கப்பெற்றுப்பரிசுத்தமான செம்மையதாய் நீங்காத திருவொழிகலவியும்விர்த்தியாக வெறுப்பில்லாத போகங்களை அனுபவித்து அதன்பின்பு ஆணவமலமாகியஇருட்கூட்டத்தினின்றும் நீங்கிக் கருமைநிறம்பொருந்தியகண்டத்தையுடைய எம்மிறைவனாகிய சோமசுந்தரக்கடவுளுடைய செந்தாமரை மலர்போன்ற திருவடிநிழலில்வாழ்வார்கள்.—(எ-று) (௨௰)

(வேறு.)

அறவுருவனாலவாயானருமஞ்செவிமடுத்தாலடைந்தபத்துப், பி
றவிவினையறுநினைந்தானூறுபெரும்பவபாவப்பிணிபோங்கூ
ட, லிறைவனையின்றிறைஞ்சுதுமென்றெழுந்து மனைப்புறம்
போந்தாலீரைஞ்ஞூறு, மறமுறுவெம்புலத்திழைத்தபாதகவ
ல்வினையனைத்துமாயுமன்றே .... .... .. ... ..... *

(இ-ள்) தர்மசொரூபியாகிய சோமசுந்தரக்கடவுளுடைய திருநாமம் காதில்பொருந்தினால் முன்னடைந்தபத்துச்செனனங்களிலுண்டான தீவினைகள் நீங்கும் அந்தநாமத்தை நினைத்தால் பெரிதாகிய நூறுசெனனங்களிற்செய்தபாவநோய்கள் ஒழியும்-கூடலிறைவனாகிய சோமசுந்தரக்கடவுளை இப்போது சென்று பணிகிறோமென்றுஎழுந்து வீட்டின்புறத்திற்சென்றால் பாவமேபொருந்திய கொடியஆயிரஞ்செனனங்களிற்செய்த பாதகமாகிய வலியவினைகளெல்லாம் மாயும்.—(எ-று)

புழைக்கைவலா தொலைத்தானைத் தரிசித்தோராயிரவாம் பரிவேள்வி, தழைத்தபெரும்பயன்பெறுவருருத்திர சூத்தத்தம தனுற்றவனாலேமர்க, டொழற்கரியான்றனைத் துதித்தோர் கணத்துக்காயிரராசசூயயாக, மிழைத்தபெரும்பயன்பெறுவர் சமட்டிவடிவாகியவ்விலிங்கந்தன்னை . . . . . . . . . . . . . *

(இ-ள்) துலாரம்பொருந்திய கையையுடைய யானையைக்கொன்ற சோமசுந்தரக்கடவுளைத் தரிசித்தவர்கள் ஆயிரம் அசுவமேதயாகம் செய்ததினால் உண்டாகும் பெரியபலனை அடைவார்கள் - உருத்திரசூக்த மந்திரத்தினால் தேவர்களும் தொழுதற்கரிய சோமசுந்தரக்கடவுளைத் துதித்தவர்கள் ஒருக்ஷணப்பொழுதுக்கு ஆயிரராசசூயயாகஞ்செய்த பெரிதான பலனை அடைவார்கள் -சமஷ்டிவடிவாகிய அந்தச்சிவலிங்கமூர்த்தியை.—(எ-று) சமஷ்டிவடிவமென்பது, பலவடிவமெல்லாம்ஒருவடிவமாயிருப்பது - அருவதுபாடலில்-சமட்டியான சோமசுந்தரனைக் காணப்பெற்றவர் - வியட்டியான பிறபதியிலிங்கங்காணலுற்றவராவர் என்பது மிக்கருத்தேயாம் - வியஷ்டியாவது,வெவ்வேறாயிருப்பது. (உஉ)

அங்கையளவாகியநன்னீராட்டிப்பூசித்தோரளவிலேனைத், துங்கதலத்துறையிலிங்கமூர்த்திகளைச்சிவாகமநூல்சொன்னவாற்றான்,மங்கலமாகியமுகமணிவொட்டும்வழுவாதுவாசந்தோய்ந்த செங்கனகமணிக்கலசப்புனலாட்டிமாபூசைசெய்தோராவார்*

(இ-ள்) உள்ளங்கையளவான நல்லநீரால் அபிஷேகஞ்செய்து பூசித்தவர்கள் அளவில்லாதமற்றைய புனிதமானஸ்தலங்களிலிருக்கும் சிவலிங்கமூர்த்திகளைச் சிவாகமமாகிய நூலில் சொல்லியிருக்குமுறைமைப்படி நன்மையாகிய சோடச உபசாரங்களும் வழுவாமல் செம்பொன்னாற் செய்து மணிகள்பதிக்கப்

பட்ட கலசத்தில் வாசனைகலந்ததீர்த்தங்கொண்டு அபிஷேகஞ்செய்து பெருமைபொருந்தியபூசைசெய்தவராவர்கள்.(எ-று)

அவ்வண்ணஞ்சுந்தரனை யைந்தமுதமாறுதவுமைந்து தீந்தேன்
செவ்வண்ணக்கனிசாந்தச்சேறுமுதன்மட்டித்துத்தேவர்தேறு
மெய்வ்வண்ணங்குளிரவிளாட்புனலாட்டிமாபூசைவிதியாற்செ
ய்தோர், மைவ்வண்ணவினைநீந்தியறமுதனாற்பொருளடைந்து
மன்னிவாழ்வார் . .... .. .. .... .. ... .. .... *

(இ-ள்) அவ்வாறு சோமசுந்தரக்கடவுளைப்பஞ்சாமிர்தம்-பஞ்சகவ்வியம்- மதுரமுள்ளதேன்- செவ்வையான நல்ல முப்பழங்கள் - சந்தனக்குழம்பு இவைமுதலான திரவியங்களை மட்டித்துத்தேவர்களும் அறியாததிருமேனி குளிர்ச்சியடையும்படி வாசனைபொருந்திய நீரினால் அபிஷேகஞ்செய்து பெருமைபொருந்திய பூசையைவிதிப்படிசெய்தவர்கள் கருமையாகியதிறத்தையுடையவினையை நீங்கி அறமுதலாகியநால்வகைப்பொருளையும் அடைந்து நிலைபெற்றுவாழ்வார்கள்.—(எ-று)
பஞ்சகவ்வியமாவது, பால்-தயிர் - நெய் - கோமயம்-கோசலம் என்பவைகளாம். கோமயம் என்பது, சாணம். மேற்சொல்லிய ஐந்துங் கோசம்பந்தமானதாலையால்-கவ்வியமெனப்பெயர்பெற்றது. கோ என்பது, பசு. முப்பழமாவது;வாழைப்பழம்-பலாப்பழம்-மாம்பழம். பஞ்சாமிர்தவகை- மேல்வருமிடத்திற்சொல்லப்படும். சோடசோபசாரவகையும் அவ்வாறுசொலலப்படும். (௨௪)

நல்லவகைமுகமனீரெட்டுள்ளுஞ்சுவடித்தவிரை நன்னீராட்ட, வல்லவர்நூறாயிரமாமேதமகப்பயன்பெறுவர்வாசநாள, மெல்லவிர்குங்குமஞ்சாந்தயிவைபலவுமட்டித்தோ ரொழிலார்தெய்வ,முல்லைநகையாரோடும்விளாக்கலவைகுளித்தின்பமூழ்கிவாழ்வார் .. .. .. .. .. .. .. .. .. ... .. .. .. *

(இ-ள்) நல்லவகையாகிய சோடசஉபசாரத்தினுள்ளும்வடித்தவாசனைபொருந்திய நல்லநீரினால் சோமசுந்தரக்கடவுளுக்கு அபிஷேகஞ்செய்யவல்லவர்கள் லக்ஷம் அசுவமேதயாகப்பயனை அடைவார்கள், வாசனைபொருந்திய கஸ்தூரி- ஒளியானது பிரகாசியாநிற்குங்குங்குமம்-சந்தனம்-என்னும் இப்பொருள்கள் பலவற்றையும் சோமசுந்தரக்கடவுளுடைய திருமேனியில் மட்டித்தவர்கள் அழகுபொருந்திய முல்லை யரும்பை

பொத்த தந்தங்களையுடைய தேவஸ்திரீகளோடுஞ்சேர்ந்து வாசனைபொருந்திய சந்தனக்குழம்பு பூசிக்கொண்டு இன்பத்தில் மூழ்கிவாழ்வார்கள்.—(எ-று) மட்டித்தல் என்பது, அப்புதல்-பூசுதல் என்னும் வினைச்சொற்களுக்குப் பொதுவாகிய ஓர்வினைச்சொல்லெனக்கொள்க. (௨௫)

நன்மலரொன்றாலவாயான் முடிமேற்சாத்தினையந்து நூறு *
பொன்மலர்கொண்டயற் பதியிற்பூசித்தபயனெய்தும் புனித
போகத், தன்மைதருசுந்தரற்குத் தூபமொருகாற்கொடுப்போ
ர்தமர்க்குத்தாங்கள், சொன்மனமெய்புறச்செய்தகுற்றமாயிரம்
பொறுப்பன்சுருதிநாதன் .. .. .. .. .. .. .... *

(இ-ள்) திருவாலவாயில் வீற்றிருக்கும் சோமசுந்தரக்கடவுளுடைய திருமுடியின்மேல் ஒருநல்லமலரைச்சாத்தினால் மற்றஸ்தலங்களிலிருக்கும் சிவலிங்கமூர்த்திகளுக்கு விருப்பங்கொண்டு நூறுபொன்மலரால் அருச்சித்தபலன் உண்டாகும், புனிதமாகிய ஞானந்தரத்தக்க சோமசுந்தரமூர்த்திக்கு ஒருதரந்தூபங்கொடுப்பவர்களுக்கு அவர்கள்மனவாக்குக்காயங்களினால் பொருந்தச்செய்த ஆயிரங்குற்றங்களை வேதநாயகராகிய அந்தச்சோமசுந்தரமூர்த்தியானவர் பொறுத்தருளுவர். (எ-று)

திருவமுதுநிவேதிப்போரவிழொன்றற்குகமொன்றாச்சிவலோ
கத்தில், மருவிநிறைபோகமுடனிலவுவர் தாம்பூலமுகவாசமீ
ந்தார், பொருவரியகடவுளராண்டொருநூறுகோடிசிவபுரத்
துவாழ்வர், பொருவனிதவிளக்கிடுவோர் வெண்ணிறமுங்கண்ணு
தலுமுடையராவார் .. .. .. .. .. .. .. .. *

(இ-ள்) சோமசுந்தரக்கடவுளுக்குத் திருவமுதுநிவேதனஞ்செய்பவர்கள் ஒரு அவிழுக்கு ஒருயுகமாகச் சிவலோகத்திற் பொருந்தி நிறைவாகிய போகமுடன் வாழ்வார்கள் தாம்பூலமும் - முகவாசமுந் தந்தவர்கள் ஒப்பில்லாத நூறுகோடித்தேவருஷமட்டுஞ்சிவபுரத்துவாழ்வார்கள் ஒரு கர்ப்பூரதீபமிடுகிறவர்கள் வெள்ளைநிறமும் நெற்றிக்கண்ணுமுள்ளவர்களாவார்கள்.— (எ-று) முகவாசமாவது, (தக்கோலந்திம்பூ தலைசாலிலவங்கங் கர்ப்பூரஞ்சாதியோடைந்து. வெள்ளைநிறமும் நெற்றிக்கண்ணும் பெறுவது சிவசாரூபமெனக்கொள்க. (௨௭)

நறுந்திருமஞ்சனமெடுக்கக்குடமாட்டமணிக்கலசநல்வாசம் *
பெறுந்தகையதூபக்காறீபக்கான்மணியின்னபிறவுங்கங்குற் *
றெறுங்கதிர்கான்மணிமாடமதுரைநாயகற்கீந்தோர் செய்த

பாவம், வெறுந்துகள் செய்தைம்பொறிக்கும் விருந்தூட்டும் பெருங்காமவெள்ளத்தாழ்வார் .... .... .... .... *

(இ-ள்) இருளைக்கெடுக்கும்படியான ஒளிவிடுகின்ற மணிகள்பதிக்கப்பட்டவீடுகளையுடைய மதுரையில்வீற்றிருக்கும்சோமசுந்தரக்கடவுளுக்கு உரிய திருமஞ்சனம் எடுக்கக்குடம் அபிஷேகஞ்செய்ய ரத்தினகலசம் நல்லவாசனைபொருந்திய அழகிய தூபக்கால் தீபக்கால் மணி என்னும் இவைகளைக்கொடுத்தவர்கள் செய்தபாவங்களையெல்லாம் வெறுந்துகள்செய்து ஐம்பொறிகளுக்கும் விருந்தூட்டும்படியான பெரிய இன்ப வெள்ளத்தில் ஆழ்வார்கள்—(எ-று) (உஅ)

கயலிணையுங்கண்ணுமைகோன்றிரு முன்னர்ப்பல்லிய முங்கல் லென்றார்ப்ப, வியலிசையபாடலினோடாடலிவைசெய்விப்போ ரிறுமாப்பெய்திப், புயலிசையவியங்கலிப்பமூவுலகுந் தொழு வரசாய்ப்பொலங்கொம்பாடுஞ், செயலிசையவணங்கனையாரா டரங்குகண்டின்பச்செல்வத்தாழ்வார் .... .. ........ *

(இ-ள்) கயல்மீனையொத்த கண்களையுடைய உமையவளாகிய மீனாக்ஷியம்மையின் நாயகனாகியசோமசுந்தரக்கடவுளுடைய திருமுன்பலவாத்தியங்களும்கல்லென்றொலிக்கும்படி தகுதியாகிய இசையையுடைய பாடலோடு ஆடல்களையும் செய்விப்பவர்கள் மிகுந்தமகிழ்ச்சியை அடைந்து மேகவொலிக்கொப்பாக வாத்தியங்கள்முழங்கவும் திரிலோகத்தாரும்தொழவும் அரசர்களாகிப்-பொற்கொம்பாடுகின்றசெயலுக்கொப்பாகத் தெய்வப்பெண்களையொத்தஅழகுள்ளஸ்திரீகள்அரங்கில்ஆடுவதைக்கண்டு இன்பச்செல்வ (வெள்ளத்தில்) ஆழ்வார்கள் (எ-று)

ஒருகாலட்டாங்கமுடன் பஞ்சாங்கமுடனாத லொண்செங்கால் வெண், குருகானு மலர்த்தடஞ்சூழ் கூடனு யகற்பணிவோர் கோலொன்றேச்சிப், பொருகாலின்வருபரித்தேர்மன்னவரா யர்வருந்தம்புடைவந்தெய்தி, யிருகாலுந்தலைவருடவெக்காலுந் தமைவணங்கவிருப்பாரன்றே .... .... .... .... .. *

(இ-ள்) ஒளிபொருந்தியசிவந்தகால்களையுடைய வெள்ளைநிறமுள்ள அன்னங்கள் ஒலித்துக்கொண்டிராநின்ற தாமரைமலர்களையுடைய தடாகஞ்சூழ்ந்த நான்மாடக் கூடலாகியமதுரையில்வீற்றிருக்கும் சோமசுந்தரக்கடவுளை ஒருதரம் அஷ்டாங்கமுடனாவது பஞ்சாங்கமுடனாவது பணிபவர்கள் தனிச்செங்

கோல்செலுத்தி மோதுகின்ற வாயுவைப்போல வேகமாகச் செல்லுகின்ற குதிரைகட்டிய தேரையுடைய அரசர்களாயெல்லாரும் தங்களிடத்துக்குவந்து இரண்டுகாலிலுந்தலை வருடும்படி எப்போதுந் தங்களைவணங்க இருப்பார்கள்—(எ-று) அஷ்டாங்கத்துடன் பணியுமுறைமையாவது, கிழக்குநோக்கிய சந்நிதியானால் பலிபீடத்தின் அக்கினிமூலையின் சற்றுச்சமீபமாகச் சிரசைவைத்து இரண்டுகைகளையும் உத்தர திசையினே நீட்டிப் பின்புமடக்கிக் கைகளுந்தோள்களும் மண்ணிற்பொருந்தும்படி தெற்கேநீட்டிக் காதுகள் பூமியிற்படும்படி பொருத்திப்பணிவதாம். பஞ்சாங்கத்துடன் பணியுமுறையாவது-சிரம்-கைகள்-முழந்தாள்கள்-இவ்வைந்தும் பூமியிற்படும்படி பணிவதாம். (௬௰)

இத்தகையதிருவாலவாயுடையான்றிருமுன்னரியற்றுமோம *
மெய்த்தவமந்திரந்தானமின்னவணுவரெனினுமேருவாகு *
முத்தமமாமிவ்விலிங்கப்பெருமையெலாம்யாவரெடுத் துரைப்
பர்வேத, வித்தகரோசிறிதறிந்தவாறுரைத்தே மினிப்பலகால்
விரும்புமாறென் .... .... .... .... .... .... *

(இ-ள்) இப்படிப்பட்டபெருமையையுடையதிருவாலவாய் நாதனாகியசோமசுந்தரக்கடவுளுடைய திருச்சந்நிதியில்செய்யப்படுகிற ஓமம் மெய்யாகியதவம் மந்திரம் தானமென்னுமிவைகள் அணுவளவானாலும் மேருவினளவாகும்-உத்தமமாகிய இச்சிவலிங்கத்தின் பெருமையையெல்லாம் எவர்கள் அளவிட்டுச்சொல்லத்தக்கவர்கள்-நான்குவேதங்களையுமுணர்ந்தஞானமுனிவர்களே சிறிது நாமறிந்தவாறுசொன்னோம் இனிப்பலதரம் சொல்லுமாறுயாது—(எ-று) (௬௧)

இத்தலத்துக்கொப்பாகவொருதலமும்பொற்கமலமென்னுமிந்த, வுத்தமமாதீர்த்தத்துக்கொப்பதொருதீர்த்தமுமெய்யுணர்வானந்த, வித்தனையவிலிங்கமிதற்கொப்பாவோரிலிங்கமும் பாரின்மேலன்று, முத்தலத்துமில்லையந்தமூர்த்திதிருநாமங்கண்மொழியக்கேண்மின் .... .... .... .... .. *

(இ-ள்) இந்தஸ்தலத்துக்கொப்பாக ஒருஸ்தலமும் பொற்றாமரையென்னும்உத்தமமாகியபெருமைபொருந்திய இந்தத்தீர்த்தத்துக்குஒப்பான ஒருதீர்த்தமும் மெய்யறிவானந்த வித்தினையொத்த இந்தச்சிவலிங்கத்துக்கொப்பான ஒரு சிவலிங்கமும்

பூமி அந்தரம் சுவர்க்கமென்கிற மூன்றுலோகத்திலுமில்லை அந்தமூர்த்தியின் திருநாமங்களைச்சொல்லக்கேளுங்கள்.(எ-று)

கருப்பூரசுந்தரன்பூங்கடம்பவனசுந்தரனுட்கரவாத்தொண்டர்; விருப்பூருங்கலியாணசுந்தரனல்லறவடிவாய் விளங்குமேற்றைப்; பொருப்பூருமபிராமசுந்தரன்றேன்புடைகவிழப் பொன்னிற்பூத்த, மருப்பூசம்பகசுந்தரன்மகுடசுந்தரன் முன்வாழிமன்னோ .... .... .... .... .... .... .... *

(இ-ள்) கர்ப்பூர சுந்தரன் கடம்பவனசுந்தரன் ஒளிப்பில்லாத இருதயத்தையுடைய அடியார்கள் விருப்பங்கொள்ளும்படியான கல்யாணசுந்தரன் நல்லதர்ம்மசொரூபமாய் விளங்காநின்ற வெள்ளிமலையையொத்த ரிஷபவாகனத்தைச் செலுத்துகின்ற அபிராமசுந்தரன் தேன்புறங்களில் ஒழுகும்படி பொன்னைப்போலப் பூத்தவாசனை பொருந்திய சம்பகமலரணிந்த சம்பகசுந்தரன் மகுடசுந்தரன்—(எ-று) வாழி என்பது, முன்னிலை அசைச்சொல் - ஒருபிரளயகாலத்தில் தர்ம்மதேவதையானது-ரிஷபரூபங்கொண்டுபரமசிவனுக்குவாகனமாயிற்று- ஆதலால்அறவடிவாய்விளங்குமேற்றுப்பொருப்புஎன்றார் இதன் விரிவைத் தக்ஷகாண்டத்தில் உத்தரப்படலம்-௬௭௧- பாடலிற் காண்க. (௧௧)

மான்மதசுந்தரன்கொடியபழியஞ்சு சுந்தரனோர் மருங்கின் ஞானத்; தேன்மருவியுறைசோமசுந்தரன்றேஞ் செவ்வழியாழ்செய்யப்பூத்த, கான்மருவுதடம்பொழில்சூழாலவாய்ச்சுந்தரன்மீன்கணங்கள்சூழப், பான்மதிசூழ்நான்மாடக்கூடனாயகன்மதுராபதிக்குவேந்தன் .... .... .... .... .... *

(இ-ள்) மான்மதசுந்தரன் கொடியபழியஞ்சு சுந்தரன் ஒருபாகத்தில் ஞானத்தேனாகிய உமையவள்விருப்பமுற்றிருக்கின்ற சோமசுந்தரன்வண்டுகள்யாழிசையைப்போலச் செவ்வழிப்பண்பாடப்பூத்தவாசனைபொருந்தியபெரியசோலைசூழ்ந்ததிருவாலவாய்ச் சுந்தரன் நக்ஷத்திரக்கூட்டங்கள்சூழ வெண்மைநிறமுள்ள சந்திரன்சூழ்கின்ற நான்மாடக்கூடனாயகன் மதுராபதிக்கு வேந்தன்.(எ-று) யாழ்-ஆகுபெயர். (௧௨)

கிரநாலோன்பரவரியசமட்டிவிச்சாப்ரநாதன்சீவன்முத்தி. *
புரநாதன்பூவுலகசிவலோகாதிபன்கலிபுரோசன்யார்க்கும்

வரநாளுந்தருமூலவிலிங்கமெனவிவைமுதலாமாடக்கூட ..*
லாளுமமின்னமரப்பிலவாகுமுலகுய்யவவ்விலிங்கம் .... *

(இ-ள்) நான்குசிரங்களையுடைய பிரம்மதேவன் துதிப்பதற்கரிய சமஷ்டிவிச்சாபுரநாதன் சீவன்முத்திபுரநாதன் பூலோகசிவலோகநாதன் கன்னிபுரோசன் யாவருக்கும் நாளுமீவார் தருகின்ற மூலலிலிங்கம் என்ன இவைகள்முதலாக நான்மாடக்கூடலில்வீற்றிராநின்ற சோமசுந்தரக்கடவுளுடையதிருநாமங்கள் இன்னமும் அளவில்லாதவைகளாம்-உலகத்துயிர்கள் உய்யும்படிஅந்தச்சிவலிங்கம்.—(எ-று) (௫௩)

பாதாளமேழுருவ முளைத்தெழுந்த தவ்விலிங்கப்படிவந்தன்
னு, ளாதாரமாகவமர்ந்தறுபத்துநாலுவிளையாடல்செய்த *
போதானந்தன் பெருமைநங்குரவன்மொழிப்படியே புகன்
றேனென்றான், வேதாதிகலைதெரிந்தமலயமுனிகேட்டதவோ
ர்வினுதல்செய்தார் .... .... .... .... .... ....*

(இ-ள்) பாதாளவரையிற்சொல்லப்பட்டகீழுலகமேழினுமுருவமுளைத்தெழுந்தது-அந்தலிங்கமூர்த்திக்குள் ஆதாரமாகப் பொருந்தி அறுபத்துநாலுதிருவிளையாடல் செய்தபோதானந்தனாகிய சோமசுந்தரக்கடவுளுடையபெருமையைநம்முடையகுருவானவர் அருளிச்செய்தபடி சொன்னேனென்று வேதமுதலாகிய சாஸ்திரங்களையுணர்ந்தஅகஸ்தியமுனிவர்சொன்னார்- அதைக்கேட்ட முனிவர்கள் ஒருவினாவுரைசொல்லுகின்றார்கள்.—(எ-று) கீழுலகம் ஏழாவது-அதலம்-விதலம்- சுதலம்- தராதலம்- ரசாதலம் - மகாதலம் - பாதாளம் - என்பவைகளாம். (௫௪)

அருட்கடலே யிறைவிளையாட் டறுபத்துநான்கென்றாயவை
யானந்தப், பொருட்கடவுளெக்காலத்தியாவர் பொருட்டாடி
னனெம்போதந்தேறித், தெருட்படாவான்முறையாற்செப்பு
கெனக்கரங்குவித்தார்தென்பால்வெற்பி, லிருப்பவனும்வினா
யபடிக்கிறைநிரம்பத்தொகுத்துவிரித்தியம்புகின்றான் ....*

(இ-ள்) கிருபைக்கடலே சோமசுந்தரக்கடவுளுடைய திருவிளையாடல் அறுபத்துநாலென்றீர்- அவைகளை ஆனந்தப் பொருளாகிய அந்தக்கடவுளானவர் எக்காலத்தில் யாவர்பொருட்டுச்செய்தருளினார் எங்கள் அறிவு தேறித்தெளிவுண்டாகவரன்முறையாகச்சொல்லுமென்று கைகுவித்துத் தொழுதார்

கள் - தென்றிசையிலிருக்கும்பொதியமலையில்வாசஞ்செய்கின்றவராகிய அகஸ்தியமுனிவரும் அவர்கள் விரும்பியபடிக்குக் குறைவின்றித்தொகுத்தும்,விரித்தும்,விடைகொடுக்கின்றார்.—,(எ-று) (௬௭)

மூர்த்திவிசேடம்-முற்றிற்று.

———

௯-படலம், அ-க்கு, திருவிருத்தம், ௯௨௭.

# பதிகம்.

வானவர்கோன்பழிதொலைத்தவிளையாட்டுங் கரிசாபமாய்த்த.
வாறு, மீனவர்கோன்காடெறிந்துபுரங்கண்டபெருஞ்சிறப்பு
மீனநோக்கி, யானதடாதகையமுதாயவதரித்துப்பாராண்ட
வருளுமீசன், றனயனைமணஞ்செய்துமுடிதரித்து மன்காத்த
தகைமைப்பாடும் .... .. .... .. .. .. .. ... ..*

(இ-ள்) தேவேந்திரனுடைய பழியைத்தீர்த்த திருவிளையாடலும்-வெள்ளையானையின் சாபத்தை யொழித்த திருவிளையாடலும்-பாண்டியராசன் காடுவெட்டி நகரமுண்டாக்கிய திருவிளையாடலும் - மீனாக்ஷியான தடாதகைப்பிராட்டியார் வேள்வித்தீயினிடமாகத் திருவவதாரஞ்செய்து பூமியாண்ட திருவிளையாடலும்-பரமசிவன் அந்தத்தடாதகைப் பிராட்டியைத் திருமணங்கொண்டருளி முடிபூண்டு பூபாலனஞ்செய்த பெருமைபொருந்திய திருவிளையாடலும்.—(எ-று) (௧)

புலிமுனியும்பணிமுனியுந் தொழவெள்ளிமன்றுணடம் புரிந்த
வாறும்,வலிகெழுதோட்குண்டகட்டுக்குறட்கன்னக்குன்றளித்த
தவனையும்பின்னும், நலிபசிநோய்கெடவன்னக்குழியழைத்துக்
கொடுத்துநீர் நசைக்குவையை, யலைபுனல்கூயருத்தியதும்
பொன்மாலைக்கெழுகடலுமழைத்தவாறும் ....... ... ....*

(இ-ள்)வியாக்கிரபாதமுனிவரும் ஆதிசேஷாவதாரமாகியபதஞ்சலிமுனிவரும்வணங்க வெள்ளியம்பலத்தில் நடனஞ்செய்த திருவிளையாடலும் பலம்பொருந்தியதோட்களையும் ஆழ்ந்த

வயிற்றினையுமுடைய ஒருபூதத்துக்கு அன்னமலையைத் தந்தருளிய திருவிளையாடலும்-பின்னும்வருத்துகின்ற பசிநோயானது கெடும்படி அப்பூதத்துக்குஅன்னக்குழி அழைத்துக்கொடுத்துத்தண்ணீர்த்தாகத்துக்காக அலைகின்றநீரையுடையவையைநதியை அழைப்பித்து உண்பித்த திருவிளையாடலும்-காஞ்சனமாலைக்காக ஏழுகடலையும் அழைத்த திருவிளையாடலும். (எ-று) மழமுனி என்னும்பெயரையுடையவர் சிவானுக்கிரகத்தினால் புலிக்கால்பெற்றுவியாக்கிரபாதரென்னும்பெயர்பெற்றனர்- சர்ப்பரூபமாகிய ஆதிசேஷன் பதஞ்சலிமுனிவரானார்-இவ்விரண்டுசரித்திரத்தையுங் கோயிற்புராணம் வியாக்கிரபாதசருக்கத்திலும் பதஞ்சலி சருக்கத்திலுங் கண்டுகொள்க.

அந்தரர்கோனாசனத்திலுறைமலயத்துவசனை மீண்டழைத்தவாறுஞ், சுந்தரவுக்கிர குமாரனவதரித்தவாறும்வளைசுடர்வேல் செண்டு, தந்தையிடத்தவன்பெற்றவாறுமவனவ்வழிவேல்சலதிவீறு, சிந்தவிடுத்ததுமகவான்முடியைவளையெறிந்திறைவன் சிதைத்தவீறும் .... .... .... .... .. .. .. .. *

(இ-ள்) தேவேந்திரனுடைய ஆசனத்திலிருந்தமலயத்துவசபாண்டியனைமறுபடிபூமியில்வரும்படிஅழைத்ததிருவிளையாடலும்-சௌந்தரியத்தையுடையஉக்கிரகுமாரன்திருவவதாரஞ்செய்ததிருவிளையாடலும்- வளைதடி-பிரகாசம்பொருந்தியவேலாயுதம்- செண்டு-என்னும் இவைகளைத் தன்பிதாவினிடத்தில் உக்கிரகுமாரன்பெற்றுக்கொண்டதிருவிளையாடலும்-அவன் அந்தவடிவேலைச் சமுத்திரத்தின் பெருமைகெடும்படிவிட்டதிருவிளையாடலும்-பின்னும் அவ்வரசன் தேவேந்திரனுடைய மகுடத்தை வளைதடியெறிந்து அழித்ததிருவிளையாடலும். (எ-று)

பொன்னசலந்தனைச்செண்டாற்புடைத்து நிதியெடுத்ததுவும் புனிதர்க்கீசன், பன்னரியமறைப் பொருளைப்பகர்ந்ததுவுமாணிக்கம்பகர்ந்தவாறுந், தொன்னகர்மேனீர்க் கிழவன்வரவிடுத்தகடல்சுவறத்தொலைத்தவாறு, மன்னதனித்தொன்மதுரைநான்மாடக்கூடலானவாறும் .... .... .. .... .. *

(இ-ள்) பொன்மலையாகிய மகமேருவை உக்கிரகுமாரன் செண்டினால் அடித்து நிதியெடுத்ததிருவிளையாடலும்-முனிவர்களுக்குச் சோமசுந்தரக்கடவுள் சொல்லுதற்கரிய வேதப்பொருளை உபதேசஞ்செய்தருளிய திருவிளையாடலும் -மாணி

க்கம்விற்ற திருவிளையாடலும்-பழமையாகிய மதுராநகரத்தின்மேல் வருணன் செலுத்திய சமுத்திரநீர் வற்றும்படி தொலைத்த திருவிளையாடலும்-அந்த ஒப்பற்ற பழமையாகிய மதுராபுரானது நான்மாடக்கூடலான திருவிளையாடலும்—(எ-று)

வட்டங்கொள்சடையுடையசித்தர்விளையாடியதோர் வளைப்பூங்
கையிற், கட்டங்கந்தரித்தபிரான்கல்லானை கருப்பருந்தக் கா
ட்டுமாறு, மூட்டங்கு வஞ்சனையா லமணர்விடுவாரணத்தை
யொழித்தவாறு, மிட்டங்கொள் கௌரிமணம் விருத்தவிளை
யோன்குழவியானவாறும் .... .... .... .... .... *

(இ-ள்) வட்டமாகக்கட்டப்பட்ட சடையையுடைய சித்தமூர்த்தியானவர் விளையாடியதாகிய ஒப்பற்றதிருவிளையாடலும், கையில் மழுவைத்தரித்த (சோமசுந்தரக்கடவுளாகிய) அந்தச் சித்தமூர்த்தியானவர் கல்லானைகருப்புதின்னக்காட்டியதிருவிளையாடலும், உள்ளத்திற்பொருந்தியவஞ்சனையினால் சமணர்கள் விட்டயானையைக்கொன்ற திருவிளையாடலும், அன்புகொண்டகௌரியினிடத்தில்விருத்தனுங் குமாரனும் பாலனுமான திருவிளையாடலும்—(எ-று) கடங்கம் என்னுமொழி- கட்டங்கமெனநின்றது, இதனைத்திருக்கோவையார் (உசஉ) பாட்டுரையிற்காண்க. (௫)

செய்யதாண்மாறிநடமாடியதும்பழியஞ்சுதிறனுந்தாயை. *
மையலார்புணர்ந்தமகன் பாதகத்தைமாற்றியது மதியாதாசா
ன், றையலாடனைவிரும்புமாணவனைவாளமரிற் றடிந்தவாறும்,
மையராவெய்ததுவும்படிற்றமணர்விடுத்தபசுப் படுத்தவாறும்

(இ-ள்) சிவந்ததிறமுள்ளதாகிய தாண்மாறியாடிய திருவிளையாடலும்; பழியஞ்சிய திருவிளையாடலும், தாயைமயக்கத்தினாற்சேர்ந்தபுத்திரனுடையபாதகத்தைநீக்கியதிருவிளையாடலும், மதிக்காமல் குருவின்பத்தினியைவிரும்பிய சிஷனைவாட்சண்டையிற்கொன்ற திருவிளையாடலும், பொய்யை மேற்கொண்ட சமணர்கள் விடுத்த படத்தையுடைய நாகமெய்த திருவிளையாடலும், அவர்கள்விடுத்த பசுவைக்கொன்ற திருவிளையாடலும்.—(எ-று) மாணவகன் - மாணவனென நின்றது. (௬)

அறவேற்றுப்பரியுங்கத்துமெய்க்காட்டிக்கொடுத்தவிளையாட்
டுங்காட்டுச், சுறவேற்றுக்கொடியவர்சன்றனக்குலவாக்கிழிகொ
டுத்துத்தொடர்புறாய்கள், நறவேற்றமலர்க்குழலார்மணங்கவர்ந்

குவளைபசந்த நலனுமொரு, மறவேற்கண்மாதரார்க்கட்டமா
சித்தியுறமதித்தவாறும் .... .... ... .. .... .. .. *

(இ-ள்) தருமவிடையேகுதிரையாகச்செலுத்தி மெய்க்காட்டிட்ட திருவிளையாடலும்- ஆண்சுறாவைக்காட்டுகின்ற கொடியையுடைய பாண்டியராசனுக்கு உலவாக்கிழிகொடுத்தருளிய திருவிளையாடலும்-வணிகருடையதேன்பொருந்திய மலரணிந்தகுழலையுடைய மாதர்கள் மனதைக்கவர்ந்து வளையல் விற்றதிருவிளையாடலும்- பகைக்காதின்ற வீரமுள்ளவேல்போன்ற கண்களையுடைய மாதர்களுக்கு அட்டமாசித்தி யுபதேசித்த திருவிளையாடலும்.(எ-று) (எ)

சென்னிபொருட்டெயில்வாயிறந்தடைத்து விடைபொறித்த
செபனுந்தெசென்னி, மன்னிகலிட்டமர்விளைப்பமீனவர்க்குநீர்ப்
பந்தர்வைத்தவாறும், பொன்னனையாள்பொருட்டிரதவாதவி
னைமுடித்ததுவும்புகார்க்குவேந்தன், றன்னையகன்குழிவீழ்த்
தித்தென்னவர்க்குமறவாகைதந்தவாறும் .... .... .. *

(இ-ள்) ஒருசோழராசன்பொருட்டுத்திருமதில்வாயிலைத்திறந்து மூடிவிடையிலச்சினைவைத்ததிருவிளையாடலும்-ஒருசோழராசன்-நிலையானபகைகொண்டுபோர்செய்யஅந்தப்போர்க்களத்தில்பாண்டியராசன்பொருட்டுத்தண்ணீர்ப்பந்தல்வைத்த திருவிளையாடலும்,பொன்னனையாள்பொருட்டுரசவாதத்தொழில்செய்ததிருவிளையாடலும்-காவிரிப்பூம்பட்டினத்துக்கு அரசனாகியசோழராசனைமடுவில்தள்ளிப்பாண்டியனுக்குவிரவெற்றியருளிச்செய்ததிருவிளையாடலும்.—(எ-று) காவிரிப்பூம்பட்டினமான துசோழராசாக்களுக்குரியஇராசதானிகளிலொன்றாதலால் புகார்க்குரியவேந்தனென்றார்-இராசதானிகள்-காவிரிப்பூம்பட்டினம்-உறையூர்-திருச்செய்ஞலூர்-திருவாரூர்-கருவூர்-என்பவைகளாம். சோழராசர்களுககுரிய ராசதானிகள்-ஐந்தென்பதையும், திருச்செய்ஞலூர்-அந்த ஐந்தில் ஒன்றென்பதையும், பெரியபுராணத்தில் சண்டேசநாயனார்புராணத்தின்எட்டாந்திருவிருத்தத்திலும்,திருவாரூரொன்பதை மனுச்சக்கரவர்த்தி புராணத்திலும், உறையூர்-கருவூர்-என்பதைப்புகழ்ச்சோழநாயனார் புராணத்திலுங் காண்க. (அ)

மனைக்கவலைகெடவுலவாக்கோட்டையடியார்க்களித்தவகையுமா
ம, னெனக்கருணைவடிவாகிவழக்குரைத்துப் பொருள்வலிகத்

சேர்ந்தவாறுஞ், சினக்கதிர்வேல்வரகுணர்க்குச்சிவலோகங்காட்டியதுந்திவவுக்கோலான், றனக்கடிமையெனவிறகுதிருமுடிமேற்சுமந்துபகைதணித்தவாறும் .... .. .. .... .... *

(இ-ள்) மனத்துயரங்கெட உலவாக்கோட்டையை அடியவர்பொருட்டு ஒருவேளாளனுக்கருளிச்செய்த திருவிளையாடலும்-மாமனாகத்திருவுருவடிவங்கொண்டுவந்து வழக்குரைத்து ஒருவணிகனுக்குப்பொருள்கொடுத்தருளிய திருவிளையாடலும்-முனிவும் ஒளியுந்தங்கிய வேலாயுதத்தையுடையவரகுணபாண்டியர்க்குச்சிவலோகங்காட்டியருளியதிருவிளையாடலும்-யாழ்ப்பாணருக்கு அடிமையென்று திருமுடிமேல் விறகுசுமந்துபகைதணியச்செய்ததிருவிளையாடலும்.—(எ-று) (௬)

அப்பாணற்கிருநிதியஞ்சேரனிடைத்திருமுகமீந்தளித்தவாறு* மப்பாணன்பாடமழையனையிரவிற்பொற்பலகையளித்தவாறு மப்பாணன்மனைவியிசைப்பகைவெல்லவண்ணலவையடைந்தவாறு, மப்பாணனுளென்றேன்முலையருத்திப்பன்றியுயிரளித்தவாறும் ....................... ...........................*

(இ-ள்) அந்தயாழ்ப்பாணருக்குச் சேரராசனிடத்திற் செல்லும்படி திருமுகங்கொடுத்துப் பொருள்கொடுப்பித்த திருவிளையாடலும்-அந்தயாழ்ப்பாணர் யாழ்வாசிக்க மழைபெய்துகொண்டிருக்கும் அர்த்தராத்திரியில் பொற்பலகையருளிச்செய்ததிருவிளையாடலும்-அந்தயாழ்ப்பாணர்மனைவிக்குநேரிட்ட இசைப்பகையைவெல்ல ராசசபையில் அடைந்த திருவிளையாடலும் - அந்தயாழ்ப்பாணருக்கு அடிமையாக வேடங்கொண்டசோமசுந்தரக்கடவுள் பன்றியாகிப்பால்கொடுத்துப் பன்றிக்குட்டிகளின் உயிரைக்காப்பாற்றிய திருவிளையாடலும். (எ-று) (௭)

வயவேனக்குருளைகளைமந்திரிகளாக்கியதும்வலியுண்டாகக். * கயவாய்க்குருக் குருமொழிவைத்தருளியது 'நாரைக்குக்கருணை நாட்டந், தயவால்வைத்தருண்முத்திநல்கியதுங்கூடனகர் தன்னைச்சித்தர்; புயநாகம்போய்வளைந்து திருவாலவாயாக்கிப் போந்தவாறும் .... .... .. .. .. ... .. .. .. *

(இ-ள்) வெற்றிபொருந்திய பன்றிக்குட்டிகளைமந்திரிகளாகச்செய்த திருவிளையாடலும்-கருக்குருவிக்குவலியுண்டாகும்படி உபதேசஞ்செய்த திருவிளையாடலும்-நாரைக்குத்தயவுட

ேன் இருளைப்போக்கவைத்து அருளாகியமுத்தியை அருளிச் செய்ததிருவிளையாடலும்-கூடல்நகரத்தைச்சித்தராகியசோமசுந்தரக்கடவுளுடைய திருக்கரத்திலணிந்த கங்கணமாகிய நாகம்போய்வளைந்து திருவாலவாயாக்கிவந்த திருவிளையாடலும். (எ-று) (௰௧)

சுந்தரனென்றெழுதியகூர்ம்பெய்துசெம்பியன்போர் தொலைத்தவாறுஞ், செந்தமிழோர்க்கியற்பலகையருளியதுந் தருமிக்குச்செம்பொன்பாடித், தந்ததுமாறுபடுகீரற்குக்கரையேற்றந்தந்தவாறும், விந்தமடக்கியமுனியாற்கீரனியற்றமிழ்தெளியவிடுத்தவாறும் .... .. ... .. .... .. .. ....*

(இ-ள்) சுந்தரனென்றுபெயரெழுதிய கூர்மையானபாணத்தைப்பிரயோகஞ்செய்துசோழனுடையயுத்தத்தைத் தொலைத்ததிருவிளையாடலும்-சங்கப்புலவருக்கு அழகிய பொற்பலகையைஅருளியதிருவிளையாடலும்-கவிபாடித் தருமிக்குப்பொருள் கொடுப்பித்த திருவிளையாடலும்-பகைகொண்ட நக்கீரருக்குக்கரையேற்றம் அருள்செய்த திருவிளையாடலும்-அகஸ்தியமுனிவரால் நக்கீரர் இயற்றமிழ் தெரியும்படி அனுப்பிய திருவிளையாடலும்.—(எ-று) (௰௨)

உண்மறுநற்புலவரிகலகற்றிய துயிலிடைக்காட னுடன்போய்க்கொன்றைத், தாமனூர்வடவாலவாயமர்ந்தபரிசும்வலை சலதிவீசிப் பூமருவுங்குழலியை வேட்டருளி யதும்வாதவூர்ப் புனிதர்க்கேற்றத், தேமறூண்மலரடிகண்முடிசூட்டி யுபதேசஞ்செய்தவாறும் .... .... .... .... .. .... .... .... ...*

(இ-ள்) உண்மையாகிய ஒருபுத்திரனால் சங்கப்புலவருடைய கலகத்தைநீக்கிய திருவிளையாடலும்-கொன்றைமாலையணிந்த சோமசுந்தரக்கடவுளானவர் இடைக்காட்டுத் தேவருடன்சென்று வடவாலவாயில் வீற்றிருந்த திருவிளையாடலும்-சமுத்திரத்தில் வலைவீசி மலர்கள் பொருந்தியவகுந்துதிருத்திய அளகத்தையுடைய உமையவளைவிவாகஞ்செய்துகொண்ட திருவிளையாடலும்-திருவாதவூரில் திருஅவதாரஞ்செய்தபரிசுத்தமுள்ளவராகியமாணிக்கவாசகசுவாமிகளுக்கு வாசனைபொருந்திய காலத்தில் மலர்ந்தசெந்தாமரைமலரையொத்த திருவடிகளைமுடியிற்சூட்டுதலாகிய (திருவடிதீக்ஷைசெய்து) உபதேசஞ்செய்ததிருவிளையாடலும். (எ-று) (௰௩)

நரிகள்பரியாக்கியதும்பரிகணரியாக்கியதுநாகம் பூண்டோ ✻
னரியதிருமேனியின்மேலடிசுமந்துமண்சுமந்த வருளுந்தென்
ன, னெரியடுவெஞ்சுரந்தணித்தவாறுமமணரைக் கழுவிலிட்ட
வாறுங், கரியதென்னவன்னிகிணறிலிங்கங்கூய்வணிகமகட்காத்த
வாறும் .... .... .., .. .. .. .. .. .... .. .. ✻

(இ-ள்) நரிகளைக்குதிரையாக்கியதிருவிளையாடலும்-குதிரைகளை நரிகளாக்கிய திருவிளையாடலும்- சர்ப்பாபரணம்பூண்ட சோமசுந்தரக்கடவுளானவர்தம்முடையஅருமைத்திருமேனியின் மேல் பிரம்படியைத்தாங்கிமண்சுமந்ததிருவிளையாடலும்- பாண்டியனைத் தீப்போல்வருத்துகின்ற கொடியசுரநோயைத்தணித்ததிருவிளையாடலும்-சமணர்களைக்கழுவிலேற்றியதிருவிளையாடலும்-சாக்ஷியாகவன்னிமரம்-கிணறு - இலிங்கம் இம்மூன்றையும் அழைத்து ஒருவணிகமாதைக்காத்த திருவிளையாடலும் —(எ-று) கரியது என்னுமொழியிலிருக்கும்-அது-பகுதிப்பொருள் விகுதி. (௰௪)

எனத்தொகையாலறுபத்து நான்கிவற்றை நிறுத்தமுறையிறி
லாத, வினைத்தொகையறகன்றோக்காலமெவர்பொருட்டெ
னநீர்வினாயவாற்றான், மனத்தரேவிலன்புமடையுடைந்தொழு
கத்திருவால்வாயான்றனை, நினைத்தரேவிலானந்தம் பெருகவிரி
த்துரைப்பலெனநெறியாற்கூறும் .. .. .. ... .. .. ✻

(இ-ள்)என்றதொகையால்அறுபத்துநான்குதிருவிளையாடல்களாம்-முடிவில்லாத வினைக்கூட்டஞ்சேர்தற்கு மார்க்கமாகிய அஞ்ஞானம் நீங்கியமுனிவர்களே, எக்காலத்தில்எவர்பொருட்டாகச்செய்தருளியதென நீங்கள்கேட்டபடியினால் மேற்சொல்லியகிரமமாகவே இந்தத்திருவிளையாடல்களை விரித்துச்சொல்லுகிறேனென்று மனதினிலுண்டாகிய அன்பென்னும் (வெள்ளமானது) மடையுடைந்து பரவத்தக்கதாகச் சோமசுந்தரக்கடவுளுடைய திருவடிகளைத்தியானித்து அளவில்லாத ஆனந்தம்மேலிடச் சொல்லுகின்றார்.— (எ-று) அன்புமடையுடைந்தொழுகுதலாவது- கண்களினிடத்து நீர்த்தாரையாகவும், வாக்கினிடத்துத் தோத்திரமாகவும், மெய்யினிடத்துப் புளகமுதலியதாகவும் வெளிப்படுகையாம். இதனை (மெய்தானரும்பிவிதிர்விதிர்த்துன்விரையார்கழற்கென், 'கைதான் தலைவைத்துக்கண்ணீர்ததும்பவெதும்பியுள்ளம், பொய்தான்தவிர்ந்துன்

லைப்போற்றிசயசயபோற்றியென்னுங், கைதானெகிழவிடெ னுடையா யென்னைக் கண்டுகொள்வே.) என்பதனானு மறிக. இது திருச்சதகம். (௯௫)

பதிகம்-முற்றிற்று.

ஆ படலம்-௯-க்கு-திருவிருத்தம், ௩௱௬௰௨.



முதலாவது,

# இந்திரன்பழிதீர்த்தபடலம்.

மின்பயில்குலிசப் புத்தேள்விருத்திராசுரனைக்கொன்ற.... *
வன்பழிவிடாதுபற்றக்கடம்பமாவனத்திலெய்தி........*
யென்பரவாரம்பூண்டவிறைவனையருச்சிததேத்திப்......*
பின்பதுகழிந்துபெற்றபேற்றினையெடுத்துச்சொல்வாம்.. *

(இ-ள்) பிரகாசம்பொருந்தியவச்சிராயுதத்தையுடையதே வேந்திரனானவன் விருத்திராசுரனைக்கொன்ற வலியபழியான் துவிடாமற்பற்ற-அதுதீரும்படி பெருமைபொருந்திய கடம் பவனத்திற்சென்று எலும்புகளும் சர்ப்பங்களுமாகிய ஆபர ணங்கள் அணிந்த சோமசுந்தரக்கடவுளை அர்ச்சித்துத் துதிசெ ய்து பின்பு அந்தப்பழியை நீங்கித் தேவேந்திரன்பெற்றவரத் தினை எடுத்துச்சொல்லுகிறோம்.—(எ-று) (௧)

மூன்னதாமுகத்தில்வண்டுமொய்க்குமந்தாரநீழற்.... ..*[ற்பூண்
பொன்னவிர்சுணங்குண்கொங்கைப்புலோமிசைமணாளன்பொ
மின்னவிர்த்திமைப்பச்சிங்கஞ்சுமந்தமெல் லணைம்மன்மேவி
யன்னமென்னடையாராடுமாடன்மேலார்வம்வைத்தான்.. *

(இ-ள்) கிரேதாயுகத்தில்வண்டுகள் மொய்க்கும்படியான ம ந்தாரமென்னுங்கற்பகவிருக்ஷத்தின் நிழலில் பொன்னைப்போ ல் பிரகாசியாநின்ற தேமல்கள்பொருந்திய தனங்களையுடைய இந்திராணியின்கணவனாகிய தேவேந்திரனானவன் பொன்னால் செய்யப்பட்ட ஆபரணங்களின் ஒளியானதுவிளங்கிப்பிரகாசி க்கச்சிங்கங்கள்தாங்கிய மெல்லிய ஆசனத்தின் மேல்வீற்றிருந் து அன்னத்தின் நடையையொத்தயிருதுவாகிய நடையையுடை ய அரம்பைமாதர்கள் ஆடுகின்ற ஆடலின்மேல் ஆசையைவை த்தான்.—(எ-று) (௨)

மூவகைமலருர்பூத்துவண்டுளேமுழங்கத்தெய்வப் .... .. *
பூவலர்கொடிபோர்ந்தன்னபொன்னனார்கூத்துமன்னார் .... *
நாவலரமுதமன்னபாடலுநாகநாட்டுக்... .. .. .. ....*
காவலன்கண்டுகேட்டுக்களிமதுக்கடலிலாழ்ந்தான்... .... *

(இ-ள்) கோட்டுப்பூ-நீர்ப்பூ-புதற்பூ-என்னும் மூவகைமலர்களையும் பூத்து வண்டுகள் அம்மலர்களிடத்து இசைபாடும்படி தெய்வமணங்கமழும் மலர்கள் மலர்ந்த கொடிகள் ஆடுதலையொத்த திருமகள்போன்ற அரம்பைமாதர்களின் கூத்தினைக்கண்டும் அந்தஸ்திரீகளுடைய நாவினிடமாகஉண்டாகாநின்ற அமுதத்தையொத்த பாடலைக்கேட்டும் தெய்வலோகத்துக்கு அரசனாகிய தேவேந்திரனானவன் களிப்பாகிய மதுக்கடலிலமூழ்கினான்.—(எ-று) (௩)

பையராவணிந்தவேணிப்பகவனேயனையதங்க.. ...... *
ளையனும்வியாழப்புத்தேளாயிடையடைந்தானாகச்.......*
செய்யதாள்வழிபாடின்றித்தேவர்கோனிருந்தானந்தோ..*
தையலார்மயலிற்பட்டோர்தமக்கொருமதியுண்டாமோ.. *

(இ-ள்) படத்தையுடையசர்ப்பங்களை யணிந்த சடையையுடைய சிவனையேயொத்த தங்கள் குருவாகிய பிரகஸ்பதிதேவர் அவிடத்தில்வர அவருடையசிவந்தபாதங்களுக்கு வழிபாடுசெய்யாமல தேவேந்திரன் இருந்தான்.ஸ்திரீகளுடைய ஆசையில் அகப்பட்டவர்களுக்கு ஒப்பற்ற அறிவும் உண்டாயிருக்குமோ.—(எ-று) அந்தோ என்பது இரக்கச்சொல். (௪)

ஒல்லெனக்குரவனேகவும்பர்கோன்றிருவினாக்கம்.... .. *
புல்லெனச்சிறிதுகுன்றப்புரந்தரனறிந்திக்கேடு.... .... *
நல்லதொல்குரவற்பேணநவையினால்விளைந்ததென்னா.....*
வல்லலுற்றறிவன்றன்னைத்தேடுவானாயினானே.... .. ....*

(இ-ள்) அதைக்கண்டகுருவானவர்விரைவாகப்போய்விடத் தேவேந்திரனுடைய செல்வத்தினது மேன்மைத் தன்மையானது பொலிவிழந்து சிறிதுகெடத் தேவேந்திரன் அதனையறிந்து இந்தக்கேடானது பழமையாகிய நல்லகுருவை வணங்காத குற்றத்தினால் நேரிட்டதென்று துன்பமடைந்து பிரகஸ்பதியைத் தேடத்தொடங்கினான்.—(எ-று) ஆக்கமென்பது மேன்மேலுயர்தல், (௫)

அங்கவனிருக்கைபுக்கான்கண்டிலனவித்தபாசப் . . . . . . . . *
புங்கவருலகுமேனோர்பதவியும்புவனமூன்றி . . . . . . . . . *
லெங்கணுந்துருவிக்காணுனெங்குற்றான்குரவனென்னுஞ் . . *
சங்கைகொண்மனத்தனுகிச்சதுமுகனிருக்கைசார்ந்தான் . . *

(இ-ள்) பிரகஸ்பதியிருக்கும் இடத்திற்சென்றுபார்த்து அவ்விடத்தில் காணுமையினுலும்பாசங்களைக்கெடுத்தமுனிவர்கள் உலகத்திலும்மற்றவர்களுடையஉலகங்களிலும் அவ்விடங்களிலுமன்றித்திரிலோகங்களிலும் இராநின்றமற்றஎல்லா இடங்களிலும் தேடிக்காணுமையினுலும்நம்முடைய குருவானவர் எங்கேயிருக்கின்றூரோ என்னும் சங்கைகொண்டமனத்தனுய்ப் பிர்ம்மலோகத்திற்சென்றான்.(எ-று) (௬)

துருவினனங்குங்காணுன்றிசைமுகற்றொழுதுதாழ்ந்து . . . . *
பாவிமுன்பட்டவெல்லாம்பகர்ந்தனன்பகரக்கேட்டுக் . . . . *
குரவனையிகழ்ந்தபாவங்கொழுந்துபட்டருந்துஞ்செவ்வி . . . *
வருவதுநோக்கிச்சூழ்ந்துமலர்மகனிதனைச்சொன்னான் . . . . *

(இ-ள்) அவிடத்திலுந்தேடிக் காணுமல் பிர்ம்மதேவனைப் பணிந்து துதித்து-முன்னடந்ததுகளையெல்லாம் சொன்னான் அப்படி அவன்சொல்லக்கேட்டுக்குருவை இகழ்ந்தபாவமான துவிர்த்தியாகி அனுபவிக்குங்காலம் வருவதை அறிந்துயோசித்துப் பிர்ம்மதேவன் இந்தவார்த்தையைச்சொன்னான்.— (எ-று) (௭)

அனையதொல்குரவற்காணுமளவுநீதுவட்டாவின்ற . . . . . . *
தனையன்மூச்சென்னியுள்ளான்றானவர்குலத்தில்வந்தும் . . . . . *
வினையினுலறிவான்மேலான்விச்சுவவுருவனென்னு . . . . . *
மினையனைக்குருவாக்கோடியென்னவுமதற்குநேர்ந்தான் . . *

(இ-ள்) பழமையாகிய அந்தக்குருவை நீகாணுமளவும் துவஷ்டாவென்பவன்பெற்ற புத்திரனுகிய மூன்று சிரசுகளையுடையவனுய்த் தானவர்குலத்திற்பிறந்தும் செய்கையினுலும் அறிவினுலும் மேன்மையுள்ளவனுகிய விஸ்வரூபனென்னும் பெயரையுடையவனைக் குருவாக வைத்துக்கொள்ளு என்று சொல்லவும் அதற்குச்சம்மதித்தான்.—(எ-று) (௮)

அழலவிர்ந்தனையசெங்கேழடுக்கிதழ்முளரிவாழ்க்கைத் . . . *
தொழுதகுசெம்மறனைத்தொழுதுமீண்டகன்றுநீங்கா . . . *

விழைதருகாதல்கூரவிச்சுவவுருவன்றன்னை ........ ....*
வழிபடுகுருவாக்கொண்டான்மலர்மகன்சூழ்ச்சிதேறான் .. ..*

(இ-ள்) தீயானதுபிரகாசிப்பதையொத்த சிவந்தநிறத்தையுடைய நெருங்கிய இதழ்களையுடைய தாமரைமலரில் வாசஞ்செய்கின்ற வாழ்க்கையையுள்ள யாவரும்பணியத்தக்க பிரம்மதேவனைத்தொழுது விடைபெற்றுக்கொண்டுசென்று அந்தப்பிரம்மதேவனுடைய எண்ணமறியாதவனாய் நீங்காதவிருப்பந்தங்கிய ஆசையுண்டாகப் பூசிக்கத்தக்ககுருவாகவிஸ்வரூபனை யேற்படுத்திக்கொண்டான்.—(எ-று) (௬)

மகதவக்குரவன்மாயங்கருதிலன்வேள்வியொன்று .. ......*
செய்திடலடிகளென்னத்தேவர்கட்காக்கங்கூறி ...... ....*
வெய்தழல்வளர்ப்பானுள்ளம்வேறுபட்டவுணர்க்கெல்லா ..*
முய்திறனினைந்துவேட்டான்றனக்குமேலுறவதோரான் ..*

(இ-ள்) வஞ்சகக்குருவின் மாயத்தை அறியாமல் சுவாமிகளே ஒருயாகஞ்செய்யவேண்டுமென்ன அவன் (சம்மதித்துத்) தேவர்களுக்குச் செல்வமுண்டாகவேண்டுமென்று வாக்கினாற் சொல்லி வெவ்வியவேள்வித்தீயைவளர்ப்பவன் மாறுபட்ட எண்ணங்கொண்டுபின்புதனக்குச் சம்பவிப்பதை அறியாதவனாய் அவுணர்க்கெல்லாம்பிழைக்குந்திறமுண்டாக வேண்டுமென்றுயாகஞ்செய்தான்.—(எ-று) (௭)

வாக்கினான்மனத்தால்வேறாய்மகஞ்செய்வான்செயலையாக்கை
நோக்கினானோர்ந்துதன்னோக்கினான்குலிசவேலாற் .... ...*
றாக்கினான்றலைகண்மூன்றுந்தனித்தனிப்பறவையாகப் ....*
போக்கினானவைவாயிற்புகட்டினான்புலவுச்சோரி .... ...*

(இ-ள்) வாக்கினால்வேறும்மனதினால்வேறுமாகயாகஞ்செய்கின்றவனுடைய செய்கையை உடலிற் கண்களையுடைய தேவேந்திரன் ஞானநோக்கினால் அறிந்துகொண்டு வச்சிராயுதத்தினால் அடித்து அவனுடையமூன்றுதலைகளையுந்தனித்தனியே ஒவ்வொருபக்ஷிகளாகும்படி போக்கி (அங்குண்டான) ஊன்பொருந்திய உதிரத்தைப் பேய்கள்வாயிற் புகச்செய்தான்.—(எ-று) பக்ஷிகளானமுறைமை-சோமபானஞ்செய்கிறமுகம்காடையாகியும், சுராபானஞ்செய்கிறமுகம்-ஊர்க்குருவியாகியும், அன்னபானஞ்செய்கிறமுகம்- சிச்சிலியாகியும்பறந்தன.

இவ்வாறு சமஸ்கிருதபுராணத்திற்சொல்லப்படுகின்றது. சோமபானத்தைக்குறித்து-ஈண்டெழுதப்புகிற்பெருகும். (௰க)

தெற்றெனப்பிரமபாவஞ்சீறிவந்தமரர்வேற்தைப் .....*
பற்றலுமதனைத்தீர்ப்பான்பன்னவர்மரமேன்மண்மேற்.. *
பொற்றொடியார்மேனீர்மேல்வேண்டினர்புகுத்தலோடு... *
மற்றவரிதுநியாந்தீர்க்கும்வண்ணம்யாதென்னவிண்ணோர்..*

(இ-ள்) பிரமகத்திபாவமானது சீறிவந்து தேவேந்திரனை நிச்சயமாகப் பற்றவும் அதைத் தீர்க்கத் தேவர்கள் மரங்களினிடத்தும் பூமியினிடத்தும் பொன்னாற்செய்யப்பட்ட வளையல்களணிந்த மாதர்களிடத்தும் நீரினிடத்துமவேண்டினவர்களாய்ப் புகுத்தலோடு மற்றவர்கள் இதனை நாங்கள் தீர்க்குமுறைமை எப்படியென்று கேட்கத்-தேவர்கள்.— எ-று) ௰௨)

அப்பிடைநுரையாய்மண்ணிலருவருப்புவசாயம்பொற் .. *
செப்பிளங்கொங்கையார்பாற்றீண்டுதற்கரியபூப்பாய்க் . *
கப்பிணர்மரத்திற்காலும்பயினதாய்க்கழிகவென்று ......*
ரிப்பழிசுமந்தவெங்கட்கென்னலமென்றார்பின்னும்..... *

(இ-ள்) நீரினிடத்தில் நுரையாயும்,மண்ணினிடத்தில்அருவருப்புள்ள உவராயும் அழகிய பொற்செப்பினையொத்த இளமையாகிய ஸ்தனங்களையுடைய மாதர்களிடத்தில் தீண்டுதற்கரிய பூப்பாயும், கிளைகளையும் பூங்கொத்துகளையும் உடையமரங்களினிடத்தில் ஒழுகாநின்றபிசினுகியும் கழியக்கடவதென்றார்கள்-பின்னும் இந்தப்பழியைத்தாங்கிய எங்களுக்குவருநலம் யாதென்றார்கள்.(எ-று) பூப்பு என்பது-மகளிர்சூதகம்.(௰௩)

(வேறு.)

கருவின்மாதர்கருவுயிர்க்குமளவுமுறையாற்கணவர்தோண் .*
மருவிவாழ்கமண்ணகழ்ந்தகுழியுமதனால்வடுவொழிக .... ..*
பொருவினீருமிறைதோறுமூறிப்பொலிகமரங்குறைபட் ... *
டொருவினாலுந்தழைகவெனவொழியாநலனுமுதவினார் .. *

(இ-ள்) கருப்பமுள்ளமாதர்கள் அக்கருப்பம் பெறுமளவும் முறைமையுடன் தத்தங் கணவர்களுடையதோளைச்சேர்ந்து வாழக்கடவர்கள்-மண்ணைத்தோண்டிய குழியும் அதனாலுண்டாகும்வடு வொழியக்கடவது - ஒப்பில்லாதநீரும் இறைக்குந்தோறும்ஊறிந்து பொலிவினை யடையக்கடவது- மரமானது, (வாளால்) குறைவுபட்டாலுந்தழையக்கடவது- என்று நீங்கா

தன்மையையும் அருளிச்செய்தார்கள்.—(எ-று) கருவின்-எ ன்பதிலிருக்கும்- இன்-சாரியை. குறைபட்டொருவினுலும் எ ன்பது-ஒருசொல். நாணினை நீக்கி நிறுத்து என்பதற்கு-நாணி னைநீக்கி என வுரைசெய்து-நாணினை நீக்கி நிறுத்து என்பது ஒருசொல்லென்றார் பரிமேலழகர். (௰௪)

மாசிற்கழிந்தமணியேபோல்வந்தபழிதீர்ந்திந்திரனுந் .... *
தேசிற்றிகழத்துவட்டாதன் செல்வன்றன்னைத்தேவர்பிரான். *
வீசிக்குலிசத்துயிருண்டவிழுமங்கேட்டுவெகுண்டுயிர்த்துக் *
கூசிப்பழிகோள்கருதியொருகொடியவேள்விகடிதமைத்தான்

(இ-ள்) அழுக்கினின்றும் நீங்கிய மணிபோலத் தேவேந் திரனானவன் தனக்குநேரிட்ட பழியைநீங்கி ஒளியுடன் விளக்க முற்றிருந்தான்-அப்படியிருக்கும்போது துவஷ்டாவானவன் தன்புத்திரனைத் தேவேந்திரன் வச்சிராயுதத்தினால் வீசிக் கொ ன்ற இடும்பையைக்கேட்டுக் கோபங்கொண்டு பெருமூச்சுவி ட்டு மனங்கூசித் (தன்மகனைக்கொன்ற) பழிவாங்குதலை நினை த்து ஒருகொடிதாகிய வேள்வியைவிரைவிற் செய்யத்தொட ங்கினான்.—(எ-று) (௰௫)

அந்தக்குண்டத்தெரிசிகைபோலழலுங்குஞ்சியண்டமுக.* [ச் டுந்தக்கொடியதூமம்போலுயிர்த்துச்செங்கண்சினச்செந்தீ சிந்தப்பிறைவாளெயிறதுக்கித்திசைவான்செவிடுபடநகைத்து வந்தக்கொடியவிட்டிபோலவெழுந்தானொருவான்மறவீரன்

(இ-ள்) அந்தவேள்விக்குண்டத்தில் தீச்சிகைபோல ஒளிரு ந் தலைமயிரானது அண்டமுகட்டை உந்தக் - கொடிய புகை போலப் பெருமூச்சுவிட்டுச் சிவந்தகண்களிலிருந்து கோபா க்கினிசிதறப்- பிறைபோல வளைவாகிய ஒளியையுடைய பற்க ளை அதுக்கித்திசைகளிலுள்ளவர்களும் வானத்திலுள்ளவர்களு ம்செவிடுபட நகைத்துண்டாகி முற்காலத்தில்தோன்றிய விஷ ம்போலவாளேந்தியஒருமறவீரன் எழுந்தான்.—(எ-று) நகை த்தான்கினுள்-கூண்டுண்டாயநகை பிறனை இகழ்தலின் கணுண் டாயது. திசைவான் என்பன-ஆகுபெயர். (௰௬)

(வேறு.)

ஈங்குவன்விருத்திரனென்பவாரழ.... ..... ..... .....*
றூங்குவன்கனைவிடுதூரநீண்டுநீண் .... .... .... ....*
டோங்குவனோங்குதற்கொப்பவைகளும் .... .... ....*
வீங்குவனநிலார்வினையினென்பவே.. .... .... ....*

(இ-ள்) இவன் விருத்திரனென்னும் பெயரையுடையவனென்றுசொல்லுவார்கள் அக்கினியும் பொறுத்தற்கரிய கோபத்தீயான துதங்கிய வலியகண்விடுதாரம் நீண்டு நீண்டு உயருவன் உயருதற்கொப்பாகத் தருமஞ்செய்தடாதவர்கள் பாவம் அதிகரிப்பதுபோல நாள்தோறும் வீங்குவன் என்பார்கள் பெரியோர்கள்.—(எ-று) ஈங்குவன் என்பது, ஒருசொல் இங்கிவை-உங்கிவை- என்பன ஒருசொல் என்றார் நச்சினார்க்கினியார்-அழல்விம்மிப் புலவுநாறும்புகழ்வேலோன் என்பதற்கு- கோபத்தீநிறைந்த வேல் என உரைசெய்திருக்கின்றதை நோக்கி- ஈண்டு அழலாங்குவன் கண்ணெயென்பது கோபத்தியென உரையெழுதப்பட்டது. (௰எ)

வீங்குடல் விருத்திரன் றன்னை விண்ணவ .... .... .... *
ரோங்குற வுருத்துவட் டாவெ னும்பெயர்த் ... .... .. .... *
தீங்குறு மனத்தினான் றேவர் கோனுயிர் .. .... .... .. *
வாங்குதி பொருதென வரவிட் டானரோ .... .... .. ... *

(இ-ள்) இப்படிபருக்காநின்றவுடலையுடைய விருத்திரனென்பவனைத் தேவர்கள் எங்கும்படிவந்திராநின்றதுவஷ்டாவென்னும்பெயரையுடைய பொல்லாங்கினைப்பொருந்திய மனத்தினான் (பார்த்துத்) தேவேந்திரனுடன் போர்செய்து அவனுயிரைவாங்கிவென்றுவவினான்.—(எ-று) (௰அ)

மதித்துணி யெயிற்றினான் வடவை போற்சினங் .... .. *
கொதித்தெதிர் குறுகினான் கொண்ட லூர்தியு ... .. .. .. *
மெதிர்த்தனன் களிற்றின்மே லிமயத் துச்சிமே .... .... *
லுதித்ததோர் கருங்கதி ரொக்கு மென்னவே .... .... ... *

(இ-ள்) துண்டமாகிய சந்திரனையொத்த பற்களையுடைய விருத்திராசுரனானவன் வடவாமுகாக்கினி போலக் கோபங்கொண்டு கொதித்து எதிரிற்சென்றான்-மேகவாகனனாகிய தேவேந்திரனும் இமயமலையின் உச்சிமேல் உதித்ததாகிய ஒருகரியசூரியனை யொக்குமென்றுசொல்லும்படி ஐராவதமென்னும் வெள்ளையானையின்மேலேறிக்கொண்டு எதிர்த்தான்.—(எ-று) வடமுகாக்கினி- பெண்குதிரைமுகம்போலிருப்பதென்றும், அது ஊழிகாலத்துப்பிரளயத்தை வற்றச்செய்வதென்றும், இருக்குமிஸ்தானம் சமுத்திரமென்றுஞ் சொல்லப்படுகின்றது. இமயத்துச்சிமேலுதித்ததோர்கருங்கதிர்-இல்பொருளுவமை. இமயமலை-பனிநிறம். (௰௯)

அறத்தொடுபாவநேர்ந்தென்னவார்த்திரு.... ... . ....*
திறத்தருமூண்டமர்செய்யக்கதிசிறை.... .... .... ..*
குறைத்தவன்றருவன்மேற்குலிசவேலெடுத்.... .... ..*
துறைத்திடவீசிறனுடன்றுகள்வனும்.... .... .... ....*

(இ-ள்) தருமமும்பாவமும் நேர்ந்துகொண்டதுபோல் இரண்டுதிறத்தாரும் ஆரவாரித்து மூண்டுபோர்செய்ய மலையின்சிறகுகளை அறுத்தவனாகிய தேவேந்திரனானவன் வச்சிராயுதத்தையெடுத்து அசுரன்மேல் உறைக்கும்படி எறிந்தான்- வஞ்சகனாகிய அவ்வசுரனுங்கோபித்து.—(எ-று) (உ௰)

இடித்தனன்கையிலோரிருப்புலக்கையைப் .... ..... ..*
பிடித்தனன்வரையெனப்பெயர்ந்துதீயெனத் .... .... *
துடித்தனன்சசிமுலைச்சுவடுதோய்புயத் .... .... .... *
தடித்தனனிந்திரனவசமாயினான் .... .... .... .... *

(இ-ள்) ஆரவாரித்து ஒரு இருப்புலக்கையைக் கையிற்பிடித்துக்கொண்டு மலைபோலச்சென்று தீப்போலத்துடித்து இந்திராணியின் ஸ்தனங்களின்சுவடுபொருந்திய புயங்களின்மேல் அடித்தனன்-அந்த அடிபட்டமாத்திரத்தில் தேவேந்திரன் மூர்ச்சையாயினான்.—(எ-று) (உ௧)

அண்டரேறனையவனவசமாறிப்பின்.... .... .... ....*
கண்டகன்கைதவநினைந்திக்கள்வனோர் .... .... ....*
மண்டமராற்றுவான்வலியிலோமெனப் .... .... .... *
புண்டரீகத்தவனுலகிற்போயினான் .... .... .... ....*

(இ-ள்) தேவர்களுக்குள் ரிஷபம்போன்றவனாகிய தேவேந்திரன் மூர்ச்சைநீங்கிப் பின்பு அந்தக்கண்டகனுடைய வஞ்சனையை அறிந்து இந்தத்திருடனுக்கெதிரில் நேரிடும் போர்செய்யப் பலமில்லாமலிருக்கிறோமென்று பிர்ம்மதேவனுடைய உலகிற்போயினான்.—(எ-று) (உஉ)

தாழ்ந்துதான்படுதுயர்விளம்பத்தாமரை .... .... ....*
வாழ்ந்தவன்வலாரியோடணைந்துமாமகள் .. .. .. .. .. *
வீழ்ந்தமார்பினனடிவீழ்ந்துசெப்பமால் .. .. .... .. .. *
சூழ்ந்துவானுடனேநோக்கிச்சொல்லுவான் .... .... ....*

(இ-ள்) பிர்ம்மதேவனைப்பணிந்து தான்படுகின்ற துயர்த்தைச்சொல்லத்-தாமரைமலரில் வாழ்கின்றவனாகியபிர்ம்மதேவன் தேவேந்திரனுடனே வைகுந்தத்திற்குப்போய்த் திருமகள் விரும்பியமார்பையுடைய மகாவிஷ்ணுவின் பாதத்தில் பணிந்துவந்தகாரியத்தைச்சொல்ல-அந்தமகா விஷ்ணுவானவர் யோசித்துத்தேவேந்திரனை நோக்கிச்சொல்லுகின்றார்.(எ-று)(௨௩

ஆற்றவும்பழைய துன்னங்கைவச்சிர .. .... .. .. ....*
மாற்றவருயிருணவலியின்றாதலால்.... .. .. .. ....*
வேற்றொருபுதியதுவேண்டுமாலினிச்.. .. ..... .. .. *
சாற்றுதுமதுபெறுந்தகைமைகேட்டியால்...... .. .. *

(இ-ள்) தேவேந்திரனே உன்அழகிய கையிலிருக்கும் வச்சிராயுதமானது மிகவும்பழமையானதினால் பகைவருடைய உயிரைவாங்கவலியில்லாததாயிருக்கின்றது ஆகையால் புதியதாக வேறேயொன்றுவேண்டும்இப்போது அதுகிடைக்கும் வகையைச் சொல்லுகிறோம்கேள்.(எ-று) வேறொரு எனற்பாலது-வேற்றொரு என விகாரமாயிற்று. (௨௪)

தொடையகன்மார்பநாந்தூயபாற்கடல்.. .... ..... ..*
கடையுநாளசுரருஞ்சுரருங்கையில்வெம்.. .. ... ... ... .. *
படையொடுமடையன்மின்பழுதென்றப்படை.... .. .. *
யடையவுந்ததீசிபாலடைவித்தாமரோ .... .... .. .. *

(இ-ள்) கற்பகப்பூமாலையணிந்த விசாலமானமார்பையுடையதேவேந்திரனே நாம்வெண்மைநிறமுள்ளபாற்கடலைக்கடையும்நாளில் அசுரர்களும்-தேவர்களும்-கைகளில்வெவ்விய ஆயுதங்களுடன்செல்லவேண்டாம் அப்படிசெல்லுவதுபழுதென்றுசொல்லி அந்தஆயுதங்களையெல்லாம்-ததீசிமுனிவரிடத்தில் சேர்ப்பித்தோம்—(எ-று) (௨௫)

சேட்படுநாணனிசெல்லத்தேவரா... ..... ....... .. *
வாட்படையவுணராவந்துகேட்டிலர்.. ..... ..... .. *
ஞாட்படைபடையெலாஞானநோக்கினால்..... .. ..... *
வேட்படைவென்றவன்விழுங்கினானரோ ..... .. .. .. *

(இ-ள்) நீடித்தநாள் அதிகமாகச்செல்லவும்-தேவர்களாவது-வாட்படையையுடைய அசுரர்களாவதுவந்து கேட்காமையினாலே ஞானதிருஷ்டியினால்மன்மதனுடையபடையைவென்றத

தீசிமுனிவரானவர் யுத்தத்திற்கேற்ற அந்த ஆயுதங்களையெல்லாம் விழுங்கிவிட்டார்.—(எ-று) (௨௫)

விழுங்கியபடையெலாம்வேறறத்திரண் * * * *
டொழுங்கியதான்முதுகந்தண்டொன்றியே * * * *
யெழுங்கதிர்க்குலிசமாகிதனையெய்துமூன் * * * *
வழங்குவன்கருணையோர்வடிவமாயினுன் * * * *

(இ-ள்) விழுங்கப்பட்ட ஆயுதமெல்லாம் வெவ்வேறாயிராமல் திரண்டு அந்த முனிவருடைய வீணாதண்டம்போன்ற முதுகெலும்பைப்பொருந்தி ஒரேயொழுங்குள்ளதாயிற்று- அது ஒளிவிடுகின்ற வச்சிராயுதமாம் இதனை நீ அவரிடத்திற்குப்போய்க் கேட்பதற்குமுன் கிருபையேவடிவமாயிருக்கிற அந்தமுனிவர்கொடுப்பார்.—(எ-று) தண்டு உவமம்- ஆகுபெயர். வீணாதண்டமெனவே-சமுஸ்கிருதபுராணத்தில் சொல்லப்படுகின்றது. அம்-சாரியை. (௨௬)

(வேறு.)

என்றுமாதவனியம்பவும்பர்கோ * * * * *
னென்றும்வானவர்தம்மொடொல்லெனச் * * * *
சென்றுமாயையின்செயலைநோன்பினுல் * * * * *
வென்றமாதவனிருக்கைமேவினுன் * * * * *

(இ-ள்) இப்படியாகத் திருமாலானவர்சொல்லத் தேவேந்திரனானவன் தன்னிடத்திருக்கும்தேவர்களோடும்விரைவாகப்போய்மாயையின்செய்கையை விரதங்களினுல்வென்ற ததீசிமுனிவருடைய ஆச்சிரமத்திற்சேர்ந்தான்.—(எ-று) (௨௭)

(வேறு.)

அகமலர்ந்தருந்தவனமரர்க்கன்புகூர் * * * *
முகமலர்ந்தின்னுரைமுகமன்கூறிநீர் * * * * *
மிகமெலிந்தெய்தினீர்விளைந்ததியாதது * * * * *
தகமொழிந்திடலெனவலரிசாற்றுவான் * * * *

(இ-ள்) அரிதாகிய தவத்தையுடைய ததீசிமுனிவரானவர் மனமகிழ்ந்து தேவர்களிடத்து அன்புள்ளவராய் முகமலர்ச்சியுடன் உபசாரமாக இனியவசனங்களைச்சொல்லி நீங்கள்மிகவும் இளைத்துவந்தீர்கள் இப்படிவர நேரிட்டகாரியம் என்ன- அதனை மறையாமற்சொல்லுங்களென்னத் தேவேந்திரன் சொல்லுகின்றான்.—(எ-று) (௨௮)

அடிகணீர்மறுதலொன்றதனை வேண்டியிம் .. .. .. ... *
முடிகொள்வானவரொடுமுந்தினேனது .... .. .. .. *
செடிகொள்காரிருளுடலவுணர்த்தேய்த்தெமர் ...... ..... *
குடியெலாம்புரப்பதோர்கொள்கைத்தாயது .. ... .. .. *

(இ-ள்) சுவாமிகளே-நீர் தடுக்கக்கூடாததாகிய ஒருகாரியத்தைவிரும்பி மகுடமணிந்த இந்தத்தேவர்களுடன் வந்தேன் அதுபாபங்கொண்ட கரியஇருள்போன்ற உடல்களையுடைய அவுணர்களைக்கொன்று எங்கள் குடிகளையெல்லாம் ரக்ஷிக்கத்தக்க தன்மையையுடையது —(எ-று) (௬௰)

யாதெனின்இனைய துன்யாக்கையுள்ளதென் .... ..... ..... *
றோதலும்யாவையுமுணர்ந்தமாதவ .... ..... ..... ..... *
ளுதவத்கண்டதாமலாயிருணைப் ........ ........ .... *
போதலர்த்தின்னபுகல்வதாயினன் .... .... ........ *

(இ-ள்) இத்தன்மையானது எதுவென்றால் தேவரீருடைய சரீரத்திலிருப்பது என்றுசொல்லவும் எல்லாவற்றையும் ஞானதிருஷ்டியினால அறிந்த ததீசிமுனிவரானவர் சூரியனைக்கண்ட தாமரைமலர்போல்முகமலர்த்து இந்தவார்த்தைகளைச்சொல்லுகின்றார்.—(எ-று) ஆனனப்போதென்பதனை- ஒருமொழியாகக்கொள்க-அடிமலர் என்பதனை-ஒருசொல்லென்றார் நச்சினார்க்கினியார். (௬௧)

நாய்நமதென நரிநமதெனப்பிதா .......... ............ *
தாய்நமதென நமன்றனதெனப்பிணி ............ ..... *
பேய்நமதெனமனமதிக்கும்பெற்றிபோ .... .. ...... *
லாய்நமதெனப்படும்யாக்கையாரதே .... .. .... ......*

(இ-ள்) நாய் நம்முடையதென்றும்- நரிகள் நம்முடையதென்றும்-தாயுந்தகப்பனும் நம்முடையதென்றும்-இயமன் தன்னதென்றும்-வியாதிகள் நம்முடையதென்றும்-பேய்கள் நம்முடையதென்றும் - மதித்துக்கொண்டிருக்குந் தன்மைபோன்று நாமும் நம்முடையதென்று மதிக்கப்படுகிற சரீரம் யாருடையது.—(எ-று) (௬௨)

இடம்பயிலெயிற்றரவுரியும்வீறுழை .... .... ......... *
குடம்பையுந்தாமெனுங்கொள்கைத்தேகொலா .. .. .... *
நடம்பயில்கூத்தனடிக்குடையவர்வா .... ............ *
ருடம்பையும்யாமெனவுரைக்கற்பாலதோ ...... ...... *

(இ-ள்) விஷம்பொருந்திய பற்களையுடைய சர்ப்பமானது தன்தோலையும், பக்ஷியானது தானுறைகின்ற கூட்டினையும் தானென்று சொல்லுங் கொள்கையையுடையதோ நடமாடுகின்றகூத்தர்கள்போல நடிக்காநின்ற பஞ்சேந்திரியங்கள் வாழ்கின்ற உடம்பையும் உயிரானதுயானென்று சொல்லும்பான்மையதோ.—(எ-று) பஞ்சேந்திரியங்களை-ஐவர்-என உயர்திணைபோற்கூறியது இழிவைப்பற்றியெனக்கொள்க - தோலை விட்டுச்சர்ப்பம் நீங்கிவிடுவதுபோலவும், குடம்பையைவிட்டுப்பக்ஷிநீங்கி விடுவதுபோலவும், உடலைவிட்டு உயிர்நீங்கிவிடுவ தியல்பாதலால் அவ்வுடல்நம்முடையதல்லவென்பது- குறிப்பு. (௯௯)

நடுந்தயாவிலார்தமைநலியத்துன்பநோ .... ...... .. ..*
யடுத்தயாவருந்திருவடையயாக்கையைக் .... .... .. ..*
கொடுத்தயாவறம்புகழ்கொள்வனேயெனி .... .. .... ..*
னெடுத்தயாக்கையின்பயனிதனின்யாவதே .... .... ..*

(இ-ள்) அய்யா(தேவேந்திராசனே) நடுவுநிலைமையோடு கூடியதயவில்லாதவர்களாகிய அசுரர்கள் தங்களை வருத்துவதினால் துன்பநோயை அடுத்த எல்லாரும்செல்வத்தை அடையும்படி இந்தஉடலைக்கொடுத்துத்தருமத்தையும்புகழையுங்கொள்ளுவேனானால் எடுத்தசரீரத்தினாலுண்டாகும்பயன் இதைவிட எனக்கென்ன இருக்கின்றது.—(எ-று) அய்யா-என்பாலது- அயாவென இடைகுறைந்து நின்றது-தேவேந்திரனைநோக்கி அய்யாவென்றது-அன்புமிகுதிபாலெனக்கொள்க. (௯௭)

என்றனன்கரணமொன்றியெழுகருத்தறிவையீர்ப்ப .... ..*
நின்றனன்பிரமநாடிநெறிக்கொடுகபாலங்கீண்டு........ ..*
சென்றனன்விமானமேறிச்சேர்ந்தனனுலகையன்பால் ....*
வென்றனன்றறக்கம்புக்குவீற்றினிதிருந்தானம்மா .... ..*

(இ-ள்) என்றுசொல்லி அந்தக்காணங்களொன்றாய் மேலெழுகின்ற கருத்தானது நல்லறிவையடைய நிஷ்டைகூடிப் பிர்மநாடி வழிக்கொண்டு கபாலங்கிண்டுபோய் விமானத்திலேறிச் சுவர்க்கலோகத்திற்சேர்ந்து அருளினால் உலகியற்கையைவென்றவராயினிதாகவீற்றிருந்தார். எ-று) அருளாவது- தொடர்புபற்றாது இயல்பாக எல்லாவுயிர்கள் மேலுஞ்செல்லுவதாய கருணை எனவும் அன்பின்முதிர்ச்சியே அருள் எனவு

ங்கூறினர் பரிமேலழகர். அன்பாவது - தொடர்புபற்றி உண்டாகுநேயம். (௩௫)

அம்முனிவள்ளலீந்தவடுபடைமூனுகந்தன்னை_த் ...... *
தெம்முனையடுபோர்சாய்க்குந்திறல்கெழுகுலிசஞ்செய்து.*
கம்மியப்புலவனுக்கங்கணாந்துகைகொடுப்பவாங்கி........*
மைம்முகிலூர்தியேந்திமின்விடுமழைபோனின்றான் .. ...*

(இ-ள்) வள்ளற்றன்மையையுடைய அந்தத் ததீசிமுனிவர் கொடுத்தகொல்லும்படைகளாகிய மூனுகந்தண்டெலும்பைப் பகைவர் முனையின் றயுத்தத்தைக் கெடுக்கும் வலிபொருந்திய வச்சிராயுதமாகச்செய்து தேவதச்சனுனையன் வென்றிபமக்கட வென்று வாழ்த்துதல்சொல்லிக் கையிற்கொடுப்ப வாங்கிக்கொண்டு கரியமேகவாகனனாகிய தேவேந்திரனானவன் அந்தவச்சிராயுதத்தை ஏந்திக்கொண்டு மின்னலைவிடுகின்ற மேகம்போல் நின்றான் —(எ-று) வள்ளற்றன்மையாவது -' இல்லையென்னுமல்கொடுத்தல். அடுபோர் - ஒருசொல்லாகக்கொள்க.

மறுத்தவாவஞ்சப்போரால்வஞ்சித்துவென்றுபோன ....*
கறுத்தவாளவுணர்க்கொல்வான்கடும்பரிநெடுந்தேர்தீமால் .*
வெறுத்தயமால்யானைமள்ளர்வேலைபுக்கெழுந்துகுன்ற .. ..*
மறுத்தவானவர்கோனந்தவவுணர்கோமகனைச்சூழ்ந்தான்..*

(இ-ள்) குற்றநீங்காத வஞ்சகப்பொரினால் வஞ்சித்துவென்றுபோனவாளாயுதத்தையுடைய கறுத்த அவுணனைக்கொல்ல - வேகமாகச்செல்லுகின்றகுதிரைகள் - நெடியதேர்கள் - தமது நிழலைக்கோபிக்குமயகத்தையுடைய யானைகள் பதாதிகள் - என்னும் சேனாசமுத்திரத்திற்சேர்ந்து அதனொடுபுறப்பட்டுப்போய் மலைகளினிறகுகளையறுத்த தேவேந்திரன் அவுணர்கள் தலைவனாகிய விருத்திராசுரனை வளைந்துகொண்டான்.—(எ-று) (௩௬)

வானவர்சேனைமூண்டுவளைத்தலும்வடவைச்செந்தீ .. ....*
யானதுவரையிமொங்கியழன்றுருத்தெழுந்தாலென்னத் ..*
தானவர்கோனுமானந்தலைக்கொளவெழுந்துபொங்கிச் ....*
சேனையுந்தானுமூண்டுசீறிநின்றடுபோர்செய்வான் .. ..*

(இ-ள்) தேவர்சேனை மூண்டு வளைந்துகொள்ளவே வடவாமுகாக்கினியானது மலையைப்போல ஓங்கிக்கொதித்துக் கோபங்கொண்டு எழுந்ததுபோல மானமேலிட அவ்வசுரனும் ே

முந்துசீறிச்சேனையும் தானுமூண்டு கோபித்துப் போர்செய்யத்தொடங்கினான்.—(எ-று) (௩௮)

அடுத்தனரிடியேற்றென்னவார்த்தனராக்கங்கூறி ........ *
யெடுத்தனர்கையிற்சாபமெறிந்தனர்சிறுநாணோசை .... *
தொடுத்தனர்பீலிவாளிதூர்த்தனர்குந்தநேமி........ ....*
விடுத்தனர்வானோர்சேனைவீரர்மேலவுணவீரர் .... . . *

(இ-ள்) அப்போது அவுணவீரர்கள் தேவர்சேனையிலிராநின்ற வீரர்மேல் அடுத்து இடிபோல ஆரவாரித்து ஆக்கங்கூறிக் கையில் வில்லையெடுத்து நாணேற்றிட்டுச் சிறிய ஓசையுண்டாகும்படி அந்த நாணை எறிந்து பலம்பொருந்திய பாணங்களைச் சிலர் பிரயோகஞ்செய்தார்கள்- சிலர் வேல் - சக்கரம்முதலாகிய ஆயுதங்களை எடுத்து வீசினார்கள்.—(எ-று) இடியேறு ஒருசொல் - ஈண்டு ஆக்கமென்பது - வெற்றியெனக்கொள்க.

இட்டினர்கடகக்கையாற்கிளர்வரையனையதிண்டோள் ......*
கொட்டினர்சாரிமாறிக்குதித்தனர்பல்கைநீட்டி .... .....*
முட்டினரண்டம்விள்ளமுழங்கினர்வடிவாளோச்சி .. .. ..*
வெட்டினரவுணச்சேனைவீரராவானவீரர் .... .... ....*

(இ-ள்) தேவசேனைவீரர்கள் அவுணச்சேனைவீரர்களைக்கிட்டிக் கடகமணிந்தகையால் பிரகாசியாநின்றமலையையொத்த பலம்பொருந்திய புசங்களைத் தட்டியும் இடசாரி வலசாரியாகக் குதித்துக்கைகளை நீட்டிக்கேடகங்களோடுகேடகங்களைத் தாக்கியும்- அண்டமுகடும் வெடிபட ஆரவாரித்தும் வடித்தவாள்களைவீசி வெட்டினார்கள்.—(எ-று) (௪௰)

வீழ்ந்தனர்தோளுந்தாளும்விண்டனர்சோரிவெள்ளத் .. *
தாழ்ந்தனர்போருந்தாருமகன்றனரகன்றமார்பம் ...... *
போழ்ந்தனர்சிரங்களெங்கும்புரண்டனர்கூற்றூர்புக்கு .. *
வாழ்ந்தனரடுபோராற்றிவஞ்சகன்சேனையுள்ளார் .... ... .. *

(இ-ள்) வஞ்சகனாகிய விருத்திராசுரனுடைய சேனைவீரர்கள் போர்செய்து கால்களும் தோள்களும் அறுபட்டவர்களும்- உதிரவெள்ளத்தில் மூழ்கினவர்களும்- தும்பைமாலையையும் யுத்தஞ்செய்வதையும் நீங்கினவர்களும்- விசாலமாகிய மார்பு பிளக்கப்பட்டவர்களும்- தலைகளெங்கும் புரளப்பட்டவர்களும்- நமனூரில்சென்று வாழப்பட்டவர்களும் ஆனார்கள்.—(எ-று) (௪௧)

தாளொடுகழலுமற்றார்தலையொடுமுடியுமற்றார் ........ *
தோளொடுவீரமற்றார்தும்பையோடமருமற்றார் ........ *
வாளொடுகரமுமற்றார்மார்பொடுகவசமற்றார் .......... *
கோளொடுமாண்மையற்றார்குறைபடக்குறையாமெய்யர். .*

(இ-ள்) குறைந்தாலுங்குறையாத மெய்யையுடைய தேவர்கள் வீரகண்டையுடனே பாதங்கள் அறுபட்டார்கள் - கிரீடத்துடனே தலைகள் அறுபட்டார்கள்- வீரத்துடனே தோள்கள் அறுபட்டார்கள்- தும்பைமாலையோடு போர்செய்தலை அற்றார்கள்- வாளாயுதத்துடன் கைகளும் அறுபட்டார்கள்-கவசத்துடன்மார்பும் அறுபட்டார்கள்- வலியுடன் ஆண்மையையும் அற்றார்கள்.—(எ-று) போரில்தலைமுதலாகிய அங்கங்கள் அறுபட்டாலும் மரிக்காததன்மையையுடையவர்களாதலால் குறைபடக்குறையாமெய்யர் - என்றார். மரிக்காததன்மையையுடையவர்கள் என்பதை-அமரர் என்னும் பெயராலுமறிக. ஆண்மையென்பது-ஒன்றிற்குஞ்சலியாத நிலைமை. (௪௨)

தொக்கனகழுகுசேனஞ்சொரிகுடர்பிடுங்கியீர்ப்ப ...... *
வுக்கனகுருதிமாந்தியொட்டல்வாய்நெட்டைப்பேய்க.. .*
ணக்கனபாடல்செய்யஞாட்பினுட்கவந்தமாடப் .... ....*
புக்கனபிணத்தின்குன்றப்புதைத்தபார்சிதைத்ததண்டம் ..*

(இ-ள்) போர்க்களத்தில் கழுகுகளும் பருந்துகளும் கூட்டமாகச்சேர்ந்துசொரிகின்ற குடல்களைப்பிடுங்கியிழுக்கவும்-ஒட்டிய வாயையுடைய நெடியபேய்கள் சிந்துகின்ற உதிரங்களையுண்டு நகைத்துப்பாடவும்-கவந்தங்களாடத்தொடங்கின பிணமலைகள் பூமியைமறைத்தன - அண்டமானது சிதைவுபட்டது.—(எ-று) சிதைத்தனவென்பது, வலித்தல்விகாரம்-கவந்தமாவது-தலையில்லாத உடல்கள். (௪௩)

இவ்வகைமயங்கிப்போர்செய்திறந்தவரொழியப்பின்னும். *
கைவ்வகையடுபோராற்றிக்கணாயிறந்தார்கண்மாண்டா ....*
ரவ்வகையறிந்துவானத்தரசனுமவுணர்வேந்தந் .. .....*
தெய்வதப்படைகள்வீசிச்சீறிநின்றடுபோர்செய்வார் .... *

(இ-ள்) இப்படியாக இருவகைச்சேனையுஞ்சேர்ந்து யுத்தஞ்செய்து இறந்தவர்கள்போகப் பின்னும் படைவகுப்பில் யுத்தஞ்செய்து அளவில்லாதவர்கள் இறந்தார்கள்- அப்படியி

றத்தை அறிந்து தேவேந்திரனும் அசுரர்வேந்தனும் சீறித்தேவாஸ்திரங்களைத்தொடுத்துப் போர்செய்யத்தொடங்கினார்கள்.—(எ-று) (௪௪)

அனற்படைவிடுத்தான்விண்ணோராண்டகையதனைக்கள்வன் *
புனற்படைவிடுத்துச்சீற்றந்தணித்தனன்புனிதன்காற்றின். *
முனைப்படைவிடுத்தான்வெய்யோன் முழங்குகால் விழுங்கு
சினப்படைதொடுத்துவீசிவிலக்கினான்றேவரஞ்ச....[நாகம்

(இ-ள்)தேவேந்திரன் ஆக்கினேயாஸ்திரம்விட்டான்-வஞ்சகனாகிய அசுரன்வாருணாஸ்திரம்விட்டு அந்தஅஸ்திரத்தின்சீற்றத்தைத் தணித்தான்-தேவேந்திரன்கூர்மையானவாயவியாஸ்திரத்தைவிட்டான்-அசுரனானவன் ஒலிக்குங்காற்றினை விழுங்காநின்றகோபத்தையுடையநாகாஸ்திரத்தைவில்லிற்பூட்டி யேவித்தேவர்களெல்லாம்பயப்படும்படி அந்தவாயவியாஸ்திரத்தைமாற்றினான்.—(எ-று) சீற்றந்தணித்தனன் என்றதற்கு-வேகத்தைத்தணித்தனனெனப்பொருள்கொள்க. (௪௫)

நாகமாப்படைவிட்டார்த்தானகர்கோனவனைச்செல்வன்..*
வேகமாப்படையைவீசிவிலக்கினான்றருவர்வேந்தன். ....*
மோகமாப்படையைத்தொட்டுமுடுக்கினான்முனைவனன்ன -*
தேகமாப்படிறன்ஞானப்படைவிடுத்திருள்போனின்றான். *

(இ-ள்) தேவேந்திரனானவன் பலமுள்ள நாகாஸ்திரத்தை விட்டு ஆரவாரித்தான்-அவுணர்வேந்தனானவன் வேகமும் பலமுமுள்ள காருடாஸ்திரத்தைவிட்டு அந்த அஸ்திரத்தை மாற்றினான் - தேவேந்திரன் பலமுள்ள மோகாஸ்திரத்தையெடுத்துவிடுத்தான் - அந்த அஸ்திரம்போய் விடும்படி, மிகுந்த பொய்யனாகிய அசுரனானவன் ஞானாஸ்திரத்தைவிட்டு இருள்போனின்றான்.—(எ-று) (௪௬)

மட்டிடுதாரான்விட்டவானவப்படைக்குமாறு .... .... *
விட்டுடன்விலக்கிவேறும்விடுத்திடக்கனன்றுவஞ்சன். .... *
முட்டிடமானவெங்கான்முட்டிடக்கோபச்செந்தீச்......*
சுட்டிடப்பொருதுபொங்கிச்சுராதிபனிதனைச்செய்தான்..*

(இ-ள்) தேனைச்சொரிகின்ற பூமாலையணிந்த தேவேந்திரன் விட்டதேவாஸ்திரங்களுக்கு மாறாகத் தேவாஸ்திரங்களைவிட்டு உடனேவிலக்கி-அவ்வசுரன் கோபித்து வேறே ஆயுதங்களையும் விடும்படிநெருங்க-அதனைக்கண்டு மானமாகியகடுங்காற்

றுன்று கோபாக்கினியைமூட்ட - அந்தத்தீசுடுவதினால் பொருதுபொங்கித் தேவேந்திரன் இதனைச்செய்தான்.—(எ-று)

விங்கிருளொதுங்கமேகமின்விதிர்த்தென்னக்கையி.....*
லோங்கிருங்குலிசவேலையால்லைவிதிர்த்தலோடுந்....*
தீங்குளம்போன்றிருண்டதிணியுடற்கள்வனஞ்சி .... ....*
வாங்கிருங்கடலில்வீழ்ந்தான்மறைந்தன்மைநாகமொத்தான்.*

(இ-ள்) மிகுந்த இருளானது நீங்கும்படி மேகமின்னலைவிட்டதுபோல் தன்கையில் மேன்மையுற்றிராநின்ற பெருமைபொருந்திய வச்சிராயுதத்தை விரைவாக விதிர்த்தமாத்திரத்தில் தீங்குகளைநினைக்கின்ற உள்ளம்போலக் கறுத்த திண்ணியஉடலையுடையவஞ்சகனாகிய அசுரன்பயந்துவளைந்திராநின்ற பெரியசமுத்திரத்தில் வீழ்ந்து முன்னங்கடலில் மறைந்த மைநாகமலையையொத்தான.—(எ-று) (௪௮)

ஒக்கவிந்திரனும்வீழ்ந்தானுடல்சினவுருமேறன்னான் ..*
புக்கிடந்தேடிக்காணான்புண்ணியமுளரியண்ணல் ........*
பக்கம்வந்தனையசெய்திபகர்ந்தனன்பதகன்மாளத் .. ....*
தக்கதோர்சூழ்ச்சிமுன்னிச்சராசரமீன்றதாதை .... ....*

(இ-ள்) அவனுடன் தேவேந்திரனும் வீழ்ந்து கோபத்தாலிடியையொத்த அந்த அசுரனானவன்-போன இடத்தைத்தேடிக்காணாமல் பரிசுத்தமாகிய தாமரைமலரில் வீற்றிராநின்றபிர்மதேவனிடத்திற்சென்று அந்தச் சேதியைச் சொல்லினான்-(அதைக்கேட்ட)சராசரமாகிய உயிர்களைப்படைத்த பிதாவாகிய பிர்மதேவனானவன்-பாதகனாகிய அசுரன் மாளத்தக்கதாகிய ஒரு உபாயத்தைநினைத்து.—(எ-று) உடல் என்பது-சினக்குறிப்பு. புக்க என்னும் பெயரெச்சத்து-அகரம் - விகாரத்தாற்றொக்கது. முளரி-ஆகுபெயர். அண்ணல் என்பது-பெருமையிற்சிறந்தோன்பெயர். வந்து - இடவழுவமைதி. பதகன்-விகாரம். (௪௯)

விந்தவெற்படக்கினார்க்கீதுரையெனவிடுப்பமீண்டு ......*
சந்தவெற்படைந்தான்வானோர்தலைவனைமுகமன்கூறிப். ...*
பந்தவெற்பறுத்தான்வந்ததெவனெனப்பறைகளெல்லாஞ்.*
சிந்தவெற்பறுத்தான்வந்தசெய்யெலாமுறையாற்செப்ப..*

(இ-ள்) விந்தகிரியை அடக்கியவராகிய அகஸ்தியமுனிவருக்கு இந்தச்சேதியைச்சொல்லென்று விடுப்பச்சென்றுபொதியமலையையடைந்தான்-அவ்வாறு அடைந்த தேவேந்திரனைப்

பாசமாகிய மலையை அறுத்த அகஸ்தியமுனிவர் (நோக்கி) உபசாரவார்த்தைசொல்லி யிவிடத்துக்கு என்னகாரியமாக வந்ததென்ன - மலைகளின் சிறைகளெல்லாம் சிந்த அறுத்த. தேவேந்திரனானவன் (அவரைநோக்கி அடியேன்குறித்து) வந்த செய்திகளை யெல்லாம் முறையாகச்சொல்லும்படி. (எ-று) (௫௰)

யாவையுமுணர்ந்தவெந்தைக்கியானெடுத்துணர்த்துகின்ற ..*
தாவதென்னைமருக்காற்றாதாழிபுக்கொளித்தானாவி .... ..*
வீவதுமவனால்வந்தவிழுமநோயெல்லாமின்று .... ....*
போவதுஞ்சுருதிநாட்டோர்க்குந்தனையடிகளென்றான் .... ..*

(இ-ள்) எல்லாமுணர்ந்த என்தந்தையாகிய தேவரீருக்கு நானெடுத்துச்சொல்லுவதென்னிருக்கின்றது - (ஆயினும் முக்கியமான காரியமென்னவென்றால்) போர்செய்வதற்கு வலியில்லாமல் சமுத்திரத்திற்போ யொளித்தவனுடைய உயிர் நீங்குவதையும் அவனால் எனக்குநேரிட்ட துன்பநோயெல்லாம் இன்றுபோவதையுங்கருதிச்சுவாமிகளே உம்மிடத்தில் வந்தேனென்றான்.—(எ-று) எந்தை-விகாரம். (௫௧)

என்றவனிடுக்கண்டீர்ப்பானிகல்புரிபுலன்களைந்தும் .... ..*
வென்றவனெடியோன்றன்னைவிடையவன்வடிவமாக்கி.. ..*
நின்றவனானந்தமெய்ம்மையாய்நிறைந்தவெள்ளி. .... *
மன்றவனாடிச்செந்தீவடிவினைமனத்துட்கொண்டான் ... *

(இ-ள்) என்றுசொல்லிய தேவேந்திரனுடைய துன்பத்தைத்தீர்க்க-பகைசெய்கின்ற ஐம்புலன்களையும் வென்றவரும் திருமாலை ரிஷபவாகனமுள்ள பரமசிவன்வடிவமாகச் செய்தவருமாகிய அகஸ்தியமுனிவரானவர் - ஞானானந்த உண்மையாய் நிறைந்த வெள்ளியம்பலத்தில் நிர்த்தனஞ் செய்தருளிய சோமசுந்தரக்கடவுளுடைய ஊழித்தீயையொத்த சிவந்ததிருமேனியைத் தமதுமனதிற் சிந்தித்தார். (எ-று) மனதை மோக்ஷநெறியிற் செல்லவொட்டாமல் தாம்செல்லுநெறியிலிழுத்துக்கொண்டு செல்லுவதாதலின் - இகல்புரிபுலன்களென்றார். திருமால்-சிவலிங்கமான ஸ்தலம், திருக்குற்றாலம். (௫௨)

ஆகதலங்காந்துவைகுங்கடலைவெற்படக்குங்கையிற் .. ....*
பெய்துழுந்தெல்லைத்தாக்கிப்பருகினன்பிறைசேர்சென்னி .*
ஐயனதருளைப்பெற்றோர்க்கதிசயமிதென்கொன்மூன்று ..*
வையமுந்தொழிலுஞ்செய்யவல்லவரவரேயன்றே .....*

(இ-ள்) அவ்வாறுசிந்தித்து வஞ்சகனாகிய அசுரன் ஒளித்துக்கொண்டிருக்குஞ் சமுத்திரநீரையெல்லாம் உளுந்தினளவினதாகச்செய்து விந்தகிரியையடக்கிய தமதுள்ளங்கையில் எடுத்துக்கொண்டு உண்டார்-இளந்திங்கள்பொருந்திய திருமுடியையுடைய பரமசிவனுடைய திருவருளைப் பெற்றவர்களுக்கு இதென்ன ஒரு அதிசயமா,திரிலோகங்களிலும்முத்தொழிலையுஞ்செய்ய வல்லவர்கள் அவர்களேயாம்.—(எ-று) திரிலோகமாவது, சுவர்க்கமத்திய பாதாளமாம்-முத்தொழிலாவது, சிருஷ்டி-திதி-சங்காரமாம். (௫௩)

அறந்துறந்தீட்டுவார்தமரும்பெறற்செல்வம்போல......*
வறந்தனபடுநீர்ப்பௌவம்வடவைகட்புலப்பட்டாங்கு ....*
நிறைந்தசெம்மணியுமத்தீநீண்டெரிசிகைபோனீண்டு .... *
சிறந்தெழுபவளக்காடுந்திணியிருள்விழுங்கிற்றம்மா .... ..*

(இ-ள்) தருமநெறியைவிட்டுச் சம்பாதிக்கின்றவர்களுடைய பெறுதற்கரிய செல்வமானது அழிந்துபோவதுபோல் ஆழ்ந்த நீரையுடைய சமுத்திரங்களெல்லாம் வற்றிப்போயின-வடவாமுகாக்கினியானது கண்ணுக்குத்தெரிவதுபோல நிறைந்த மாணிக்கமும்-அந்தத்தீயினது நீண்டெரிகின்ற சிகைபோல்நீண்டுசிறப்புற்று எழுகின்றபவளக்காடும், திணிந்த இருளைவிழுங்கியது.—(எ-று) (௫௪)

பணிகளின்மகுடகோடிப்பரப்பெனவிளங்கிப்பல்கா .... *
சணிகலப்பேழைப்பேழ்வாய்திறந்தனைத்தாகியொண்பால் .. *
மணியிடந்திமைக்குநீராண்மகபதிவேள்விக்காவாய்த் .... *
திணியுடலவுணன்பட்டசெங்களமனையதன்றே...... ....*

(இ-ள்) சர்ப்பங்களின் கிரீடபந்திகள்போல் விளங்கிப் பலரத்தினங்கள் பதித்த ஆபரணங்கள்வைத்த பெட்டியின் பெரிய வாயைத் திறந்துவைத்ததைப்போல் நவரத்தினங்களும் இருந்து பிரகாசிக்குந் தன்மையினால் தேவேந்திரனுடைய யாகத்துக்காகப் பசுவாகித் திண்ணிய உடலையுடைய அசுரனிறந்த செங்களம்போன்றது.—(எ-று) (௫௫)

வறந்தநீர்தன்னின்மின்னுவாள்விதிர்த்தென்னப்பன்மீ ....*
னெறிந்தனநெளிந்தநாகமிமைத்தனவளையுமுத்துஞ் .... *
செறிந்தனகரந்தயாமைசேர்ந்தபல்பண்டஞ்சிந்தி ... ..*
முறிந்தனவங்கங்கங்கமூக்கினசிறுமீனெல்லாம் .... .. ..*

(இ-ள்) நீர்வற்றின இடத்தில்- பிரகாசிக்கும் வாளாயுதத்தை வீசினதுபோலப் பலமீன்கள்எழும்பின-தெளிந்தசர்ப்பங்கள்விளங்கின- சங்கங்களும் முத்துக்களும் நிறைந்துகாணப்பட்டன- ஆமைகள் ஒளித்தன-பொருந்தியபலபண்டங்களைச் சிந்திக்கப் பல்கள் உடைந்தன-சிறுமீன்களெல்லாம் பருந்துகளின் மூக்கின்கணுள்ளவாயின.—(எ-று) (௫௬)

செருவினிலுடைந்துபோனசெங்கண்வாளவுணனங்கோ .. *
ரருவரைமுதுகிற்கார்போலடைந்துவாளுடர்செய்த .... *
வுருகெழுபாவந்தானோருருவெடுத்திருந்துநோற்கும் .... *
பரிசெனநோற்றனின்னம்பரிபவவிளைவுபாரான் ... .... *

(இ-ள்) யுத்தத்தில் தோற்றுப்போன சிவந்த கண்களையுடைய வாளவுணன் அவிடத்து ஒரு பெரிய மலையின் உச்சியில்மேகம்போலடைந்து இன்னமும்நேரிடுகிற பரிபவத்தின் விளைவையறியாதவனாய்த்-தேவர்கள்செய்ததாகிய அஞ்சத்தக்கதீவினையானது ஒருவடிவங்கொண்டிருந்து தவஞ்செய்யுந் தன்மைபோலத் தவஞ்செய்துகொண்டிருந்தான். (எ-று) (௫௭)

கைதவநோன்புநோற்குங்கள்வனைக்கண்டுவானோர் .... .. *
செய்தவமனையான்யானைர்வச்சிரஞ்சீரிப்பான்போற் .. .. *
பொய்தவன்றலையைக்கொய்தான்புணரிவாய்நிறையச்சோரி *
பெய்ததுவலாரிதன்னைப்பிடித்ததுபிரமசாயை .... .... *

(இ-ள்) வஞ்சகத்தவஞ்செய்யும் வஞ்சகனைக்கண்டு தேவர்கள்செய்ததவத்தையொத்தஇந்திரனவன்-அழகுபொருந்தியவச்சிராயுதத்தைச்சீர்ப்படுத்துகின்றவன்போல்அந்தப்பொய்த்தவனாகிய அசுரனுடைய தலையை அறுத்தான் - (அறுத்தமாத்திரத்தில்)அவ்வுடலினின்றும் சமுத்திரம் நிறையும்படி உதிரம்பெருகிற்று-பிரமஹத்திதோஷமானது இந்திரனைப் பற்றிக்கொண்டது.—(எ-று) எதுகைநோக்கிப் பொய்தவனென மிகாதுநின்றது. உயிர்கள்மேலருள்முதிர்ந்தபின் செய்யப்படுந்தவத்தை யீண்டவ்வசுரன் அருளின்றித் தேவர்களைக்கொலைசெய்யும்பொருட்டுச் செய்கின்றமையால்- கைதவநோன் பென்றார். (௫௮)

உம்மெனுமார்பைத்தட்டுமுருத்தெழுமதிர்க்கும்போர்க்கு .*
வம்மெனும்வாய்மடிக்கும்வாளெயிறதுக்கும்வீழும்..... *

கொம்மெனவோடுமீளுங்கொதித்தழுஞ்சிரிக்குஞ்சீறு .... *
மிம்மெனுமளவுநீங்காதென்செய்வானஞ்சினுனே .... .. *

(இ-ள்) உம்மென்னும் மார்பினைத்தட்டும் கோபித்தெழும்பும்- ஆரவாரிக்கும் யுத்தஞ்செய்யவாவென்னும் வாயைமடிக்கும்- ஒளிபொருந்திய பற்களைக்கடிக்கும்- விழும்- (எழுந்து) விரைவாக ஓடும்-திரும்பிவரும்-கொதிப்புடனழும்- நகைக்கும்-சீறும்-இம்மென்னும் பொழுதளவும்நீங்காது-(இப்படியிருத்தலால்) வேறொன்றுஞ்செய்யத்தோன்றுமல் தேவேந்திரன் பயந்தான்.—(எ-று) (௫௧)

விரைந்தரன்றிசையோர்வாவிவீழ்ந்தொருகமலநாளுட் .. *
கரந்தனன்மகவானிப்பாற்கற்பகநாடுபுல்லென் .... .... *
றிருந்ததாலிருக்குமெல்லையிற்பரிநகுடனென்போ .... .. *
னரும்பரிமேதவேள்வியாற்றினுனாற்றுமெல்லை .... .... *

(இ-ள்) இந்திரன்விரைவிற்சென்று ஈசானதிசையிலிருக்கும் ஒருதடாகத்தில் வீழ்ந்து ஒரு தாமரைநாளுக்குள் ஒளித்துக் கொண்டான்-இப்பால் கற்பக விருக்ஷத்தையுடைய நாடாகிய பொன்னுலகமானது பொலிவில்லாமலிருந்தது-அப்படியிருக்கும்போது இவ்வுலகத்திலிருக்கும் நகுஷனென்னும் ஒரு சூரியவம்சத்து அரசனானவன் யாவராலுஞ்செய்துமுடித்தற்கரிய அசுவமேதயாகஞ் செய்தான் - அவ்வாறுசெய்யும்போது. (எ-று) (௫௨)

அரசிலாவறுமைநோக்கியவலோவானுடர்யாரும் .... .... *
விரைசெய்தார்மகுடஞ்சூட்டிவேந்தனாக்கொண்டார்வேந்தா
வருபவஞ்சசியையீண்டுத்தருகெனமருங்குளார்போய்த். [ய்
திரைசெய்நீரமுதனாட்குச்செப்பவக்கற்பின்மிக்காள். .... *

(இ-ள்) தேவர்கள் தங்களுக்கு அரசனில்லாத வறுமையை நோக்கி அவ்வரசனை வாசனையைச்செய்யும் பூமாலையணிந்த மகுடந்தரித்து அரசனாகக்கொண்டார்கள் அப்படி அரசனாய் வருகின்றவன் இந்திராணியை இவிடத்தில் அழைத்துக்கொண்டுவாருங்களென்றான்-அவிடத்திலிருந்தவர்கள்போய் அலைகளைவீசுகின்றபாற்கடலிலுண்டாகிய அமிர்தத்தையொத்த இந்திராணிக்குச் சொல்ல- அந்தக்கற்பின்மிகுந்தவள்.—(எ-று) அரசு என்பது-அரசனதுதன்மை எனவும், அஃதுஉபசாரவழக்கால் அவன்மேனின்றது எனவும், பரிமேலழகர்கூறினர்- இது

ளை - அறனிழுக்காதல் லவைநீக்கி யென்னுங் குறளுரையிற்காண்க. அதிகாரம் - இறைமாட்சி. (௯௧)

பொன்னுயிர்த்தனையகாட்சிப்புண்ணியக்குரவன்முன்போய் *
மின்னுயிர்த்தனையாணின்றுவிளம்புவாளிதென்கொல்கெட்டே
னென்னுயிர்த்துணைவனுங்கேயிருக்கமற்றொருவனென்னைத் *
தன்னுயிர்த்துணையாக்கொள்கைதருமமோவடிகளென்றாள் *

(இ-ள்) பொன்னானது வடிவங்கொண்டதையொத்த தோற்றத்தையுடைய புண்ணியமுள்ள குருவினிடத்திற்போய் மின்னல் வடிவங்கொண்டது போன்றவளாகிய இந்திராணிநின்று சொல்லுகின்றாள் - சுவாமிகளே இதென்ன அதிசயம் - என்னுயிர் போன்ற நாயகனிருக்கும்போதே மற்றொருவன்வந்து என்னைத் தன்மனைவியாகக் கொள்ளுதல் தருமமாமோவென்று சொன்னாள் — (எ-று) கெட்டேன் என்பது - அதிசய இரக்கச்சொல். (௯௨)

மாதவரொருவர்தாங்கமாமணிச்சிவிகைமீது .... ...... *
போதரினவனேவானோர்புரந்தரனவனேயுன்றன் .... .... *
காதலனாகுமென்றான்கைதொழுததற்குநேர்ந்தம் .... .. *
மேதகுசிறப்பாலிங்குவருகெனவிடுத்தாடூது .... .... *

(இ-ள்) சத்தரிஷிகளுந் தாங்கும்படி மாணிக்கங்கள்பதித்திருக்கப்பட்ட சிவிகையின்மேல் வந்தால்அவனே தேவர்களுக்கெல்லாம் அரசனாவன் - அவனே உன்னுடைய கணவனுமாவனென்றார் - (அதைக்கேட்டவள்) அவரைக் கையால்தொழுது அதற்குச்சம்மதித்து அந்தமேன்மைபொருந்தியசிறப்புடனிங்குவரக்கடவையென்று தூது அனுப்பினாள் — (எ-று) சத்தரிஷிகள் - அத்திரி - ஆங்கிரசன் - கௌதமன் - சமதக்கினி - பாரத்துவாசன் - வசிஷ்டன் - விசுவாமித்திரன் - என்பவர்களாம். (௯௩)

மனிதரின்மகவானாகிவருபவன்சிவிகைதாங்கும் .... .... *
புனிதமாதவரையெண்ணான்புன்கணோய்விளைவும்பாரான் ... *
கனிதருகாமத்துய்க்குங்காதலால்விரையச்செல்வா ... .... *
னினிதயிராணிபாற்கொண்டேகுமின்சர்ப்பவென்றான் .. *

(இ-ள்) மனிதர்களில் இந்திரனாகிவருகின்றவன் - சிவிகைதாங்கும் பரிசுத்தமுள்ள சத்தரிஷிகளைமதியாமலும், துன்பநோயின்விளைவுமென்று எண்ணாமலும், இன்பமுதிர்ந்தகாமம் அனுபவிக்கும் ஆசையால் சீக்கிரத்திற்செல்ல - இனிதாக இந்திராணி

பிண்டத்துக்கு விளைவாகக் கொண்டுபோங்களென்றான்.— (எ-று) சர்ப்ப என்பது-விரைந்துநடக்க ஏவுதலாம். (௬௪)

சர்ப்பமாகெனமுநிகொம்புதாங்கிமுன்னடக்குந்தென்றல் *
வெற்பனுமுனிவன்சாபம்விளைத்தன்ன்விளைத்தலோடும் ...*
பொற்பமாசுணமேயாகிப்போயினனறிவிலாத .... .. *
வற்பரானவர்க்குச்செல்வமல்லதுபகைவேறுண்டோ .... *

(இ-ள்) (அப்படிசொன்னபோது முன்கொம்புதாங்கி முன்னடக்கும் தென்றற்காற்றுக்கிடமாகிய பொதியமலையிலிருக்கும் அகஸ்தியமுனிவரானவர்-அவ்வரசனைச் சர்ப்பமாகக்கடவையென்று சாபமிட்டார்-அப்படி சாபமிட்டவுடன்பொலிவுற்சர்ப்பமாய்விட்டான்- அறிவில்லாத கீழ்மக்களுக்குச்செல்வமல்லது வேறுபகைவேண்டுவதின்று.—(எ-று) அறிவில்லாதவனிடத்துச் செல்வமுண்டானால் மதமும், குரோதமும்; காமமுமாகிய குற்றங்களுண்டாகி அவனைக் கெடுக்குமாதலால்-செல்வமல்லது பகைவேறுண்டோவென்றார்-இதனைச் செருக்குஞ்சினமுமென்னுங் குறளானுமுணர்க- அதிகாரங்- குற்றங்கடிதல்-அறிவாவது-நல்லபொருளினது நன்மையையும், தீயபொருளினது தீமையையும் அறியுமறிவு. (௬௫)

பின்னவர்தங்குரவனனைபிரானடிபணிந்துவானோர் .... .... *
பொன்னகர்வேந்தனின்றிப்புலம்பலடைகின்றதைய .. .. *
வென்னலுங்குரவன்போயவ்விலஞ்சியுளொளித்தாற்கூவித் *
தன்னுரையறிந்துபோந்தசதமகற்கொண்டுமீண்டான் .... *

(இ-ள்) பின்பு தேவர்கள் தங்கள் குருவாகிய பிரகஸ்பதியின் பாதங்களைப்பணிந்து ஐயனே, அரசனில்லாமையினால் பொன்னுலகமானது துன்பமடைகின்றது என்று சொல்லலும், அவர்போய் அந்தத்தடாகத்தில் ஒளித்துக்கொண்டிருப்பவனை அழைத்துத் தஞ்சொல்லையறிந்துவெளியில்வந்த இந்திரனைக்கூட்டிக்கொண்டு அவிடம்விட்டுவந்தார்.—(எ-று) (௬௬)

கொடும்பழிகோட்பட்டான்றன்குரவனைவணங்கியென்னைச் *
சுடும்பழிகழிவதெங்ஙனஞ்சொல்லெனத்தொலைவதோர்ந்தா. *
னடும்பழிமண்மேலன்றியருந்துநீவேட்டைக்கென்னப் ....*
படும்பழிபிதனைத்தீர்ப்பான் பார்மிசைவருதியென்றான் ... *

(இ-ள்) கொடிதாகிய பழிகொள்ளப்பட்ட இந்திரன் தன்னுடைய குருவை வணங்கி அடியேனைவருத்துகின்ற பழியானது

ழிஎவ்விடத்தில்தொலையும் அதனைச்சொல்லவேண்டுமென்ன-அவர்அந்தப்பழிதீரும்தலமறிந்து (இந்திரனைப்பார்த்து) இந்திரனே, கொலைப்பழியானது பூலோகத்திலன்றித் தீராது ஆதலால்-நீவேட்டையாடச்செல்வதுபோல் இந்தப்பழியைத்தீர்க்கப்பூமியினிடத்தில்வாவென்றுசொன்னார்.—(எ-று) (௬௭)

ஈசனுக்கிழைத்தகுற்றந்தேசிகனெண்ணித்தீர்க்குந் .... ..*
தேசிகற்கிழைத்தகுற்றங்குரவனே தீர்ப்பதன்றிப் ..... ..*
பேசுவதெவனோதன்பாற்பிழைத்தகாரணத்தால்வந்த ....*
வாசவன்பழியைத்தீர்ப்பான்குரவனேவழியுங்கூற .... ..*

(இ-ள்) சிவனுக்குச்செய்தகுற்றத்தைக்குருவானவர்-தீர்க்குமுறையை அறிந்து தீர்ப்பர்-குருவுக்குச்செய்த குற்றத்தை அந்தக்குருவே தீர்ப்பதன்றி மற்றையாவர் தீர்ப்பவர்கள்-ஆதலால் தன்னிடத்தில் தேவேந்திரன்பிழைசெய்த காரணத்தினால் வந்த பழியைத்தீர்க்கக் குருவே வழியுஞ்சொல்ல.—(எ-று) (௬௮)

வாம்பரியுகைத்துத்தன்னால்வழிபடுகுரவன்வானோர் ......*
தாம்பரிவோடுஞ்சூழத்தராதலத்திழிந்துசெம்பொற் ....*
காம்பரிதோளிபங்கன்கயிலைமால்வரையைத்தாழ்ந்து .. ...*
தேம்பரியலங்கன்மார்பன்றென்றிசைநோக்கிச்செல்வான் ..*

(இ-ள்) (அந்தவார்த்தையைக்கேட்ட) தேவேந்திரனானவன்-தாவுகின்ற குதிரையின்மேலேறிக்கொண்டு செலுத்தித் தன்னால் பூசிக்கப்படுகின்ற குருவும், தேவர்களும் பரிவொடுசூழ்ந்துவரப் பூலோகத்திலிழிந்து, செம்பொன்னிறமுள்ள மூங்கிலின் துண்டத்தையொத்த தோள்களையுடையபார்வதிபாகனாகிய பரமசிவன் வீற்றிருக்கும் பெருமைபொருந்திய கயிலாயகிரியைப் பணிந்து வாசனையைத்தாங்கிய கற்பகப் பூமாலையணிந்த மார்பையுடையதேவேந்திரன் தென்றிசையைநோக்கிச்செல்கின்றான்.—(எ-று) (௬௯)

(வேறு)

கங்கைமுதலாவிறந்ததீர்த்தமெல்லாம்போய்ப்படிந்து காசி
காஞ்சி, யங்கணைகேதாரமுதற்பதிகள்பலபணிந்து மவுணற்
கொன்ற, பொங்குபழிவிடாதழுங்கியராவுண்ணமாசுண்டுபொ
லிவுமாழ்குந், திங்களனையான்கடப்பவனத்தெல்லையணித்தா
ய்ச்செல்லுமெல்லை .. .. .... .. .. .. .. ... ..*

(உ-ரை)

(இ-ள்) கங்கை முதலாகிய அளவிறந்த நதிகளிலெல்லாம் போய்ஸ்நாநஞ்செய்து காசி-காஞ்சி- அழகியபொன்மயமான திருக்கேதாரமுதலான அநேகம்ஸ்தலங்களைப் பணிந்தும் அந்த அவுணனைக்கொன்ற யிருந்த பழியானது விடாமலிருப்பதினால் வருந்தி-சர்ப்பம் உண்ணக்குறைந்து பொருந்தி ஒளியிழக்குஞ் சந்திரனையொத்த இந்திரனென்பவன் கடம்பவனத்து எல்லைக்குச்சமீபமாகப்போகும்போது.—(எ-று) (௭௰)

தொடுத்தபழி வெருகிவிடுத்தகன்றிந்திரன்றான்சுமந்தபாரம்
விடுத்தவனைத்தளவிறந்தமகிழ்வெய்திதேசிகன்பால்விளம்
பப்பாசங், கெடுத்தவன்மாதலம்புனிததீர்த்தமுமிவணமக்
குக்கிடைத்தல்வேண்டு, மடுத்தறிகவெனச்சிலராவிடுத்தவ்வே
றுநிலைநின்றப்பாற்செல்வான் .. .... .... .... ....*

(இ-ள்) நேரிட்டபழியானது புறம்பாய்விட்டுநீங்கியது-இந்திரனானவன்தாங்கியபளுவைவிடுத்தவனையொத்து அளவிறந்தமகிழ்ச்சியையடைந்து குருவினிடத்தில்சொல்லட்-பாசத்தைக்கெடுத்த அந்தக்குருவானவர்பெருமைபொருந்தியஸ்தலமும் பரிசுத்தமானதீர்த்தமும்-இவிடத்திலிருக்கின்றது அந்த இரண்டும் நமக்குக்கிடைக்கவேண்டும் - இதனை நீ அடுத்தறியக்கடவையென்று சொல்ல-அதனால்போய் அறியுங்களென்று சிலராயனுப்பிப்பழிநீங்கிய அந்தஇடத்தில்நின்றும் அப்பால் செல்லுகின்றான்.—(எ-று) (௭௧)

அருவிபடிந்தருவியெறிமணியெடுத்துப்பாறையிலிட்டருவிநீ
ர்தூய்க், கருவிரல்கொய்தலர்சூட்டிக்கனியூட்டிவழிபடுவ கல்
லாமந்தி, யொருதுறையில்யாளிகரிபுழைக்கைமுகந்தொன்ற
ற்கொன்றூட்டியூட்டிப், பருகுவனபுலிமுலைப்பால்புல்வாய்க்க
ன்றருந்தியிடும்பசிநோய்தீர .... .... .... .....*

(இ-ள்) கற்காதகுரங்குகள் மலை அருவியில்மூழ்கி அந்தஅருவிகொழிக்கின்ற மணியையெடுத்துப் பாறையில்வைத்து அருவிநீரால் அபிஷேகஞ்செய்து கரியவிரல்களாற்பறித்த மலர்களைச்சூட்டிப்பழங்களை நிவேதித்து ஆராதிப்பன-ஒருதுறையில்யாளிகளும் ஆனைகளும் மூக்கையுடைய கையினால் நீரைமொண்டு ஒன்றுக்கொன்று ஊட்டி ஊட்டி உண்பன-புலிகள் தம்முலைப்பாலை மான்கன்றுகளுக்குப் பசிநோய்தீரும்படி ஊட்டக் கொடுக்கும் —(எ-று) அறிவில்லாததென்பது தோன்றக் கல்லாமந்தியென்றார். புழைஎன்பது-துவாரம், இது-ஆகு

பெயராய் மூக்கினை யுணர்த்திற்று. நெடும்புழைக்கரத்த என்பதற்கு - நெடியதாகிய மூக்கினையுடைய கரத்தினை யுடையாய் எனவும், புழை - ஆகுபெயரெனவும், கல்லாடவுரையிலிருக்கின்றமைகாண்க. (௭௨)

நெளியராக்குருளைவெயில்வெள்ளிடையிற்கிடந்துயங்கிநெளி யப்புள்ளே, றொளியருச்சிறைவிரித்து நிழல்பரப்பப் பறவை நோயுற்றனவேகொ, லளியவாவச்சோவென்றிரங்கியயன்மடமந் தியருவிதூற்றுந், துளியநீர்வளைத்தசும்பின்முகந்தெடுத்துக்க ருங்கையினற்சொரிவமாதோ .... .... ... .. .. ...*

(இ-ள்) நெளிகின்றபாம்பின்குட்டிகள்வெயில் பரந்தவெளியிடத்தில் கிடந்து வருந்தி நெளியக்கண்டு கருடப்பக்ஷிகள் ஒளிநீங்காத சிறகைவிரித்து நிழல்பரப்ப அயலிலிராநின்றவானரங்கள் கண்டு கருடப்பக்ஷிகள் வருத்தத்தை யடைந்தன - அளியையுடையவைகள் - ஆ - அச்சோவென்று சொல்லிக்கொண்டு அருவிதூற்றுந் துளியையுடைய நீரைச் சங்காகிய குடத்தினால் மொண்டெடுத்துக் கரியகைகளினால் அந்தப் பக்ஷிகள் மேல்சொரிவன.—(எ-று) ஆ-என்பது, அதிசயச்சொல். அச்சோவென்பது - இரக்கச்சொல். (௭௩)

படவரவமணியினுநொச்சிப்பாசிலையன்னபைந்தாண் மஞ்ஞை, பெடைதழுவி மணஞ்செய்யமணவறையில் விளக்கிடுவ பெருந்தண்காவைத், தடர்சிறைமென்குயிலோமென்றார்ப்பம டக்கிள்ளையெழுத்தைந்துமோசைத், தொடர்புபெறவுச்சரிப்ப குருமொழிகேட்டாங்குவப்பதொடிக்கட்பூவை .... .. *

(இ-ள்) பசுமையாகிய நொச்சியிலையையொத்த கால்விரல்களையுடைய மயில்கள் தங்கள் பெட்டைகளைத்தழுவி மணஞ்செய்ய அதைக்கண்டு சர்ப்பங்கள் மாணிக்கங்களைக்கக்கி அந்த மணவறையில்விளக்கிடுவன - குளிர்ச்சிபொருந்தியபெரியகாட்டினிடத்து அடர்ந்தசிறகினையுடைய மென்மையாகியகுயில்கள் - ஓம் என்று ஒலிப்பன - மடப்பந்தங்கிய கிளிப்பிள்ளைகள் பஞ்சாக்ஷரத்தை ஓசைத்தொடர்புபெற உச்சரிப்பன - அதைக்குருவின் உபதேசத்தைக் கேட்பதுபோல் கேட்டுத்தொடி போலவட்டமான கண்களையுடைய நாகணவாய்ப்பக்ஷிகள் சந்தோஷிப்பன.—(எ-று) கால்-ஆகுபெயர். (௭௪)

இன்னவிலங்கொடும்புள்ளின்செயற்கரியசெயனோக்கி யிறும்பூ தெய்திப், பொன்னகரான்புளகமுடல்புதைப்பநிறைமகிழ்ச்சி

யுளம்புதைப்பப்போவா, னன்னபொழுதொற்றுவர்மீண்டடி
வணங்கியின்சுவைப்பா லருந்துவான்முன், பின்னரிய தேன்
சொரிந்தாங்குவகைமேற்பேருவகைபெருகச்சொல்வார் .. *

(இ-ள்) இத்தன்மையுள்ளமிருகங்களின் செய்கையையும், ப
க்ஷிகளின் அரிய செய்கையையும் பார்த்து அதிசயமடைந்
து தேவேந்திரனானவன் உடல்முழுவதும் புளகம்போர்ப்பவு
ம் நிறைந்த மகிழ்ச்சியானது உள்ளத்தை மூடவும் போகின்
றவன் அப்பொழுது முன்போன ஒற்றர்கள்வந்து பாதத்தி
ல்வணங்கி இனிதாகியசுவையையுடைய பாலை உண்பவன்முன் -
பின்னும் கிடைத்தற்கரிய(சுவையையுடைய)தேனைப்பொழிந்
ததுபோல் சந்தோஷத்தின்மேல் அதிக சந்தோஷமானது
பெருகச்சொல்லுகின்றார்கள்.(எ-று) (௭௫)

எப்புவனத்திலுமென்றுங்கண்டறியாவதிசயமுமெண்ணுக்கெ
ய்தாத், திப்பியமுமிக்கடம்பவனத்தின்று கண்டுவகை திளைத்
தேமங்கண், வைப்பனையவொருபுனிதவாவிமருங்கொருகடம்
பவனத்தினீழ, லொப்பிலொளியாய்முளைத்தசிவலிங்கமொன்
றுளதென்றுரைப்பக்கேட்டான் .... .... .... .... *

(இ-ள்) எந்த உலகத்திலும் எந்தநாளிலுங்கண்டறியாத அ
திசயமும் அளவுக்கடங்காததிவ்வியமும் இந்தக்கடம்பவனத்தி
ல் இன்று நாங்கள்கண்டுசந்தோஷத்தை அடைந்தோம்-அன்
றியும் அவிடத்தில் புதையலிட்டதனம்போல்வதாய்ப்பரிசுத்த
முள்ள ஒருதடாகத்தின்கரையிலிருக்கும்ஒப்பற்றகடம்பவனத்
தினிழலில் ஒப்பில்லாதசோதியாயுண்டாகியிராநின்ற ஒருசிவலி
ங்கமிருக்கின்றது (அதையுங்கண்டுதரிசித்தோம்) என்று சொ
ல்லக்கேட்டான்.—(எ-று) வைப்பு-விடாத ஆகுபெயர்.(௭௬)

செவித்துளையிலமுதொழுக்குமுழையரொடும்வழிக்கொண்டு
சென்னிமேற்கை,குவித்துரைமெய்மொழிகரணங்குணமூன்று
மொன்றித்தன்கொடியபாச, மவித்துயர்வொழிக்க முளைத்
தருள்குறிமேலன்பீர்ப்பவடைவான்காணக், கவித்துறைபூந்தட
ம்படிந்துகடம்பவனத்துழைநுழைந்தான்கவலைதீர்வான் .. *

(இ-ள்) தனக்குநேரிட்டிருக்கிறதுன்பத்தை நீக்கிக்கொள்
ளுகின்றவனாகிய தேவேந்திரனானவன் செவித்துளையில் சந்
தோஷமாகிய அமுர்தத்தைவார்க்காநின்ற ஒற்றர்களுடன்செ
ன்று சிரசின்மேல் கைகளைக்குவித்துவைத்துக்கொண்டு மன

வாக்குக்காயங்களும்-அந்தக்கரணங்களும்-முகுணங்களும்-ஒருவழிப்பட்டுத் தனதுகொடியபாசத்தைக்கெடுத்து உள்ளத்திலிராநின்ற சோபத்தை ஒழிக்க உண்டாகிய சிவலிங்கத்தினிடத்தில் அன்பானது இழுக்கச்செல்லுகின்றவன் சோலைசூழ்ந்திராநின்ற பொற்றாமரைத்தீர்த்தத்தில் ஸ்நானஞ்செய்து கடம்பவனத்துள்புகுந்தான்.—(எ-று) (௭௭)

அருவாகியுருவாகி யருவுருவங்கடந்துண்மையறிவானந்த, வுரு
வாகியளவிறந்தவுயிராகியவ்வுயிர்க்கோருணர்வாய்ப்பூவின், ம
ருவாகிச்சராசரங்களனைத்துந்தன்னிடையுதித்துமடங்கநின்ற, க
ருவாகிமுளைத்தசிவக்கொழுந்தையாயிரக்கண்ணுங் களிப்பக்
கண்டான் .... .... .... .... .... .... .... .... ..*

(இ-ள்) அருவமாகியும், உருவமாகியும், அருவுருவமாகியும் இவைகளைக்கடந்த மெய்யறிவானந்த உருவாகியும் அளவிறந்தஉயிராகியும் அந்த உயிர்களுக்கு ஒப்பற்ற அறிவாகியும், பூவினிடத்திலிருக்கும் வாசனையைப்போலாய்ச் சராசரங்களெல்லாம்தன்னிடத்தில்தோன்றி ஒடுங்கநின்ற கருவாகி முளைத்த சிவக்கொழுந்தைத் தன் ஆயிரங்கண்களுங்களிக்கும்படி கண்டான்.—(எ-று) (௭௮)

கண்டுவிழுந்தெழுந்துவிழிதுளிப்பவெழுகளிப்பென்னுங்கட
லிலாழ்ந்து, விண்டுமொழிதழுதழுப்பவுடல்பனிப்பவன்புரு
வாய்வினைதேர்வேந்த, னண்டர்பிரானருச்சனைக்கு வேண்டு
முபகரணமெலாமவ்வானெய்திக், கொண்டுவரச் சிலரைவிடு
த்தவரேகப்பின்னுமொருகுறைவுதீர்ப்பான் .... .... ..*

(இ-ள்) தேவேந்திரனவன்தரிசித்துப்பணிந்து எழுந்து கண்கள் ஆனந்தநீராற் சிந்தும்படி எழுகின்ற களிப்பாகிய சமுத்திரத்தில் மூழ்கித்தோத்திரங்களைச்சொல்லினாவானது தழுதழுப்பவும்சரீரமுழுவதும்வேர்க்கவும் அன்புருவாகிச்சோமசுந்தரக்கடவுளைஅருச்சிப்பதற்குவேண்டிய உபகரணங்களை எல்லாம் அகன்றசுவர்க்கலோகத்திற்குப்போய்க்கொண்டுவரும்படிசிலரையனுப்பி அவர்கள்போகப்பின்னும் ஒருகுறைவைத்தீர்க்கின்றான்.—(எ-று) (௭௯)

தங்குடிமைத்தச்சனையோர்விமானமமைத்திடவிடுத்தத் தடத்
தின்பாற்போ, யங்கணனைக்கடிதருச்சித்திடநறிய மலர்கிடை
யாதயர்வானந்தச், சங்கெறிதண்டிரைத்தடத்தி லரனருளாற்

பல்பரிதிசலதியொன்றித், பொங்குகதிர்பரப்பி முளைத்தாலெ
ன்னப்பொற்கமலம்பூப்பக்கண்டான் ..... .. .. ... .. *

(இ-ள்) தேவர்குலத்துக்குரிய தச்சனை திருவிமானஞ்செய்யும்படி அனுப்பி அந்தப் பொற்றாமரைத்தீர்த்தத்தினிடத்தில் போய் சோமசுந்தரக்கடவுளை விரைவாக அருச்சிப்பதற்குவாசனைபொருந்திய புஷ்பங்கள் கிடையாமல் சோர்கின்றவன் சங்குகளை எறிகின்ற குளிர்ச்சிபொருந்திய அலைகளையுடைய அந்தத்தடாகத்தில் பரமசிவனுடைய கிருபையினாலே பலசூரியர்கள் ஒருசமுத்திரத்தில் விளங்குகின்ற கிரணங்களைப் பரப்பிக்கொண்டு உதித்தாற்போல் பொற்றாமரை மலர்கள் மலர்ந்திருக்கக்கண்டான்.—(எ-று) (௫௰)

அன்புதலைசிறப்பமகிழ்ந்தாடினன்காரணத்தாலதற்குநாமம் *
மென்பது பொற்றாமரையென்றேழுலகும்பொலிசவெண்விளக
த்துப்பின்னு, மின்பனுமத்தடங்குடைந்துபொற்கமலங்கொ
ய்தெடுத்துமீண்டுநீங்காத், தன்பிணிநோய்தணியமுளைத்தெ
ழுந்தமுழுமுதன்மருந்தின்றன்பாலவந்து .... ..... .. *

(இ-ள்) அன்புஅதிகரிக்கமகிழ்ச்சியடைந்துகூத்தாடிப்(பொற்றாமரைபூத்திருக்குங்)காரணத்தினால் அந்தத்தீர்த்தத்துக்குப் பேராவது- பொற்றாமரையென்று ஈரேழு பதினாலுலகங்களிலும் விளங்கக்கடவதென்றுசொல்லிப் பின்னும்பிரகாசியாநின்ற பொற்றாமரைத்தீர்த்தத்தில் ஸ்நானஞ்செய்து பொற்றாமரைமலர்களைப் பறித்தெடுத்துக்கொண்டுவந்து நீங்காத தன்பழிநோயைத் தணிக்க உண்டாகிய முழுமுதலென்னு மருந்தாகிய சோமசுந்தரக் கடவுளிடத்தில்வந்து.—(எ-று) (௫௧)

மொய்த்தபுனக்காடெறிந்துநிலந்திருத்திவருமளவின் முளைத்
தஞான, வித்தனையசிவக்கொழுந்தின்றிருமுடிமேற் பரிதிகர
மெல்லதீண்டச், சித்தநெகிழ்ந்திந்திரன்றன் வெண்கவிகைத்
திங்கணிழல்செய்வானுள்ளம், வைத்தனனப்போதிரவியண்ட
லம்போவிழிந்ததொருமணிவிமானம் .... ... .. .. .. *

(இ-ள்) நெருங்கிய புனங்களையுடைய காட்டினைவெட்டி நிலத்தைத் திருத்திக்கொண்டுவரும்போதில் ஞானவித்தான முளைத்ததையொத்த சிவக்கொழுந்தின் திருமுடிமேல் சூரியகிரணமானது மெல்லத்தீண்டக்கண்டு தேவேந்திரனானவன் மனம்நெகிழ்ந்து சந்திரனையொத்த தன்குடையால்நிழல்செய்ய

நினைத்தான்-அப்பொழுதொரு இரத்தினவிமானமானது ஆகாசத்தினின்றும் சூரியமண்டிலம் இழிவதுபோல இழிந்தது. (எ-று) (௮௨)

கிரியெட்டுமெண்மழையைக்கிழித்தெட்டும்புழைக்கைபதிக்கீற்றுக்கோட்டுச், கரியெட்டுஞ்சினமடங்கலுமெட்டுமெட்டெட்டுக்கணமுந்தாங்க; விரியெட்டுத்திசைபரப்பமயனிருமித்துதவியவவ்விமானஞ்சாத்தி, யரியெட்டுத்திருவுருவப் பரஞ்சுடரையருச்சிப்பானாயினனே .... .... ... .... .... ..*

(இ-ள்) மேகத்தைக்கிழித்து எட்டும்படியான, மூக்கினையுடைய கையினையும் பிறையையொத்த தந்தங்களையும் உடையவைகளாய் அஷ்டகுல பர்வதங்களையொத்த அஷ்டகஜங்களும், கோபத்தையுடைய முப்பத்திரண்டு சிங்கங்களும், அறுபத்துநாலுசிவகணங்களும் தாங்க-விரிந்த அஷ்டதிசைகளிலும் பரவத்தக்கதாக மயன் நிருமித்துத் தந்த அந்தவிமானத்தைச்சாத்தித்தேவேந்திரனானவன் அஷ்டமூர்த்தமாகியசோமசுந்தரக்கடவுளை அருச்சிக்கத் தொடங்கினான்.—(எ-று) அஷ்டமூர்த்தமாவது-பஞ்சபூதமும்,சந்திரசூரியர்களும்,ஆத்மாவுமாம்.

முந்தவமருலகடைந்து பூசனைக்குவேண்டுவன முழுதுந்தேர்வார், வந்துதருவைந்தீன்றபொன்னுடைமின்னுமிழுமணிப்பூண்வாசச், சந்தனமந்தாகினிமஞ்சனந்தூமந்திருப்பள்ளித்தாமந்தீபம், மந்தமிலாவைந்துநறுங்கனிதீந்தேன்றிருவமுதமனைத்துந்தந்தார்.. .. .. .... ... .... .. .. .... ..*

(இ-ள்) முன்னே அமரருலகத்திற்சென்று பூசைக்குவேண்டுந் திரவியங்களையெல்லாந்தெரிந்துணர்ந்தவர்கள் வந்து பஞ்சதருக்களுந்தந்தபீதாம்பரம், ஒளிவிடுகின்றரத்தினாபரணங்கள் வாசனைபொருந்திய சந்தனம், கங்காசலமாகியதிருமஞ்சனம், சாம்பிராணி, திருப்பள்ளித்தாமம், தீபம், அழிவில்லாதபஞ்சகவ்வியம், நறியபழங்கள்-மதுரமுள்ளதேன்-திருவமுதம் என்னுமிவைகளையெல்லாம் கொடுத்தார்கள்.—(எ-று) பஞ்சதருக்களாவன-சந்தானம்,பாரிசாதம், கற்பகம், அரிச்சந்தனம்,மந்தாரமென்பவைகளாம்-திருப்பள்ளித்தாமமாவது- பத்திரபுஷ்பமாலைகள், இதுசைவபரிபாஷை. அமருலகு-விகாரம்.

தெய்வத்தாமரைமுளைத்ததடம்படிந்துபவந்தொலைக்குந்திருநீறாடிச், சைவத்தாழ்வடந்தாங்கியன்புருவாயருளுருவந்தாளு

யித்தோன்றும், பைவைத்தாடரவார்த்தபசுபதியையவனுலாத்
தபனுவலாற்றின், மெய்வைத்தாதரம்பெருக் வருச்சனைசெய்
தானந்தவெள்ளத்தாழ்ந்தான் .. .. ... ... ... ... ... *

(இ-ள்) தெய்வத்தன்மையையுடைய பொற்றாமரைத்தீர்த்தத்தில் ஸ்நானஞ்செய்து பிறவிநோயைநீக்கும்படியான விபூதியைத்தரித்துக்கொண்டு ருத்திராக்ஷவடமும் அணிந்து அன்புருவாகித் - திருவருளே திருமேனியாகக்கொண்டுவிளங்கும் படத்தைவிரித்துஆடுகின்ற சர்ப்பாபரண மணிந்த சோமசுந்தரக்கடவுளை அவரருளிச்செய்த ஆகமவிதிப்படி உண்மையாகப்பொருந்திய அன்பானது பெருக - அருச்சனைசெய்து ஆனந்தவெள்ளத்தில் மூழ்கினான்.—(எ-று) (௮௫)

பாராரவட்டாங்கபஞ்சாங்கவிதிமுறையாற்பணிந்துள்வாய்மெ
ய், நேராகச்சூழ்ந்துடலங்கம்பித்துக்கும்பிட்டு நிருத்தஞ்செ
ய்து, தாராருந்தொடைமிதப்பவானந்தக்கண்ணருவிததும்ப
நின்றன், பாராமைமீக்கொள்ளரவஞ்சலித்துத்துதிக்கின்றுன
மரர்கோமான். .. .. .. .... .. .. .. .. ......*

(இ-ள்) தேவேந்திரனானவன் பூமியிற்பொருந்த அஷ்டாங்கபஞ்சாங்க விதிமுறைப்படிபணிந்து மனவாக்குக்காயம் என்னும் திரிகரணங்களும் ஒருவழிப்படப் பிரதக்ஷணஞ்செய்து உடல்நடுக்கங்கொண்டு கும்பிட்டுக்கூத்தாடி மலர்கள்நிறைந்த மாலைகள்மிதக்கும்படி ஆனந்தக்கண்ணீரருவியானது பெருக நின்று அன்பானது நிறையாமல் மேலுமேலும் விர்த்தியாக அஞ்சலித்துத் துதிசெய்கிறான்.—(எ-று) (௮௬)

(வேறு.)

அங்கணனேபோற்றிவாய்மையாரணனேபோற்றிநாக ..... ..... *
கங்கணனேபோற்றிமூலகாரணனேபோற்றிநெற்றிச் ..... .. ..... *
செங்கணனேபோற்றியாதிசிவபரஞ்சுடரேபோற்றி .... ..... *
யெங்கணாயகனேபோற்றியீறிலாமுதலேபோற்றி .. .... *

(இ-ள்) கிருபாநோக்கத்தை யுடையவனே போற்றி - உண்மையாகியவேதங்களை யருளிச்செய்தவனே போற்றி - நாககங்கணனேபோற்றி - மூலகாரணனே போற்றி - சிவந்தநெற்றிக்கண்ணையுடையவனே போற்றி - ஆதியாகியசிவபரஞ்சுடரே போற்றி - எங்கள்கர்த்தனே போற்றி - முடிவில்லா முதலேபோற்றி. (எ-று) (௮௭)

யாவையும்படைப்பாய்போற்றியாவையுந்துடைப்பாய்போற்
றியாவையுமாகுய்போற்றியாவையுமல்லாய்போற்றி .... ✻[றி
யாவையுமறிந்தாய்போற்றியாவையுமறந்தாய்போற்றி ... ✻
யாவையும்புணர்ந்தாய்போற்றியாவையும்பிரிந்தாய்போற்றி ✻

(இ-ள்) எல்லா உயிர்களையும் சிருஷ்டிப்பவனேபோற்றி,எ
ல்லா உயிர்களையும் சங்கரிப்பவனேபோற்றி-எல்லாமும் ஆகு
ய்போற்றி-எல்லாமும் ஆகாதவனேபோற்றி-எல்லாமும் அறி
ந்தவனேபோற்றி-எல்லாமும் அறியாதவனேபோற்றி-எல்லா
வற்றிலும் சேர்ந்திருப்பவனேபோற்றி-எல்லாவற்றிலும்சோரா
தவனேபோற்றி.—(எ-று) (அஅ)

இடருறப்பிணித்தவிந்தப்பழியினின்றென்னையீர்த்துன் .. ✻
னடியிணைக்கன்பனுக்குமருட்கடல்போற்றிசேற்கண் .... ✻
மடவரன்மணுளபோற்றிகடம்பமாவனத்தாய்போற்றி.. .. ✻
சுடர்விடுவிமானமேயசுந்தரவிடங்கபோற்றி.... ....... ✻

(இ-ள் என்னைத் துன்பமுறப்பற்றிய இந்தப்பழியினின்று
இழுத்து உன்னுடையதிருவடிகளுக்குஅன்பனுச்செய்யும்அ
ருட்கடலேபோற்றி- மீனுக்ஷிமணவாளனேபோற்றி - பெரு
மைபொருந்திய கடம்பவனத்தில் அமர்ந்தவனேபோற்றி- பி
ரகாசியாநின்றவிமானத்தில்வீற்றிருக்கும் சுந்தரவிடங்கனே
போற்றி.—(எ-று) (அகூ)

பூசையும்பூசைக்கேற்றபொருள்களும்பூசைசெய்யு ...... ✻
நேசனும்பூசைகொண்டுநியதியிற்பேறுநல்கு ........ ✻
மீசனுமாகிப்பூசையான்செய்தேனென்னுமென்போத ... ✻
வாசனையதுவுமானமறைமுதலடிகள்போற்றி .......... ✻

(இ-ள்) பூசையும் பூசைக்கேற்றதிரவியங்களும்-பூசைசெ
ய்யும் அன்பனும்-பூசைபெற்றுக்கொண்டு முறைமையுடன் ப
யன்களையருளிச்செய்யும் இறைவனுமாகி யான்பூசைசெய்தே
னென்று சொல்லுகிறதற்போதவாசனையுமான வேதமுதலாகி
யகடவுளேபோற்றி.—(எ-று) (கூ0)

என்னநின்றேத்தினுன்பின்னசசிறிதுதோன்ற. .... ... ✻
முன்னவனடியாரெண்ணமுடிப்பவனருட்கணுக்கா .... ✻
லுன்னதுவேட்கையாதிங்குரையெனவிண்ணாயத்தாழ்ந்து .. ✻
சென்னிமேற்செங்கைகூப்பித்தேவர்கோனிதனைவேண்டும் ✻

(இ-ள்) இவ்வாறு தோத்திரஞ்செய்த தேவேந்திரனை இனிய புன்னகைதோன்ற முதல்வனாகியும்-அடியார்களுடைய எண்ணத்தை நிறைவேற்றுகின்றவனுமாயிராநின்ற சோமசுந்தரக்கடவுள் கிருபைநிறைந்தகடைக்கண்பார்வையால்பார்த்து உன்னுடைய விருப்பம்யாது சொல்லென்று திருவாய்மலர-தேவேந்திரனானவன் விநயமாகப்பணிந்து சிரசின்மேல்கைகளைக் கூப்பிவைத்துக்கொண்டு இதனைவிண்ணப்பஞ்செய்கின்றான். (எ-று) (௯௧)

ஐயநின்னிருக்கையெல்லைக்கணியனாமளவினீங்கா .. .... *
வெய்யவெம்பழியினோடுமேலைநாளடியேன்செய்த ...... *
மையல்வல்வினையுமாய்ந்துன்மலரடிவழுத்திப்பூசை .. .... *
செய்யவுமுரியனானேன்சிறந்தபேறிதன்மேல்யாதோ .... *

(இ-ள்) ஐயனே உன்னிருப்பிடமாகிய இந்தஸ்தலத்துக்குச் சமீபமாக நான்வரும்போது நீங்காதகொடிய என் பழியினோடு முற்பிறப்பில் அடியேன்செய்தமயக்கத்தைத்தருகின்ற வலியவினையு மாய்ந்து உன்செந்தாமரைமலர்போன்றதிருவடிகளைத் துதித்துப் பூசைசெய்யவுமுரியனானேன் இதன்மேலும்சிறந்தபேறு என்னிருக்கின்றது.—(எ-று) (௯௨)

இன்னநின்பாதப்போதேயிவ்வாறேயென்றும்பூசித். .... *
துன்னடியாருள்யானுமோரடித்தொண்டனாவே ... .... *
னின்னதேயடியேன்வேண்டத்தக்கதென்றடியில்வீழ்ந்த.. *
மன்னவன்றனக்குமுக்கண்வரதனுங்கருணைபூத்து ......... *

(இ-ள்) இத்தன்மையுள்ள உன் திருவடித்தாமரை மலர்களை இவ்வண்ணமே எந்நாளும்பூசித்து உன் அடியாருக்குள் நானும் ஒரு தொண்டனாவேன்-அதுவே அடியேன் விரும்பத்தக்கதென்று பாதங்களிற்பணிந்த தேவேந்திரனுக்குத் திரிநேத்திரங்களுள்ள சோமசுந்தரக்கடவுளுங்கிருபைகூர்ந்து.(எ-று)

(வேறு.)

இருதுவிற்சிறந்தவேனிலுமதியாறிரண்டினிற் சிறந்தவான்றக
ருப்,பொருவிலோரகையிற்சிறந்தசித்திரையுந்திதியினிற்சிறந்தபூ
ரணையு,மருவுசித்திரையிற் சித்திரைதோறும்வந்துவந் தருச்சி
யோர்வருடந், தெரிபுநாண்முந்நூற்றறுபதுமைந்துஞ் செய்
துவர்ச்சனைப்பயனெய்தும். .... .... ... .... .... *

(இ-ள்) ஆறு இருதுக்களிற்சிறந்த வசந்தருதுவும் பன்னிரண்டுமாதங்களிற்சிறந்த பெருமைபொருந்திய மேஷமாதமும் ஒப்பில்லாத நக்ஷத்திரங்களிற்சிறந்த சித்திரைநக்ஷத்திரமும் திதிகளிற்சிறந்த பௌர்ணமிதிதியுங்கூடுகிற அந்தச் சித்திரைமாதத்தில் சித்திரை நக்ஷத்திரந்தோறும் வந்துவந்து அருச்சனைசெய் (அப்படிச்செய்தால்) ஒரு வருஷத்துக்குச்சொல்லப்பட்ட முந்நூற்றறுபத்தைந்துநாளும் அருச்சித்த பயன் கிடைக்கும்.—(எ-று) சித்திரையிற்சித்திரைதோறும் எனமீட்டுங்கூறியது அவ்விரண்டின்பெருமைதோன்றற்கென்க. (௯௪)

துறக்கநாடணைந்துசுத்தபல்போகந்துய்த்துமேன்மலபரிபாகம், பிறக்கநான்முகன்மான்முதற்பெருந்தேவர்பெரும்பதத்தாசையும்பிறவு, மறக்கநாம்வீடுவழங்குதுமென்னவாய்மலர்ந்தருளியாலகருணை, சிறக்கநால்வேதச்சிகையெழுமணிச்சிவபரஞ்சுடர்விடைகொடுத்தான். ※

(இ-ள்) சுவர்க்கலோகத்திற்சேர்ந்து பரிசுத்தமாகிய பலபோகங்களையும் அனுபவித்து அதற்குமேல்மலபரிபாகமுண்டாகப் பிரமதேவன் மகாவிஷ்ணுமுதலானபெரியதேவர்களுடையமேலானபதவிகளினாசையும்மற்றஆசைகளும்மறக்கும்படி நாம் மோக்ஷந்தருவோமென்று திருவாய் மலர்ந்தருளிப் பெருமைபொருந்திய கிருபையானது சிறக்கும்படி நான்குவேதங்களினுச்சியிலும் விளங்காநின்றசிவபரஞ்சுடராகிய சோமசுந்தரக்கடவுள்விடைகொடுத்தருளினார்.—(எ-று) (௯௫)

மூடினன்புளகப்போர்வையாலாக்கைமுடிமிசையஞ்சலிக்கமலம், மலர்ந்து, குடினன்வீழ்ந்தானெழுந்துகண்ணருவிதரும்பினன் பன்முறைதுதிசெய்து, ஆடினனையனடிபிரிவாற்றாதஞ்சினனவனருளாணை, நாடினன்பிரியாவிடைகொடுத்தகநாவலின்றான் விண்ணவர்நாதன். ※

(இ-ள்) சோமசுந்தரக்கடவுள் (விடைகொடுத்தமாத்திரத்தில்) தேவேந்திரனானவன் புளகமாகிய போர்வையினால் சூழப்பட்டவுடம்பையுடையனாய் முடியின்மேற் கைகளைக் குவித்து வைத்துக்கொண்டு தொழுதுபின்னுங்கீழேவிழுந்து பணிந்து எழுந்து கண்ணீரருவியால் அலையப்பட்டுப் பலதரந்துதிசெய்து ஆனந்தக்கூத்தாடிச் சோமசுந்தரக்கடவுளுடையதிருவடியை விட்டுப்பிரிதலை ஆற்றாமல் பயந்து அவருடைய அருளாணை

லைய மனதிலெண்ணி (அதைக்கடந்திருக்கலாகாமையால்) பிரியாவிடைபெற்றுக்கொண்டு சுவர்க்கலோகத்துக்குப் போனான்.—(எ-று) சன்னிதியைவிட்டுடல்பிரிந்ததேயன்றி மனம் பிரியாமையினால்-பிரியாவிடையென்றார். (௬௬)

(வேறு.)

வந்தரமங்கையர்கவரிமருங்குவிசமந்தாரங்கற்பகப்பூமாரிதூற்ற, வந்தரநாட்டவர்முடிகளடிகள்சூட வயிராணிமுலைத்தடந்தோய்ந்தகலந்திண்டோள், விந்தமெனச்செம்மாந்து விம்முகாமவெள்ளத்தாடலழுந்தவுள்ளஞ்சென்று, சுந்தரநாயகன்கருணைவெள்ளத்தாழ்ந்து தொன்முறையின்முறைசெய்தான்றுறக்கநாடன் .... .... .. .. .. .. .. .... .......*

(இ-ள்) தேவஸ்திரீகள்வந்து சாமரைகள்வீசவும், தேவர்கள் மந்தாரமலர்களையும் கற்பகமலர்களையும் (மற்றமூன்றுதருக்களின் மலர்களையு) மழைபோற் பொழியவும், (அவ்வாறு பொழிந்து) தங்களுடையமுடிகளைப்பாதத்திற்சூட்டவும், இந்திராணியின் தனங்களிற்படிந்து மார்பும் பருத்ததோள்களும் மலைபோல் இறுமாந்து அதிகரிக்கு மின்பவெள்ளத்தில் உடலழுந்தவும், மனமானதுசென்று சோமசுந்தரக் கடவுளுடைய கிருபையாகிய வெள்ளத்திலாழ்ந்து முன்செய்த முறைப்படி தேவேந்திரன்அரசாட்சி செய்துகொண்டிருந்தான்.—(எ-று) மனங்கருணை-வெள்ளத்திலாழ்தல்-கருணையை இடைவிடாதுசிந்தித்தல்-ஐந்தருக்களில் இரண்டுதருக்களைச்சொன்னமையால் ஒருமொழியொழிதன்னினங்கொளற்குரித்தேயென்னும் விதியால் மற்றமூன்றுதருக்களும் வருவித்துச் சொல்லப்பட்டன.

இந்திரன்பழிதீர்த்தபடலம்-முற்றிற்று.

ஆ படலம்-ம-க்கு-திருவிருத்தம், ௬௭௯.





இரண்டாவது-

## வெள்ளையானை சாபந்தீர்த்தபடலம்.



மட்டவிழுங்கொன்றைச்சடையான்மகவானைத .. .... ..*
தொட்டபழியின்றொடக்கறுத்தவாறேதிப் ..... .. .....*

# வெள்ளையானைசாபந்தீர்த்த ஙக
## படலம்.

பட்டமத்வேழம்பரனைப்பாய்முனிவ .... .... .... *
னிட்டகொடுஞ்சாபநீத்தேகியவாறோதுவாம் .... .... *

(இ-ள்) தேனையுடைத்தாய்மலருகின்ற கொன்றைப்பூமாலையணிந்த சடைமுடியையுடைய சோமசுந்தரக்கடவுளானவர்-தேவேந்திரனைப்பற்றிய பழியின் தொடர்ச்சியை நீக்கியருளிய திருவிளையாடலைச்சொல்லி நெற்றிப்பட்டத்தையுடைய மதயானையாகிய ஐராவதமானது சோமசுந்தரக்கடவுளைத் துதிசெய்து துருவாசமுனிவரிட்ட கொடியசாபத்தை நீங்கித்தேவலோகத்திற்குப்போன சரித்திரமாகிய திருவிளையாடலையினிச்சொல்லுகின்றோம்.—(எ-று) (க)

கருவாசனைகழிக்குங்காசிநகர்தன்னிற் .... .. .. .. ..*
றுருவாசவேதமுனிதொல்லாகமத்தின் .. .. .... ....*
பெருவாய்மையாற்றன்பெயர்விளங்கவீசு .. .. .. .. *
னொருவாவிலிங்கவொளியுருவங்கண்டான் .... .. .... *

(இ-ள்) கருவின துவாசனையாகிய இருவினையையொழிக்கத்தக்ககாசிக்ஷேத்திரத்தில்-வேதங்களையுணர்ந்த துருவாசமுனிவரானவர்பழமையான ஆகமத்தின் பெரியவாக்கியத்திற்சொல்லப்படுகிறவிதிப்படி தமது பெயர்விளங்கப் பரமசிவ னீங்காத சோதிசொரூபமாகியசிவலிங்கப்பிரதிஷ்டைசெய்தார் (எ-று) ஆகமம்-பதிவாக்கியமாதலால், பெருவாய்மையென்றார். (உ)

இன்புற்றருச்சனைசெய்தேத்துவானவ்வேலை .. .. .. ..*
யன்புக்கெளியனருளாற்றிருமுடிமேன் ... ... .. .... *
மின்பொற்கடிக்கமலப்போதொன்றுவீழ்ந்திடலுந் .. ... *
தன்பொற்கரகமலப்போதலர்த்தித்தாங்கினான் .... .. *

(இ-ள்) (அவ்வாறுபிரதிஷ்டைசெய்து) இன்பத்துடன் அருச்சித்துத் துதிசெய்யும்போது அன்புக் கெளியவராகியசோமசுந்தரக் கடவுளுடைய திருவருளினால், அவரது திருமுடியினின்று பிரகாசம்பொருந்திய பொன்னிறமுள்ள வாசனை தங்கிய ஒரு தாமரைப்பூவிழுந்திடலும்- (அதைக்கண்ட துருவாசமுனிவரானவர்) தம்முடைய பொன்னிறமுள்ள கைகளாகிய தாமரைமலர்களை விரித்து ஏந்திக்கொண்டார்.—(எ-று)

தாங்கிக்கண்சென்னிதடமார்பணைத்துடலம் .... .. .. *
வீங்கித்தலைசிறந்தமெய்யுவகைமேற்கொள்ள .... .. .. *

நீங்கிக் கழிந்த கருணை நிதியனையான் .. .. ... .. .. .. *
பூங்கற்பக நாட்டு நீபோகின்ற வவ்வேலை .... ..... .. *

(இ-ள்) எந்தச் சிரசிலும் அகன்றமார்பிலும் ஒத்திக்கொண்டு உடலம் பூரித்து அவ்விடத்துண்டான உண்மையாகிய மகிழ்ச்சியானது மேலோங்க விடைபெற்றுக்கொண்டு மிகுந்த கிருபையால் சமுத்திரத்தையொத்த துருவாசமுனிவரானவர் மலர்களையுடைய கற்பகவிருக்ஷந்தங்கிய சுவர்க்கநாட்டிற் செல்லும்போது.— (எ-று) (௪)

சங்கலறச் செங்களத்துத் தானவரைத் தேய்த்துவிறற் .. .. *
கொங்கலர்தார் வேய்ந்தமரர் கோமான்றன் கோநகரித் .. .. *
செங்கணமரர் பெருஞ்சேனைக்கடல்கலிப்ப .... .... .. *
மங்கலப்பல்லாண்டுமறைமுழங்க வந்தணைவான் .... .. .. *

(இ-ள்) வெற்றிச்சங்கு ஒலிக்கச் செய்விதாகிய போர்க்களத்தில் தானவர்களைக்கொன்று வாசனைபரந்த வெற்றிமாலையணிந்து தேவேந்திரனானவன் சிவந்தகண்களையுடைய தேவர்களாகிய பெரிய சேனைசமுத்திரம் ஒலிக்கவும்; மங்கலமாகிய பல்லாண்டும் வேதமும் ஒலிக்கவும், தானிருக்கும் ராசநகரத்தில் வருகின்றவன்.—(எ-று) வந்தணைதல் - ஒருசொன்னீர்மைத்து. (௫)

எத்திக்குங்கல்லென்றியங்கலிப்பவேந்திழையார் .... .. *
இத்தித்தமுதொழுகுங்கீதஞ்செவிமடுப்பப் .. .. .. .. *
பத்திக்கவரிக்குழாந்தானைப்படுகடலிற் .... .. .. .. .. *
தத்திப்புரளுந்திரைபோற்றவழ்ந்தசைப்ப .... .. .. .. .. *

(இ-ள்) எல்லாத்திக்குகளிலும் கல்லென்கிற ஓசையுடனே வாத்தியங்கள் ஒலிக்கவும், தேவஸ்திரீகள் பாடுகின்ற மதுரித்து அமிர்தம் ஒழுகுவதுபோன்ற இசையானது காதிற்பொருந்தவும் சேனையாகிய சமுத்திரத்தில் தத்திப்புரளுகின்ற அலைகள்போல் வரிசைவரிசையாகச் சாமரைக்கூட்டங்க ளசையவும்(எ-று)

அங்கட்கடலினெடுங்கூம்பகநிமிர்ந்த .... .... .. .. *
வங்கத்தலையுய்க்குடீகான்றனைமானத் .... .. ..... .. *
திங்கட்குடைநிழற்றத்தீந்தேய்தக்கவிழ்க்கும் .. .. .... *
வெங்கட்களிற்றின்மிசைப்பவனிபோந்தணைந்தான் .. .. *

(இ-ள்) அழகிய இடத்தையுடைய சமுத்திரத்தில் நெடிதாகியபாய்மரம்நல்லிடத்தில் ஓங்கியிருக்கப்பெற்ற கப்பலினி

# வெள்ளையானைச்சாபந்தீர்த்த படலம்.

டத்தில் இருந்துகொண்டு அதனைச்செலுத்துகின்ற மாலுமியையொப்பாகச் சந்திரனையொத்த குடையானது நிழலைச்செய்ய-மதுரமும் வாசனையுமுள்ள மதநீரை யூற்றுகின்றதாய்ப் பகைவர் அஞ்சத்தக்க கொடியபார்வையையுடைய ஐராவதமென்னும் ஆனையின்மேல் பவனிவந்தான்.— எ-று) பவனிபோதல்- ஆபரணங்கள்முதலானவை அணிந்துகொண்டு பலவிதச்சிறப்புடன் உலாப்போதல். போந்தனைதல் - ஒருசொன்னீர்மைத்து. வெற்றிகொண்டுவருகிறவன் - போர்க்கோலத்தையொழித்து - இவ்வாறு பவனிவருகின்றானெனக்கொள்க.

அத்தலைவின் றொடரருகணைந்துவெவ்வேறு .... .... .. *
தத்தமனக்கிசைந்தகையுறைகடாங்கொடுத்துக் .... .... *
கைத்தலங்கள் கூப்பினார்கண்டார்கடவுளரின் .... .... .. *
உத்தமனையர்ச்சித்துப்போந்தமுனியுத்தமனும் .... .. *

(இ-ள்) அவிடத்திலே தேவர்கள் இந்திரன் அருகில்வந்து வெவ்வேறான தங்கள் தங்கள் மனதுக்கிசைந்த கையுறைகளைக்கொடுத்துக்கைகள்கூப்பித்தொழுதுகண்டார்கள். (அப்போது) தேவர்களில்உத்தமனாகிய பரமசிவனை அருச்சித்துவந்தமுனிச்சிரேஷ்டரும்—(எ-று) (அ)

தீங்கரியவாசிமொழிசெப்பித்தன் செங்கரத்தி .... .. .. *
னீங்கரியதாமரையைநீட்டினான்மற்றதனைத் ... .... ...*
தாங்கரியசெல்வத்தருக்காலோர்கையோச்சி .... .... *
வாங்கிமதயானையின்மேல்வைத்தான்மதியிலான் .... .. *

(இ-ள்) தீங்கில்லாத ஆசீர்வசனஞ்சொல்லித்தமதுசெம்மையாகிய கையினின்று நீங்குதற்கரிய தாமரைப்பூவைக் கொடுத்தார்- அந்தப்பூவைத்-தாங்குதற்கரியசெல்வச்செருக்கினாலே விவேகமில்லாதவனாகிய தேவேந்திரனானவன் ஒரு கையைநீட்டிவாங்கி மதத்தையுடைய ஐராவதமென்னும் ஆனையின்மேல் வைத்தான்.— (எ-று) (௯)

கீறிக்கிடந்தமதியனையகிம்புரிக்கோட் .. .. .. .. .. ... *
டூறிக்கடங்கவிழ்க்குமால்யானையுச்சியின்மே .... .. .. *
லேறிக்கிடந்தநறுமலரைவீழ்த்தியுராற் .... .. ... .. .. *
சீறிக்கிடந்தநெடுந்தாளாற்சிதைத்ததன்றே .... .... .. *

(இ-ள்) சந்திரனை நாலாகப்பிளந்து வைத்ததையொத்த பூண் கட்டிய தந்தங்களையுடையதாய் மதநீரை யிடைவிடாது ஊற்றுகின்ற பெரிய அந்த யானையானது தன் தலையின்மேல் வைக்கப்பட்டிருந்த வாசனைபொருந்திய தாமரைப்பூவைக் கீழே தள்ளி உரலைச் சீறிக்கிடந்த நெடியதாளினாலே தேய்த்தது — (எ-று) உரலினுஞ்சிறந்த தென்பது தோன்ற-உரற்சீறிக்கிடந்த நெடுந்தாளென்றார். (௰)

கண்டான்முனிகாமற்காய்ந்தானுதற்கண்போல் .. .. ... *
விண்டாரழல்சிதறநோக்கினன்வெங்கோபங் .. .. .. ... *
கொண்டாண்மடவொரதுங்கக்கொதித்தால .... .. .. .. *
முண்டானென்னைநின்றருந்தானுளாக்கின்றான் .. .. ... .. *

(இ-ள்) தாமரைப்பூவை யானையானது தேய்த்ததைத் துருவாசமுனிவர்பார்த்து மன்மதனை எரித்த பரமசிவனுடைய நெற்றிக்கண்ணிலிருந்து உண்டான நெருப்புபோல்மிகுந்த தீயானது வெளிப்பட்டுச் சிதறும்படி விழித்துப்பார்த்துக் கோபங்கொண்டு தேவர்களெல்லாம் பயந்தோடும்படி கொதித்து விஷமுண்ட ருத்திரமூர்த்திபோல் பின்னும் அதிககோபத்துடனின்று சொல்லுகின்றார்.—(எ-று) (௰௧)

புள்ளிபதோலாடைபுனைந்தரவப்பூணணிந்த , ... .. ... .. *
வெள்ளியசெங்கண்விடையானடிக்கமல .. .. .... .. *
முள்ளியமெய்யன்புடையாரருவருத்துத் .. ... .. .. .. *
தள்ளியசெல்வத்தருக்கினையென்செய்தாய் .......... .. *

(இ-ள்) புள்ளிகளையுடைய புலித்தோலாகிய உடைதரித்துச் சர்ப்பாபரணங்களையணிந்த வெள்ளைநிறமுள்ள சிவந்த கண்களையுடைய ரிஷபவாகனத்தையுடைய பரமசிவனது திருவடித்தாமரையைச் சிந்தித்துக்கொண்டிராநின்ற உண்மையான அன்புடைய திருத்தொண்டர்கள் அருவருத்துத் தள்ளிவிட்ட செல்வத்தினாலுண்டான தருக்கையுடையவனே - என்னகாரியஞ்செய்தாய் —(எ-று) உள்ளிய என்பது-காலமயக்கு. அன்பர்கள் அழியாதசெல்வத்தைப் பெற்றவர்களாதலால் - அழியத்தக்கசெல்வத்தை அருவருப்பரெனக்கொள்க. (௰௨)

கதிர்த்தார்முடியமரர்கையுறையேநன்கு ......... .... *
மதித்தாயெம்மீசன்மதிமுடிமேற்சாத்தும் ......... .. *

# வெள்ளியானைசாபந்தீர்த்த-உரைக

## படலம்.

பொதித்தாதவிழ்மலரைப்போற்று வாங்கி..... ..... ...*
மிதித்தானைசிந்தவதன்மேல்வைத்தாய்பேதாய்.... .... *

(இ-ள்) ஒளிபொருந்திய மாலைசூடிய மகுடந்தரித்த தேவர்கள்கொடுக்கும் கையுறைகளையே நன்காகமதித்து எம்பிறைவனுடைய மதியணிந்த திருமுடிமேல் சாத்தும்நிறைந்த மகரந்தத்தோடும்விரிந்த தாமரைமலரைப்போற்றிசெய்யாமல்வாங்கி ஆனையானது மிதித்துச்சிந்தும்படிஅதின்மேல்வைத்தாய் அறிவில்லாதவனே.—(எ-று) கையிலுறப்பட்டது-கையுறை. பொதித்தாது - விகாரவகையால்மிக்கது. (யிக)

வண்டுளருந்தண்டுழாய்மாயோனிறுமாப்பும் .... ..... *
புண்டரிகப்போதுறையும்புத்தேளிறுமாப்பு .... .. .. *
மண்டர்தொழவாழுன்னிறுமாப்புமாலால ... .... .. *
முண்டவனைப்பூசித்தபேறென்றுணர்ந்திலையால்.... ....*

(இ-ள்) வண்டுகள்சிதறுகின்ற குளிர்ச்சிபொருந்திய துளசிமாலையணிந்த மகாவிஷ்ணுவினுடைய இறுமாப்பும், தாமரைப்பூவில் வீற்றிராநின்ற பிர்மதேவனுடைய இறுமாப்பும், தேவர்கள்தொழவாழும் உன்னுடைய இறுமாப்பும்,விஷபானஞ்செய்தருளிய பரமசிவனைப்பூசித்த பேறென்று நீயறிந்திலை.—(எ-று)உளருதல்-குடைகின்ற எலினுமமையும். வண்டுளர்ந்ததார்-என்பதற்குச், சிதறின்வெண வுளாசெய்தனர் நச்சினார்க்கினியார் இறுமாப்புஎன்பது,மிகுமகிழ்ச்சி. இறுமாத்தல்-செம்மாத்தல்போலொருசொல்லென்றார் பரிமேலழகர்.

சேட்டானைவானவர்நின்சென்னிசெழியரிலோர்..... .... *
வாட்டானைவீரன்வளையாற்சிதறுகதின் .... ..... .... *
கோட்டானைநாற்கோட்டவெண்ணிறத்தருஞ்சாருங் .. .. *
காட்டானையாகவெனவிட்டான்கடுஞ்சாபம். .... .... *

(இ-ள்) பெருமைபொருந்திய சேனைகளையுடைய தேவேந்திரனே உன்னுடைய சிரசானது, பாண்டியராசாக்களில் வாட்படையையுடையஒருவீரனது வளைதடியால் சிதறக்கடவது-பலத்தையும் மதத்தையும் நான்குதந்தங்களையுமுடையதாய்வெள்ளைநிறத்தையுமுடையதாகியயானையும்,காட்டானையாகக்கடவதென்று துருவாசமுனிவரானவர் கொடியசாபமிட்டார் —(எ-று) (யஉ)

சவித்தமுனிபாதந்தலைக்கொண்டுசெங்கை .... .... ..*
குவித்தமரர்தங்கோன்குறையிரப்பாராய .... .... .. *
அவித்தபொறியாயெம்மரசுங்காறள்ளுநஞ் .... .. .. .. *
செவித்தறுகண்வேழமுந்தீங்குடையரன்றே .... .... *

(இ-ள்) இப்படிசபித்த முனிவருடைய பாதத்தைத் தேவர்கள் தங்கள் தலையில் அணிந்துகொண்டு செம்மைநிறமுள்ளகைகளைக்குவித்துத் தொழுது தங்கள் அரசனுக்குநேரிட்ட குறையைக்குறித்து இரப்பவர்களாய்-ஐயரே, ஐம்பொறிகளையுங்கெடுத்த மகானுபாவரே, எங்கள் அரசனும் காற்றைநீக்குகின்றகாலினையும் மறத்தினையுமுடைய யானையும் குற்றமுடையவர்களல்லவோ—(எ-று) குற்றமுடையவர்களேயாம்-என்பது, குறிப்பெச்சம். பாதந் தலைக்கொள்ளுதல்வணங்குதலென்னுங்குறிப்புத்தோன்றநின்றது. ஈண்டு- அரசும் வேழமும் - தீங்குடையவெனச்சிறப்புடைமைபற்றி உயர்திணையால் முடிந்தது.

அத்தகையநீராற்சபித்தீரடிகேண்மற் .. .. .. .. .. ..*
றித்தகையசாபமினிவிடுமினென்றிரந்து. .. .... .... *
கைத்தலங்கள்கூப்பிக்கரைந்தார்க்கிரங்கியருள் .. .. .. *
வைத்தமுனிபிறிதுசாபம்வகுக்கின்றான் .... .. .. .. *

(இ-ள்) அத்தன்மையான குற்றத்தினால் சபித்தீர் சுவாமிகளே-இப்படிப்பட்டசாபத்தை இப்போதே தீர்த்தருளுமென்று இரந்து கைகளைக்குவித்துத்தொழுதுசொன்னவர்களிடத்து இரங்கி அருள்வைத்த துருவாசமுனிவரானவர்- பிறிதுசாபம்சொல்லுகின்றார்.—(எ-று) (௰எ)

சிந்தனைவாக்கிற்கெட்டாச்சிவனருளளித்தசேட .... ....*
நிந்தனைபரிகாரத்தானீங்காதுதலைமட்டாக .... .. .....*
வந்ததுமுடிமட்டாகமத்தமாவனமாவாகி .. .. ... .. ..*
யைந்திருபஃதாண்டெல்லையகன்றபின்பண்டைத்தாக ....*

(இ-ள்) மனவாக்குக்கெட்டாத பரமசிவனுடைய திருவருளானது அளித்த சேடநிந்தனை பரிகாரத்தினால் நீங்காது- ஆனால் தலையினளவாகவந்தது முடியினளவாகப் போகக்கடவது களிப்பினையுடைய யானையானது காட்டுயானையாகி நூறுவருஷகாலஞ்சென்றபின்பு பழையபடி தேவயானையாகக்கடவது. (எ-று) சேடம் என்பது-மிச்சப்பொருள். (௰அ)

# வெள்ளையானைசாபந்தீர்த்த-௨௱௩
## படலம்.

என்றனன்பிறிதுசாபமித்திரன்மகுடபங்க ... ... .. ...*
மொன்றியசெய்கைபின்னருளாத்துமற்றஃதிற்க ......*
நின்றவெள்ளானைவானநீத்தறிவிழந்துநீலக் .. .. .......*
குன்றெனவனத்துவேழக்குழாத்தொடுகூடியதன்றே ... *

(இ-ள்) இவ்வாறு பிறிதுசாபஞ்சொன்னார் தேவேந்திரனுடைய மகுடமானது பங்கமுற்றசெய்கையைப்பின்னாலேசொல்லுவோம் ஆதலால் அந்தச்சரித்திரமிருக்கட்டும்-தேவலோகத்திலிருந்த வெள்ளையானையானது அவிடத்தைவிட்டு அறிவை நீங்கி நீலமலைபோலாகிக் காட்டுயானைக்கூட்டத்துடன் சேர்ந்தது.—(எ-று) யானை-ஆனையெனமருவிநின்றது (௰௧)

மாவொடுமயங்கிச்செங்கண்மறம்பயில்காடுமுல்லைப் .... *
பூவொடுவழங்குநீத்தப்புறவமுங்குறவர்தங்க .... .... ...*
டேவொடுபயிலுங்கல்லுந்திரிந்துநாளாண்டுஞ்செல்லக் ....*
காவொடுபயிலுந்தெய்வக்கடம்பமாவனம்புக்கன்றே ....*

(இ-ள்) இவ்வண்ணம் காட்டுயானைகளுடன்சேர்ந்து சிவந்தநிறமுள்ளகண்களையுடைய மறவர்கள் சஞ்சரிக்கின்ற காட்டிலும்-முல்லைப்பூவோடுஓடுகின்ற நீரையுடைய (கான்யாறுகள்சூழ்ந்த)முல்லைநிலங்களிலும்-குறவர்கள் தங்களுடையகடவுளாகியசுப்பிரமணியருடன்வாசஞ்செய்யும்மலைகளிலுஞ்சஞ்சரித்து நாளும்வருஷமுஞ்செல்லக் கற்பகச்சோலையை யொத்ததாய்த் தெய்வத்தன்மை பொருந்திய பெருமையையுடைய கடம்பவனத்திற்சென்றது.—(எ-று) கடம்பவனமானது-சோமசுந்தரக்கடவுள் வீற்றிருக்கப்பெற்றதாதலால் மற்றையவனம்போலாது சிறப்புற்றதென்பதுதோன்றத்-தெய்வக்கடம்பமாவனமென்றார். (௨௰)

புக்குரல்வட்டத்திண்காற்பொருவிறேவியலிற்றீர்ந்த......*
மைகருங்களிறுமுக்கண்மாதவனருள்வந்தெய்தத் .. ....*
திக்கதேரமையுஞ்சாரமாகதந்தழைத்துமின்னு ..........*
நக்கபொன்முளரிபூத்ததளிர்கயந்தலைக்கண்டன்றே ......*

(இ-ள்) கடம்பவனத்திற்சென்று உரல்போல் அடிவட்டமாகிய திண்ணியகால்களையுடையதாய், ஒப்பில்லாத தெய்வத்தன்மையினின்று நீங்கியமேகம்போலக் கருநிறமுள்ள யானையானது மூன்றுகண்களையுடைய மாதவனாகிய துருவாசமுனிவரு

டைய அருளானது நேரிடத்தக்கதாகிய காலம் ஒத்துக்கொள்ள மரகதம்போல்(இலைகள்) தழைத்துப் பிரகாசியாநின்ற மலர்ந்த பொற்றாமரைமுளைத்த குளிர்ந்த பொற்றாமரைத்தீர்த்தத்தை அவிடத்திற் கண்டது.—(எ-று) மரகதம் உவமவாகுபெயர். (௨௧)

கண்டபோதறிவுதோன்றக்கயந்தலைகுடைந்தபோது .... *
பண்டையவடிவந்தோன்றப்பரஞ்சுடரருட்கண்டோன்றக் .. *
கொண்டதோர்பரமானந்தக்குறியெதிர்தோன்றக்கும்பிட் .*
டண்டர்நாயகனைப்பூசைசெய்வதற்கன்புதோன்ற .... .. *

(இ-ள்) அந்தத்தீர்த்தத்தைக்கண்டபோது அறிவுதோன்றவும் அதில்முழுகியபோது பழையவடிவந்தோன்றவும் பெற்றுப் பரமசிவனதருட்கண்டோன்றுதலால்பரமானந்தமே திருவுருவமாகக்கொண்டிராநின்ற சொக்கலிங்கமூர்த்தியானவர் எதிரிலேதரிசனமாக நமஸ்கரித்துத் தேவர்நாதனாகிய அந்தச்சொக்கலிங்கமூர்த்தியைப்பூசைசெய்வதற்கு அன்புதோன்ற.—(எ-று) (௨௨)

தூம்புடைக்கையான்மொண்டுமஞ்சனத்துநீராட்டித் .... *
தேம்புடையொழுகப்பள்ளித்தாமமுந்தெரிந்துசாத்திப் .. *
பாம்புடைச்சாயவேணிப்பரனையர்ச்சிக்கவுள்ளத் ...... *
தாம்புடையறிந்தவெந்தையானையைநோக்கிக்கூறும் ....*

(இ-ள்) முழைக்கையையுடையகையினால் மொண்டுமஞ்சனமாகிய பரிசுத்தம்பொருந்திய தீர்த்தத்தினால் அபிஷேகஞ்செய்து தேனானது நாற்புறத்திலுமொழுகும்படி திருப்பள்ளித்தாமமும்பழுதற ஆய்ந்துசாத்திப்பாம்பையுடையதாகியசடையையுடைய சோமசுந்தரக்கடவுளை அருச்சிக்க-அந்தயானையின் உள்ளத்திலுண்டான அன்பினை அறிந்த சோமசுந்தரக்கடவுள் அதனை நோக்கித்திருவாய் மலர்ந்தருளுகின்றார்.— எ-று) தூம்பு-டைக்கையென்பதற்கு-புழைக்கையென்பதற்குரைத்தாங் குறைத்துக்கொள்க. ஆண்டுமீண்டுந் துவாரம்பொருந்திய கையெனினுமமையும். (௨௫)

மைந்தநீவேண்டும்வரமெவனுரைத்தியென்னச் ...*
சிந்தையிலன்புகூர்ந்ததெய்வவேழந்தாழ்ந்து .... ....*
முந்தையில்விளைவும்வந்தமுறைமையுமுறையாற்கூறி .[மோ
யெந்தையை யடையப்பெற்றேற் கினியொரு குறையுண்டா

(இ-ள்) நீயிங்குவந்தகாரியம் என்ன உனக்குவேண்டியவர

மென்னசொல்லென்று கட்டளையிட்டருள உள்ளத்திலன்புமி
குந்த ஐராவதமென்னும் தெய்வயானையானது பணிந்து முன்
னம் தனக்குநேரிட்ட சாபத்தையும் அதனால்தான்வந்தமுறை
மையையுங்கிரமமாகச்சொல்லி எந்தந்தையாகிய தேவரீரை
அடையப்பெற்றேன் இனி அடியேனுக்கொரு குறையுண்டா
மோ (எ-று) உண்டாகாதென்பது-குறிப்பெச்சம். ஐ-சாரியை

என்பதாமாரம்பூண்டவெற்றைதயிக்கரிகளெட்டோ ...... *
டொன்பதாயடியனேனுமுன்னடிபிரியாதுன்றன் ..... *
முன்பதாயிவ்விமானமுந்துறச்சுமப்பவென்றே ...... *
நன்பதாயொன்றென்னுள்ளத்தடுத்தலாலதேவேண்டும் .. *

(இ-ள்) எலும்பாகிய மாலையை அணிந்தஎன்தந்தையே-இந்த அஷ்டகசங்களுடனே யொன்பதாய் அடியேனும் உன்னுடைய திருவடிகளைப் பிரியாமல்சுவாமிகள் எதிரிலிருந்து இந்தவிமானம் என்முதுகில் பொருந்தத் தாங்கவேண்டுமென்கிற ஒப்பற்ற அன்பினையுடையதாயொரு எண்ணம் என்னுள்ளத்துண்டாயிருப்பதினால் அதுவே வேண்டும்.—(எ-று) ஒன்பதென்னுமோரடியிலிருக்கு மொழியையொழித்து மற்றமுன்றடிச்சொற்களிலிருக்கும் அதுபகுதிப்பொருள்விகுதி. (உ௫)

இடையறவன்பின்வேழமிவ்வணங்கூறவின்ன ......... *
டுடையவனம்பான்மெய்யன்புடையவனவனைத்தாங்கி .... *
யடைவதேநமக்குவேண்டுமகமகிழ்வென்றுப்பின்னும் ..., *
விடையவன்வரங்கணல்கிவிடைகொடுத்தருளினானே .... *

(இ-ள்) மாறாத அன்பினையுடைய ஆனையானது இவ்வாறு சொல்லத் தேவேந்திரனானவ னம்மிடத்தில் உண்மையான அன்பினையுடையவன் ஆதலால் அவனை நீ தாங்கிக்கொண்டிருப்பதே நமக்குவேண்டிய மனமகிழ்ச்சியென்றுசொல்லி ரிஷபவாகனமுள்ள சோமசுந்தரமூர்த்தியானவர் பின்னும்வரங்கள் கொடுத்துப்போம்படி உத்தரவுகொடுத்தருளினார்.—(எ-று)

(வேறு.)

விடைகொடுவணங்கியேகும்வெள்ளானைமேற்றிசையடைந்து
றின்போற், றடமுமேற்றதன்பாலரனையுங்கணேசன்றனையுங்
கண்டருச்சனைசெய், திடையறவன்புந்தானுமங்கிருக்கு மெல்
லையிச்செய்திகேட்டருள்கூர், கடவுளர்பெருமானுழையரைவி
ளித்தெங்களிற்றினைக்கொணர்கெனவிடுத்தான் ......... *

(இ-ள்) விடைபெற்றுக்கொண்டு சோமசுந்தரக்கடவுளைப் பணிந்துசெல்லுகின்றவெள்ளையானையானது மேற்குத்திசையி லடைந்து தன் பெயரினால்ஒருதீர்த்தமும் அதன் கரையில்சிவலிங்கமூர்த்தியையும்-விநாயகனையும் பிரதிஷ்டைசெய்து அர்ச்சித்து மாறாத அன்புடன் அந்தயானை அவிடத்தில்இருக்கும். போது அந்தச்சேதியை அருள்மிகுந்த தேவேந்திரன் கேள்விப்பட்டு ஏவலாளிகளை அழைத்துஎமதுயானையைக்கொண்டுவாருங்களென்று அனுப்பினான்.— எ-று) (௨௭)

வல்லைவந்தழைத்தார் தம்மைமுன்போக்கிவருவலென்றெழுந் துகீழ்த்திசைபோய், ஒல்லையந்தோர்நீர்தனதுபேராற்கண் டிந் திரேச்சரமென்னவிறைவன், றொல்லைவண்பெயரா லொன்றுக ண்டரனைத்தூயபூசனைசெய்தங்கிருப்பக், கல்லைவன்சிறகு தடிந் தவனின்னுங்களிறுவந்திலதெனப்பின்னும் ...... ....*

(இ-ள்) விரைவாகவந்து அழைத்தவர்களை நான் வருகிறே னீங்கள் போங்களென்றனுப்பிவிட்டுப் பின்பு அந்தயானையா னது எழுந்து கிழக்குத்திசையிலொருஇடத்தில்வந்து தன்பெ யரால்ஐராவதேச்சரமென்று ஒருஸ்தலம் ஏற்படுத்தியும் இந்தி ரேச்சரமென்று தேவேந்திரனுடைய பழமையானபெயரினு லொருஸ்தலம் ஏற்படுத்தியும்பரமசிவனைப் பரிசுத்தமான பூசை செய்துகொண்டு அவிடத்திலிருக்க-மலைகளின் வலியசிறகைய றுத்ததேவேந்திரனானவன் இன்னமும் யானைவரவில்லையென் றுபின்னும்(எ-று; கல்லை-என்பதிலிருக்கும்-ஐ-உருபுமயக்கம்

மனத்தினுங்கடியதூதரைவிடுப்பவானடைந்திறைவனைவணங் கிப், புனத்தினுங்கடியகல்லினும்பன்னாட் புன்கணேயுறவருசா பங், கனத்தினுங்கரியகண்டனைக்கண்டு களைந்ததுங்கிளந்துதி க்கயத்தி; னினத்தினுங்கழிந்ததெய்வதவேழமினிதுவீற்றிருந் ததுமாதோ .... .... .... .... .... .... ....*

(இ-ள்) மனோவேகத்தினும் விரைவாகச் செல்லும்படியா னதூதரை அனுப்ப அவர்கள்வந்தழைக்க அவர்களுடன்போய்ச் சுவர்க்கலோகத்திற்சேர்ந்து தன்னரசனாகிய தேவேந்திரனைப் பணிந்துவனங்களிலும் வலியமலைகளிலும் அனேகநாள் துக்கநோயை அனுபவிக்கும்படி நேரிட்ட சாபத்தை நீலமேக த்திலுங் கரியதாகிய கண்டத்தையுடையசோமசுந்தரக்கடவுளை த்தரிசித்துநீக்கினதையும் (மற்றக்காரியங்களையும்) சொல்லி

# வெள்ளையானைசாபந்தீர்த்த

## படலம்.

தீதிக்காலைகளினின்று நீங்கிய தெய்வத்தன்மையை யுடைய யானையானது இன்பத்துடன் வீற்றிருந்தது.(எ-று) திக்கு-கடைகுறைந்துநின்றது. (௨௯)

குடவயினைராவதப்பெருந்தீர்த்தங்குடைந்தயிராவதகணேச
ச், கடவுளைத்தொழுதைராவதேச்சுரத்துக்கடவுளைப்பணிந்தவ
ர்சாபத், தொடர்பினும்பாவத்தொடர்பினுங்கழிவர்சுராதிபன்
களிறுசென்னெறிபோ, யிடர்கெடவையைபடிந்துதென்கரை
யிலிந்திரேச்சுரனடிபணிவோர் .... .. .. .... .....*

(இ-ள்) மேற்குத்திசையிலிருக்கும் பெரிதாகிய ஐராவத தீர்த்தத்தில் ஸ்நானஞ்செய்து ஐராவதகணேசரைத் தொழுது ஐராவதேச்சுரத்தில் வீற்றிருக்கும் ஐராவதேச்சுரனையும் பணிந்தவர்கள் சாபத்தொடர்ச்சியினின்றும் பாவத்தொடர்ச்சியினின்றும் நீங்குவார்கள் - இதுவுமன்றித் தேவேந்திரனுடைய யானையானது சென்றநெறியேபோய்ப் பிறவிதுன்பங்கெடவையைநதியில்மூழ்கித் தென்கரையிலிருக்கும் இந்திரேச்சுவரனடியைப்பணிகின்றவர்கள்.—(எ-று) (௩௰)

இம்மையிலறமுதன்மூன்றுசெய்தியபயனையெய்தி .... .. *
யம்மையின்மகவானீரேழரும்பதமளவும்வானில் .... ....*
வெம்மையில்போகமூழ்கிவெறுப்புவந்தடையவுள்ளச் ....*
செம்மையின்விளைபேரின்பச்சிவகதிச்செல்வராவர் ......*

(இ-ள்) இப்பிறப்பில் அறமுதலாகிய மூன்றினால் உண்டாகிய பயனை அடைந்து மறுமையில் பதினாலு தேவேந்திரபட்டம்வரைக்கும் சுவர்க்கலோகத்தில்வெறுப்பில்லாதபோக(வெள்ளத்தில்) மூழ்கிப் பின்பு அந்தப்போகத்தில் வெறுப்புவந்து பொருந்த மனச்செம்மையினால் உண்டாகின்ற பேரின்பத்தையுடையசிவகதிச் செல்வமுடையவராவார்கள்.—(எ-று) ஒருபிர்மகற்பமளவுமிருப்பார்களென்பது விளங்கப் - பதினாலு இந்திரப்பட்டமளவுமென்றார் - மூழ்கியென்றதற்கேற்ப - வெள்ளம்வருவிக்கப்பட்டது. (௩௧)

வெள்ளையானைசாபந்தீர்த்தபடலமுற்றிற்று.

ஆக படலம் - ௰௧ - க்கு - திருவிருத்தம் - ௪௱௰.





மூன்றாவது-

# திருநகரங்கண்டபடலம்



தானவாரிபிழிபுகர்முகத்தவெகரிசாபம் .... ... .......... *
போனவாறுரைசெய்துமேற்புதுமதிமுடிமேல் .... - ... *
வானவாறினன்கடம்பமாவனமுதுநகர ...... ......... *
மானவாறதன்சிறிதறிந்தவாறிசைப்பாம் ... ...... *

(இ-ள்) மதநீராறுபெருகாநின்ற புகர்முகத்தினையுடையதாயிப் பகைவரைக்கொல்லுகின்ற ஐராவதமென்னும்யானையின் சாபந்தீர்ந்தின திருவிளையாடலைச்சொல்லி இளம் பிறையையணிந்திருக்கும் சடைமுடிமேல் ஆகாயகங்கையையுடைய சோமசுந்தரக் கடவுளானவர் வீற்றிராநின்ற பெருமைபொருந்திய கடம்பவனமானது பழமையான நகரமாகிய திருவிளையாடலைச் சிறிது தெரிந்தமட்டிற் சொல்லுகிறோம்.—(எ-று) சிற்பநூலிற்சொல்லியிருக்குமுறைப்படி சமைக்கப்பட்டதென்னுங் கருத்துத்தோன்ற-முதுநகரமென்றார். (க)

இன்னரம்புளரோதிசைசெயழான்மிடற்றளிகள் .. .. .. .. *
கின்னரம்பயில்கடம்பமாவனத்தினின்கீழ்சார்த் .......... *
தென்னர்சேகரனெனுங்குலசேகரனுலக .... .......... *
மன்னர்சேகரனரசுசெய்திருப்பதுமணவூர் .... .... .. *

(இ-ள்) இனிதாகிய நரம்புகளைத்தடவத்தக்க ஏழிசையினையுடைய யாழ்நரம்பினோசைபோன்ற கண்டத்தினோசையையுடைய வண்டுகளும், கின்னரப்பக்ஷிகளும், பயிலுகின்ற பெருமைபொருந்திய கடம்பவனத்தின்கீழ்ப்புறத்தில் பாண்டியராசாக்களுக்குச் சிரசுபோன்றவனாகியும் குலசேகர னென்னும் பெயரையுடையவனாகியும் உலகத்திலிருக்கும் அரசர்களுக்கெல்லாம் மகுடம்போன்றவனாகியும் விளங்கும் ஒருபாண்டியன் அரசுசெய்தற்குரிய (ராசதானியா) யிருப்பது மணவூரென்பது.(எ-று) அளிகள் கின்னரம்பயில் என்பதற்கு- வண்டுகள் யாழிசையைப்பாடுகின்றவெனினுமமையும், அவ்வாறு கூறுங்கால்-கின்னரம்-ஆகுபெயராகக்கொள்க.மிடறு-ஆகுபெயர்.

குலவுமப்பெரும்பதியிளங்கோக்களிலொருவ .......... *
னிலவுமாநிதிபோலருச்சனைமுதனியதி .... .. ........ *
பலவுமாஞ்சிவதருமமூர்ந்தேய்வான்பரன்பாற் ............ *
றலைமைசான்றமெய்யன்பினன்றனஞ்சயனென்பான் .... *

(இ-ள்) விளங்குகின்ற அந்தநகரத்திலிருக்கும் வணிகர்களில் பிரகாசியாநின்றமிகுந்தபொருள்தேடிவருதல்போல் அருச்சனை முதலாகச் செய்கடன் பலவாயிராநின்ற சிவதருமத்தைத்தேடுகின்றவனும் சோமசுந்தரக்கடவுளிடத்தில் முதன்மையாக அமைந்த மெய்யான அன்பினையுடையவனும் தனஞ்செயனென்னும் பெயரையுடையவனுமாகிய ஒருவன்.—(எ-று)

செல்வமாநகரிருந்துமேற்றிசைப்புலஞ்சென்று .... .... *
மல்லல்வாணிகஞ்செய்துதன்வளம்பதிமீள்வான் .. .... .. *
றொல்லையேழ்பவக்கடற்கரைதோன்றுவித்தடியா .... ... *
ரல்லறீர்ப்பவன்கடம்பமாவனம்புகுமளவில் .... .... *

(இ-ள்) செல்வமுள்ளபெருமைபொருந்திய மணவூரிலிருந்து மேற்றிசையிலிராநின்ற ஊர்களிற்போய் வளப்பத்தைத்தரத்தக்க வர்த்தகஞ்செய்துகொண்டு தன்னுடைய வளப்பம்பொருந்திய ஊருக்கு மறுபடிவருகின்றவன்-பழைய எழுபிறப்பாகிய கடலின் கரையாகிய (மோக்ஷத்தைத்) திருவருளால்தெரிவித்து அடியார்களுடைய துன்பத்தைத் தீர்ப்பவராகிய சோமசுந்தரக்கடவுள்வீற்றிருக்கும் பெருமைபொருந்திய கடம்பவனத்திற்சேரும்போது.—(எ-று) வளம்பதி என்பதனைத்-தடந்தோள் என்பதுபோலக்கொள்க. (௬)

இரவிகண்மறைந்தேழ்பரியிரதமூர்ந்தானு .... .... ... *
முரவுநீர்க்கருங்கடலில்வீழ்ந்தொளித்தனனாக .... .. .. *
விரவுநீண்மயங்கிருள்வயிற்றமியனாய்மெலியு .... ...... *
மரவுநீர்ச்சடையண்ணலுக்கன்பினேனங்கண் .... .... *

(இ-ள்) சூரியன் ஒளிகுறைந்து ஏழ்குதிரைகட்டியதேரும் தானுமாக உலாவுநீரையுடைய கருமையாகியகடலில் விழுந்து ஒளிக்க-அப்போதுவந்த மயக்கத்தக்க மிகுந்த இருளினிடத்து ஒருவனாய்மெலிகின்ற சர்ப்பமும் நீருருவமாகிய கங்கையும்பொருந்திய சடையையுடைய சோமசுந்தரக்கடவுளுக்குத் தொண்டனாகிய அந்தவர்த்தகன் அவ்விடத்தில். எ-று) உரவுநீர் என்பதற்கு, உலாவுநீர் என்றார் நச்சினார்க்கினியார்-உவர்நீரென்னினுமாம். (௭)

வாங்குதான்மருப்பேந்தியமதமலையொருத்தந் .. .. .. *
தாங்கியாயிரங்கரங்களாற்றடவிவெண்டிசையுந் .... .. *
தூங்குகாரிருடுரத்துசெஞ்சுடரொனைச்சூழ்போய் ..... .. *
வீங்குகாரிருளொதுக்கியவிமானநேர்கண்டான் ..... .. *

(இ-ள்) வளைவாகிய நான்கு தந்தங்களையுடைய யானைகளின் பிடரிகளால் தாங்கப்பட்டு - ஆயிரங்கிரணங்களாலுந்தடவி எட்டுத்திக்குகளிலுஞ் சூழ்ந்திராநின்ற கருமையாகிய இருளைத்துரத்துகின்ற சூரியனைப்போல - எங்கும்பரந்து பெருந்தகரிய இருளை நீக்குகின்ற விமானத்தை நேரேகண்டான். (எ-று)

அடுத்தவனந்தனைவிர்சுடர்விமானமீதமர்ந்த ... ... ... *
கடுத்தளும்பியகண்டனைக்கண்டுதாழ்ந்துவகை ... ... ... *
மடுத்தநெஞ்சினனங்ஙனம்வைகிருள்கழிப்பா ... ... ... *
னெடுத்தசிந்தையினிருந்தனனிருக்குமவ்விருள்வாய் .... *

(இ-ள்) சமீபத்திற்சென்று விளங்குகின்ற பிரகாசத்தையுடைய விமானத்தினிடத்தில் எழுந்தருளியிராநின்ற விஷநிறைந்த கண்டத்தையுடைய சொக்கலிங்கமூர்த்தியைப்பணிந்து மகிழ்ச்சிபொருந்திய மனதையுடையவனாய் அவ்வாறே தரிசித்துக்கொண்டு - பொருந்திய அந்த இரவை நீக்கவேண்டுமென்று உண்டான எண்ணத்துடனிருந்தனன் - அப்படி இருக்கும் அந்தராத்திரியினிடத்தில் —(எ-று) இருள்-ஆகுபெயர். (எ)

சோமவாரமன்றுதலானீசுரர்களெக்கெய்தி .. .. .. .. .. *
வாமமேகலைமலைமகடலைமகன்மலர்ந்த .... .. .. .. *
காமர்சேவடிபணிந்தவன்கங்குல்போற்கருதி .... .... *
யாமநான்கிலுமருச்சனையின்புறப்புரிவார் .. .. .. ... *

(இ-ள்) அன்று சோமவாரமாகையினாலே தேவர்கள் அங்குவந்து அழகிய மேகலையணிந்த பார்வதிநாயகனாகிய சோமசுந்தரக்கடவுளினுடைய அழகுநிறைந்த சிவந்த திருவடிகளைப்பணிந்து (அத்தினத்தைச்) சிவராத்திரிபோலவே யெண்ணிக்கொண்டு இன்பம்பொருந்த நாலுசாமத்திலும் அருச்சனைசெய்கின்றார்கள் —(எ-று) அருச்சனைநடத்துப்பெறுது நிகழ்ந்துகொண்டிருத்தலின் - இறந்தகாலத்தாற் கூறாராயினர். ஐந்துசிவராத்திரியில் சோமவாரமும் அமாவாசையுங் கூடுவதுஞ்சிவராத்திரியாம். ஈண்டுச்சிவராத்திரிபோற் கருதியென்றதனால் - திதியாகிலும், வாரமாகிலுந் தனித்துவந்தால் சிவராத்திரிபலனைத்தருமென விளங்குகின்றது. சிவராத்திரி-ஐந்தென்றதனை உபதேசகாண்டம் சிவவிரத மான்மியத்தில்-எ௬- பாடலுக்குமேற் கண்டுகொள்க. (அ)

அண்டர்வந்தருமருச்சனைபுரிவதுமனைத்துந் ........ .. *
தொண்டரன்பினுக்கெளியவன்சார்தொழக்கறுத்த .. .... *

ஆழ்ந்தசிந்தையனதிசயமடைந்துசேவடிக்கீழ்த் .... ....*
தாழ்ந்தெழுந்திருகைகளுந்தலைமிசைக்கூப்பிச் .. .... ...*
சூழ்ந்துதன்பதிக்கேகுவானொருதலைதுணிந்து .. ........*
வாழ்ந்தவன்பினன்விடைகொடுவழிக்கொடுவந்தான் .. .. *

(இ-ள்) அன்புநிறைந்த சிந்தையையுடைய அந்தவணிகனானவன் அதிசயத்தையடைந்து-சோமசுந்தரக்கடவுளினுடைய திருவடிக்கீழ்ப்பணிந்தெழுந்து இரண்டுகைகளையும் தலையின்மேல் குவித்துவைத்துக்கொண்டு பிரதக்ஷிணஞ்செய்து தன் னூருக்குப்போக ஒருவாறு துணிந்து வாழ்வுபெற்ற அன்பையுடையவனாய் விடைபெற்றுக்கொண்டு வழிக்கொண்டு (தன்னூரில்) வந்தான்.—(எ-று) (௰௨)

முக்கடம்படுகளிற்றினன்முகிறவழ்கோயில் .. .... .... .. *
புக்கடங்கலர்சிங்கமன்னனெதிர்புகல்வான் .. .... .... ....*
திக்கடங்கலுங்கடந்தவெற்றிகிரியாய்நெருந .... ......*
லக்கடம்பவனத்திலோரதிசயங்கண்டேன் ..... ... *

(இ-ள்) மூன்றுமதங்களைச்சொரிகின்ற யானையையுடையபாண்டியராசன் வீற்றிருக்கும் மேகந்தவழும்படியான உன்னதத்தையுடையகோயிலிற்சென்று சத்துருக்களுக்குச் சிங்கம்போன்ற அந்தப்பாண்டியனெதிரிற்சொல்லுகின்றான்- திக்குகளிலிருக்கின்றவர்களையெல்லாம் வென்ற வெவ்விதான சக்கரத்தையுடையராசனே நேற்றுப்பெருமைபொருந்திய அந்தக்கடம்பவனத்தில் ஒரு அதிசயங்கண்டேன் அதென்னவெனில். (எ-று) மும்மதயானை-கன்னமதம், கபோலமதம், கோசமதம் என்பவைகளாம். திக்கு-ஆகுபெயர். (௰௩)

வல்லைவாணிகஞ்செய்துநான்வருவழிமேலைக் .. .... ....*
கல்லடைந்ததுவெங்கதிர்கங்குலும்பிறப்பு .. .... ....*
மெல்லைகாணியகண்டனவிரவிமண்டலம்போ .... ....*
லல்லடுஞ்சுடர்விமானமுமதிற்சிவக்குறியும் .. .... ....*

(இ-ள்) வர்த்தகஞ்செய்துகொண்டு விரைவாக நான்வரும்போது மேற்குத்திசையிலிருக்கும் அஸ்தமனகிரியில் சூரியன் அடைந்தான் அப்போது இரவுக்கும் என்பிறப்புக்கு முடிவு காணச்சூரியமண்டலம்போல இரவைப்போக்குவதாகிய பிரகாசத்தையுடைய விமானத்தையும் அதில்வீற்றிருக்கும் சிவலிங்கமூர்த்தியையுங் கண்டேன்.—(எ-று) இரவுக்கு முடிவு-விடியற்காலம்-பிறப்புக்குமுடிவு-அஃது நீங்குதல்- (௰௪)

மாவலம்புதார்மணிமுடிக்கடவுளர்வந்தத் .. .. .... .. *
தேவதேவனையிரவலாமருச்சனைசெய்து .... .. . . .. *
போவதாயினர்யாருமப்பொன்னெடுங்கோயில் .. .... *
மேவுமீசனைவிடைகொடுமீண்டனனென்றான்....... .. .. *

(இ-ள்) வண்டுகள் இசைபாடிக்கொண்டிராநின்ற கற்பகப் பூமாலையணிந்தரத்தின கிரீடங்களையுடைய தேவர்கள்வந்து அந்தத்தேவதேவனையருச்சித்து(விடைபெற்றுக்கொண்டு)போனார்கள் நானும் அந்தப்பொன்மயமான நெடியகோயிலில்வீற்றிருக்கும் சோமசுந்தரக்கடவுளிடத்தில் விடைபெற்றுக்கொண்டு வந்தேனென்று சொன்னான்.—(எ-று) ஈசனை யென்பதிலிருக்கும்-ஐ-உருபுமயக்கம். கொடு- விகாரம். யாரும் என்னும் இறந்தது தழீஇயஎச்சவும்மை-வணிகன் அருச்சித்ததையும் விளக்குகின்றது. (௰௫)

மூளுமன்பினன்மொழிந்திடமுக்கணெம்பெருமான் .. ... *
தாளுமஞ்சலிக்கரங்களுந்தலையில்வைத்துள்ள ... ... .... *
நீளுமன்புமற்புதமுமேநிரப்பநீர்ஞால.. ... .. ... .... *
மாளுமன்னவனிருந்தனன்போயினனருக்கன் .... .... *

(இ-ள்) மூளும் அன்பையுடைய வர்த்தகன் சொல்லக்கேட்டு மூன்றுநேத்திரங்களையுடைய சோமசுந்தரக்கடவுளின் திருவடியையும் குவித்தகைகளையும் சிரசின்மேல்வைத்துக்கொண்டு உள்ளத்தில்மிகுந்த அன்பும் அதிசயமும் நிறையும்படி நீரையுடையசமுத்திரஞ்சூழ்ந்த பூமியையாளுகின்ற பாண்டியராசனிருந்தான் சூரியன்மேற்கடலிற்போயினான்.—(எ-று) ஏ-இசைநிறை. நீர் ஆகுபெயர்-ஈண்டு உண்டாகிய அற்புதம் பழமையைப்பற்றி உண்டாயதெனக்கொள்க. (௰௬)

ஈட்டுவார்வினையொத்தபோதிருண்மலங்கருக . .... .. *
வாட்டுவாரவர்சென்னிமேன்மலரடிக்கமலஞ் .. .. ... .. *
சூட்டுவார்மறைகடந்ததந்தொல்லுருவிளங்கக் .. .... .. *
காட்டுவாரொருசித்தராய்த்தோன்றினார்கனவில் ... .... *

(இ-ள்) ஈட்டுகின்றவர்களுடைய இருவினையும் ஒத்தபோது ஆசாரியமூர்த்தமாயெழுந்தருளி அவர்களுடைய ஆணவமலவிருளானது கருகும்படிவாட்டி-அவர்கள் சிரசின்மேல் தம்முடையதாமரைமலர்போன்றதிருவடிகளைச்சூட்டி நான்கு வேதங்களையுங்கடந்த தமது பழமையாகிய திருமேனியானை

ழின்மூழ்கிவானரகொடுபிணிபடச்சுழலு ..... ......*
மேழையேங்களுக்காவதோவெந்தைநின்கருணை .... .. *

(இ-ள்) சமுத்திரஞ்சூழ்ந்த இந்தப்பூமியினிடத்திருக்கும் ஆசையும், தேவர்களிருக்கும் சுவர்க்கத்தில் விருப்பங்கொள்ளும் ஆசையும், வெறுத்தவர்களுக்கல்லது இந்தப் பூமியையாண்டு துன்பத்தில்முழுகிச்சுவர்க்கத்தினிடத்திலும் நரகத்தினிடத்திலும் துன்பப்படச்சுழலும் ஏழைகளாகிய எங்களுக்கு எந்தையனே உன்கருணை கிடைக்குமோ.—(எ-று) நரகொடு இதிலிருக்கும் ஒடு-ஒருபுமயக்கம். (௨௫)

நேரதாமறைச்சென்னியுந்தொடத்தொடநீண்ட .... ....*
நீளநீநினைக்கன்பிலமாயினுநீயே .... .... .... .. .. *
மூளவன்புதந்தெங்குடிமுழுவதும்பணிகொண் .. .... *
டாளவேகொலிக்கணத்தமர்ந்தனையென்று .... .... *

(இ-ள்) உண்மையானதாகிய வேதத்தின்சென்னி தொடுந்தோறும் அதற்கு மெட்டாமல் நீண்ட நீட்சியையுடையதேவரீர் உம்மிடத்தில் அடியெங்கள் அன்பிலாதவர்களாயினும் தேவரீரோ அதிகரிக்கும்படி அன்பினை அருளிச்செய்து எங்கள் குலமுழுவதையும் ஏவல்கொண்டு ஆட்கொள்ளவோ இந்தக்கணத்தில் எழுந்தருளி யிருந்தீரென்று.—(எ-று) எ-தேற்றத்தின்கண்ணும், கொல்- ஐயத்தின்கண்ணும் வந்தது. நினைக்கு-என்பதிலிருக்கும்-கு-உருபுமயக்கம். (௨௬)

சுரந்தவன்பிருகண்வழிச்சொரிவபோற்சொரிந்து .. .... *
பரந்தவாறொடுசிவானந்தப்பரவையுட்படிந்து .. .. .... *
வரந்தவாதமெய்யன்பினால்வலங்கொடுபுறம்போந் .. .... *
தரந்தைதீர்ந்தவனொருசிறையமைச்சரொடிருந்தான் , ... *

(இ-ள்) சுரந்த அன்பானது இரண்டுகண்வழியினுஞ் சொரிவனபோற் சொரியப் பரந்தநீர்வெள்ளத்திலும் சிவானந்தமாகிய சமுத்திரத்தினிடத்திலுமூழ்கி-மேன்மைநீங்காத மெய்யன்பினால் அந்தப்பாண்டியராசன் ஆலயத்தை வலஞ்செய்து புறத்தில்வந்து துன்பம் நீங்கினவனாயொரு இடத்தில்மந்திரிகளுடனிருந்தான்.—(எ-று) சொரிவ என்னும்பன்மை-பலதுளிகூடிப் பரந்த தன்மையையுடைய ஆறு-குவ்வினை கொங்கை யென்னுந் திருக்கோவையார்பாட்டில் - உவ்வினநாணமதி-என்பதற்கு-உவ்வினவென்னும் பன்மை பலகலைகூடி நிறைந்த

தன்மையையுடைய மதி என்றார். ஆறெழு என்பதிலிருக்கும் ஒடு - உருபுமயக்கம், சொரிந்து - எச்சத்திரிவு - அன்பிறன் - என்றும், அவனொருசிறையென்றும் பாடமாயின் - அன்பினையுடையவனுமென்றும், அங்கொருபுறத்திலென்றும் பொருளுரைத்துக்கொள்க. (உரு)

ஆயவேலையின்மன்னவனேவலாலமைச்சர் .. .... .... *
மேயவேவலர்துறைதுறைமேவினர்விடுப்பப் . .... ....*
பாயவேலையினார்த்தனர்வழிக்கொடுபடர்ந்தார் .... ....*
சேயகாடெறிந்தணிநகர்செய்தொழின்மாக்கள் .. .... *

(இ-ள்) அப்போது பாண்டியராசனுடைய ஆக்ஞையினால் மந்திரிகளிடத்திருக்கும் ஏவலாளிகள் துறைகள்தோறும் சென்று அனுப்ப நெடியதாகிய காடுகளைவெட்டி அழகிய நகரமுண்டாகச்செய்யுந் தொழிலையுடைய ஆள்கள் பரந்த சமுத்திரம்போல் ஆரவாரித்துக்கொண்டு சென்றார்கள். (எ-று) உசு)

வட்டவாய்மதிப்பிளவின்வெள்வாய்க்குயநவிய .... ....*
மிட்டதோளினர்யாப்புடைக்கச்சினரிருட்பின் .... .. ..*
விட்டகாரொளிமெய்யினர்விசிகொள்வார்வன்றோற் .. .. *
றொட்டகாலினர்வனமெறிதொழிலினரானார் ........ ..*

(இ-ள்) வட்டமாகிய வாயையுடைய பாதி சந்திரன்போன்ற வெள்ளியவாயையுடைய கொடுவாட்களையும், கோடாலிகளையும் வைத்துக்கொண்டிராநின்ற தோள்களையுடையவர்களாயும்; அரையில்கச்சுக்கட்டினவர்களாயும், இருளைப்போலக் கருமையாகிய ஒளியை வீசுகின்ற சரீரத்தை யுடையவர்களாயும், வார்கட்டியசெருப்பிட்ட காலினை யுடையவர்களாயும், காட்டினைவெட்டுந் தொழிலுடையவர்களானார்கள். — (எ-று)

மறியுமோதைவண்டார்த்திடமாந்தலைபனிப்ப .... .... ...*
வெறியுமோதையுமெறிபடுமோதையுமிரங்கி .... ..... ..*
முறியுமோதையுமுறிந்துவீழோதையுமுகில்வாய்ச் .... ..*
செறியுமோதையுங்கீழ்ப்படமேற்படச்செறியும் .... ....*

(இ-ள்) (காடுவெட்டுகின்றவர்கள் போவது) மீளுவதுமாகிய ஒலியும், வண்டுகள் சத்திக்கவும் - மரங்கள் தலைநடுங்கவும் - வெட்டுகின்றஒலியும், வெட்டுகின்றவர்களுடையஒலியும் - அம்மரங்கள் சத்தித்துமுறிகின்ற ஒலியும் - முறிந்துவிழுகின்றஒலியும்,

(உஅ)

மேகத்தினிடத்துப்பொருந்திய ஒலியும், கீழ்ப்படும்படி அதிகமாயொலிக்கும் —(எ-று) மதியுமோதைவண்டு - என்பதற்கு, மீளுகின்ற ஒலியையுடையவண்டு எனினுமமையும். (உஅ)

ஒளிறுதாதொடுபோதுசெந்தேனுகவொலித்து .... ... *
வெளிறில்வன்மரஞ்சினையிறவிழ்வசெங்களத்துப் .... .. *
பிளிறுவாயவாய்நிணத்தொடுகுருதிநீர்பெருகக் .. .. .. *
களிறுகோடறமாய்ந்துவீழ்காட்சியவனைய .... ... .. ... *

(இ-ள்) பிரகாசியாநின்ற மகரந்தத்துடன் - மலர்களும் செந்தேனும் சிந்த ஒலித்து வயிரம்பற்றிய வன்மரங்கள் கிளைகள் ஒடியும்படி விழுகின்றவைகள் யுத்தகளத்தில் ஒலிக்காநின்ற வாயையுடையவைகளாய்மாமிசத்துடன் உதிரம்பெருகும்படி யானைகள் தந்தங்களொடிய இறந்துவிழுகின்ற தோற்றம் உடையனபோலிருக்கின்றன.—(எ-று) (உகூ)

பூவடைந்தவண்டினமயற்புறவொடும்பழனச் .... .. ... *
காவடைந்தனபறவைவான்கற்பகமடைந்த .... .. .... *
கோவடைந்திடவொதுங்குறுங்குறும்புபோற்செறிந்து .. *
மாவடைந்தனமாடுளவரைகளுங்காடும் .... ... .... .. *

(இ-ள்) மலர்களில் மொய்த்துக்கொண்டிருந்த வண்டினங்கள் பக்கங்களிலிராநின்ற காடுகளினிடத்தும் - வயல்சூழ்ந்த சோலைகளினிடத்துஞ்சென்றன - பக்ஷிகள் சுவர்க்கலோகத்திலிருக்குங் கற்பகவிருக்ஷத்திற் சேர்ந்தன - அரசன் வரக்கண்டோடிப்போகாநின்ற குறும்பர்போல மிருகங்கள் கூட்டங்கூட்டமாகப் பக்கங்களிலிருக்கும்மலைகளிலும், காடுகளிலும், அடைந்தன.—(எ-று) புறவொடும் என்பதிலிருக்கும்- ஒடு உருபுமயக்கம். உம், அசை. (௩௰)

இருணிரம்பியவனமெலாமெறிந்துமெய்யுணர்ந்தோர் .... *
தெருணிறைந்தசிந்தையின்வெளிசெய்துபல்லுயிர்க்கு .. *
மருணிறைந்துபற்றறுத்தரனடிநிழலடைந்த .... .. .. *
கருணையன்பர்தம்பிறப்பெனவேரொடுங்களைந்தார் .... *

(இ-ள்) இருள்சூழ்ந்திருந்த காட்டையெல்லாம் வெட்டி- மெய்யையுணர்ந்தவர்களுடைய தெளிவுநிறைந்தசிந்தையைப் போல் வெளிசெய்து பல உயிர்களிடத்தும் அருள்வைத்து அகப்பற்றுப்புறப்பற்றாகிய இருவகைப்பற்றினையும் நீக்கிப் பரமசிவனுடைய திருவடியாகிய நிழலையடைந்த திருவருள்பெற்ற

அடியார்கள் பிறவியை வேருடன்களைவதுபோல் வேருடன்க
ளைந்துவிட்டார்கள்.—(எ-று) மெய்யுணர்தலாவது- பிரிதிவி
தத்துவமுதல் நாததத்துவமீறாகிய முப்பத்தாறு தத்துவங்க
ளையும் நீங்கித்-திருவருளால் சிவத்தையுணர்தல். தெளிவாவது-
பதிஞானமே யுண்மையாகவுள்ளது - அதுவே பொருளெனத்
தெளிவது, சிந்தைதெளியாகுதல். பொருளதுவோவிதுவோ
வென்று மயக்கமின்றியிருத்தல். பிறவிவேராவது-மும்மலம்.

களைந்துநீணிலந்திருத்திச்செந்நெறிபடக்கண்டு .... .. ..*
வளைந்துநஞ்சுகொடுப்பதெவ்வாறெனத்தேறல் .,.. .. *
விளைந்துதாதுகுதார்முடிவேந்தன்மந்திரரோ .... ....*
டளைந்துளாவியசிந்தையோடிருந்தனனங்கண் .... .......*

(இ-ள்) இவ்வாறுகாட்டினைவெட்டிப்பெரியநிலத்தைத்திரு
த்திச் செம்மையாகிய நெறியுண்டாகச்செய்து வளைவாக நல்
லநகரமுண்டாக்குவதெப்படியென்றுதேன் ஊறி மகரந்தஞ்
சிந்துகின்ற பூமாலையணிந்த முடியையுடைய பாண்டியராசன்
மந்திரிகளுடன்கலந்து யோசிக்குஞ் சிந்தையுடனிருந்தான்
அப்படியிருக்குமிடத்தில்.— எ-று) (௬௨)

மெய்யரன்புதோய்சேவடிவியனிலந்தீண்டப் .. .. .. ..*
பொய்யகன்றவெண்ணீறணிமேனியர்பூதிப் .... ......*
பையர்நள்ளிருட்கனவில்வந்தருளியபடியே .... ......*
ஐயர்வல்லைவந்தருளினாரரசுளங்களிப்ப .... .... ....*

(இ-ள்) சிவஞானிகளுடைய அன்பினிடத்துப் பொருந்தி
நின்ற சிவந்ததிருவடிகள் அகன்றபூமியினிடத்துப் பொருந்த
ப்பொய்நீங்கியவெண்மையாகிய விபூதியணிந்ததிருமேனியை
யுடையவரும் விபூதிப்பையையுடையவருமாய் நடுராத்திரியில்
கனவில்வந்தருளியபடியே அரசனுடைய மனங்களிக்கும்படி
சோமசுந்தரக் கடவுளானவர் விரைவாக வந்தருளினார்.—
(எ-று) தரித்துக்கொள்ளுகின்றவர்களுக்கு உண்மையாகவே
கதியையத்தரத்தக்கதென்பதுதோன்றப்-பொய்யகன்றநீறெ
ன்றார். உரகனுச்சியிநெடுநிலத்துயிர்ப் பொறைக்கெல்லாம்
புரவளிப்பதுந் தனிக்கதியளிப்பதும் பூதி - என்பதனுலுணர்
க. இது- உபதேசகாண்டம்- பரிசுத்தமுள்ள நீறென்றுமாம்.

கனவிலும்பெருங்கடவுளர்காண்பதற்கரியார் .. .. .. .. *
நனவிலும்வெளிவந்தவர்தமையெதிர்நண்ணி .. .. .. .. *
நினைவினின்றதாளிறைஞ்சிநேர்நின்றுநல்வரவு .. .. .. .. *
வினவியாதனங்கொடுத்தனன்மெய்யுணர்வேந்தன் .. .. .. *

(இ-ள்) பெரியகடவுளர்களாகிய திருமால் முதலானவர்கள் கனவிலுங் காண்பதற்கரியவராயிருப்பவர் (அவ்வாறன்றி நனவிலும் தெரியும்படி சித்தமூர்த்தியாய்வந்தவரை எதிர்கொண்டு தன் தியானத்தில் நிலையாகநின்ற திருவடிகளைப்பணிந்து நேரேநின்று நல்வரவுவினவி மெய்யறிந்த அந்தப்பாண்டியன் ஆசனங்கொடுத்தான் —(எ-று) (௫௪)

தென்னரன்பினிலகப்படுசித்தர்தாமுன்னர்ச் .......... *
சொன்னவாதிநூல்வழிவருசார்புநூற்றொடர்பா .. ...... *
ணன்னாலயமண்டபங்கோபுரநகர .... .... .... .... *
மின்னவாறுசெய்யெனவகுத்திம்மெனமறைந்தார். .. .. *

(இ-ள்) பாண்டியராசாக்களுடைய அன்பிலகப்படுகின்ற சித்தமூர்த்தியானவர்-தாம்முன்ன மருளிச்செய்த முதனூல்வழியே வருகின்ற சார்புநூலில்சொல்லப்பட்ட முறைமையின்படி நன்மையுள்ள ஆலயம், மண்டபம், கோபுரம், நகரம், இவைகளை இப்படியாகச்செய்யென்று சொல்லி விரைவாகமறைந்துவிட்டார்.—(எ-று) ஆதிநூல-ஆகமம். சார்புநூல்-சிற்பநூல்.

மறைந்தெவற்றிலுநிறைந்தவர்மலரடிக்கன்பு .. .... .... *
நிறைந்தநெஞ்சுடைப்பஞ்சவனிலத்துமேம்பட்டுச் .. .... *
சிறந்தசிற்பநூற்புலவராற்சிவபராஞ்சுடர்வந் .... .... .... *
தறைந்துவைத்தவாறாலயமணிநகர்காண்பான் ... .. .... *

(இ-ள்) எல்லாப்பொருள்களிலுமறைந்து நிறைந்திராநின்ற சோமசுந்தரக்கடவுளுடைய செந்தாமரைமலர்போன்ற திருவடிகளிடத்து அன்புநிறைந்துள்ள மனதையுடைய பாண்டியராசனானவன்-இவ்வுலகத்தில் மேன்மைத்தன்மையுள்ளவர்களாய்ச் சிறப்படைந்திராநின்ற ஸ்தபதிகளால் சோமசுந்தரக்கடவுள் சித்தமூர்த்தியாய்வந்து சொல்லிக்காட்டியபடி ஆலயமும் அழகியநகரமும் ஏற்படுத்துகின்றவன்.—(எ-று) மலரடிக்கு என்பதிலிருக்கும்-கு-உருபுமயக்கம். (௫௫)

(வேறு.)

மறைபயில்பதுமமண்டபமருத்தமண்டபமழைநுழைவளைவா
யிப், பிறைபயில்சிகைமாமண்டபமருகாத் தீபிடிகைதிசையெ
லாம்விளக்கும்; பறைபயினிருத்தமண்டபம்விழாக்கொள்பண்
மணிமண்டபம்வேள்வித், தொழிறபயில்சாலை திருமடைப்பள்ளி
சூழுறைதேவர்தங்கோயில் .... .... .... .... ...*

(இ-ள்) வேதமோதுகின்ற பதுமமண்டபமும், அர்த்தமண்டபமும், மேகத்தில் நுழைகின்ற வளைந்த முகத்தையுடைய பிறையளாவுதவழுகின்ற சிகரங்களையுடைய மகாமண்டபமும் அருகாத்தீபிடமும் - திக்குகளையெல்லாம் விளக்கத்துக்கவாத்தியங்கள் ஒலிக்கும் நிருத்தமண்டபமும் சோமசுந்தரமூர்த்தியானவர் திருவிழாக்கொண்டருளும்படியான பலமணிகள் பதிக்கப்பட்ட மண்டபமும் வேள்வியினது முறைமை (வழுவாது) செய்யத்தக்கயாகசாலைகளும், திருமடைப்பள்ளியும், ஆலயத்தைச் சூழ்ந்திராநின்ற பரிவாரதேவர்களாலயமும்.—(எ-று) மடைப்பள்ளியாவது - அன்னஞ்சமைக்குமிடம். (௬௭)

வலவயினிமயவல்லிபொற்கோயின்மாளிகையடுக்கியமதில்வா
னிலவியகொடியநெடியகூளிகைவானிலாவிரிதவளமாளிகைமீ
ன், குலவியகுடுமிக்குன்றுயர்செம்பொற்கோபுரங்கொண்டல்
கண்படுக்குஞ், சுலவெயிலகழிக்கிடங்கு கம்மியநூற்றொல்வர
ம்பெல்லைகண்டமைத்தான் .... .... .. .. .. .. ....*

(இ-ள்) (சோமசுந்தரக்கடவுளது) வலப்புறத்தில் மீனாக்ஷியம்மைவீற்றிருக்கும் திருக்கோயிலும் திருமாளிகைப்பத்தியையுடைய திருமதிலும் - ஆகாயத்தில் விளங்கிக்கொண்டிராநின்ற கொடிகளையுடையவைகளாகிய பெரியமண்டபங்களும், வெண்மையாகிய சந்திரகிரணம்போலப் பிரகாசித்துக்கொண்டிராநின்ற தவளமாளிகைகளும், நக்ஷத்திரங்கள் குலவும்படியான சிகரங்களையுடைய மலைபோலுயர்ந்த செம்பொன்னாற் செய்யப்பட்ட கோபுரமும், மேகம் உறங்கும்படியான சூழ்ந்த மதிலும், அகழியும், சிற்பசாஸ்திரத்திற் சொல்லியிருக்கிற பழமையாகிய முறைமையை ஆராய்ந்து அந்தமுறைமைப்படி சமைத்தான்.—(எ-று) அகழிக்கிடங்கு என்பதும், வரம்பு எல்லையென்பதும் இருபெயரொட்டு. முன்கூறப்பட்டமதில் - ஆலயத்தைச்சூழ்ந்ததும், பின்கூறப்பட்டமதில் - நகரத்தைச்சூழ்ந்ததுமாம். (௬௮)

சித்திரநிரைத்தகடைமறுகுகெற்றிகள் வாணிலாத்தெளிக்கு, நித்திலநிரைத்தவிழாவருவீதிநிழன்மணிச்சாளரவொழுக்கப், பித்திகைமாடப்பெருந்தெருக்கவலைபூஞ்சால்சதுக்கநற்பொதியில், பத்தியிற்குயின்றமன்றுசெய்குன்றுபருமணிமேடையாடரங்கு . .. .... .... .. .... .. .... ...... *

(இ-ள்) சித்திரங்களை நிரைத்திரா நின்ற கடைத்தெருவுகளும், சித்திரகூடங்களும், ஒளிபொருந்திய நிலாவைக் காட்டுகின்ற முத்துகளால் அலங்காரஞ்செய்யப்பட்டதிருவிழாக்கொண்டுவருகின்றவீதிகளும், ஒளிபொருந்திய ரத்தினங்கள் பதித்திரா நின்ற பல்கணிவாயிலின் ஒழுங்கையுடைய சுவர்கள்பொருந்திய வீடுகள் நெருங்கிய பெரிய தெருக்களும், கவர்வழிகளும், நாற்சந்திகளும், நல்லஅம்பலங்களும், வரிசையாகச்செய்யப்பட்டசபைகளும், செய்குன்றுகளும், பருத்தமணிகள் பதித்தமேடைகளும், நாடகசாலைகளும். — (எ-று) கவர்வழிகள்-சந்துகள். (௬௯)

அருந்தவரிருக்கையந்தணருறையுளரசராவணங்குலவணிகப், பெருந்தெருநல்வேளாளர்போறஞ்சால்பெருங்குடியேனையகரிதேர், திருந்தியபரிமாநிலைகளங்கழகந்திருஞ்சுவை யாறுநான்குண்டி, யிரந்தவர்க்கருத்துநல்லறச்சாலையினையன பிறவுநன்கமைத்தான் .. .... ... .. .. .. .... .... .. *

(இ-ள்) முனிவர்களிருப்பிடமும், பிராமணர்கள்வீடுகளும், ராசவீதிகளும், நற்குலப்பிறப்பினையுடைய வைசியரிருக்கும் பெரியவீதிகளும், நன்மைதங்கிய வேளாளர்களும், போறமமைத்த யற்றப் பெரியகுடிகளும், யானைகளும், தேர்களும், திருத்தமுற்ற குதிரைகளும் இருக்குமிடங்களும், கல்விச்சாலைகளும், இனிமையான அறுவகை ருசியினையுடைய நான்குவகை உணவுகளை ஏழைகளுக்கு ஊட்டுகின்ற நல்ல தர்மசத்திரங்களும், இவைமுதலிய மற்றவைகளையு நன்றாக ஏற்படுத்தினன். —(எ-று) திருந்தியபரிமாவென்பது- நற்சுழிகளையுடைய குதிரைகளென்னுமமையுர். சுவை ஆறுவன, கைப்பு-தித்திப்பு-புளிப்பு உவர்ப்பு-துவர்ப்பு-கார்ப்பு-என்பவைகளாம், உண்டி நான்காவன, உண்டல் தின்றல்-நக்கல்-பருகல்-என்பவைகளாம், அவற்றின்வகை-சோறுமுதலானவை உண்ணப்படுபொருள், கறிமுதலானவைதின்னப்படுபொருள், தேன்முதலானவை நக்கப்படுபொருள், நீர்முதலானவை பருகப்படுபொருள். (௭௰)

துணிகயங்கீழ்நீர்க்கூவல்பூவோடைதொடுகுளம்பொய்கைநந்
தவனந், திணிமலர்ச்சோலைசூடகையுய்யானந் திருநகர்க்கணி
பெறச்செய்து, மணிமலர்த்தாரோன்மாளிகைதனக்கம்மாநக
ர்வடகுணபாற்கண், டணிநகர்சாந்திசெய்வதுகுறித்தானண்ண
லாரறிந்திதுசெய்வார் ,. .... .. ... .. .... ... .. *

(இ-ள்) வெட்டப்பட்ட கசங்களையும், கீழ்நீரையுடைய கி
ணறுகளையும், தாமரைமலர்களையுடைய ஓடைகளையும், தோ
ண்டப்பட்ட குளங்களையும், பொய்கைகளையும், நந்தவனங்க
ளையும், மலர்களையுடையதுகளாய்நெருங்கியசோலைகளையும்,
உழ்வுகொல்லைகளையும், பூந்தோட்டங்களையும், செல்வத்தையு
டைய நகரத்துக்கு அழகுண்டாகஏற்படுத்தி ரத்தினமாலையை
யும் பூமாலையையும் அணிந்துகொண்டிராநின்ற பாண்டியரா
சனானவன் அந்தப்பெரியநகரத்தின்வட கிழக்குத்திசையினிட
த்தில் தனக்கு மாளிகையுமேற்படுத்தி அலங்காரமுள்ள அந்த
நகரத்துக்குச்சாந்திசெய்யக்குறித்தான் -சோமசுந்தரக்கடவு
ளறிந்து இதனைச்செய்கின்றார்.—(எ-று) உய்யானமம் என்ப
து-உய்யானம் எனநின்றது. (௪௧)

பொன்மயமான சடைமதிக்கலையின் புத்தமுதுகுத்தன ரது
போய்ச், சின்மயமான தம்மடியடைந்தார்ச் சிவமயமாக்கிய
செயல்போற்; றன்மயமாக்கி யந்நகர்முழுதுஞ் சாந்திசெய்த
துவதுமதுர, நன்மயமானதன்மையான்மதுராநகரென வுரை
த்தனர்நாமம் .. .. ... ... .... .. .. ... .... *

(இ-ள்) பொன்மயமாகிய சடையிலணிந்திருக்கும் சந்திர
கலையின் புதிதாகிய அமுதத்தைச்சிந்தினர் -அதுபரந்துஞான
மயமாகிய அவரதுதிருவடியை அடைந்தவர்களைச்சிவமயமாக்
குகின்ற செய்கையைப்போலத் தன்மயமாக்கி அந்நகரமுழு
வதையுஞ்சாந்திசெய்தது-அந்த அமுதமானதுநன்மையாகிய
மதுரமயமான தன்மையினாலே மதுராநகரமென்று பெயர்
சொல்லினார்கள்.—(எ-று) அது-தன்மயமாக்கினைக்கூட்டுக.

கிட்டிசைக்கரியசாத்தனுந்தென்சார்கீழ்ற் வெண்பிறைநுதற்க
ளிற்றுக், கோட்டிளங்களபக்கொங்கையன்னையருங்குடவயின்
மதுமடையுடைக்குந், தோட்டிளந்தண்ணந் துழாயணிமௌ
லித்தோன்றலும்வடவயிற்றோடு, நீட்டிரும்போந்தி னிமிர்கு
ழலெண்டோண்மலியுங்காவலாநிறுவி .. .. .. .... .. *

(இ-ள்) கீழ்த்திசையில் கரியநிறத்தையுடைய சாத்தனையும் தென்றிசையில் தோற்றிய வெண்பிறைபோன்ற நெற்றியினையுயும், யானையின் தந்தம்போன்ற இளமையாகிய சந்தனக்குழம்பணியப்பட்ட ஸ்தனங்களையுமுடைய சத்தமாதர்களையும், மேற்றிசையில் தேனுண்டு பெருகாநின்ற இதழ்களையும் குளிர்ச்சியையும் உடைய துளசிமாலையையணிந்த மகுடத்தையுடைய திருமாலையும், வடதிசையில் நெடியதும் பெரியதுமாகிய பனையின் மடல்போல்நெறிப்பாகிய அளகத்தையும் எட்டுத் தோள்களையுமுடைய காளியையும், காவலாகவைத்து (எ-று) தன்னம்-என்பதிலிருக்கும்-அம்-சாரியை. (௪௩)

கைவளையெருத்திற்கனவளைகிடந்தகாட்சியிற்பொலிந்தொளிர்கோயின் - மைவளைமிடற்றுமதுரைநாயகனை மரபுளியருச்சனைபுரிவான், பொய்வரைமறையாகமநெறியொழுகும், புண்ணியமுனிவரையாதி, சைவரைக்காசிப் பதியினிற்கொணர்ந்து தலத்தினிற்றாபனஞ்செய்தான் .... .. .... .. .... *

(இ-ள்) ஆனைகளின்பிடரியில் பொன்மலையிருந்ததோற்றம் போல்விளங்கிப் பிரகாசியாநின்ற ஆலயத்தில் எழுந்தருளி இருக்கும் கருமைநிறம்பொருந்திய கண்டத்தையுடைய சோமசுந்தரக்கடவுளை ஆகமவிதிப்படி அருச்சனை செய்வதற்காக உண்மையாகிய வேதாகமநெறிப்படி நடக்காநின்ற புண்ணிய முனிவர்களையும், ஆதிசைவப் பிராமணர்களையும், காசிப்பதியினின்றும் அழைப்பித்து அந்தஸ்தலத்தில் தாபனஞ்செய்தான்.—(எ-று) (௪௪)

உத்தமகுலத்தநாற்பெருங்குடியுமுயர்ந்தவுமிழிந்தவுமயங்க, வைத்தவுமானபுறக்குடிமூன்றுமறைவழுக்காமனுவகுத்த, தத்தமநெறிநின்றொழுகவைதிகமுஞ் சைவமுந்தருமமுந் தழைப்ப, மைத்தெழுதிரைநீர்ஞாலமேற்றிலகம்பதித்தெனநகர்வளம்படுத்தான் .... .... .... .. .. .... .... .... *

(இ-ள்) உத்தமகுலத்தினையுடைய நாலுவகைப்பெரியகுடிகளும், உயர்ந்தவருணமும், தாழ்ந்தவருணமும், கூடி உண்டான நால்வகைக்குடிகளும் புறக்குடிமூன்றும் வேதவிதியில் வழுவாத மனுவினால் ஏற்படுத்தப்பட்ட தங்கள் தங்களுக்குரியவைகளாகிய ஒழுக்கத்தில் நின்று நடக்கவும் வைதிகநெறியும், சைவநெறியும், தருமமும், விர்த்தியாகவும் - குளிர்ச்சியுடன்

மேலோங்குகின்ற அலைநீரையுடைய சமுத்திரஞ்சூழ்ந்த பூமியினிடத்தில் பாண்டிநாட்டுக்குத் திலகம்பதித்ததுபோல் நகரத்தினை வளப்பத்துடன் ஏற்படுத்தினான்.—(எ-று) உத்தமகுலத்திற்பிறந்த நால்வகைக்குடிகள்-பிராமணர்- க்ஷத்திரியர்-வைசியர்- சூத்திரராம்-அவர்களுக்குள் உயர்ந்தகுல ஆணும்-தாழ்ந்தகுலப் பெண்ணுங்கூடிப்பிறந்தவர்கள் அநுலோமர்-உயர்ந்தகுலப்பெண்ணும் தாழ்ந்தகுல ஆணும்கூடிப்பிறந்தவர்கள் பிரதிலோமர்-அந்த அநுலோம ஆணும், பிரதிலோமப் பெண்ணுங்கூடிப்பிறந்தவர்கள் அந்தராளர்-அநுலோமப்பெண்ணும் பிரதிலோம ஆணுங் கூடிப்பிறந்தவர்கள், விராத்தியராம். புறக்குடிகள் - கோளகர்-குண்டகர்-கானீநராம்- இம்மூவரில்கைம்மைபெற்றவர்கள் கோளகர்-வேற்றோர்க்குப்பெற்றவர்கள்குண்டகர்-கந்நிபெற்றவர்கள்-கானீநராம். (௪௫)

அன்றுதொட்டரசனந்நகரெய்தியணிகெழுமங்கலமியம்ப.*
வென்றுதொட்டிமைக்குமணையின்மங்கலநாளெய்தினனிருந்து
மூப்புரமுங், குன்றுதொட்டெய்தான்கோயின் மூன்றுறுப்பு
ங்குறைவில்பூசனைவழாதோங்கக், கன்றுதொட்டெறிந்துகனி
யுகுத்தான்போற்கலிதுரந்தரசுசெய்நாளில். .... .... *

(இ-ள்) அன்றுமுதல் (நாள்தோறும்) பாண்டியராசன் அந்தநகரத்திற்போய்ப் (பின்பு) அழகுபொருந்தியமங்கலவாத்தியங்கள் முழங்கும்படி சூரியமண்டலத்தையளாவிப் பிரகாசியாநின்ற மாளிகையில் நல்லதினத்திற்சேர்ந்து குடியாயிருந்துகொண்டு மூன்றுபுரங்களையும் தீப்பற்றும்படி மகமேருவைவில்லாகவளைத்தெய்த சோமசுந்தரக் கடவுளுடைய ஆலயத்தில் மூன்று அங்கமும் குறைவில்லாத பூசனையானது மாறுபாடின்றி நாளுக்குநாள் விர்த்தியாகும்படி கன்றினையெடுத்தெறிந்துவிளாங்கனியுகுத்ததிருமால்போலப் பாவத்தைநீக்கி அரசுசெய்துகொண்டிருக்குநாளில்.—(எ-று) மூன்றுறுப்பாவது- நித்தியம்-நைமித்தியம்-காமியம்-என்னு மூன்றுமாம். வழுவாது எனற்பாலது- வழாதென நின்றது. அரசர்காக்குந்தொழிலையுடையராதலால்-திருமால்போல்வரெனச் சொல்வது மரபு. திருவுடைமன்னரைக்காணில் திருமாலைக்கண்டேனேயென்னும் என்று பெரியோரும் பணித்தார் என்றார் பரிமேலழகர். இதனை இறைமாட்சியிற்காண்க. (௪௬)

பவநெறிகடக்கும்பார்த்திவன்கிரணம்பரப்பிளம்பரிதிபோன்
மலயத், துவசனைப்பயந்துமைந்தன்மேன்ஞாலஞ் சுமத்திநா
ள்பலகழித்தொருநா, ளவ்வடிவிறந்தோனாலயத்தெய்தி நாத
னைப்பணிந்துமூவலஞ்செய்; துவமையிலின்பவருணிழ லெய்
தியொன்றியொன்றாநிலைநின்றான் .... .... .... ....*

(இ-ள்) பிறவிநெறியைக்கடக்கும் அந்தப் பாண்டியராசன் கிரணங்களைவிரிக்காநின்ற இளஞ்சூரியனைப்போல் மலயத்துவசனென்னும் புத்திரனைப்பெற்று அந்தப்புத்திரன்மேல்பூமியாகிய பாரத்தைச்சுமத்திப் பலநாள்கழித்து ஒருநாள் நவமாகிய உருவமில்லாத சோமசுந்தரக்கடவுளுடைய ஆலயத்தில் சென்று அவரைப்பணிந்து மூன்று பிரதக்ஷிணஞ்செய்து ஒப்பில்லாத இன்பமயமாகிய அருளென்னும், நிழலை அடைந்து கலந்துங் கலவாத நிலைமையில்நின்றான் —(எ-று) மைந்தன்மேன்ஞாலஞ்சுமத்தி என்றது-தன்னரசுத்தன்மையைத் தன்புத்திரனுக்குக் கொடுத்தலாம், அருணிழலெய்தி யொன்றியொன்றாநிலைநின்றான் என்பது-சிவபதஞ்சேர்ந்தானென்னுங் குறிப்பு. (சஎ)

(உ௫) பாடலுரையில்-குவ்வினை-உவ்வினை-என்றிருக்கிறதைக் - குவவினை-உவவினை- என்றுரைத்துக்கொள்க- (௩அ)பாடலுரையில் - இருபெயரொட்டுப் பண்புத்தொகையென்றுரைத்துக்கொள்க. பதிகம்-௫-பாடலுரையில்-கடங்கமென இருக்கிறதைக்-கண்டங்கமென உரைத்துக்கொள்க.

திருநகரங்கண்டபடலம்-முற்றிற்று.



ஆ படலம்-௰உ-க்கு, திருவிருத்தம்-௫௱௰எ.



# தடாதகைப் பிராட்டியார்

## திருவவதாரப்படலம்.



கன்னியொருபங்கினர்கடம்பவனமெல்லா .... .... ..*
நன்னகரமானதுநவின்றுமுலகின்ற .... .... .... ...*
வன்னமகளாகிமலயத்துவசனுக்குந் .... .... .... ..*
தென்னனிடைவந்துமுறைசெய்ததுரைசெய்வாம் .... ..*

## திருவவதாரப்படலம்.

(இ-ள்) பார்வதியை ஒருபாகத்திலுடைய சோமசுந்தரக்கடவுள் வீற்றிருக்கும் கடம்பவனமெல்லாம் நல்லநகரமாகிய திருவிளையாடலைச்சொன்னோம் - இவ்வுலகங்களையீன்றதாயாகிய மீனாக்ஷியம்மையானவள் மலயத்துவசனென்னும் பாண்டியனிடத்திற்புத்திரியாகவந்து முறைசெய்தளித்த திருவிளையாடலையினிச்சொல்லுகிறோம்.—(எ-று) (க)

மனுவறமுவந்துதன்வழிச்செலநடாத்தும் .... .. .... *
புனிதன்மலயத்துவசன்வென்றிபுனைபூணான் .. .. ... .. *
கனியமுதமன்னகருணைக்குறையுள்காட்சிக் .. .. ... .. *
கினியன்வடசொற்கடறமிழ்க்கடலிகந்தோன். .... .... *

(இ-ள்) மனுவறமானது மகிழ்ந்து தன்வழியிற்செல்லும்படி நடத்துகின்ற புனிதமானவன் மலயத்துவசனென்னும்பெயரையுடையவன் வெற்றியாகிய ஆபரணங்களை அணிந்தவன் மதுரமுள்ள அமுதத்தையொத்த கிருபைக்கு இடமாயிருப்பவன் (முறைவேண்டினர்க்குங் குறைவேண்டினர்க்கும்) காண்பதற்கு இனியனாயிருப்பவன் - வடசொல்லாகிய கடலையும், தமிழ்ச்சொல்லாகிய கடலையுங் கடந்தவன்.—(எ-று) அமுதமானது இந்திரன்முதலாகிய தேவர்களுக்குப் - பசி - பிணி - முதலானவையில்லாமற்செய்வதுபோல அரசனது கருணையானது - பசி - பிணி - பகை - முதலானவையில்லாமல் யாவரையுங் காப்பாற்றுவதாதலால் அமுதமன்னகருணையென்றார். முறைவேண்டினார் - வலியரால் நலிவெய்தினார். குறைவேண்டினார் - வறுமையுற்றிருந்தார், காண்பதற்கினியனாவது - இன்சொல்லுடன் முகமலர்ந்து அந்தணர் சான்றோர் முதலாயினாரோடு சபையினிடத்திருத்தல். இதனை - காட்சிக்கெளியன் கடுஞ்சொல்லனல்லனேல் - என்னுங்குறளானுமுணர்க. கல்வியைக்கடலென்றது - பெருமையுடைமையும், அளவின்மையுநோக்கியெனக்கொள்க. கடலென்றதற்கேற்ப இகந்தோன் என்றார் - எனவே முழுதுமுணர்ந்தவன் என்று கூறியவாறும். (உ)

வேனில்விறல்வேள்வடிவன்வேட்கைவிளைபூமி... .. .. .. *
யானமடவார்கள்பதினாயிரவருள்ளான் .... .. .... .. *
கானொழுகுபானுவழிவந்தொழுகுசூர .... .. .. .. .. *
சேனன்மகள்காஞ்சனையைமன்றல்வினைசெய்தான் .... ... *

(இ-ள்) வசந்தகாலத்தில், வெற்றிகொள்ளும் மன்மதனை

பேரில் அழகுள்ளவன்-காமப்பயிர்விளைகின்ற பூமியையொத்த பதினாயிரம் ஸ்திரீகளையுள்ளவன் - ஆகாயத்திற்செல்லுகின்ற சூரியகுலத்திற் பிறந்து நல்லொழுக்கத்தில் தவறாமல் நடக்காநின்ற சூரசேனனென்னும் சோழராஜனுடைய புத்திரியாகிய காஞ்சனை யென்பவளை விவாகஞ் செய்துகொண்டான்.—(எ-று) -பயிர் வருவிக்கப்பட்டது. (௩)

கண்ணுதலைமுப்பொழுதும்வந்துபணிகற்றோ .... .... *
னெண்ணில்பலநாண்மகவிலாவறுமையெய்திப் ..... ....*
பண்ணரியதானதருமம்பலவுமாற்றிப் .... .... .... *
புண்ணியநிரம்புபரிவேள்விபுரிகுற்றான். .... .... .. *

(இ-ள்) நெற்றிக்கண்ணையுடைய சோமசுந்தரக்கடவுளைத் திரிகாலங்களிலுஞ்சென்று பணிதலைக்கற்றவன்-(இத்தன்மையுள்ள) அந்த மலயத்துவசபாண்டியன் அனேகநாள் புத்திரனில்லாத வறுமையை அடைந்து செய்தற்கரிய பலதானங்களும் தருமங்களுஞ்செய்து புண்ணியநிறைந்த அஸ்வமேதயாகஞ் செய்யத்தொடங்கினான்.—(எ-று) திரிகாலமாவன-காலை- உச்சி-அந்தி-என்பவைகளாம். கல்விகற்பது- அரசர்க்குரியதேயாயினும்-பதிநூலை மிகுதியாகக்கற்றவனென்பது தோன்ற-வந்துபணிகற்றோன் என வெடுத்துக்கூறினார். செல்வம் எட்டில்- புத்திரப்பேறும் ஒருசெல்வமாகையால் அஃதின்மையை வறுமையென்றார். செல்வம் எட்டாவது, இராசாங்கம்-மக்கள்-சுற்றம்-பொன்-மணி-நெல்-வாகனம்- அடிமை- என்பவைகளாம். வந்து என்பது,இடவழுவமைதி.பணிதல் என்னுந்தொழிற்பெயர்- தல்விகுதிபுணராது பணியென நின்றது. மக-என்பது-ஆண் பெண் இரண்டற்கும் பொதுவேயாயினும் பிதிரர்கடன்செய்தற் குரியன் ஆண்மகவென்னுஞ் சிறப்பு நோக்கியும்-மகவின்றி என்னும்-௨௬- செய்யுளை நோக்கியும்-ஈண்டுப்புத்திரனென்றதெனக்கொள்க. (௪)

ஈறின்மறைகூறுமுறையெண்ணியொருதொண்ணூற் .. .. *
றாறினொடுமூன்றுமகமாற்றவமரேச .... .... .......*
னூறுமகமும்புரியினென்பதனொடிப்பின் .... ..... .. *
மாறுமெனமற்றதனைமாற்றியிதுசாற்றும். .. .. .. .. *

(இ-ள்) முடிவில்லாத வேதத்திற்சொல்லும் விதிவழுவாமல் தொண்ணூற்றென்பது யாகஞ்செய்ய (அதையறிந்த) தே

வேந்திரன் நூறு யாகமும்செய்தால் நம்முடைய பதவிதொடிப்பொழுதில் மாறிவிடுமேயென்று அந்தயாகஞ்செய்யாதவண்ணந்தமித்து இதனைச்சொல்லுகின்றூன். (எ-று) (ரு)

நம்பொருள்விரும்பினையதற்கிசையஞால .... .. ... ..*
மின்புறுமகப்பெறுமகத்தினையியற்றி .. ......... ...., *
னன்புறுமகப்பெறுதியென்றமரர்நாடன் .. .... .... *
றன்புலமடைந்திடலுநிம்பநகுதாரான் .... .... ....*

(இ-ள்) பாண்டியராசனே நீ நன்மையாகிய பொருளைவிரும்பினை-அதற்கிசையும்படி உலகத்தாரின்பங்கொள்ளத்தக்கபுத்திரப்பேறு தருகின்ற யாகஞ்செய்வையாயின்- அன்புபொருந்தும் புத்திரனைப்பெறுவையென்று சொல்லித் தேவேந்திரன் தன்னுலகத்துக்குட்போய்விடவும், மலர்ந்த வேப்பம்பூமாலையணிந்த பாண்டியனுனவன்.—(எ-று) மகப்பேறு- எனற்பாலது மகப்பெறு எனவிகாரவகையால் குறுகிநின்றது. தேனக்கொன்றையன்-என்பதற்கு- தேனோடுமலர்ந்த கொன்றையையுடையான் என்னு முறையைநோக்கி- ஈண்டுநகுதாரொன்றதற்கு மலர்ந்ததாரொன்றும். ஏனற்பசுங்கதிரொன்னுங்கோவையார் செய்யுளிற்காண்க. (சு)

மிக்கமகவேள்விசெய்விருப்புடையனுகி . ... .. .. .. *
யக்கணமதற்குரியயாவையுமமைத்துத் .... ... .. .. *
தக்கநியமத்துரியதேவியொடுசாலை .... .. .... .. .. *
புக்கணிருந்துமகவேள்விப்ரிஇதீயான் ... .... .... ..*

(இ-ள்) யாகம்பலவற்றுள்ளும் சிறப்புற்றதாகிய புத்திரகாமேஷ்டியென்னும் யாகஞ்செய்யும் விருப்பமுடையவனுகி அப்பொழுதே அதற்குரிய பொருள்களையெல்லாஞ்சேகரித்துக்கொண்டு தகுதியான நியமத்துடன் இல்வாழ்க்கைக்கு உரியவளாகிய தன்மனைவியோடு யாகசாலையிற்போயிருந்து அவ்வேள்விசெய்கின்றுன்.—(எ-று) (எ)

ஆசறுமறைப்புலவராசிரியர்காட்டு.. .. ... ... .. .. ..*
மாசறுசடங்கின்வழிமந்திரமுதாத்த .... ... .. ..... *
மோசையனுதாத்தசொரிதந்தழுவவோதி.. .... .. .. *
வாசவனிருக்கையிலிருந்தெரிவளர்ப்பான் .... .... ... *

(இ-ள்) குற்றமற்ற வேதவுணர்ச்சியை யுடையவர்களாகிய ஆசிரியர்கள் காட்டுகின்ற பழுதில்லாத சடங்கின்முறைப்படிமந்திரங்களை உதாத்த ஓசையும், அனுதாத்த ஓசையும், சொரித ஓசையும் பொருந்தும்படி ஓதிக் கிழக்குத்திக்கி லிருந்துகொண்டு யாகத்தீவளர்க்கின்றான்.—(எ-று) உதாத்தம் என்பது-பேரோசை. அனுதாத்தம் என்பது-குறைந்த ஓசை. சொரிதம் என்பது-சமமான ஓசை. தேவேந்திரனிருத்தல்போலிருந்துகொண்டு என்று கூறினுமமையும். (௮)

விசும்புநிலனுந்திசையும்வேள்வியடுசாலைப் .... .. .. .. *
பசும்புகைபடர்ந்தொருபடாமெனமறைப்பத் .. .. ... *
தசும்புபடுநெய்பொரிசமித்தினொடுவானோர்க் .. .. ... .. *
கசும்புபடுமின்னமுதினாகுதிமடுத்தான் .... .. .. .. .. *

(இ-ள்) ஆகாசத்தையும் பூமியையும் திக்குகளையும் யாகஞ்செய்கின்ற இடத்திலிருந்து உண்டாகிய பசிய புகையானது படர்ந்து ஒருபோர்வைபோல் மறைக்கும்படி குடங்களில் இராநின்ற நெய்களையும், பொரிகளையும், சமித்துகளையும், இடையறாது ஊறுகின்ற மதுரசத்தையுடைய அமுதத்தைப்போல்வானோர்களுக்கு ஆகுதியாகக்கொடுத்தான்.—(எ-று) ஒடு-உருபுமயக்கம். (௯)

ஐம்முகனனாதிபரமாத்தனுரையாற்று .... .... .. .. *
நெய்ம்முகநிறைத்தழனிமிர்த்துவருமெல்லை .... .. .. *
பைம்முகவராவணிபரஞ்சுடர்தனிப்ப .. .... .. ... .. *
மைம்முகநெடுங்கணிமவான்மனைவிநாண ... ..... .. .. *

(இ-ள்) ஐந்துதிருமுகங்களையுடையவன் அனாதிபரமாத்தன் என்னும் சோமசுந்தரக்கடவுளுடைய திருவாக்காகிய வேதவிதிப்படி நெய்யை வேள்விக்குண்டத்தில் நிறையச்சொரிய-யாகத்தீயானது சிகைவிட்டெழும்போது அந்த யாககுண்டத்தில்-படத்தையுடைய சர்ப்பங்களணிந்த பரமசிவம்தனிக்கவும், முகத்திற்பொருந்திய மையணிந்த நெடிய கண்களையுடைய மலையரையன்மனைவியாகிய (மேனை) நாணவும்.—(எ-று) ஐம்முகமாவன- ஈசானம்- தற்புருடம்- அகோரம் - வாமம் - சத்தியோசாதம் - என்பவைகளாம். பைம்முகம் - ஒருசொன்னீர்மைத்து. உண்கண் என்பதற்கு - முகத்திற்பொருந்திய கண்ணென்று சான்றோர்களுரையெழுதியிருப்பதைநோக்கி-நன்

ரு - மூகநெடுங்கண் என்பதற்கு - மூக்கிற்பொருந்தியகண் என்றது. நிறைத்து - வினையெச்சத்திரிபு. (௰)

வள்ளன்மலயத்துவசமீனவன்வலத்தோ .... .... ... *
டுள்ளமனைகாஞ்சனைசுருங்கியமருங்கு .... .... .. .. *
றள்ளவெழுகொங்கைகட்டதும்பிதிமிர்தீம்பால் .... .... *
வெள்ளமொழுகக்கரியவேற்கணிடனாட.... .... .... *

(இ-ள்) வள்ளற்றன்மையையுடைய மலயத்துவச பாண்டிய ராஜனது வலத்தோள் துடிக்கவும் - அவன் மனைவியாகிய காஞ்சனையின் சுருங்கிய இடையானது ஒசியும்படி பூரித்த தனங்களில் நிறைய மிகுந்த மதுரமாகிய பால்வெள்ளம் பெருகவும் - கரிய நிறத்தையுடைய வேல்போன்ற இடக்கண் துடிக்கவும்.— (எ-று) வள்ளற்றன்மையாவது - எதிரூர்க்குமாற்றாது கொடுக்குந்தன்மை. ஒருநன்மைநேரிடுங்காலத்தில் புருஷர்களுக்கு வலத்தோள் துடிப்பதும் - ஸ்திரீகளுக்கு - இடக்கண் துடிப்பது முறைமை. மீனவன் என்பது - மீனக்கொடியை யுடையவனென்னும் பொருளேற்காது - ஈண்டுப்பெயராய்நின்றது. இதனைத் திருக்கோவையார் - ௩௨௮ - செய்யுளுரையானுணர்க.

இவ்வுலகமன்றியுலகேழுமகிழ்வெய்தச் .. .... .... .. *
சைவமுதலாயினதவத்துறைநிவப்ப...... .... ...... *
வெவ்வியமறங்கெட,வறங்குதுகலிப்பத் .... .... .... *
தெய்வமறைதுந்துபிதிசைப்புலனிசைப்ப .... .... .. *

(இ-ள்) இந்தவுலகத்திலுள்ளவர்கள் மகிழ்ச்சியடைவதுமல்லாமல் கீழேழு மேலேழு என்னும் பதினாலு உலகத்தாரும் மகிழ்ச்சி அடையவும் - சைவமுதலாகிய தவத்துக்குரிய உட்சமயங்களாறு மோங்கவும் - கொடியதாகிய பாவங்கெடவும் - தர்மமானது களிக்கவும் - தெய்வத்தன்மையையுடைய வேதங்களும், தேவதுந்துபிகளும் பத்துத்திக்குகளிடத்திலும் ஒலிக்கவும். (எ-று) மேலுலகமாவன - பூலோகம் - புவலோகம் - சுவலோகம் சனலோகம் - தபோலோகம் - மகாலோகம் - சத்தியலோகம் என்பவைகளாம். கீழுலகம் - மூர்த்திவிசேடம் - ௬௬ - பாடலுரையிற்காண்க. உட்சமயம் ஆறுவன - சைவம் - பாசுபதம் - மகாவிரதம் - காளாமுகம் - வாமம் - வைரவம் என்பவைகளாம். (௰௨)

மைம்மலர்நெடுங்கணரமங்கையர்நடிப்ப .... . .... ....*
மெய்ம்மனமொழிச்செயலின்வேறுபடலின்றி ..... ....*
அம்மதுரைமாநகருளாரகமகிழ்ச்சி .... ......... ....*
தம்மையறியாதனதலைத்தலைசிறப்ப ......... ........*

(இ-ள்) மைவிளங்குகின்ற நெடியகண்களையுடைய அரம்பையர் நடிக்கவும் - மனவாக்குக்காயங்களின் செய்கையில் மாறுபாடில்லாமல் அந்த மதுரைநகரத்தி லிருக்கின்றவர்களுடைய இருதயத்தில் மகிழ்ச்சிகள் தங்களை அறியாதவைகளாயெல்லாருக்குந் தனித்தனியே அதிகரிப்பவும். (எ-று) மகிழ்ச்சியானது செல்வத்தினாலும், கல்விப்பயனாகிய அறிவுடைமையாலும், காமப்புணர்ச்சி முதலானவைகளாலும், ஆறு - குளம் - சோலை - இவைகளில் விளையாடுதல் முதலானவைகளாலும் உண்டாவது - இந்தஏதுக்கள் ஒன்றுமில்லாமல் உண்டானமையால் தம்மையறியாதன தலைத்தலை சிறப்பவென்றார். செல்வம் புலனே புணர்வுவிளையாட்டென் றல்லனீத்த உவகைநான்கே என்னுஞ்சூத்திரத்தானுமுணர்க. (௰௩)

மாந்தர்பயின்மூவாறுசொன்மாநிலவரைப்பிற் ...... ....*
றீந்தமிழ்வழங்குதிருநாடதுசிறப்ப .... .... ..... .. *
வாய்ந்ததமிழ்நாடரசளித்துமுறைசெய்யும் .. .... ....*
வேந்தர்களின்மீனவர்விழுத்தகைமையெய்த ...... ....*

(இ-ள்) மனிதர்கள் வழங்குகின்ற பதினெட்டுப்பாஷைகளையுடைய பெரிய நாடுகளுள் - இனிமையுள்ள தமிழ்ப்பாஷைவழங்குகின்ற செல்வமுள்ள நாடானது சிறப்பவும், ஆராய்ச்சிசெய்ததமிழ்நாட்டுக்கு அரசராய்த் தாமுறைசெய்துபிறர்நலியாமற் காத்தலையுஞ் செய்யும் (மும்மன்னர்களில்) பாண்டியர்கள் விழுமிய பெருமையை அடையவும் —(எ-று) முறைசெய்தலாவது - நீதிநூலும், அறநூலுஞ் சொல்லுநெறி. வழுவுறாமல் நடக்குதல் - அளித்தல் - தம் பரிசனத்தாலும், பகைவராலு நலிவுபடாமற் காத்தல் இதனை - முறைசெய்து காப்பாற்றுமன்னவன் - என்னுங் குறளாணையாலுமுணர்க. முதற்சங்கத்தாராலும், இடைச்சங்கத்தாராலும், ஆராய்ச்சிசெய்யப்பட்டதாதலால் - ஆய்ந்ததமிழென இறந்தகாலத்தாற்கூறினார். விழுமம் என்பது - சீர்மை. இது விகாரவகையான் விழுவெனநின்றது.

நொய்தழலெரிக்கடவுணோற்றபயனெய்தக் .... .. ....*
கொய்தளிரெனத்தழல்கொழுந்துபடுகுண்டத் ..... ....*

## திருவவதாரப்படலம்.

தைதவிழிகழ்க்கமலமப்பொழுதலர்ந்தோர் .... ..... *
மொய்தளிர்விரைக்கொடிமுளைத்தெழுவதென்ன .. .. ..*

(இ-ள்) திக்கடவுள்செய்த நல்வினையின் பலனை எளிதில் அடையவும்・கொய்யாநின்ற தளிர்போலச் செம்மைநிறத்தையுடைய தியானது சிகைவிட்டெரிகின்ற யாககுண்டத்தில மெதுவாக விரிகின்ற இதழ்களையுடைய செந்தாமரையலர் அப்போது மலரஅதிலிருந்து தளிர்களும் மலர்களும் நிறைந்தவொரு பூங்கொடியானது முளைத்தெழுவதுபோல்.—(எ-று) விரையையுடையமலர்களை விரையென்றது-ஆகுபெயர். இதனைத் திருமுருகாற்றுப்படையில் நீலப்பைஞ்சுனை என்பதற்குத்-தருப்பை வளர்ந்த பசியசுனையிடத்தேஎனவும் நீலமென்றார். நீலநிறத்தையுடைய தருப்பையை எனவும் அதுவாகுபெயர் எனவும், நச்சினார்க்கினியார் உரைசெய்திருக்கின்றமையாலுணர்க. (௰௫)

விட்டிலகுசூழியம்விழுங்குசிறுகொண்டை .... .. . ..*
வட்டமதிவாய்க்குறுமுயற்கறையைமானக் .. .. .. .. *
சுட்டியநிறுத்தியகதிர்த்தரளமாலைச் .. .. .... .. .. *
சுட்டியதில்விட்டொழுகுசூழ்கிரணமொப்ப ... . ... .. *

(இ-ள்) ஒளிவிட்டுவிளங்குகின்ற முத்துக்களாலாகிய சூழியங்கட்டிய சிறுகொண்டையானது வட்டமாகிய சந்திரனிடத்தில் இராநின்ற சிறிய முயற்களங்கத்தையொப்பாகவும் - அந்தக்கொண்டையில் கட்டித்தொங்கவிட்ட ஒளிபொருந்திய முத்துச்சரத்தோடுங்கூடிய சுட்டியானது அந்தச் சந்திரனிடத்தினின்றும் பரவுகின்றகிரணங்களையொப்பாகவும்.—(எ-று) (௰௬)

தீங்குதலையின்னமுதமார்பின்வழிசிந்தி .... .... .... *
யாங்கிளநிலாவொழுகுமாரவடமின்ன .... .... ....,*
வீங்குடலிளம்பரிதிவெஞ்சுடர்விழுங்கி .. .. .. . .. *
வாங்குகடல்வீத்தருமமாலையொளிகால .... .... .. *

(இ-ள்) மதுரமுள்ள குதலைச்சொல்லாகிய இனிய அமுதமானது மார்பினிடத்திற்சிந்தியதுபோல இளநிலவுபரவும்படியான முத்துமாலை பிரகாசிக்கவும்-விளங்கும்வடிவத்தையுடைய இளஞ்சூரியனது வெவ்வியசுடர்களையுமறைத்து வளைந்தகடலில் உண்டாவதாகியபவளமாலையானது பிரகாசத்தை விரிக்கவும்.—(எ-று) (௰௭)

சிற்றிடைவளைந்தசிறுமென்றுகில்புறஞ்சூழ் .... .. .... *
பொற்றிருமணிச்சிறியமேகலைபுலம்ப .... .... .... *
விற்றிருமணிக்குழையிழுங்கியகுதம்பை .... ... .. .. *
சுற்றிருள்கடிந்துசிறுதோள்வருடியாட - .... ....... .. *

(இ-ள்) சிறிய இடையைச்சூழ்ந்ததாகிய சிற்றுடையின்மேல்தரிக்கப்பட்ட பொன்னாலாகிய அழகிய சிறிய ரத்தினமேகலையானது சத்திக்கவும்-ஒளியையும் அழகையுமுடைய ரத்தினங்கள் பதிக்கப்பட்ட குண்டலங்களில் பூட்டிய குதம்பையானது சூழ்ந்த இருளைப்போக்கிச் சிறிய தோள்களைவருடியாடவும்.---(எ-று) மேகலை என்பது-எழுகோவைமணி. (௰௮)

தெள்ளமுதமென்மழலைசிந்தவிளமூரல் ...... .. .. .. *
முள்ளெயிறரும்பமுலைமூன்றுடையதோர்பெண் .... .. *
பிள்ளையெனமூவொருபிராயமொடுநின்று .. .. ..... *
வெள்ளரியபல்லுயிருமெவ்வுலகுமீன்றாள் .... .... ..*

(இ-ள்) தெளிவாகிய அமுதம்போன்று மென்மையாகிய மழலைச்சொல் வெளிப்படவும்-புன்னகைசெய்கின்றமுட்போற்கூர்மையாகிய தந்தங்கள் விளங்கவும் - மூன்றுபிராயமுடன் மூன்றுதனங்களையுடையதாகிய ஒருபெண்பிள்ளையாக நின்றாள் - இகழ்ந்தற்கரியவாகிய பல உயிர்களையும் எல்லாவுலகங்களையும் பெற்றருளிய ஸ்ரீமீனாக்ஷியம்மை.---(எ-று) ஈன்றுளென்றது-சிருஷ்டித்தலாம். அதாவது - உயிர்களுக்குத் தனுவைக் கொடுத்தல்- கொடுக்குங்கால் சிலவுயிர்களுக்குக்கொடுத்துச் சிலவுயிர்களுக்குக் கொடாமல் பேரருளினால் எல்லாவுயிர்களுக்குங் கொடுத்தலினால்-எள்ளரிய பல்லுயிருமென்றார். உயிர்களுக்குத் தனுவளித்தல்- மோக்ஷத்தை அடைதற்கென்றுணர்க. தனுவாவது-சரீரம். மழலைச்சொல்லாவது-நிரம்பாத மெல்லியசொல்லெனக்கொள்க - இது உருத்தெரியாச் சொல்லென்றும், மெய்பெறுவெழுத்துருவம்பெற்றுத் தோற்றுமிளையவர்வார்த்தையென்றும், மழலையெக்காலத்திற்குங் கூறுபவென்றுஞ் சான்றோரால் சொல்லப்பட்டிருக்கின்றது. (௰௯)

(வேறு.)

குறுந்தளிர்மெல்லடிகிடந்த சிறுமணிநூபுரஞ் சதங்கைகுழறி
யேங்க, நறுந்தளிர்போலசைந்துதளர் நடையொதுங்கி மழலை
யிளநகையுந்தோன்றப், பிறந்தபெரும்பயன்பெறுபொண்மா

## திருவவதாரப்படலம்.

மலைமடியிருந்தொருபெண்பிள்ளையாகு, மறந்தழுவுநெறிநின்
றோர்க்கிகம்போகம் வீடளிக்குமம்மையம்மை .... .. .. *

(இ-ள்) தளிர்போன்ற மென்மையாகிய சிறிய திருவடிகளி
ல்பொருந்தியிரத்தினங்கள்பதிக்கப்பட்ட சிறியநூபுரமும்,சத
ங்கையும்,ஒலிக்கவும்-நறியதளிர் அசைவதுபோல அசைந்துந
ளர்ந்தநடையாகநடந்துமழலைச்சொல்லும் புன்னகையுந்தோ
ன்றவும் பிறந்ததினாலடையத்தக்க பெரியபயனைப்பெறுகின்ற
காஞ்சனமாலையின்மடியில் ஒருபெண்பிள்ளையாயிருந்தாள்,த
ருமத்தைத் தழுவிய நன்மார்க்கத்தில் நின்றவர்களுக்கு இம்
மைப்பயனையும் சுவர்க்காதிபோகங்களையும் மோக்ஷத்தையும்
அருளுகின்ற தாயாகிய மீனாக்ஷியம்மையானவள்.(எ-று) தளர்
நடையாதலால்-குழவியென்கவிவனவும் பிறந்ததினால் அடைய
வேண்டியபயன் மோக்ஷம் அதனை யினி யடைவாளென்றுந்
துணிவினால் பிறந்த பெரும்பயன் பெறு பொன்மாலையெனவுங்
கூறினார்.பயனெனவாளாகூறாது பெரும்பயனென விசேடி
த்தமையால் மோக்ஷமென்று கூறப்பட்டது. (௨௰)

செய்யவாய்வெளிறுதுணைமுலைக்கண்கருகாது சேல்போனீ
ண்ட, மையவாய்மதர்த்தகருங்கண்பசவாதுயிரண்டுமதியந்
தாங்கா, தையலாலிலைவருந்தப்பெறாதுபெறுமகவை யெடுத்
தணைத்தான்மோந்து, துய்யவாய்முத்தங்கொண் டின்புற்று
மைமுன்பெற்றதோகையன்னாள் .. .. .. .... .. ... *

(இ-ள்) சிவந்தவாய்வெளுக்காமலும், இரண்டுதனங்களின்
கண்கள் கறுக்காமலும்- சேலைப்போல நீண்டுமையையுடைய
வைகளாய்மதர்த்தகரியகண்கள் பசவாமலும் - பத்துமாதஞ்
சுமக்காமலும், அழகையுடைய ஆலிலைபோன்றவயிறு வருந்தப்
பெறாமலும்பெறுகின்ற புத்திரியையெடுத்து மார்போடணை
த்துக்கொண்டு உச்சிமோந்து பரிசுத்தமாகிய வாயினால்முத்
தமிட்டுக்கொண்டு இன்பமடைந்தாள்-உமையவளை முன்குழந்
தையாகப்பெற்ற மயிலின்சாயல்போன்ற சாயலையுடைய மே
னையையொத்த காஞ்சனமாலையானவள். எ-று. வாய் வெளுத்
தலும்,முலைக்கண் கறுத்தலும், கண்பசத்தலும், கர்ப்பசின்ன
மாம், காஞ்சனமாலையானவள் கருவுறாமையினால் மேற்சொல்லி
யகுறியொன்றும் இல்லையென்றுசொல்லலாயிற்று. வயிறு - உ
வமவாகுபெயர். மையவாய் என்பது - மையைவிரும்பியென்று

மாம். மதர்த்தல்-களித்தல். தோகை-ஆகுபெயர். பசத்தல்-வேறுநிறமாதல். (௨௧)

பரையாதிவிருட்பறிவுதொழிலாகியுலகமெலாம்படைத்துக்காத்து, வரையாதுதுடைத்துமறைத்தருளியைவைநின்றுந்தன் வடிவுவேறு, யுரையாதிமறைகடந்தவொருமுதல்வி திருமகளாயுதித்தற்கிந்தத், தரையாளுமன்னவன்செய்தவமிதுவோவதற்குரியதவந்தான்மன்றே .. ... ... .. .... .... ... .. *

(இ-ள்) பராசத்தி-ஆதிசத்தி-இச்சாசத்தி- ஞானசத்தி- கிரியாசத்தி- என்னும் பஞ்சசத்திகளாகி உயிர்களை எல்லாம்-சிருஷ்டித்தும், ரக்ஷித்தும், சிலவுயிர்களை நீக்கிவிடாமல்சங்கரித்தும், திரோபவித்தும், அநுக்கிரகித்தும், அந்தப்பஞ்சசத்திகளினின்றும், தன் திருமேனிவேறாகியும், மனவாக்குகாயங்களையும் வேதங்களையுங் கடந்த ஒப்பற்ற முதல்வியானவள், செல்வமுள்ள புத்திரியாய்த் திரு அவதாரஞ் செய்தற்கு (உரியது) இந்தப் பூமியை யாளுகின்ற மலயத்துவசபாண்டியன்செய்த இவ்வளவுதவந்தானோ அதற்குரியதவம் இன்னும் அதிகமாகச் செய்யவேண்டும்.—(எ-று) உலகம்-ஆகுபெயர். (௨௨)

கள்ளமாநெறியொழுகும்பொறிகடந்துகரணமெலாங்கடந்தானந்த, வெள்ளமாம்பரஞானவடிவுடையாடன்னன்பின்வெளிவந்தின்றோர், பிள்ளையாயவதரித்தகருணையுந்தன் பன்னாட்டிதவப்பேறுந்தேறான், பள்ளமாகடற்றானைப்பஞ்சவர்கோனெஞ்சத்துப்பரிவுகூர்ந்தான் .... .... .... .. .... ... *

(இ-ள்) வஞ்சகமாகிய நெறியிற்செல்லுகின்ற ஐம்பொறிகளையுங்கடந்து அதற்குமேல்தத்துவங்களையெல்லாங் கடந்து ஆனந்தவெள்ளமாயிராநின்ற பரஞானமாகிய திருமேனியையுடைய உமையவள் தன்னுடைய அன்பினாலேயாவருங்காணும்படியாகவந்து இப்போது ஒரு பெண்பிள்ளையாயவதரித்த கிருபையினையும் தன்மனைவியாகிய காஞ்சனமாலையின் தவப்பேற்றினையும் தெரியாதவனாதலால் ஆழ்ந்த பெரிய சமுத்திரத்தையொத்த சேனைகளையுடைய பாண்டியராசன் மனதில்வருத்தமுற்றான்.—(எ-று) (௨௩)

மகவின்றிப்பலபகல்யான்வருந்தியருந்தவம்புரிந்தேன் மைந்தற்பேறு, தகவிற்றமகஞ்செய்தேனதுவுமொருபெண்மகவைத்தந்ததந்தோ, முகவிற்றுநிலவொழுகவருபெண்ணுமுலைமு

நீருய்முகிழ்த்துமாற்றார், நகவந்ததென்னேயோ வென்றுவ
கையிலனாகிநலியுமெல்லை .... .... .. .. .. .. .. *

(இ-ள்) புத்திரனில்லாமல்அனேகநாள்யான்வருத்தமுற்றுஅ
ரிதாகிய தவங்களைச்செய்து அதற்குமேல் புத்திரப்பேறுஉண்
டாக இந்தயாகஞ்செய்தேன்-அந்தயாகமும் ஒருபெண்குழந்
தையைக்கொடுத்தது - முகமாகியசந்திரனிடத்திலிருந்து நில
வானது ஒழுகும்படிவந்தபெண்ணும், மூன்றுதனங்களையுடை
யதாய்ச் சத்துருக்கள்நகைக்கும்படிவந்தது. அதற்குக்காரண
ம்யாதோ என்றுசந்தோஷமில்லாதவனாய் வருந்தும்போது.
(எ-று) அந்தோவென்பது - இரக்கச்சொல், என் என்னுஞ்
சொல்-என்னை நின்றது, ஓ என்பது - அதிசயஇரக்கச்சொல்.

மன்னவநின்றிருமகட்குமைந்தர்போற்சடங்களைத்தும் வழா
துவேதஞ், சொன்னமுறைசெய்துபெயர்தடாதகையென்றிட்
டுமுடிசூட்டுவாயிப், பொன்னையாடவைக்கிறைவன்வரும்பொ
ழுதோர்முலைமறையும்புந்திமாழ்கேல், என்னவானருளாலோ
ர்திருவாக்குவிசும்பிடைநின்றெழுந்ததன்றே .. .... .. *

(இ-ள்) அரசனே உன்னுடைய திருமகளுக்குப்புத்திரர்களு
க்குச்சடங்குசெய்வதுபோலச்சடங்குகளெல்லாம் வழுவாம
ல் வேதஞ்சொன்னமுறைமைப்படிசெய்து தடாதகையென்
று பெயரிட்டு மகுடமுஞ்சூட்டி-இலகுமியையொத்தஇந்தப்
பெண்ணுக்குக் கணவன்வரும்போது ஒருதனம் மறையும், நீம
னங்கலங்காதேயென்று பரமசிவனுடைய திருவருளினாலேயொரு
அசரீரிவாக்கானது ஆகாயத்தினிடத்தி லுண்டாயது.(எ-று)

அவ்வாக்குச்செவிநிரம்பவன்புவகையகநிரம்பவகலமெல்லா *
மெய்வாக்கு மனமொன்றவிழிவாக்கும் புனனிரம்ப விமலற்
போற்றி, நெய்வாக்குமகதிரப்பியெழுந்துமனையொடுஞ்சா
லைநீத்திரண்டு, கைவாக்குமியங்கலிப்பக்கடிமாடமணைபுகுந்தா
ன்கழற்கால்வேந்தன் ... .. .. ... .. .. .. .. ... *

(இ-ள்) அந்தத்திருவாக்கானது காதில்நிரம்பலும். அன்புஞ்
சந்தோஷமும் உள்ளத்தில்நிறையவும் - மனவாக்கு காயங்க
ள் ஒருவழிப்படக் கண்கள் சொரியாநின்ற ஆனந்த பாஷ்ப
மானது மார்பினிடத்தில்நிறையவும்-வீரகண்டை அணிந்தகா
லையுடையபாண்டியனுனவன் சோமசுந்தரக்கடவுளைத் துதித்

து நெய்சொரியப்பட்ட அந்த யாகத்தைப் பூர்த்திசெய்து தம்மனைவியோடும் எழுந்து யாகசாலையைநீங்கி இரண்டுபக் கத்திலும் பலவாத்தியங்களும் சத்திக்கும்படி சிறப்புப்பொ ருந்திய மேன்மையுடைய தன்மாளிகையில் சேர்ந்தான். (எ-று) (உசு)

முரசதிர்க்கமங்கலங்கொண்டெதிர்வருவார் முகத்துவகைமுழு க்கெழுப்ப, வரசிருக்குமண்டபம்புக்கினிதமர்ந்து கலைகமறை யாய்ந்தகேள்வி, விரசிருக்குமறையவர்கைப்பெய்தெவர்க்குமு ம்முறையால்வெறுப்பநல்கிப், பரசிருக்குங்கரதலத்தெம்பர ன்கோயினவிழாச்சிறப்புப்பல்கநல்கா.... .... .... .... .. *

(இ-ள்) பேரிகைகள் சத்திக்கும்படி அஷ்டமங்கலங்களையு ம் ஏந்திக்கொண்டு எதிரில் வருகின்றவர்களுடைய முகத்தில் ச ந்தோஷ நகையானது உண்டாக அரசிருக்கு மண்டபத்திற் போய் இனிதுடனிருந்து நிறைந்த கேள்விகளைப் பொருந்தி யிருக்கும் பிராமணர்கள்கையில் சுவர்ணங்களைமிகுதியாகத்தா னங்கொடுத்து மற்றுமுள்ள யாவர்க்கும் அவ்வாறே போது மென்றுசொல்லும்படிகொடுத்து மழுவாயுதம் இருக்குந்திரு க்கரங்களையுடைய எம்மிறைவனாகிய சோமசுந்தரக்கடவுளால யத்தில்திருவிழா முதலானவை மிகுதியாக நடக்கும்படி உத்த ரவுசெய்து.— எ-று) விரசிருக்கும்என்பது,எச்சத்திரிவு (உஎ)

சிறைவிடுமின்சிறைக்களமுஞ்சிதைமின்கொண்டு தேயத்தீட் டு, மிறைவிடுமினயல்வேந்தர்திறைவிடுமின்னிறைநிதியமீட்டுமா யத், துறைவிடுமினலயமுமறப்புறமும்பெருக்குமெனத்தொ ழாலைக்காய்ந்த, கறைவிடுமின்னயில்வேலான்வள்ளுவனைக்கூ யுமுரசங்கறங்கச்சாற்றி .... .. ... .... .. .... .. *

(இ-ள்) சிறையிலிருக்கின்றவர்களை விட்டுவிடுங்கள் சிறைச் சாலைகளையும் இடித்துவிடுங்கள் - தேசத்துக்குடிகளிடத்தில் எ ழுவருஷம் இறைவாங்காமல்விடுங்கள் - மறுதேசத்து அரசர்க ளிடத்தில் திறைவாங்குவதைவிடுங்கள் - நிறைந்ததிரவியங்களை ச்சேர்க்கும் ஆயத்துறையை நீக்கிவிடுங்கள் - தேவாலயங்களி லும் தர்மசத்திரங்களிலும்(இதுவரையிலும் நடந்துவருகிற நி யமங்களை அதிகப்படுத்துங்களென்று - களங்காதபகைமன் னரைப்போரிற்கொன்றஉதிரம்நிறைந்த ஒளிவிடுகின்றகூர்மை யையுடைய வேலாயுதமேந்திய மலயத்துவசபாண்டியராஜன்

திருவவதாரப்படலம்.

வன்றுவனை அழைப்பித்துப்பேரிகை சாற்றும்படி உத்தரவு
செய்து.—(எ-று) (உஅ)

கல்யாணமணிமௌலிவேந்தரையுங்காலியாப்புக்கழலநீத்துக்
கொல்யானைபரிநெடுந்தேராகரிமையொன்றுமுறையாதே கொடு
த்துப்போக்கிப், பல்லாருங்கொள்கவெனப்பண்டாரத்தினைத்
திறந்துபசும்பொன்னுடை, வில்லாருமணிகொடிப்பூண்வெறு
க்கைமுதலெனைப்பலவும்வெறுப்பவீசி .... .. .. .. *

(இ-ள்) பொன்னாற்செய்து ரத்தினங்கள்பதிக்கப்பட்ட கிரீடமணிந்த பகைமன்னரையும், காலிலிட்டிருக்கும் விலங்குகளைக் கழற்றிக்கொள்ளுகின்ற யானைகள் - குதிரைகள் - நெடிய தேர்கள் - அரசுரிமை - இவைகளையெல்லாம் முன்னிருந்தது போலவே கொடுத்து அவர்கள் தேசத்துக்குப்போகும்படி அனுப்பிவிட்டும்பலபேரும் எடுத்துக்கொள்ளுங்களென்று பொக்கிஷத்தைத் திறந்துவிட்டும்அதுவுமன்றிப் பசிய பொன்வஸ்திரம் ஒளிபொருந்திய ரத்தினங்கள் பிறைவடமுதலாகிய ஆபரணங்கள் சுவர்ணம் - இவைமுதலாகப்பின்னுமுள்ள பலபொருள்களையும் போதுமென்று சொல்லும்படி கொடுத்தும். (எ-று) கழலநீத்து - ஒருசொன்னீர்மைத்து. பிறைவடம் - ஆகுபெயர். கொடிம்பூண் - வளைந்த வடிவமாகச் செய்யப்பட்ட பூணென்க. என்னவே பிறைவடமென்றவாறாயிற்று. கோடிம்பூண் எனற்பாலது-விகாரவகையால் கொடிம்பூண் என நின்றது. இதனைக் கொடும்பிறை வடிவிற்செய்த கூனிரும்பென்பதனாலும்; திருமுருகாற்றுப்படையில்-கொடுவிரல் என்பதற்கு வளைந்தவிரலெனப்பரிமேலழகர் உரைசெய்திருப்பதனாலு முணர்க. (உ௯)

தூமரபின்வருபெருமங்கலகவிகட் கிருநிதியந்துகில்பூண்பாய்
மா, காமர்கரிபரித்தடத்தேர்முதலாயபலபொருளுங்களிப்புந
ல்கிக், கோமறுகுகளிதூங்கச் சுண்ணமொடு மெண்ணெய்வி
ராக்குளிப்பநல்கி, மாமதுராநகரன்றிமற்றுமுளநகரெங்குமகி
ழ்ச்சிதூங்க .... .. .. .. .. .. .. .. .. ... .. *

(இ-ள்) தூய்மையுள்ள மரபில்வந்த அதிகசிறப்புகளைப்பெற்ற புலவர்களுக்கு மிகுந்த திரவியங்கள் வஸ்திரங்கள் ஆபரணங்கள் தாவிச்செல்லுகின்ற குதிரைகள் அழகுநிறைந்தயானைகள் குதிரைகட்டிய பெரியதேர்கள் முதலாகிய பலவகைப்பொருளும் சந்தோஷிக்கும்படிகொடுத்தும் இராசவீதியி

விருப்பவர்கள் (எல்லாரும்) களிப்படைய வாசனைப்பொடியுடன் எண்ணெய்யுங்குளிக்கும்படி சிறப்பாகக்கொடுத்தும்-பெருமைபொருந்திய மதுரைநகரத்தி லிருப்பவர்கள் மகிழ்ச்சி அடைவதுமல்லாமல் மற்றுந்தன் தேசத்திலிருக்கும் நகரத்திலிருப்பவர்களும் மகிழ்ச்சி அடையவும்.—(எ-று) மறுகு-ஆகுபெயர். (௬௰)

இவ்வண்ண நகர்களிப்ப விறைமகனுங் களிப்பெய்தி யிறைவர் சொன்ன, அவ்வண்ணஞ்சாதமுதல் வினைதிரப்பித் தடாதகை யென்றழைத்துத்தேவி, மெய்வ்வண்ண மறை யுணராவிறைவி தனைமேனைபோன் மேனோற்றக், கைவ்வண்ணத் தளிர்தீண்டிவளர்ப்பவிமவான் போலக்களிக்குநாளில் .... .... .... *

(இ-ள்) இப்படியாக நகரத்திலிருப்பவர்கள்யாவருமகிழ்ச்சி அடையப்-பாண்டியராசனுமகிழ்ச்சியடைந்து சோமசுந்தரக்கடவுள் அருளிச்செய்த திருவாக்கின்படி சாதகர்மமுதலாகியசடங்குகளைச்செய்து தடாதகையென்னப் பெயருமிட்டுத் தன்மனைவியாகிய (காஞ்சனையானவள்) உண்மையாகிய வண்ணத்தை யுடையவேதங்களும், அறியாத உமையவளை முற்காலத்தில்தவஞ்செய்ததளிர்போன்ற அழகியகைகளாலதொட்டு மேனையென்பவள் வளர்த்ததுபோல் வளர்ப்ப - இமவான்போல மலயத்துவசபாண்டியராசன் களிப்படையும் நாளில்.—(எ-று) சாதம் என்பது-பிறப்பு. காஞ்சனை வளர்ப்பவெனக்கூட்டுக. (௬௧)

திருந்தாதவிளங்குதலையாயமொடுபுறம்போந்து சிறார்க்குச்சிற்றில், விருந்தாகமணற்சிறுசோறட்டும்வரையுரங்கிழித்த வேளும்வாய்வைத், தருந்தாதவிளமுலைவாய்வைத்தருந்தப்பாவை தனக்களித்தும்போதில், வருந்தாதையண்டமெலாஞ் சிற்றிழைப்பாளாய்க்குமகிழ்ச்சிசெய்தாள் .... .... .... *

(இ-ள்) திருத்தமில்லாத இளமையாகிய குதலைச்சொற்களையுடைய சிறுபெண்களுடன் வீதியிற்போய்ச்சிறுவீடுகட்டி அந்தச்சிறுபெண்களுக்கு விருந்தாக மணற்சிறுசோறுசமைத்திட்டும்-கிரவுஞ்சகிரியின் மார்பைக்கிழித்த சுப்பிரமணியக் கடவுளும் வாய்வைத்து உண்ணாத இளமுலையை வாய்வைத்துண்ணும்படி பாவைக்குக்கொடுத்தும்-பிர்ம்மதேவனால் படைக்கப்பட்ட அண்டங்களையெல்லாம் சிறுவீடுபோலச் சமைக்கும் உமையவளாகியதடாதகைப்பிராட்டியானவள் தாய்க்குமகிழ்

திருவவதாரப்படலம்.

க்கிசெய்தாள்.—(எ-று) தாரகாசுரனுடைய மந்திரியே இரவு
ஞ்சமலையாயிருந்தானாதலால்- உரங்கிழித்தவென்றார். அவ்வி
யுங்-மலையின்வலியை அழித்தவெனினும் அமையும். (௯௨)

நீட்டுவாளிரண்டனையகண்களிப்பத்தோழியர்க்குத் தெரியவா
டிக், காட்டுவாளனைக்கழங்குபந்தூசலின்றம்பனையகத்திருப்
பாசம், வீட்டுவான்மேலொடுகீழ்ச்செல்ல வலைமை வினைக்கயிறு
விக்கிபூச, லாட்டுவாள்காட்டுதல்போலாடுமணித்தலத்தாம்ப
ணைசத்தனூசல் .... .. .. .... .... .... .... .. *

(இ-ள்) நீட்டிய இரண்டுவாள்போன்ற நேத்திரங்களும் க
ளிக்கும்படி தோழிகளுக்குத்தெரிய ஆடிக் காட்டுகின்றவள்
போலக் கழங்கும்பந்துகளும் டயின்று அம்மனைகற்றும்-பா
சத்தைநீக்க மேலுங்கீழுமாகச் செல்லத்தக்கதாக எங்களைவி
னையாகிய கயிற்றினாலகட்டி பூசலாட்டுகின்றவள் அதனை விவி
டத்துக்காட்டுமவள்போல முத்துவடம் பூட்டிய ஊசலிலாடி
னாள்.—(எ-று) (௯௩)

இம்முறையாற்றாயர்க்குத்தோழியர்க்குமகத்துவகை யீந்தா
ளாகி, யம்முறையாற்றாதைக்குமகத்துவகையீவாளாய்யாத்தவா
ய்மைச், செம்மறையாரணமுதனூலீரெட்டுக்கலை முழுதுந்தெ
ளிந்தாளந்த, மெய்ம்மறையார்கலையனைத்துமேகலையாமருங்க
லைசத்தவியலையம்மா .... .. .... .. .. ... .... *

(இ-ள்) இப்படியாகத்தாயர்க்கும் தோழிகளுக்கும் மனமகி
ழ்ச்சி கொடுத்தவளாய் (அதன்பின்பு) மேற்சொல்லிய முறை
மைப்படி பிதாவுக்கு மனமகிழ்ச்சி தருகின்றவளாய் ஆப்த
வாக்கியமான செவ்விய வேதமுதலாகிய அறுபத்துநாலு க
லைகளையும் உணர்ந்தாள்-அந்த உண்மையாகிய வேதமுதலிய
கலைகளையெல்லாம் மேகலாபரணமாக இடையிலணிந்ததடாத
கைப்பிராட்டியானவள். (எ-று) ஆரணம்-வேதத்திலுட்பிரிவு.

சொல்வாய்மைக் கலைத்தெளிவு முழுமதியைப் பிளந்திருபாற்
சொருகியன்ன, பல்வாய்மைக்கடகரித்தேர்பரியுகைக்குந்திறனு
மடற்பகழிதூர்க்கும், வில்வாள்வச்சிரமுதற்பல்படைத் தொழி
லுங்கண்டிளமைவிழுங்குழப்பிற், செவ்வாய்மைத்திறலரசன்
றிருமகட்குமுடிசூட்டுஞ் செய்கைபூண்டான் ...... .... *
(௯௪)

(இ-ள்) சொல்லுகின்ற உண்மையாகிய சாஸ்திர உணர்ச்சியையும்பூரணசந்திரனைப்பிளந்து இரண்டுபக்கத்திலும் வைத்ததுபோன்ற தந்தத்தையும்பொருந்தியகருமைநிறத்தையுமதத்தையுமுடையயானை-தேர்- குதிரை இவைகளைச்செலுத்துந்திறத்தையும்-அக்கினிமயமாகியபாணங்களைச்செலுத்தும் வில்-வாள் - வச்சிரம் முதலாகிய பலபடைத்தொழிலின் திறத்தையும் கண்டு இளமைப்பருவத்தைமறைக்காநின்றமூப்புப்பருவத்திலிருக்குமெய்ம்மைத்தன்மையுள்ள மலயத்துவசபாண்டியமகாராசன் (தன்னுடைய) சிறப்புள்ளபுத்திரிக்கு மகுடந்தரிக்குஞ் செய்கையையுடையவனானான்.—(எ-று) (௫௫)

முடிகவிக்குமங்கலநாள்வரையறுத்துத்திசைதோறு முடங்க
ல்போக்கிக், கடிகெழுதார்மணிமௌலிக்காவலரைவருவித்து
க்காவல்சூழ்ந்த, கொடியணிமாநகரெங்கும்விழாவெடுப்ப வ
ழகமைத்துக்குன்றமன்ன, தொடிகெழுதோட்சுமதிதிருமண
த்திற்குவேண்டுவனசூழ்ந்துசெய்தான் .... .... ....*

(இ-ள்) முடிசூட்டும்சுபதினத்தை நிச்சயித்துத் தேசங்களுக்கெல்லாம் ஓலையெழுதியனுப்பி மணம்பொருந்திய மாலைசூடியரத்தினகிரீடமணிந்த அரசர்களை வரவழைத்து மதில்சூழ்ந்த கொடிகள்கட்டிய மதுரைநகரெங்கும் திருவிழாக்கொள்ளும்படி அலங்காரஞ்செய்வித்து மலையையொத்தவாகுவலயமணிந்த புயங்களையுடையசுமதியென்னுமந்திரியானவர் அந்தமகுடாபிஷேகத்திருக்கல்யாணமஹோற்சவத்துக்கு இன்னின்ன காரியஞ்செய்யவேண்டுமென்று யோசித்துச்செய்தார்.—(எ-று) (௫௬)

மங்கலதூரியமுழங்கமால்யானையுச்சியிலேந்தபூத,கங்கைமு
தலொன்பதுதீர்த்தமுநிரப்பிக்கதிர்விடுபொற்கடம் பூசித்துப்,
புங்கவரைமந்திரத்தில்வளர்த்தமுதமருத்தியெரி பொன்னாற்செ
ய்த;சிங்கமணியாதனத்தைநேசித்துப்பூசித்துத்தெய்வமேத்தி

(இ-ள்) (அதன்பின்புமலயத்துவசபாண்டியன்)மங்கலவாத்தியங்கள் முழங்கப் பெரிய யானையின்மத்தகத்தின்மேல் வைத்துக்கொண்டுவந்த பரிசுத்தமுள்ள கங்கைமுதலாகிய ஒன்பதுதீர்த்தமும்நிறைத்து ஒளிவிடுகின்றபொற்குடத்தைப்பூசித்துமந்திரவேள்விசெய்துதேவர்களுக்குஅவிர்ப்பாகங்கொடுத்துவிளங்குகின்றபொன்னாற்செய்துமணிகள்பதிக்கப்பட்டசிங்

திருவவதாரப்படலம்.

காசனத்தை அன்புடன் பூசித்து அதற்குரியதெய்வத்தைத் துதிசெய்து.—(எ-று) ஒன்பதுதீர்த்தமாவது, கங்கை-யமுனை-சரஸ்வதி-நருமதை-காவேரி-குமரி-கோதாவிரி-துங்கபத்திரி-தாமிரபருணி என்பனவைகளாம். (௧௭)

திருமுடியைமதயானைமிசைவைத்துநகரைவலஞ்செய்துபூசித்
தருமணியாற்குடிகையிழைத்தாடகத்தாற்குயிற்றியதோரணவா
ய்நாகம்,பெருமணிநீர்படம்பரப்பிமிசைகவிப்பவச்சிங்கபீடத்
தேற்றிக்,குருமணிவாணகைமயிலைக்கும்பத்துப்புண்ணியநீர்
குளிரவாட்டி .... .... .... .... .... .... .. *

(இ-ள்) சிறப்புப்பொருந்திய கிரீடத்தைமதயானையின்மேல்வைத்து நகரை வலஞ்செய்து பூசித்துக் கிடைத்தற்கரிய மணிகளால்குடிகைசெய்து பொன்னாற்செய்ததாகிய ஒப்பற்றஐந்தலைநாகமானது பெரியமணிகள் பதித்திராநின்ற நெடிய படங்களைப்பரப்பி மேலேகவிக்கும்படி நிறமுள்ள முத்தினையொத்த ஒளிபொருந்திய தந்தங்களையுடைய தடாதகைப்பிராட்டியாரை அந்தச்சிங்காசனத்தின்மேல் எழுந்தருளப்பண்ணிக் கும்பத்திலிருக்கின்ற புண்ணியதீர்த்தத்தினால் குளிரத்திருமஞ்சனஞ்செய்வித்து.—(எ-று) (௧௮)

புங்கவர்மந்தாரமழைபொழியவருந்தவராக்கம்புகலத்தெய்வ
ப், பங்கயமென்கொம்பனையாராடமுனிபன்னியர்பல்லாண்டு
பாட, மங்கலதூரியமுழக்கமறைதழங்க மாணிக்கமகுடஞ்சூட்
டியங்கருணைப்பெருமாட்டிக்கரசமைச்சர்பணியுந்தன்னிறை
மைநல்கா .... .... .... .... .... .... .... *

(இ-ள்) தேவர்கள் கற்பகப்பூமழை பொழியவும்-பிராமணர்கள் ஆசீர்வசனஞ்சொல்லவும்-தாமரைமலர்கள்பூத்தபொற்கொம்பையொத்த தேவஸ்திரீகள் நடனஞ்செய்யவும்-ரிஷிபத்தினிகள் பல்லாண்டுகூறவும்- மங்கலவாத்தியங்கள் முழங்கவும்-வேதங்கள்கோஷிக்கவும்-மாணிக்கங்கள்பதிக்கப்பட்ட மகுடத்தைத் தரித்துக் கிருபையினையுடைய தடாதகைப் பிராட்டியாருக்கு அரசர்களும் மந்திரிகளும் பணியத்தக்க தன்னுடைய அதிகாரத்தைக்கொடுத்து.—(எ-று) (௧௯)

பாலனையமதிக்கவிகைமிசைநிழற்ற மதிகிரணம்பரப்பியன்ன,
கோலமணிக்கவரிபுடையிரட்ட மலர்மழைதேவர்குழாங்கடூற்ற

ர், காலையிளங்கதிர் கயிலையுதித்தென வெண்கடாயானைக்கழுத்தி ல்மேவப்ப, மாலைமுடிப் பெண்ணரசைமங்கலதூரியமுழங்கவல ஞ்செய்வித்தான் .... .... .... .... .... .... *

(இ-ள்) பாலைப்போத்த வெண்மைநிறமுள்ள சந்திரவட்டக் குடையான தமேமேலெநிழலைச்செய்யவும், அக்குடையாகியசந்தி ரனுடைய கிரணங்களைப்பரப்பியதுபோல அழகியசாமரையை இருபுறத்திலும்வீசவும், தேவர்கூட்டங்கள்கற்பகப்பூமாரிபெ ய்யவும், இளங்கதிர்களையுடைய உதயகாலசூரியன் கயிலாசம லையில்உதித்ததுபோல் மதநீரைச்சொரிகின்றவெள்ளையானையி ன்பிடரியின்மேலேற்றிவைப்பம்பூமாலைசூடியமுடியையுடைய பெண்ணரசியாகிய தடாதகைப்பிராட்டியாரை மங்கலவாத்தி யங்கள்ஒலிக்கும்படிநகரவலஞ்செய்வித்தான். (எ-று) (௬௰)

விண்ணாடுமொழிகேட்ட மகிழ்ச்சியினுந் திருமகடன் விளக்க நோக்க, புண்ணாடுபெருக்களிப்புத்தலைசிறப்பச்சிலபகல்சென் றேழியமேருட், புண்ணாடுமென்மங்கைக்குதுகலித்துநடிப்பத் தன்புயமேலணைத்த, மண்ணாடுமகட்களித்துவானாடுபெற்றானை ம்மகவுபெற்றான். .... .... .... .... .... .... *

(இ-ள் தன்னுடையசெல்வப்புத்திரியின்மேன்மையைநோ க்கி ஆகாயத்திலுண்டான அசரீரிவாக்கைக்கேட்ட(தனாலு ண்டான)மகிழ்ச்சியைப்பார்க்கிலும் உள்ளத்திலுண்டாகியபெ ருங்களிப்பானது மேலிடச் - சிலநாள்சென்றபின்பு பகைவர்தங் களுடலிற்பொருந்தியபுண்ணைப்பார்ப்பதற்கு ஏதுவாகிய வே லேந்திய வீரலட்சுமியானவள்மகிழ்கூர்ந்து நடிக்கும்படிசெ ன்றநாள்வரைக்கும் தன்புயவலிமையினாலே தாங்கிய மண்ணு லகத்தைத் தன்மகளுக்குக்கொடுத்துவானாடாகியசுவர்க்கலோ கத்தைத்தான்பெற்றுக்கொண்டான் இந்தப்புத்திரியைப்பெ ற்றமலயத்துவசபாண்டியராசன்.—(எ-று) (௬௧)

விரதநெறிபடைத்திற்றுக்கடன்பிறவுந்தானைக்கு விதிபாலாத் தி, யாதனைமெல்லணைமேற்கொண்டுலகமெலாமொருகுடைக்கீ ழாள்வாராளுள், சாதமறையாய்மறையின்பொருளாயப்பொ ருண்முடிவுதானாய்த்தேனி, னிரதமெனப்பூவின்மணமெனப் பாமனிடம்பிரியாவெம்பிராட்டி .. .... .. .... ... *

(இ-ள்) உண்மைப்பொருளை உணர்த்துகின்ற வேதமாகியு ம் வேதப்பொருளாகியும் அந்தப்பொருளின் முடிவாகியும்-

## திருவவதாரப்படலம்.

தேனிலிருக்கும் மதுரம்போலவும் - பூவிலிருக்கும் வாசனையைப் போலவும் - பரமசிவனிடப்பாகத்தைவிட்டுப் பிரியாத வெம்மிறைவியாகிய தடாதகைப்பிராட்டியார் பிதாவானவர் சுவர்க்கலோகத்தைச் சேர்ந்தநாள் முதல விரதநெறியை அனுஷ்டித்துக்கொண்டு உத்தரகிரியை முதலான சடங்குகளை வேதவிதிப்படிச் செய்து நாணினாலதொழில் செய்யப்பட்ட ரத்நசிங்காதனமேலிருந்துகொண்டு உலகங்களையெல்லாம் ஒருகுடையின் கீழ் ஆளுகின்றவராயினார்.— எ-று) (௪௨)

(வேறு.)

மன்னரிறைஞ்ச ஞாலமனுவழிபுரந்துமாறன் .... .. *
பின்னரசிருக்கையெய்தப்பெற்றபின் விடையோனுள்ளத். *
தென்னரசன்னமென்னத்தென்னவனீன்றகன்னிப் ... *
பெண்ணரசிருந்துநேமியுருட்டியபெருமைசொல்வாம் .. *

(இ-ள்) பூலோகத்திலிருக்கும் அரசர்களெல்லாரும் வணங்கும்படி இவ்வுலகத்தை மனுவிக்கியானேஸ்வரத்தில் சொல்லப்பட்ட முறைமைப்படி காப்பாற்றி மலயத்துவசபாண்டியன் சுவர்க்கபதஞ்சேர்ந்தபின்பு பரமசிவன் திருவுள்ளத்தில் எண்ணும்படியான அரசவன்னம்போல அந்தப் பாண்டியராசன் பெற்றகன்னிப்பெண்ணாகிய தடாதகைப்பிராட்டியார் அரசாசனத்தை மேல்கொண்டிருந்து ஆக்கினைச்சக்கரஞ்செலுத்திய பெருமையைச் சொல்லுகின்றாம்.—(எ-று) (௪௩)

இன்னியமியம்பமாக்களெழுப்பவாணிரவிதோன்றக் .. .. *
கன்னலைந்தென்னப்பள்ளித்துயிலெழீஇகடிநீராடித் ... *
தன்னிறைமரபுக்கேற்றநியதியாதானமன்பு .. .... .. *
துன்னியகடவுட்பூசைத்தொழின்முதலனைத்துமுற்றி .... *

(இ-ள்) இசிதாகியவாத்தியங்களை முழக்குகின்றவர்கள் எழுப்ப - ஆகாயமார்க்கத்திற்செல்லுகின்ற சூரியன் உதயமாகு ஐந்துநாழிகையென்னும் போதுசயனத்திலிருந்து நித்திரை நீங்கி யெழுந்து மணந்தங்கிய நீராடித் தன்னுடைய க்ஷத்திரியமரபுக்குத்தக்க நியதி சோடசதானம், அன்புபொருந்திய சிவபூசைமுதலாகிய செய்கைகளையெல்லாஞ் செய்துமுடித்து.—(எ-று) (௪௪)

திடப்படுமறிஞர்சூழச்சிவபரன்கோயின்முன்னிக் .. .. .. *
கடம்படிமுளைத்தமுக்கட்கரும்பினைமறைவண்டார்க்கும் .. *

விடம்பொதிகண்டத்தேனைவிதிமுறைவணங்கிமீண்டு ... .. *
குடம்பயில்குடுமிச்செம்பொற்குருமணிக்கோயினண்ணி .. *

(இ-ள்) உறுதியாகிய அறிவினையுடைய மந்திரிமுதலானவர்கள் சூழ்ந்துவரும்படி சோமசுந்தரக்கடவுள் வீற்றிராநின்ற ஆலயத்துக்கெழுந்தருளிக் கடப்பமரத்தினடியில் உண்டாகிய மூன்றுகண்களையுடைய கரும்பையொத்தவரும் வேதங்களாகிய வண்டுகள்மொய்த்துக்கொண்டிராநின்ற விஷம்பொருந்திய கண்டத்தையுடைய தேனையொத்தவருமாகிய அந்தச்சோமசுந்தரக்கடவுளை வேதாகமவிதிப்படி வணங்கிப் பின்பு அவிடம்விட்டுத் திரும்பிக் கலசங்களைவைத்திராநின்ற உச்சியையுடைய செம்பொன்னாற்செய்யப்பட்டுநிறம்பொருந்தியமணிகள்பதிக்கப்பட்ட மாளிகையிற்போய்.—(எ-று) (௪௫)

அரசிறைகொள்ளுஞ்செம்பொனத்தாணியிருக்கையெய்தி . *
நிரைசெறிமடங்கலாறுமுடங்கினைநிமிர்ந்துதாங்க . .. .. *
விரைசெறிமலர்மீப்பெய்தவியன்மணித்தவிசின்மேவித் . . *
திரைசெறியமுதிற்செய்தபாவைபோற்சிறந்துமாதோ. .. *

(இ-ள்) மன்னவர்கொண்டுவருந்திறையைவாங்குகின்ற செம்பொன்னாற்செய்யப்பட்டஅத்தாணியென்னும் மண்டபத்திற்சேர்ந்து வரிசையாகப்பொருந்திய ஆறு சிங்கங்களும் கழுத்தைவளைத்துக்கொண்டு ஓங்கித்தாங்கும்படிவாசனைபொருந்தியபுட்பங்களைமேலேசொரிந்திராநின்ற பெரியமணிகள் பதித்தஆசனத்தில் இருந்து அலைகளையுடைய சமுத்திரத்தில் உண்டாகிய அமுதத்தினாற்செய்யப்பட்ட பிரதிமைபோல் பொலிவுற்று.—(எ-று) திரை-ஆகுபெயர். (௪௬)

அனிந்திதையமுதின்சாயற்கமலினியணங்குகாதற் .. .. *
கனிந்தபார்மகளிராய்வந்தடைப்பைபொற்களாஞ்சியேந்த *
விசாந்திரியாமக்கோயிலிருவருமனையராகிப் .. .... ...*
புனைந்தவெண்கவரிக்கற்றையிருபுடைபுரட்டிவீச .... .. *

(இ-ள்) அமுதம்போன்றசாயலையுடைய அனிந்திதை என்னும் அணங்கும்-கமலினி என்னும் அணங்கும் அன்புமிகுந்த மானிடமகளிராகிவந்து அடைப்பையுங்களாஞ்சியுந்தாங்கவும், செந்தாமரை க்கோயிலினிடத்தில் இராநின்றதிருமகளும், வெண்தாமரைக்கோயிலினிடத்தில் இராநின்ற கலைமகளும், மானிடமகளிர்களாகி அலங்கரித்த கற்றையாகிய வெண்சாமரைக

## திருவவதாரப்படலம்.

ளை இரண்டுபக்கங்களிலும் வீசுவர்.—(எ-று) புரட்டி வீசவெ ன்பது-ஒருசொல்நீர்மைத்து. அனிந்திதைகமலினி என்னு ம் இருவரும் கயிலாயத்தில் பார்வதியாருக்கு ஏவல்செய்யுந் தோழிகளாம். (சஎ)

செடியுடலெயினச்செல்வன்சென்னிமேற்சுமந்துசாத்துங் *
கடியவிழ்மலர்ப்பொன்னிக்காவலன்குடக்கோனேனை .... *
முடிசெழுவேந்தருள்ளார்முடிமிசைமிலைந்ததாம .... .. *
மடிமிசைச்சாத்திநங்கையாணையாலேவல்செய்வார் .. .. *

(இ-ள்) பாவசம்பந்தமாகியசரீரத்தையுடையவேடுவர்குல த்தில் திருவவதாரஞ்செய்த கண்ணப்பசுவாமிகள் திருமுடியி ல்தாங்கிக்கொண்டுவந்து நறுநாற்றம்பரந்த திருப்பள்ளித்தா மத்தைச் சாத்தியதுபோல் சோழராசனும் சேரராசனும்மகு டமணிந்த மற்ற அரசராயிருப்பவர்கள் எல்லாருந்தங்கள்முடி யில்அணிந்த பூமாலைகளைத்திருவடியில்சாத்தித் தடாதகைப்பி ராட்டியினது ஆக்கினையின்படி ஏவல்செய்கின்றார்கள்.(எ-று) கண்ணப்பசுவாமிகள் பிதாவாகிய நாகனைக்குறித்துச்சொல் லுமிடத்தில்-பெற்றியாற்றவமுன்செய்தா னாயினும் பிறப்பின் சார்பாற் குற்றமேகுணமாவாழ்வான் கொடுமையே தலைநின் றுள்ளான் என்றுசொல்லியிருப்பதினாலும் வேடுவகுலத்தின் தீ ன்மையையுணர்க. மாலையைத்திருவடியில்சாத்துதல்-வணங்கு தலெனக்கொள்க. (சஅ)

வையுடைவாளராகிமார்புறப்பின்னியார்த்த.... ... .... *
கையினராகியன்னையென்றுதன்கருணைநோக்கஞ் .... .. *
செய்யுமென்றிமையார்நோக்கிநோக்குமேற்செங்கைகூப்பி;
யுய்க்குநமெனவாய்பொத்தியுழையர்தம்பணிகேட்டுய்வார் .. *

(இ-ள்) கூர்மைபொருந்திய வாளையுடையவர்களாயும்மார் பிற்பொருந்தப் பின்னிக்கட்டியகைகளையுடையவர்களாயும் த டாதகைப்பிராட்டியார் எப்போது தம்முடைய கிருபாநோக் கஞ்செய்வாரோவென்று இமையாதவர்களாய்ப்பார்த்துக்கொ ண்டிருந்து தங்களைப்பார்த்தால்பிழைத்தோமென்றுசிவந்தகை களைக்கூப்பி வாயைப்பொத்திக்கொண்டு ஏவலாளிகள் தமக் குரிய ஏவல்களைக்கேட்டு உய்வார்கள்.—(எ-று) (சகூ)

ஆங்கவன்மராடர்வேந்தனவன்கருநாடர்வேந்த.... ..... *
னீங்கிவன்விராடர்வேந்தனிவன்குருநாடர்வேந்த .... ... *

ஆங்கிவன் சேரன் சென்னியிவனெனக்கோலாற்சுட்டிப் .. *
பாங்கிருமருங்குங்காட்டக்கஞ்சுகப்படிவமாக்கள் .... *

(இ-ள்) சட்டையணிந்த உருவத்தையுடைய கஞ்சுகிமாக்கள் - அவன் மராடதேசத்தார்க்கரசன் - அவன் கருநாடதேசத்தார்க்கரசன் - இவன் விராடதேசத்தார்க்கரசன் - இவன் குருதேசத்தார்க்கரசன் - அவன் சேரன் - அவன் சோழன் என்று தங்கள் கையில் இருக்கும் பிரம்பினால் சுட்டி இரண்டுபக்கத்திலும் பாங்குடன் காட்டவும். — எ-று) (ருஎ)

செந்தமிழ்வட நூலெல்லை தெரிந்தவர்மறைநூலாதி .. .. *
யந்தமிலெண்ணெண்கேள்வியளந்தவர்சமயமாறும் .. .. *
கடந்தவர் துறந்தோர்சைவமாதவர்போதமாண்ட .. .... *
சிந்தனையுணர்வான் மாயைவலிகெடச்செற்றவீரர் .... .. *

(இ-ள்) செந்தமிழ்நூலளவைந் தெரிந்தவர்களும், வடநூலளவைத்தெரிந்தவர்களும், வேதசாஸ்திரமுதலாகிய முடிவில்லாத அறுபத்துநான்கு கலைகளையும் தேர்ந்தவர்களும், ஆறுசமயசாஸ்திரங்களையுமுணர்ந்தவர்களும், இருவகைப்பற்றினையும்விட்டுத் துறந்தவர்களாகிய சைவமாதவர்களும், தம்போதங்கெட்ட உணர்ச்சியினால் மாயையின்து வலிகெடச்செற்ற மெய்ஞ்ஞானிகளும் — எ-று) வெல்லுதற்கரிய மாயையை வென்றவர்களாதலால் ஞானிகளை வீரரென்றார். (ருஅ)

முன்னிருந்தினியதேற்றுமூத்தவரெண்ணிவெண்ணிப் .... *
பன்னுமைந்துறுப்பிற்காலமளந்தறிபனுவன்மாந்தர் .... *
பின்னுமுன்னோக்குஞ்சூழ்ச்சிப்பெருந்தகைச்சுமதியோடு . *
மின்னமுதனையகேள்வியந்திரர்யாருஞ்சூழ்வார் .... .... *

(இ-ள்) எதிரிலிருந்துகொண்டு இனியவாகிய காரியங்களைத் தெளிச்செய்கின்ற மூத்தோர்களும், எண்ணி எண்ணிச்சொல்லுகின்ற ஐந்துறுப்பினால் காலத்தை அளந்தறியும்படியான சோதிடநூலுணர்ந்தவர்களும், இவர்களுமன்றி மேல்வருங்காரியங்களை அறியத்தக்க சூழ்ச்சியையும் பெருந்தகையையுமுடைய சுமதி என்னு மந்திரியோடு இனிதாகிய அமிர்தத்தையொத்த கேள்விகளையுடைய மந்திரிகள் எல்லாருஞ் சூழ்வார்கள். — எ-று) ஐந்துறுப்பாவது - திதி - வாரம் - நக்ஷத்திரம் - யோகம் - கரணம் - என்பவைகளாம், இவைபஞ்சாங்கமென்று சொல்லப்படும். இன்னமுதனையகேள்வி என்பது - அமிர்தத்தே

வர்களுக்கு உதவிசெய்வதுபோல் உதவிசெய்திறக்கரேள்வியெனக்கொள்க. (௩உ)

கற்றறியந்தணாளர்விருத்திகள்கடவுட்டானந் .... ........ *
தற்றமில்பூசைச்செல்வமறப்புறநடக்கையேனைச் .... .. *
செற்றமில்குடிகண்மற்றுமமைச்சராற்றெளிந்தும்வெவ்வே *
றொற்றுவிட்டுணர்ந்தும்வேறு குறையுண்டேலாறுத்துத்தீர்த்தும் .... .... .... .. .... .... ... .... *

(இ-ள்) எல்லாநூல்களையுங்கற்றறிந்த பிராமணர்களுடைய விருத்திகளையும், தேவாலயங்களில் நடக்குங்குற்றமில்லாத பூசையின்சிறப்பினையும், தருமசாலையில் நடக்கும் செய்கைகளையும் இவைகளுமல்லாமல்குற்றமில்லாதகுடிகளையும், மற்றுமுள்ள காரியங்களையும் மந்திரிகளால் அறிந்தும், தனித்தனியேயொற்றர்களைவிட்டு அறிந்தும், மேல்சொல்லியவைகளில் எதாவது ஒருகுறை நேரிட்டிருக்குமாகில் தண்டித்து அதனைத் தீர்த்தும்.— எ-று) வேந்தனை வேந்தெனப்படுதுபோல் ஒற்றனை ஒற்றென்றார், இதனை ஒற்றுமுறைசான்றநூலும் என்னுங் குறளானுமுணர்க (௩௩)

ஆதியுத்தேசத்தானுமிலக்கணவகைமதியானுஞ் . . . . . ...*
சோதனைவகைமையானுஞ்சொன்னநூலனுவாதித்து .. .. *
நீதியினவற்றுற்கண்டித்தவ்வழிநிறுத்தித்தம்மில் .. .... *
வாதிகள்வாதஞ்செய்யுங்கோட்டிமேன்மகிழ்ச்சிகூர்ந்தும்.. *

(இ-ள்) ஆதியாகிய உத்தேசத்தானும் இலக்கண அமைதியினுனும் சோதனை என்னும் வகையினுலும் சொன்னபொருளை அனுவாதித்து,நீதியுடன் அவைகளால்கண்டித்துப்பின்னும் அந்தவழியில்ஸ்தாபித்து வாதிகள் தமக்குள்வாதஞ்செய்யுங்கூட்டத்திலிடத்தில்மகிழ்ச்சியடைந்தும்.—(எ-று) உத்தேசமாவது-தான்விவகரிக்கும்பொருளைப் பெயர்மாத்திரங் கூறுதலாம், இலக்கணமாவது - அப்பொருளின் சிறப்புத்தன்மையைக் கூறலாம், சோதனையாவது- அப்பொருளில் இலக்கணம் உண்டோ இல்லையோஎன்றுபார்த்தலாம், இம்மூன்றினுக்கும் போதப்பிரகாரம் என்று பெயர். அனுவதித்தலாவது - எதிரிசொன்னவைகளைத் தானெடுத்துச்சொல்லுதல். (௩௪)

பையுரபகுவாய்நாகப்பள்ளியோனுதிவானோர் ... .. .. *
ஐகயுரவலியாலட்டகடலமுதனைத்தும்வாரிப் ... ... .. *

பொய்யுளமகலக்கற்றபுனிதநூற்புலவர்நாவிற் .... .... *
செய்யுளின் விளைவித்தூட்டத்திருச்செவிதெவிட்டவுண்டும். *

(இ-ள்) படங்களுள்ளபகுட்பாகிய வாயினையுடைய சர்ப்ப சயனத்தினையெண்ணும் திருமால்முதலாகிய தேவர்கள் எல்லாரும் தங்கள் கைக்குள்ள வலியினால் சமுத்திரத்தைக் கடைந்துண்டாக்கிய அமிர்தத்தையெல்லாம் எடுத்துப் பொய்யான உள்ளத்தைவிட்டு நீங்கும்படி புனிதமாகிய நூல்களைக்கற்றபுலவர்கள் தங்கள் நாவினால் செய்யுளினிடமாக விளைவித்து ஊட்ட அழகியகாதுகள் தெவிட்டும்படி உண்டும்.—(எ-று) அமிர்தத்தைச் செய்யுளினிடமாக விளைவித் தூட்ட உண்டும் என்பது-பாடல்களைச்சொல்லி அவைகளின்பொருள்களை மதுரிக்கும்படி விவகரித்துச் சொல்லக்கேட்டுமெனப்பொருள்படுமாற்றிக. (௫௫)

தொல்லைநான்மறையோர்சைவர்துறந்தவர்யார்க்குமின்பம் *
புல்லவானமுதங்கைப்பப்பாகநூற்புலவரட்ட .... .... *
முல்லைவான்முகையினன்னவறுசுவைமுரியாமோர .... .. *
னல்லுணவருத்தியன்றோர்நாவிருந்தமுதுசெய்தும். .. .. *

(இ-ள்) பழமையாகிய நான்குவேதங்களையும் உணர்ந்த பிராமணர்கள் சைவர்கள் துறந்தவர்கள் ஆகியயாவர்களுக்கும் இன்பம்பொருந்தும்படி தேவாமிர்தமும்கசக்கத்தக்கதாகப் பாகநூலுணர்ந்த புலவர்களால்சமைக்கப்பட்ட வெண்மையாகிய முல்லையரும்பை ஒத்ததாய் அறுசுவைக்கறியோடுங் கூடிய சோதசாதமாகிய நல்ல உணவை அருத்தி அவர்களுடைய நாவினால்செய்கின்ற விருந்தினை அமுதுசெய்தும்.—(எ-று) சுவை ஆகுபெயர், நாவினால்செய்கின்றவிருந்தாவது-வாழ்த்து. (௫௬)

எல்லவனுச்சிநீந்திமெல்லெயிறுஞ்சூமாறும் .... ..... *
வல்லவர்சூதமேனிவகுத்தமூவாறுகேள்வி .... .. .... *
சொல்லவுண்மலர்ந்துமேனைமறைமுதற்றுறைமாண்கேள்வி *
நல்லனநயந்துகேட்டுநண்பகற்போதுநீத்தும். .. .. .. *

(இ-ள்) சூரியன் வான்முகட்டிடைவிட்டு மேற்கே சாய்ந்த காலத்தில் நான்குவேதங்களும் ஆறு வேதாங்கங்களும் ஓதியுணர்ந்தவர்கள் சூதமுனிவரால்சொல்லப்பட்ட பதினெண்புராணங்களைச்சொல்லக்கேட்டு மனமகிழ்ந்தும் அதுவுமன்றியஞுவிக்கியானேஸ்வரமுதலாகிய நல்லதருமசாஸ்திரங்களைக்கேட்டும் பகற்பொழுதைக்கடத்தும்.—(எ-று) (௫௭)

## திருவவதாரப்படலம்.

கலைக்குறைவிரிப்பானென்னவறுமையிற்கல்விபோலப் .... *
புலப்படாமருங்குலல்லாரொற்றிரப்புலவன்பூட்டி.. .... *
யலைத்திடுபாவைபோனின்றாடல்செய்யாடற்கண்ணு .... *
நலத்தகுபாடற்கண்ணுநல்லருணாட்டஞ்செய்தும். .... *

(இ-ள்) ஒருவன்கற்றகல்வியானது வறுமைநேரிட்டகாலத்தில் விளங்காத்தன்மைபோல் விளங்காத (அதிநுண்மையாகிய இடையினையுடையமாதர்கள்) பரதசாஸ்திரத்துக்குப்பொருள் விளங்கக்காட்டுகின்றவர்கள் போன்று சூத்திரப்பாவைகளையாட்டுந் தொழில்வல்ல ஒருவன் சூத்திரங்களைப்பூட்டி ஆட்டுகின்றபாவைபோனின்றாடுகின்ற ஆடலினிடத்தும், இன்பத்துக்குத் தக்கபாடலினிடத்தும் நல்ல அருணாட்டம்வைத்தும் —(எ-று) கலைக்குறைவிரிப்பானென்ன ஆடல்செய்யாடற்கண்ணுமெனவுரைத்துக்கொள்க, மாதரை ஆடல்பாடலிரண்டிடத்துங்கூட்டுக. கைதழுவாமல் பாட்டுகளின் பொருள்தோன்றக் கைகாட்டி அபிநயஞ்செய்தாடுதலால் கலைக்குறைவிரிப்பானென்னவென்றார். வறுமையிற்கல்விவிளங்காதென்பதை (நற்பொருணன்குணர்ந்துசொல்லினுநல்கூர்ந்தார்சொற்பொருள்சோர்வுபடும்) என்கிறகுறளானுமுணர்க. நாட்டம்வைத்தலென்றதற்கு- ஆடலைப்பார்த்தும் பாடலைக்கேட்டுமெனப்பொருள்கொள்க (௫அ)

இன்னிலையொழுகுந்தொல்லோரியற்றியதருமம்வேறும் ... *
அந்நிலைநிறுத்தும்வேள்வியறம்பலவாக்கஞ்செய்ய .. .. *
நன்னிதியளித்தும்வேள்விநடத்தியுஞ்செல்வங்கல்வி .... *
தன்னிருகண்களாகத்தழைந்திடவளர்க்குநாளும். ..... ... *

(இ-ள்) இல்லறவாழ்க்கையில்வழுவாது நடக்கும்பழையோர்களால் செய்யப்பட்ட தருமங்களும் இதுவுமல்லாமல் அவ்வில்வாழ்க்கைக்குரியவைகளாகச்சொல்லப்பட்ட வேள்வியாகிய பலதருமங்களும் விர்த்தியாகும்பொருட்டு நல்லதிரவியங்களைக்கொடுத்தும் அக்கினிட்டோமமுதலான வேள்விகளைச்செய்தும் செல்வமுங்கல்வியும் தன்னிரண்டுகண்களாகத் தழையும்படி நாள்தோறும் வளர்க்காநின்றாள் —(எ-று) இவ்வாழ்வோர்களால்செய்யப்படுந்தருமமாவது- ஆதுலர்க்குச்சாலை முதலானவை- அவர்களால்செய்யப்படும் வேள்வியாவது- பிரமம்-தெய்வம்-பூதம்-பிதிர்-மானுடம் என்பவைகளாம், இவற்றுள் பிரமயாகமாவது- வேதமோதுதல், தெய்வயாகமாவ

து-ஓமம்வளர்த்தல், பூதயாகமாவது - பலியிடுதல். பிதிர்யாகமாவது-தர்ப்பணமுடித்தல், மனுடயாகமாவது-இரப்போர்க்குணவுமுதலானதுகள்கொடுத்தலாம். தலைமுறைதோறும் வழுவாதவர்கள் என்பது தோன்றத்தொல்லோர் என்றார். (௫௯)

ஒப்புருமுதலீறில்லாவொருத்திதன்சத்திபெற்ற .... .. *
மூப்பெருந்தேவராலேமுத்தொழினடத்துமென்று .... *
செப்பலும்புகழன்றென்னிற்றென்னவன்கன்னியாகி.. .. *
யிப்புவிமனுவிற்காக்குமென்பதென்பேதைமைத்தே. .. *

(இ-ள்) உவமானமும், உருவமும்; ஆதியும், அந்தமும் இல்லாத ஒருத்தியாகிய அருட்சத்தியானவள் தன்னிடத்திலுண்டான சத்திகள்பெற்ற திரிமூர்த்திகளாலே முத்தொழில்களையும் நடத்துகின்றாளென்று சொல்லுதலும் புகழல்லவென்றால் பாண்டியராசனுடைய புத்திரியாகி இந்த உலகத்தை மனுவிக்கியானேஸ்வரத்தில் சொல்லு முறைமைப்படி ரக்ஷிக்கின்றாளென்று சொல்லுதல் என்னறியாமையினிடத்தது.—(எ-று) அருட்சத்தியிலுண்டான சத்திகளின்பெயர்-இச்சாசத்தி- ஞானசத்தி - கிரியாசத்தி-என்பனவாம். (௬௰)

(வேறு.)

வரைசெய்பூண்முலைத்தடாதகைமடவரற்பிராட்டி..... .. *
விரைசெய்தார்முடிவேய்ந்துதண்குடைமனுவேந்தன் .. *
உரைசெய் நூல்வழிக்கோல்செலக்கன்னியாம்பருவத் .... *
தரசுசெய்தலாற்கன்னிநாடாயதந்நாடு ..... ..... ..... *

(இ-ள்) பொன்மலையையொத்த ஆபரணங்களணிந்த தனங்களையுடைய தடாதகையென்னும் பெயரையு மடவரற்றன்மையையுமுடைய இறைவியானவள் நன்மணங்கமழ்கின்ற பூமாலையையணிந்த மகுடந்தரித்துக்கொண்டு தண்ணியகுடை(நிழற்கீழிருந்து) மனுவென்னும் ஓரரசனால் வரையறையேற்படுத்தப்பட்ட சாஸ்திரத்திற்சொல்லு முறைமைப்படி செங்கோல்செல்லக் கன்னிப்பருவத்தில் அரசாட்சிசெய்தமையால் அந்தநாடு கன்னிநாடென்னும் பெயர்பெற்றது —(எ-று) மடவரல் என்பது-பதிவிரதாபாவத்தின் வரலாறு. இதனைத் திருமுருகாற்றுப்படையி னிரண்டாம்படையில் -மடவரல்வள்ளியென்பதற்குப் பரிமேலழகர்செய்த வுரையானுமுணர்க. தடாதகைப்பிராட்டியார் உயிர்களுக்குத் தண்ணளியைச்செய்கின்றவரென்பதுவிளங்கத் தண்குடையெனத் தன்மையைக்குடைமேல் வைத்துக்கூறினார். (௬௰௧)

## திருவவதாரப்படலம்.

இன்னவாறுமையவதரித்திருந்தனளென்றுப் .... .... *
பொன்னவாவினர்பெறவெறிபொருநைகால்பொருப்பன் .. *
சொன்னவாய்மைகேட்டகங்களிதூங்கினர்தொழுது .... *
மின்னுவார்சடைமுனிவரோர்வினவுரைசெய்வார் .. .. .. *

(இ-ள்) இந்தப்பிரகாரம் உமையவள் திருவவதாரஞ் செய்திருந்தாளென்று பொன்னை விரும்பினவர்கள் பெற வீசும் தாமிரபர்ணிநதியைத்தருகின்றபொதியமலையிலிருக்கும் அகஸ்தியமுனிவர்சொல்லிய வார்த்தையைக்கேட்டுப் பிரகாசியாநின்ற நீண்டசடையையுடைய முனிவர்கள் உள்ளத்தில் களிப்படைந்து தொழுது ஒரு வினவுரைசெய்கின்றார்கள்.—(எ-று)

திருந்துநான்மறைச்சென்னியுந்தீண்டுதற்கரிதா .. .. .. *
யிருந்தநாயகியாவையுமீன்றவெம்பிராட்டி .... .... *
விரிந்தவன்புகூர்தக்கனும்வெற்பனும்பன்னாள் .. .. .. *
வருந்திநோற்றலாலவர்க்கொருமதலையாய்வந்தாள். .... *

(இ-ள்) திருந்தியநான்குவேதத்தின் சென்னியுந் தொடுதற்கரிதாயிருக்கும்-இறைவியும் எல்லாவுயிர்களையும் பெற்ற தலைவியுமான உமையவள் மிகுந்த அன்பினையுடைய தக்கனும் மலையரசனும் அனேகநாள்வருத்தமுற்றுத் தவஞ்செய்தலினால் (முற்காலத்தில்) அவர்களுக்கு ஒரு குழந்தையா யவதரித்தாள்.—(எ-று) (௬௩)

மனித்தனாகியபூழியன்மகளெனவிங்குத் .. .. .... .. *
தனித்தகாரணம்யாதெனத்தமனியப்பொதுவிற் .... .. *
குனித்தசேவடிக்கன்புடைக்குடமுனியருள்கூர்ந் .... .. *
தினித்ததோர்கதைகேண்மினென்றெடுத்துரைசெய்வான். .. *

(இ-ள்) (அவ்வாறு அவதரித்த உமையவள்)மனிதனாகியபாண்டியராசன் புத்திரியாகப் (பிற்காலத்தில்) இவ்வுலகில் தனித்துவந்தகாரணம் என்னவென்று கேட்கக் கனகசபையில் நடனஞ்செய்த திருவடிகளுக்கு அன்புடைய கும்பமுனியாகிய அகஸ்தியரானவர் அருள்கூர்ந்து இனிக்கத்தக்கதாகிய ஓர்கதை (சொல்லுகிறேன் கேளுங்களென்று) விவரித்துச்சொல்லுகின்றார்.—(எ-று) (௬௪)

விச்சுவாவசுவெனுமொருவிச்சையன்பயந்த .... .. .. *
நச்சுவாள்விழிமடந்தைவிச்சாவதிநாம .... ... ..... *
மச்சுவாகதமொழிபிறளம்பிகைக்கன்பு .. .... ..... .. *
வைச்சுவாழ்வுறுமனத்தினடாதையைவணங்கா . .. .. .. *

(இ-ள்) விச்சுவாவசுவென்னும் பெயரையுடைய ஒருவித்தியாதரன் பெற்ற விஷமூட்டிய வாள்போன்ற விழியையும், விச்சாவதியென்னும் பெயரையும், அழகிய கிள்ளைமொழியையொத்த மொழியையுமுடைய ஒருமாதானவள் உமையவளிடத்தில் அன்புவைத்து வாழ்கின்ற மனத்தினளாய்த் தன்பிதாவைப்பணிந்து — (எ-று) நச்சு எனற்பாலது - நச்செனநின்றது, அச்சுவாகதம் எனற்பாலது - அச்சுவாகதமெனநின்றது விகாரம். கு - உருபுமயக்கம். (௬௫)

ஐயவம்பிகைதன்னையானன்பினுல்வழிபட் .... .. .... *
செய்யவேண்டுமென்றுரைவனுலகெலாம்பயந்த .. .. ... *
ஐயன்மந்திரந்தனைமகடனக்குபதேசஞ் .. .. .. .. *
செய்யவந்நெறியொழுகுவாள்செப்புவாள்பின்னும் .. .. *

(இ-ள்) அந்தமைபார்வதியைநான் அன்புடன் ஆராதித்துக் கடைத்தேறவேண்டுமென்று சொன்னாள் - (அந்தவார்த்தையைக்கேட்டபிதாவானவன்) உலகங்களையெல்லாம்பெற்றவளாகிய பார்வதிமந்திரத்தைத் தன்புத்திரிக்கு உபதேசஞ்செய்ய - (அதுமுதல்) அந்தமுறையில் நடக்கின்றவள் பின்னுஞ்சொல்லுகின்றாள். — (எ-று) ஆல்-உருபுமயக்கம். (௬௬)

இறைவிதன்னையாதரிப்பதற்கிம்பரிற்சிறந்த .... ..... ... *
குறைவினன்னகர்யாதெனக்கூறுவான்கேள்வித் .. .. . *
துறைவிளங்கினோர்பயில்வதுதுவாதசமுடிவென் ... .. .. *
றுறைவளம்பதியவனிமேற்சிவபுரமாமால் .... .. .. .. *

(இ-ள்) பார்வதியை ஆராதிப்பதற்கு இவ்வுலகத்திற்சிறந்த குறைவுபடாத நன்மையையுடைய நகரம் எதுவென்று தன் புத்திரிகேட்கச்சொல்லுகின்றவன் - கல்விப்பயிற்சியால் விளங்குகின்றவர்கள் வாசஞ்செய்யத்தக்கதாகிய, துவாதசாந்தமென்று சொல்லுகின்ற வளப்பத்தையுடைய க்ஷேத்திரமானது பூலோகத்தில் சிவபுரமென்று சொல்லப்படும். — (எ-று) வளம்பதி-விகாரம். (௬௭)

திருவவதாரப்படலம்.

சேடுதாங்குமூவுலகினுட்சிறந்தனசத்தி
பீடமூவிருபத்துநான்கவற்றின்முற்பீட
மாடமோங்கியமதுரையாமற்றதுபோகம்
வீடும்வேண்டியசித்தியும்விளைப்பதென்றெண்ணா.

(இ-ள்) பெருமைபொருந்திய மூன்றுலோகங்களுக்குள் சிறந்தனவாகிய சத்திபீடங்கள் அறுபத்துநான்காம் - அந்த அறுபத்துநான்கில் முதற்பீடமாவது, மாடங்கள் உயர்ந்திராநின்ற மதுரையாம் - அந்தமதுரையானது போகத்தையும் மோக்ஷத்தையும் அவரவர்கள்விரும்பிய சித்திகளையும் கொடுப்பதென்றுநினைத்து.—(எ-று) (௬௮)

அல்லுமெல்லும்வானகர்க்கதவடைப்பின்றிச்சுவர்க்கஞ்
செல்வரங்கடைந்துமையருள்சித்தியால்வினையை
வெல்லுவாரதான்றெந்தையோடைவர்கள்வேண்டி
நல்வரம்பலவடைந்தனர்நமர்களந்நகரில்

(இ-ள்) இரவும்பகலும் சுவர்க்கலோகத்தின் கதவை மூடுதலில்லாமல் தேவர்கள் அங்குவந்து உமையவள் அருளிச்செய்யாநின்ற சித்தியினாலே தங்கள்வினையைவெல்லுவார்கள் - அதுவுமல்லாமல் எம்பிதாவுடனே நம்முடையவர்களில் ஐந்துபேர் அந்நகரத்திற்சென்று மீனாக்ஷியைத்தொழுது பலவாகிய நல்லவரங்களைப் பெற்றார்கள்.—(எ-று) (௬௯)

எம்மையாரையும்யாவையுமீன்றவங்கயற்க
ணம்மையாவரோயாயினுமன்பினாற்றிப்போ
திம்மையாகியபோகம்வீடெண்ணியாங்கெய்தச்
செம்மையாகியவின்னருள்செய்துவீற்றிருக்கும்

(இ-ள்) நம்மையும் மற்ற எல்லாரையும் எல்லாவற்றையும் ஈன்றவளாகிய மீனாக்ஷியம்மையானவள் எவர்களேயானாலும் அன்பினால் தொழுகின்றவர்கள் இம்மைப்பயனாகிய போகத்தையும் மோக்ஷத்தையும் அவர்கள் எண்ணியதுபோல் அடைய நன்மையாகிய இனிய அருளைக் கொடுத்துக்கொண்டு அந்தத்தலத்தில்வீற்றிருக்கின்றாள்.—(எ-று) இம்மை- ஆகுபெயர்.

என்றதாதையையிறைஞ்சினனுகைந்துகொண்டெழுந்தாங்
மன்றன்மாமலர்வல்லிபோல்வழிக்கொடுகானந்

குன்றமாறும்பின்கிடப்பமுன்குறுகினளன்பி .... .... . . *
னின்றவாதியெம்பலாயருணிறைந்தவந்நகரில் .... .... *

(இ-ள்) என்றுசொல்லிய தன்பிதாவைவணங்கி உத்தரவு பெற்றுக்கொண்டு எழுந்து வண்டுகளால் சூழப்பட்டு வாசனை தங்கிய புட்பங்களையுடைய ஒருகொம்புபோல் வழிக்கொண்டு காடும், மலையும், ஆறும் பின்கிடப்பமுன்சென்றாள் அவ்விடத்தில்நிலையாயிராநின்ற சோமசுந்தரக்கடவுளுடைய திருவருளும்அங்கயற்கண்ணம்மையின் திருவருளும் நிறைந்த அந்நகரத்தில்.—(எ-று) (எக)

அடைந்திளம்பிடியாடல்போலாடகக்கமலங் .... .... .. *
குடைந்துநான்மறைக்கொழுந்திடங்கொண்டுறை குறிப்பாற்.
படர்ந்தபொன்மலைவல்லியைப்பணிந்துவெங்கதிரோன் .. *
றொடர்ந்தவான்சுறமதியமேயாதியாத்தொடங்கா .... *

(இ-ள்) சென்று இளமையாகிய பெட்டையானையானது மூழ்குவதுபோல் பொற்றாமரையில் ஸ்நாநஞ்செய்து நான்மறைக்கொழுந்தாகிய பரமசிவம் இடங்கொண்டு வீற்றிராநின்ற சிவலிங்கத்தின் அருகில் பிரியாமல் இராநின்ற மீனாக்ஷி அம்மையைப்பணிந்து சூரியன் மகரராசியில்சேர்ந்த தைமாத முதலாகத்தொடங்கி.—(எ-று) (எஉ)

பெரும்பகனல்லூண்கங்குலூணுதவப்பெற்றவூணிலைமுதற் ப
ல்லூ, ணரும்பொடியெள்ளுண்சாந்திராயணமானைந்துயா ண
தியநீர்தருப்பை; யிரும்புதனுனிநீர்காலிலைநுகர்ந்துமியற்ற
ரும்பட்டினியுற்றும், வரம்புறவிராறிங்களுநோற்று வாடி
மேல்வருஞ்சுறமதியில். .... .... .... .... .... *

(இ-ள்) (அந்தமாதத்தில் மத்தியானகாலத்தில்ஆகாரங்கொண்டும்-(மாசிமாதத்தில்) அவ்வாறன்றி இராத்திரிகாலத்தில்ஆகாரங்கொண்டும்-(பங்குனிமாதத்தில் முன்போலநியதியில்லாமல்) உதவப்பெற்ற ஆகாரங்கொண்டும்-(சித்திரைமாதத்தில்) இலைமுதலாகக் காய் கனிகளையுண்டும் - (வைகாசிமாதத்தில்) கொஞ்சம்எள்ளுப்பொடியையுண்டும்- (ஆனிமாதத்தில்) சாந்திராயணவிரதம் அனுஷ்டித்தும் - (ஆடிமாதத்தில்) பஞ்சகவ்வியத்தையுண்டும்-(ஆவணிமாதத்தில்) பாலையுண்டும் - (புரட்டாசிமாதத்தில்) நல்ல நீரையுண்டும் - (ஐப்பசிமாதத்தில்)

# தடாதகைப்பிராட்டியார் உருள்

## திருவவதாரப்படலம்.

திருப்பையாகிய பெரியபுல்லின் நுனிநீரையுண்டும் - (கார்த்தி
கைமாதத்தில்) வாயுவை யுண்டும் - (மார்கழிமாதத்தில்) இயற்
றுதற்கரிய பட்டினியாயிருந்தும் - இந்தக்கிரமத்தில் வழுவாம
ல் பனிரண்டுமாதமும் தவஞ்செய்துமெலிந்துமேல்வந்ததை
மாதத்தில். —(எ - று) (௭௩)

சன்னிதியடைந்துதாழ்ந்துநின்றிளமாந்தளிரடிக்காஞ்சிசூழ்ந் தி
டந்த, மின்னிகர்மருங்குல் விழையிடை நுழையா வெம்முலைச்
செம்மலர்க்காந்தட், பொன்னிரைவளைக்கைமங்கலக்கழுத்திற்,
பூரணமதிக்கலைமுகத்தி, னின்னிசையளிசூழிருட்குழற்கற்றையி
றைவியையிம்முறைநினையா. .... .... .. .. .... *

(இ-ள்) சன்னிதியில்சென்று பணிந்து எழுந்து நின்றுமாவி
ன் இளந்தளிர்போன்ற திருவடியிணையும் - மேகலைசூழ்ந்த மின்
னலையொத்த இடையினையும் - நூலிழையானது மத்தியில் நு
ழையாத தனத்தினையும், செங்காந்தட்புட்பம்போன்று பொ
ன்னால்செய்யப்பட்ட வளையல்களை வரிசையாக அணிந்த கை
யிணையும், மங்கலம்பொருந்திய திருக்கண்டத்தினையும், கலைக
ள்நிறைந்த சந்திரனையொத்த திருமுகத்தினையும், இனிதாக இ
சைபாடுகின்ற வண்டுகள்சூழ்ந்த இருள்போன்றகரிய அளகபா
ரத்தினையுமுடைய மீனாக்ஷி அம்மையை இப்போதுசொல்லிவ
ந்த முறைமைப்படி பாதாதிகேசமுதலாக மனதில்தியானித்
து —(எ-று) (௭௪)

சோலயாழ்த்தெய்வம்பராய்க்கரங்குவித்துக்கொழுஞ்சுடர்ப்
பசுங்கதிர்விளக்கம், போலநூற்பொல்லம்பொத்துப்பொன்னி
றத்தபோர்வைநீத்தவிழ்கடிமுல்லை, மாலைமேல்வீக்கிப்பத்தர்
பின்கிடப்பமலர்க்குழலேய்சுவற்கிடத்திச், சேலைநேர்விழியா
ள்மாடகந்திரித்துத்தெறித்தனள்பண்ணதிந்திசைப்பாள். .௨ *

(இ-ள்) நரம்பினையுடைய வீணைக்குரிய தெய்வத்தைத் துதி
செய்து கைகுவித்துத்தொழுது அவ்வீணையையெடுத்து அழ
கிய சுடரினையுடைய இளஞ்சூரியனது விளக்கம்போல (விளங்
கும்) பொற்சாட்டினால்தைத்த பொன்னிறத்தையுடைய உறை
யைநீக்கி மலர்ந்த நறுநாற்றத்தையுடையமுல்லைப்பூமாலையை
அதன்மேல்சூட்டிப் பத்தர்பின்புறத்திலிருக்கும்படி பூமாலை
யணிந்த அளகந்தோய்கின்ற பிடரியில் சார்த்திக்கொண்டுசே

(௭௫)

ன்மீனையொத்த கண்களையுடைய அந்தவித்தியாதரஸ்திரீயானவள் மாடகத்தைமுறுக்கி நரம்பைத்தெறித்துப்பண்ணையெழுப்பிப் பாடுகின்றாள்.—(எ-று) கோலயாழ்-அழகுபொருந்தியயாழெனினுமமையும். (௭௫)

(வேறு.)

ஒளியாலுலகீன் றுயிரனைத்துமீன் போற்செவ்வியநோக்கி..*
யளியால்வளர்க்குமங்கயற்கண்ணன் னைகன்னியன்னமே ...*
யளியாலிமவான்றிருமகளாயாவியன்னமயில்பூவை ..... [னே
தெளியாமழலைக்கிளிவளர்த்துவிளையாட்டயருஞ் செயலென்

(இ-ள்) அருளால் உயிர்களையீன்று அவ்வுயிர்களையெல்லாம் சேல்மீன்போலப்பக்குவப்பட்டநோக்கிக்கிருபையுடன்ரக்ஷிக்கா நின்ற அழகிய கயல்போன்ற திருநோக்கத்தை யுடைய தாயே பெண்ணன்னமே - கிருபையினால் மலையரையன் திருமகளாயவதரித்து உயிரையொத்த மயில்நாகணவாய்ப்புள்-தெளிவில்லாத மழலைச்சொல்லையுடைய கிளி இவைகளை வளர்த்துவிளையாடுகின்ற செய்கையென்ன.(எ-று) சேல்மீன் முட்டையிட்டுக்கொண்டுபோய்த் திரும்பிப்பார்த்தவுடன் அந்தமுட்டைகளெல்லாங் குஞ்சுகளாகுதல் மரபு. (௭௬)

அண்டக்குவைவெண்மணற்சிறுசோறாக்கித்தனியேவிளையாடு
ங், கொண்டற்கோதாய்படியெழுதலாகாவுருவக்கோகிலமே;
கொண்டற்குடுமி யிமயவரை யருவிகொழிக்குங் குளிர்முத்தா
ல், வண்டற்குதலைமகளிரொடுவிளையாட்டயரும்வனப்பென்
னே. ..... ..... .... .. ..... ... .. .. ..... ..... .. .. *

(இ-ள்) பல்லாயிர அண்டங்களாகிய வெண்மணற் சிறுசோறாக்கித் தனியாகவிளையாடுகின்ற கரியமேகம்போன்ற அளகத்தையுடைய (தாயே) ஒப்பெழுத வொண்ணாத திருமேனியையுடைய குயிலே மேகங்கள்படிகின்ற சிகரங்களையுடைய இமயமலையினிடத்து அருவிகள்கொழிக்குங் குளிர்ந்தமுத்துகளால் (சிறுசோறாக்கி)வண்டற்குரிய தோழிகளுடன் விளையாடல்செய்கின்ற அழகென்னை.—(எ-று) அண்டக்குவையாக்குதல் - சிருஷ்டியெனக்கொள்க. சிருஷ்டித்தல்முதலியவை உமையவட்கு எளிதென்பதுதோன்ற-மணற்சிறுசோறாக்கியென்றும், சிருஷ்டிகாலத்தில வேறொருவருமின்மையினால் தனியேவிளையாடுமென்றுங்கூறினார். வண்டல்-மகளிர்விளையாட்டு.

வேதமுடிமேலானந்தவுருவாய்நிறைந்துவிளையாடு .... *
மாதராசேமுத்தநகைமானேயிமயமடமயிலே .. .. ... *
மாதரிமவான்றேவிமணிவடந்தோய்மார்புந்தடந்தோளும் *
பாதமலர்சேப்புறமிதித்துவிளையாட்டயரும்பரிசென்னே *

(இ-ள்) வேதங்களினுச்சியில் ஆனந்தவடிவமாய் நிறைந்து விளையாடுகின்ற பெண்ணரசியே, முத்தம்போன்ற நகையினை யுடையமானே, இமயமலையிற்றோன்றிய மடமயிலே, அழகிய மலையரசன் மனைவியாகிய மேனையின் மணிவடம்பொருந் திய மார்பிலிடத்தும், பெரியதோள்களினிடத்தும் திருவடிக ள்சிவக்கும்படி மிதித்துவிளையாடும் தன்மையென்னை. எ-று) கிளி-பூவை- இவைகளை வளர்ப்பதும், மணற்சிறுசோறாக்குவ தும், தாயின்மார்பினும் தோளினு மிதித்தலுமாகச்சொல்லப் பட்ட செய்கையெல்லாம் தன்போலிகள்செய்யுஞ் செய்கை யாயிருக்க-எல்லாவுயிரையும்ஈன்றளிக்கும்பெருமையையுடை யவளாகிய உமையவள் இவ்வாறு எளியசெயல்களைச்செய்த மையை யெண்ணி மருட்கையடைந்து ஆற்றுதவளாய்த் தன் னருகு வேறொருவரு மில்லாமையினால் மீனாக்ஷியம்மையினை யே முன்னிலையாக்கிக்கொண்டுகூறினாள். மருட்கை-வியப்பு- அற்புதம்.என்னும் இம்மூன்றும் ஒருபொருட்கிளவி.மருட்கை யென்பது என்னவெனில்-அறிவானது உலகவழக்கினுள் நின் றவாறுநில்லாமல் திரிந்துவேறுபட உண்டாவது. (எஅ)

யாழியன்மொழியாளிவ்வழிபாடியேத்தினாளாகமெய்யுள்ளத் *
தாழியவன்பின்வலைப்படுகருணைக் யுங்கயற்கண்மடமானோர், கு
ழியநுழைமெல்லிரங்குழற்குதலைத் தொண்டைவாய வைமூ
ன்றெய்தி, வாழிளங்குழவியாகியாலயத்து வந்துநின்றாள்வரங்
கொடுப்பாள். .... .. .. .... .. .... ... .. .. *

(இ-ள்) யாழினிசையையொத்த மொழியால் இப்படியா கப்பாடித் துதிசெய்ய-மெய்ம்மையான உள்ளத்தில் நிறைந்த அ ன்பாகிய வலையி லகப்படுகின்றதிருவைநிறைந்த அழகிய கயல் போன்ற திருநோக்கத்தையுடைய மடமான்போன்றவளாகிய மீனாக்ஷியம்மையானவள் ஒப்பற்ற உச்சிக்கொண்டைபொரு ந்திய மிருதுவாகிய சிறியகூந்தலையும், குதலைமொழியையுடை ய கொவ்வைக்கனிபோன்ற வாயையும், மூன்றுவயதினையும் பொருந்திவாழ்கின்ற சிறுபெண்ணுருவங்கொண்டு (அந்தவித்

தியாதரஸ்திரீக்கு) வரங்கொடுக்குந் திருவுள்ளத்தை யுடையவ ளாய் ஆலயத்தில்வந்துநின்றாள்.—(எ-று) (எகூ)

இறைஞ்சியஞ்சலித்தாடன்னை யெம்மன்னையாது வேண்டினை யெனவென்று, நிறைந்தபேரன்புநின்னடிப்போதினீங்கலாநி லைமைதந்தருளென், றறைந்தனளின்னும்வேண்டுவதேதென் றருளவிம்மகவுருவாகிச், சிறந்துவந்தென்பாலருள்சுரந்திருக்கத் திருவுளஞ்செய்யெனப்பணிந்தாள் . ..... ... ..... .. .. *

(இ-ள்) (அப்படியாகத் தரிசனங்கொடுத்தமாத்திரத்தில்)ப ணிந்து தொழுதலை எங்கள்தாயாகிய மீனாக்ஷியம்மைநோக் கி நீயெதனைவிரும்பினையென்றுசொல்லத்(தாயே)உனதுதிரு வடித்தாமரையில் எந்நாளும் நிறைந்தபேரன்பானது நீங்கா தநிலைமையை யருளிச்செய்யென்றுவிண்ணப்பஞ்செய்தாள்- இன்னும்வேண்டியதென்னவென்றருள்செய்ய-இந்தப்பெண் ணுருவமாய்ச்சிறப்புடன்வந்து அடியாளிடத்தில் அருள்சுரந் திருக்கும்படி கிருபைசெய்யெனப்பணித்தாள்.(எ-று) (அய)

சிவபரம்பரையுமதற்குநேர்ந்தருள்வாடென்னவர் மன்னனாய் மலயத், துவசனென்றொருவன் வருமவன்கற்பின் றுணைவியா ய்வருதியப்போதுன், றவமகவாகவருவலென்றன்புதந்தனள் வந்தவாறிதுவென், றுவமையில்பொதியத்தமிழ்முனிமுனிவர் க்கோதினனுள்ளவாறுணர்ந்தார். .. .. .. .. ..... ..... *

(இ-ள்) மீனாக்ஷியம்மை அதற்குச் சம்மதித்து அருள்செய் கின்றாள்- பாண்டிதேசத்தாருக்கு அரசனாய்மலயத்துவசன் எ ன்பவனொருவன் (இந்தநகரத்தில்) வந்துபிறப்பான் நீ அவனி ல்வாழ்க்கைக்குரியகற்பினையுடையமனைவியாய்வருவாய் (அப் போது) நான் உனக்குத்தவபுத்திரியாய் வருகிறேனென்று அ ருளிச்செய்தாள் (முனிவர்களே) மீனாக்ஷியம்மை பாண்டியரா சன்புத்திரியாய்த் திருவவதாரஞ்செய்தகாரணமிதுவாகுமென் றுஒப்பில்லாதபொதிகைமலையில்வாசஞ்செய்யும் அகஸ்தியமு னிவர் வசிஷ்டர்முதலாகிய முனிவர்களுக்கு ஓதினார் அவர்கள் உள்ளபடியறிந்தார்கள்.—(எ-று) (அக)

தடாதகைப்பிராட்டியார்திருவவதாரப்படலம்-முற்றிற்று,

ஆகூ படலம்-ருங-க்கு, திருவிருத்தம்-ஞாசுயஅ.





ஐந்தாவது-

# திருமணப்படலம்.



தரைபுகழ்தென்னன்செல்வத்தடாதகைப்பிராட்டிதானே. *
திரைசெய்நீர்ஞாலங்காத்தசெயல்சிறிதுரைத்தேன்றெய்வ. *
விரைசெய்பூங்கோதைமாதைவிடையவன்மணந்துபாரா *
டரசுசெய்திருந்ததோற்றமறிந்தவாறியம்பலுற்றேன் .... *

(இ-ள்) இவ்வுலகத்தார் புகழாநின்ற மலயத்துவசபாண்டியராசன் புத்திரியாகிய தடாதகைப்பிராட்டியார் அலையைவீசுகின்ற நீரையுடைய கடல்சூழ்ந்த பூலோகத்தைக்காத்த திருவிளையாடலிற்சிறிதுதெரிந்தமட்டிற்சொன்னேன் (இனித்) தெய்வமணங்கமழுகின்ற பூமாலையணிந்த அளகத்தையுடைய அந்தத்தடாதகைப்பிராட்டியைக் கயிலாசபதியானவர் திருமணங்கொண்டருளிப் பூமியையாண்டு அரசுத்தன்மையை நடத்திக்கொண்டிருந்த திருவிளையாடலை அறிந்தமட்டிற் சொல்லுகிறேன்.—(எ-று) (க)

காயிரும்பரிதிப்புத்தேள்கலியிருடுமிப்பச்சோதி. .. *
பாயிருங்குடைவெண்டிங்கள்படரொளிநிழல்செய்ய .. .. *
மாயிரும்புவனமெல்லாமனுமுறையுலகமீன்ற .... .. ... *
தாயிளங்குமரியாகித்தனியரசிருக்குநாளில் .. .... .... *

(இ-ள்) விளங்குகின்றபெருமைபொருந்திய ஆக்கினைச்சக்கரமாகிய சூரியதேவன் பாபமாகிய இருளைக்கெடுக்கவும் ஒளிபரந்தபெரியகுடையாகிய வெண்மதியானது மிகுந்த ஒளிநிழலைச்செய்யவும்-மிகவும்பெரிய பூமியெங்கும் மனுமுறைநடக்கும்படி உலகங்களையெல்லாமீன்றதாயாகிய மீனாக்ஷியம்மையானவள் இளங்குமரியாயவதாரஞ்செய்து ஒப்பற்றஅரசுத்தன்மைபூண்டிருக்குங்காலத்தில்.—(எ-று) (உ)

மருங்குதேய்ந் தொளிப்பச்செம்பொன் வனமுலை யிறுமாப்
பெய்தக், கருங்குழற்கற்றைபாறுட்கங்குலைவெளிறுசெய்ய. *
விரங்குநல்யாழ்மென்றீஞ்சொல்லின்னகையெம்பிராட்டிக் .. *
கருங்கடிமன்றல்செய்யுஞ்செவ்விவந்தடுத்ததாக .... .. *

(இ-ள்) இடைசுருங்கி மறையும்படி செம்பொன்னாற்செய்யப்பட்ட ஆபரணங்கள்பூண்ட அழகியதனங்கள்வளரவும்கரு

மையாகிய குழற்கற்றையானது அர்த்தராத்திரியிருளை வெள்-
ளையென்றுசொல்லும்படிசெய்யவும்-(இன்னாருங்கேட்டு)இ
ரங்குதற்குக்காரணமான நல்ல யாழினிசையையொத்த மென்
மையாகிய மதுரமுள்ள சொற்களையும் இனிதாகிய நகையையு
முடைய தடாதகைப்பிராட்டிக்கு அருமையாகிய விளக்கம்
பொருந்திய விவாகஞ்செய்யும்பருவம்வந்தடுக்க.(எ-று) (௫)

பனிதருமதிக்கொம்பன்னபாவையைப்பயந்தாணோக்கிக் ..*
குனிதரநிறையப்பூத்தகொம்பனாய்க்கின்னங்கன்னி ..... .. *
கனிதருசெவ்வித்தாயுங்கடிமணப்பேறின்றென்னாத் .... ....*
துனிதருநீரளாகிச்சொல்லினாள்சொல்லக்கேட்டாள்.. . . *

(இ-ள்) குளிர்ச்சிபொருந்திய சந்திரனையுடைய ஒருபொற்
கொம்பையொத்த தடாதகைப்பிராட்டியைப் பெற்றவளாகிய
காஞ்சனமாலைபார்த்து வளையும்படி நிறையப் பூத்திராநின்ற
பூங்கொம்பையொத்த உனக்குக்கன்னிப்பருவம்முதிர்ந்தகால
ம்வந்தும் இன்னமும் விவாகமாவதற்கு இல்லையே என்று துன்
பமுறுகின்ற தன்மையையுடையவளாய்ச்சொன்னாள்- அவ்வா
றுதன் தாய்சொல்லக்கேட்டவள்.—(எ-று) (௬)

அன்னைநீநினைந்தவெண்ணமாம்பொழுதாகும்வேறு, பின்னை
நீயிரங்கல்யான்போய்த்திசைகளும்பெருநீர்வைப்பு, மென்ன
துகொற்றநாட்டிமீள்வலிங்கிருத்தியென்னாப், பொன்னவிர்ம
லர்க்கொம்பன்னாள்பொருக்கெனவெழுந்துபோந்தாள்...*

(இ-ள்) தாயே நீநினைத்த எண்ணம் ஆகுங்காலத்தில் ஆகு
ம்-ஆகையால் நீ பலவாறுநினைத்து இரக்கப்படவேண்டாம்-
நான்போய் அஷ்டதிக்குகளிலும் சமுத்திரஞ்சூழ்ந்த இவ்வுல
கத்திலும் என்னுடையவெற்றியானது நிலைபெற்றிருக்கும்படி
செய்து வருகிறேன் நீ இங்கே இருவென்றுசொல்லிப்பொன்
னிறங்கொண்டு பிரகாசியாநின்ற பூங்கொம்பையொத்த தடா
தகைப்பிராட்டியானவள் விரைவில்எழுந்துசென்றாள்.(எ-று)

தேம்பரிகோதைமாதின்றிருவுளச்செய்திநோக்கி........*
யாம்பரிசுணர்ந்தவேந்தரமைச்சரும்பிறரும்போந்தார்...*
வாம்பரிகடாவித்திண்டேர்வலவனுங்கொணர்ந்தான்வையந் *
தாம்பரிவகலவந்தாளேறினாள்சங்கமார்ப்ப... .. ..... ..*

(இ-ள்) இயற்கையான மணம்பொருந்தியஅளகத்தையுடை
ய தடாதகைப்பிராட்டியின் திருவுள்ளக்குறிப்பை நோக்கி

அவ்வரசுக்குவேண்டியகாரியங்களை அறிந்தவர்களாகிய அரச
ர்களும் மந்திரிகளும்மற்றவர்களும்வந்தார்கள் தாவுகின்றகுதி
ரையைச்செலுத்திக்கொண்டுதிவ்வியதேவாச்சாரதியுங்கொ
ண்டுவந்தான் இவ்வுலகமானது வருத்தம்நீங்கும்படி வந்தத
டாதகைப்பிராட்டியானவள் சங்கங்கள் ஆரவாரிக்கும்படி இர
தத்தின்மீது ஏறினாள்.—(எ-று) (௬)

ஆர்த்தனதடாரிபேரியார்த்தனமுருடுமொந்தை .... .... *
யார்த்தனவுடுக்கைதக்கையார்த்தனபடகம்பம்பை .. .... *
யார்த்தனமுழவந்தட்டையார்த்தனசின்னந்தாரை .. .... *
யார்த்தனகாளந்தாளமார்த்தனதிசைகளெங்கும் ... .... *

(இ-ள்) பேரிகைவாத்தியங்கள் ஒலித்தன-மொந்தையென்னு
ம்வாத்தியங்கள் ஒலித்தன-உடுக்கையாகியவாத்தியங்கள்ஒலித்
தன-படகமாகியவாத்தியங்கள் ஒலித்தன- தட்டை என்னும்
வாத்தியங்கள் ஒலித்தன-தாரையாகிய சின்னங்கள் ஒலித்தன-
காளங்களும்தாளங்களும் ஒலித்தன-இவ்வொலிகளெல்லாம் அ
ஷ்டதிக்குகளிலும் திரண்டொலித்தன.—(எ-று) மொந்தை
ஒருகட்பறை-தட்டை-கற்கடிப்பறை-படகம்-தம்பட்டமென
க்கொள்க, தடாரி-முருடு-தக்கை-பம்பை-முழவம்- இவைகள்
வாச்சியப்பொது. (௭)

வீங்கியகொங்கையார்த்தகச்சினர்விழிபோற்றைப்ப .. .. *
வாங்கியசிலையேறிட்டகணையினர்வட்டத்தோல்வா .. .... *
டாங்கியகையர்வைவேற்றளிர்க்கையர்பிணாத்தெய்வம்போ *
லோங்கியவாயத்தாருமேறினருடனத்திண்டேர் .... .... *

(இ-ள்) பருத்த ஸ்தனங்களில்கட்டிய கச்சினராயும், சிலர்
தங்கள்பார்வைபோலத் தைக்கவளைத்தவில்லில்பூட்டியபாணங்
களையுடையவர்களாயும், சிலர்வட்டமாகிய கேடயமும்வாளும்
ஏந்தியகைகளையுடையவர்களாயும், சிலர்கூர்மையாகியவேலை
ஏந்திய துளிர்போன்றகையையுடையவர்களாயும், பெண்தெய்
வம்போல் அழகில்மிக்க மாதர்கூட்டங்களும் தடாதகைப்பிரா
ட்டியுடன் அந்தத்திவ்விய தேரிலேறினார்கள்.—(எ-று) (௮)

கிடைப்பனவுருளாற்பாரைக்கீண்டுபோதலத்தினெல்லை .... *
யடைப்பனபரந்ததட்டாலடையவான்றிசைகளெட்டு ..... *
முடைப்பனவண்டமுட்டியொற்றிவான்கங்கைநீரைத் .. .. *
துடைப்பனகொடியாற்சாரிசுற்றுவபொற்றிண்டேர்கள் .. *

(இ-ள்) அப்போது தடாதகைப்பிராட்டி தேருடன் செல்லுகின்ற பொன்னாலாகிய திண்ணியதேர்கள்-பூட்டிய உருளைகளால்பூமியைக்கிழித்துப்பாதாளத்தெல்லையை அடைப்பன-பார்த்தாலியத்தட்டினால் பெரிய எட்டுத்திசைகளையெல்லாம் உடைப்பன-கொடிகளால் அண்டத்தைமுட்டி ஆகாயகங்கை நீரை யொற்றித்துடைப்பன-சாரிசுற்றுவன.— (எ-று) (௯)

செருவின்மாதண்டந்தாங்கிச்செல்லுங்கூற்றமென்ன *
வெருவிமாமதநீர்காலவரத்தவெங்குருதிக்கோட்டாற் .. ...*
கருவிவான்வயிறுகீண்டுகவிழுநீர்வாயங்காற்று .. ... .. ..*
பருவமால்வரைபோற்செல்வபருஉப்பெருந்தடக்கையானை *

(இ-ள்) பருத்த பெரியகைகளையுடைய யானைகள் யுத்தத்தில் பெரியதண்டாயுதத்தை எடுத்துக்கொண்டு செல்லுகின்ற கொடிய யமனைப்போலவும், மலையருவிபோல் மிகுந்த மதநீர்பெருகும்படி செம்மைநிறத்தையுடைய கொடிய உதிரந்தோய்ந்த கொம்பினால் கூட்டமாகிய மேகத்தின் வயிற்றைக் கிழித்து (அதினின்று) விழுகின்ற நீரை வாயைத்திறந்து குடித்துப்பெரியமலைகள்போலவும் செல்லுகின்றன.(எ-று) பெருந்தடம் என்னும் ஒருபொருட்பலசொல் நீண்டபொருளைச்சிறப்பித்துநின்றது. மேகத்துக்குக்கூட்டமாவது - மின்னுமுழக்குங் காற்றுமாம். (௰)

ஒலியவார்திரையினன்னவொழுங்கினயோகமாக்கள் .... *
வலியகாலடக்கிச்செல்லுமனமெனக்கதியிற்செல்வ .. .. ..*
கலியநீர்ஞாலங்காப்பான்கலியுகமுடிவிற்றோற்றம் .... *
பொலியும்வாம்புரவியொன்றேபோல்வனபுரவிவெள்ளம் .*

(இ-ள்) சத்தத்தையுடையதாகிய சமுத்திரஞ்சூழ்ந்த பூமியைப்(பாபத்தினின்று நீக்கிக்) காப்பதற்குக்கடையுகமாகிய கலியுகமுடிவில் அவதரிக்கும் ஒருகுதிரையைப்போல்வனவாகிய குதிரைகள் ஓசையையுடைய கடலின் நீண்ட அலையின் ஒழுங்கினையொத்த ஒழுங்கை யுடையனவைகளாகி யோகசாதனைசெய்பவர்கள் வலிய சுவாசத்தையடக்கிச் செலுத்துகின்ற மனம்போலப் பஞ்சகதிகளில் மாறாமல் செல்லுவன.—(எ-று) யோகிகள்மனம்-அவர்கள்வசப்பட்டுச்செல்லுதல்போல் குதிரைகள் பாகர்கள் வசப்பட்டுச்செல்லுமென்பதுதோன்ற- யோகிகள்மனமெனச் செல்லுமென்றார். வன்மையே விரைவாகச்செல்லுமெனக் கூறியவாறாயிற்று. நீர் - ஆகுபெயர். கடல்-வரு

வித்துரைக்கப்பட்டது. வாவும் எனற்பாலது - விகாரவகையா
ன் வாம் என நின்றது. (௰௧)

காசினுங்கடிதுசெல்லுஞ்செலவினர்கடுங்கட்கூற்ற ...... *
மேனினுமிசையுண்டாயின்வெகுண்டுவெங்கண்டுமீளும் ... *
பாவினர்பகுவாய்நாகப்பல்விளிம்பிலுகுமால .......... *
வேலினர்வீயாவென்றிவீக்கியகழற்கால்வீரர் ..... .. .. *

(இ-ள்) கெடாதவெற்றியினால் வீரகண்டைகட்டிய காலையுடைய வீரர்கள் (எத்தன்மையரென்றால்) காற்றைப்பார்க்கிலும் விரைவாகச்செல்லுகின்ற நடையையுடையவர்கள் - கொடியபார்வையையுடைய யமனிடத்தில்குற்றமுண்டாயின் - அவனையுங்கோபித்து முதுகுகண்டுமீளுகின்ற தன்மையையுடையவர்கள் - பிளப்பாகிய வாயையுடைய சர்ப்பத்தின்பற்களிலிருந்து சிந்துகின்ற விஷத்தைப்பார்க்கிலும் கொடிதாக விஷத்தைச்சிந்துகின்ற வேலாயுதத்தையுடையவர்கள்.—(எ-று) முதுகுகாணுதலாவது-போரில் ஓடச்செய்தல். (௰௨)

எண்புதைத்தெழுந்தவீரரிவுளிதேர்யானைவெள்ளம் .... .. *
மண்புதைத்தனபதாகைமாலைவெண்கவிகைபீலி ... ... *
விண்புதைத்தனநுண்டூளிவெயில்விடுபரிதிப்புத்தேள் .... *
கண்புதைத்தனபேரோதைகடலொலிபுதைத்ததன்றே .... *

(இ-ள்) அளவுகடந்தெழுந்த வீரர்களும், குதிரைகளும், தேர்களும்-யானைகளுமாகியவெள்ளங்கள் பூமியைமறைத்தன - ஒழுங்காகிய கொடிகளும் வெண்மையாகிய குடைகளும் மயிற்குஞ்சங்களும் ஆகாயத்தைமறைத்தன - நுண்மையாகிய தூசிகள் ஒளிவிடுகின்ற சூரியதேவனுடையகண்களை மறைத்தன - (அப்போதுண்டான) பேரொலியானது கடலின்ஒலியைமறைத்தது.—(எ-று) (௰௩)

தேரொலிகலினப்பாய்மான்செலவொலிகொலைவெங்கோட்
டுக்,காரொலிவீரரார்க்குங் கனையொலி புனைதார்க்குஞ்சி, கா
ரொலிகழற்கால்செங்கண்மள்ளர்வன்றிண்டோள்கொட்டும். *
பேரொலியண்டமெல்லாம்பிளந்திடப்பெருத்ததன்றே .. *

(இ-ள்) தேரோடுகின்ற ஒலியும், கடிவாளத்தையுடைய பாய்கின்ற குதிரைசெல்லுகின்ற ஒலியும், கொலைத்தொழிலைச்செய்கின்ற வெண்மையாகிய கொம்பினையுடைய மேகம்போன்ற

யானையினொலியும், வீரர்கள் ஆரவாரிக்கும் மிகுந்த ஒலியும், ஒலிக்கா நின்ற நீண்ட வீரகண்டை கட்டிய காலினையும் செங்கண்ணையுமுடைய வீரர்கள் வலியதோள்களைக் கொட்டும் பேரொலியும் அண்டமெல்லாம் பிளக்கும்படி அதிகரித்தது (எ-று) கார்-ஆகுபெயர். வன்றிண் என்னும் ஒருபொருட்பன்மொழி தோளின் சிறப்புணர நின்றது. ஒருபொருளிருசொற் பிரிவில்லாதது என்றுமாம். இவ்விருவகையினையும் கண்ணோட்டமென்னுங் கழிபெருங்காரிகை என்னுங் குறளானாயினும், கழிபெருங்காதலாள் என்னுஞ் சிந்தாமணிச் செய்யுளானாயினுங் காண்க. பிளந்திடுதல்-ஒருசொல். கட்டியிட்டு என்பதை-ஒருசொல் என்றார் நச்சினார்க்கினியார். (௰௪)

பரந்தெழுபூழிபோர்ப்பப்பகலவன்மறைந்துமுந்நீர்க் ....*
கரந்தவன்போன்றனைக்கங்குல்வந்திறுத்ததேய்ப்பச் ....*
சுரந்திருணிறையமுத்தின்சோதிவெண்குடையின்வேந்தர் ..*
நிரந்தபூண்வயிரவாணிறைநிலாவெறிக்குமன்றே ......*

(இ-ள்) எங்கும்பரந்தெழுகின்ற தூசிமூடுவதினால் சூரியன் மறைந்து சமுத்திரத்தில் மறைந்தவன்போலாகவே இருள் வந்ததையொப்பாக (இருளானது) மிகுந்து எங்கும்பரவ-முத்துகளால் அலங்கரிக்கப்பட்ட ஒளியையுடைய வெள்ளைக்குடைகளும் அரசர்களுடைய மார்புமுதலாகிய உறுப்புகளில் நிறைந்திராநின்ற ஆபரணங்களின் வயிரமணிகளினொளிகளும், பூரணசந்திரன்போல ஒளியைப்பரப்பும் —(எ-று) முந்நீர்-ஆகுபெயர். முந்நீர்ப்பிறந்தபல்வளத்தோடு என்னுஞ் சிந்தாமணிச்செய்யுளுக்கு நிலத்தைப்படைத்தலுங் காத்தலு மழித்தலுமாகிய மூன்றுதொழிலுமுடைமையின் முந்நீராகுபெயர் என நச்சினார்க்கினியார் உரைசெய்தனர்- ஆற்றுநீர்முதலியவாகச் சொல்லப்படுவதுஞ் சான்றோர்வழக்கே அதற்குச்செய்யுள் கிடைத்துழிக்காட்டப்படும். (௰௫)

தேர்நிரைகலனாய்ச்செல்லப்பரிநிரைதிரையாய்த்துள்ள .. *
வார்முரசொலியாய்க்கல்லவாட்கலன்மீனாய்க்கொட்பத் .. *
தார்நிரைகவரிக்காடுநுரைகளாய்த்ததும்பவேழங் .... .. *
கார்நிரையாகத்தானைக்கடல்வழிக்கொண்டதன்றே ..... ..*

(இ-ள்) தேர்க்கூட்டம் கப்பலாய்ச்செல்லவும், குதிரைக்கூட்டம் அலைகளாய்த்துள்ளவும்; வார்கட்டியபேரிகையின் ஒலி

யானது ஒலியாய்ச்சத்திக்கவும், வாட்படைகள் மீன்களாய்ச்சுழலவும், கொடிக்கூட்டமும் சாமரைக்காடுகளும் நுரைகளாய்த்ததும்பவும், யானைகள் மேககூட்டமாகவும், சேனைசமுத்திரமானது வழிநடந்தது.—(எ-று) மேகம்-கடலில் நீருண்ணவருவதாதலால்-யானைகளைமேகமாகக்கூறினார். கலம் - ஆயுதப்பொது. (௰௬)

கள்ளவிழ்கோதைமாதரெடுத்தெறிகவரிக்காடு .... ..... *
துள்ளவந்தணர்வாயாசியொருபுறந்துவன்றியார்ப்பத் ....*
தெள்விளியமுதகீதமொருபுறந்திரண்டுவிம்ம.... .......*
வள்ளைவார்குழையெம்மன்னைமணித்திண்டேர்நடந்ததன்றே.

(இ-ள்) தேனொழுகுகின்றபூமாலையணிந்த அளகபாரத்தையுடைய ஸ்த்ரீகளெடுத்து வீசுகின்ற சாமரைக்கூட்டம் அசையவும், பிராமணர்களின்வாயினிடமாக உண்டாகாநின்ற ஆசீர்வசனம் ஒருபுறம்நிறைந்து ஒலிக்கவும், அமுதம்போன்ற இசைப்பாட்டானது ஒருபுறஞ்சேர்ந்து ஒலிக்கவும், வள்ளைத்தண்டையொத்த நீண்டகாதினையுடைய நம்முடையதாயாகிய தடாதகைப்பிராட்டியாருடைய ரத்தினங்கள்பதித்தரதமானது சென்றது.—(எ-று) (அந்தணர்) என்பதற்கு-வேதாந்தத்தை நோக்குவாரென்றும், அழகியதட்பத்தை யுடையவரென்றும் திருமுருகாற்றுப்படையில் நச்சினார்க்கினியாரும், குறளில்-பரிமேலழகரும் உரைசெய்திருக்கின்றனர். குழை-ஆகுபெயர்.

மீனவன்கொடியுங்கானவெம்புலிக்கொடியுஞ்செம்பொன்..*
மானவிற்கொடியும்வண்ணமயிற்றழைக்காடுந்தோட்டுப் ..*
பானலங்கருங்கட்செவ்வாய்வெண்ணகைப்பசுந்தோணிம்பத்
தேனலம்பலங்கல்வேய்ந்தசெல்விதேர்மருங்கிற்செல்ல. .. *

(இ-ள்) அழகையுடைய மீனக்கொடியும் காட்டில்சஞ்சரிக்கின்றகொடியதாகிய புலிக்கொடியும், செம்பொன்னால்செய்யப்பட்ட பெருமைபொருந்திய விற்கொடியும், அழகிய மயிற்பீலிக்குடைக்கூட்டமும், இதழ்களையுடைய நீலோத்பலபுட்பம்போன்ற கரிய கண்களையும், செவ்வாயினையும், வெண்ணகையையுமுடைய-பசியதோளில் தேனலம்புகின்ற வேப்பம்பூமாலையணிந்த தடாதகைப்பிராட்டியினுடைய தேருக்கருகில் செல்லவும்.—(எ-று) புலிக்கொடி - சோழராசனுடையது. விற்கொடி-சேரராசனுடையது. (௰அ)

மறைபலமுகங்கொண்டேத்திவாய்தடுமாறியெய்ப்ப .... *
நிறைபரம்பரை நீயெங்கணிருபர்கோன்மகளாய்வைய .... *
முறைசெய்துமாசுதீர்ப்பாயடியனேன்முகத்துமாசுங் .. .. *
குறையெனநிழற்றுந்திங்கட்கொள்கைபோற்கவிகைகாப்ப. *

(இ-ள்) வேதங்கள் பலமுகங்கொண்டு துதிசெய்து வாய்தடுமாறியிளைக்கும்படி எங்குநிறைந்த பரம்பரையாகிய (தாயே) நீ எங்கள் அரசன்புத்திரியாய்த் திருவவதாரஞ்செய்து செங்கோல்செலுத்தி இவ்வுலகத்தில் உள்ள குற்றங்களை நீக்குகின்றாய் அவ்வாறு அடியேனுடைய முகத்திலிராநின்ற குற்றத்தையும் நீக்கென்று சந்திரன்வந்து நிழற்றுந்தன்மைபோல வெண்குடையானது நிழலைச்செய்யவும்.—(எ-று) (௰௯)

அங்கயற்கண்ணிமான்றேர்க்கணித்தொருதடந்தேரூர்ந்து .. *
வெங்கதிர்வியாழச்சூழ்ச்சிமேம்படுசுமதியென்போ .... *
னங்கைதன்குறிப்புநோக்கிநாற்பெரும்படையுஞ்செல்லச் .. *
செங்கையிற்பிரம்புநீட்டிச்சேவகஞ்செலுத்திச்செல்வான் .. *

(இ-ள்) அழகியகயல்போன்ற நோக்கத்தையுடையவளாகிய தடாதகைப்பிராட்டியின் குதிரைகட்டிய தேருக்குச்சமீபமாக ஒரு பெரியதேரைச்செலுத்திக்கொண்டு யாவரும்விரும்பத்தக்க ஒளியையுடைய பிரகஸ்பதியின்சூழ்ச்சியினும் மேம்பட்ட சூழ்ச்சியையுடைய சுமதியென்னும்மந்திரியானவர் தடாதகைப்பிராட்டியாருடைய குறிப்பின்படி மிகுந்த நால்வகைச்சேனையும்செல்லுமாறு செங்கையிலிருக்கும் பிரம்பைநீட்டிச்சேவகஞ்செலுத்திக்கொண்டுசெல்லுகின்றார்.— எ-று. பிரகஸ்பதிதேவர்களுடைய மந்திரியாகையால் அவரை எடுத்துக்கூறினார். சூழ்ச்சியாவது-ஒருகாரியஞ்செய்கை பலவாறாகத்தோன்றினால் அவற்றுள் ஆகத்தக்கதை ஆராய்தலாம். இதனைத் தெரிதலுந் தேர்ந்துசெயலும் என்னுங் குறளானுமுணர்க. செல்வான்- காலவழுவமைதி. (அங்கயற்கண்ணி) என்பது மீனாக்ஷியாகிய தடாதகையெனினுமமையும். (௨௰)

அலகிறுங்கருவிச்சேனையாங்கடலினைத்துரந்தன்போன் .... *
மலர்தலையுலகமன்றிமகபதியுலகமாதி ..... .... .... .... *
யுலகமும்பிறவுஞ்செல்லவுலப்பிலாவலியதாக்கித் .... .... *
திலகவாணுதலாண்மன்னர்திருவெலாங்கவரச்செல்வாள் .. *

(இ-ள்) அளவில்லாத பலவகையாகிய ஆயுதங்களையேந்தி

நால்வகைச்சேனையாகிய ஆழ்ந்தகடலெல்லாம் தன்னைப்போல்-பரந்த இடத்தையுடைய இவ்வுலகத்திற் செல்வதுமன்றித் தேவேந்திரனிருக்கும் பொன்னுலகமுதலாகிய உலகங்களிலும் மற்ற இடங்களிலும் செல்லும்படி செ ாதவலிமை உடையதாகச்செய்து திலகமணிந்த ஒளிபொருந்திய நெற்றியையுடைய தடாதகைப்பிராட்டி அரசர்களுடைய பொருள்களையெல்லாம் கவரச்செல்லுகின்றாள் —(எ-று) (கருவிச்சேனை) என்பது-வினைகருவிகாலம் என்னுங் குறளிலிருக்கும் கருவியென்பதற்குப் பரிமேலழகர் தானையெனப் பொருளெழுதியிருக்கின்றமையின் ஈண்டு இருபெயரொட்டுப் பண்புத்தொகையெனக்கொள்க. ஆயுதங்களையுடைய சேனையெனினுமமையும். பகைவர்பொருளைக்கவர்தல்-அரசநீதிக்கியல்பாதலால்-தடாதகைப்பிராட்டியும் பகைவர்பொருளைக் கவரச்செல்லுகின்றாளெனவுணர்க. பொருள்களாவன - மணி-பொன் - நெல் முதலாயின. இதனை-இயற்றலும் மீட்டலுங் காத்தலுங் காத்தவத்தலும் வல்லதரசு- என்னுங் குறளானுமுணர்க. (உக)

கயபதியாதியாயவடபுலக்காவல்வேந்தர் .. .. .. .. ....*
புயவலியடங்கவென்றுபுழைக்கைமான்புரவிமான்றேர்.....*
பயம்பிறைநுதல்வேலுண்கட்பாவையராயமோடு.... ....*
நயமலிதிறையுங்கொண்டுதிசையின்மேனாட்டம்வைத்தாள். *

(இ-ள்) கஜபதிமுதலாகிய வடதேசத்தின் காவல்கொண்ட அரசர்களின் புஜவலி அடங்கும்படி வென்று-யானைகள் குதிரைகள் குதிரைகட்டிய தேர்கள் என்னும் இவைகளையும் பால்போல்வெண்மையாகிய இளந்திங்களையொத்த நெற்றியினையும், வேல்போற்பொருந்திய கண்களையுமுடைய மாதர்கூட்டமும் இன்பத்தைத்தருகின்ற திறைப்பொருள்களும் அவர்கள்கொடுக்கப்பெற்றுக்கொண்டுதிசைகளின்மேல்செல்ல எண்ணங்கொண்டாள்.—(எ-று) (உஉ)

வார்கழல்வலவன்றேரைவலியகாலுதைப்பமுந்நீ........*
ரூர்கலனொப்பத்தாண்டவும்பர்கோனனிகத்தெய்திப்....*
போர்விளையாடுமுன்னர்ப்புரந்தரன்மிலைந்ததும்பைத்....*
தார்விழவாற்றல்சிந்தத்தருக்கழிந்தகன்றுபோனான்.....*

(இ-ள்) நீண்ட வீரகண்டை அணிந்திராநின்ற சாரதியானவன் தேரினை-வலிமையுடைய காற்றானது செலுத்தச்சமுத்திரத்

திற்செல்லுகின்ற கப்பலை ஒப்பாகச்செலுத்தத்தேவேந்திரனுடைய சேனையில்சேர்ந்துபோர்செய்வதற்குமுன் அந்தத்தேவேந்திரன்தரித்துக்கொண்டுவந்த தும்பைப்பூமாலை விழவும், வலிகெடவும், செருக்கழிந்து யுத்தகளத்தைவிட்டோடிப்போனான்.—(எ-று) தடாதகைப்பிராட்டியினது போராற்றல்தோன்றவும், தேவேந்திரன் அதிவிரைவில் தோற்றுப்போனனென்பதுதோன்றவும், போர்விளையாடு மூன்னனென்றார். தும்பை-பெரும்போர்செய்வோர் அணியுமாலை. (உ௫)

இழையிடை நுழையாவண்ணமிடையிறவீங்குகொங்கை .. *
குழையிடைநடந்துமீளுங்சொலைக்கணார்குழுவுந்தான ....*
மழைகவிழ்கடாத்துவெள்ளைவாரணமாவுங்கோவுந்......*
தழைகதிர் மணியுந்தெய்வத்தருக்களுங்கவர்ந்துமீண்டாள் .. *

(இ-ள்) அவ்வாறுதோற்றுப்போன தேவேந்திரனுலகத்திலிருந்த நூலிழையானது மத்தியில்நுழையாதவண்ணம் இடையிறத்தக்கதாகப் பூரித்ததனங்களையும், குண்டலமணிந்தகாதுவரையில்சென்று மீளுகின்ற (காமுகர்களைவருத்துந்தொழிலுள்ள)கண்களையுமுடைய தேவமாதர்கூட்டத்தையும், மதநீரைமழைபோற்சொரிகின்ற மதச்சுவட்டினையுடைய வெள்ளையானையையும், வெள்ளைக்குதிரையையும் காமதேனுவையும் நிறைந்த கிரணங்களையுடைய சிந்தாமணியையும் கற்பகவிருக்ஷத்தையும் கவர்ந்துகொண்டு அவ்விடம்விட்டுத் திரும்பினாள்.—(எ-று) (உ௬)

(வேறு.)

இவ்வாறுமற்றைத்திசைக்காவலர்யாரையும்போய்த் ......*
தெவ்வாண்மைசிந்தச்செருச்செய்துதிறையுங்கைக்கொண் ..*
டவ்வாறுவெல்வாளெனமூன்றாணட்டமேருக் .... .... *
கைவார்சிலையான் கயிலைக்கிரிநோக்கிச்செல்வாள் ...... *

(இ-ள்) இப்படியாகமற்றைத்திசைகளிலும்போய் அங்கிருக்குந்திக்குப்பாலகருடைய பகைவலிகெடப்போர்செய்து திறையும்பெற்றுக்கொண்டுஅவ்வண்ணம்வெல்லலாமென்றெண்ணித் திரிபுரதகனஞ்செய்த மகமேருவாகிய நீண்டவில்லைக் கையிலேந்திய பரமசிவன் வீற்றிருக்குங் கயிலாசகிரியைநோக்கிச்செல்லுகின்றாள்.—(எ-று) (உ௭)

சலிக்கும்புரவித்தடந்தேருடைத்தம்பிராட்டி. ...... .. .. *
கலிக்கும்பலதூரியங்கைவரதெய்வத்திண்டேர் .... ....*

வலிக்கும்பரிமள்ளர்வழங்கொலிவாங்கிதேரோ ........ *
யொலிக்கும்படிக்கிட்டினளூழிதோறோங்குமோங்கல் ..... *

(இ-ள்) செல்லுகின்ற குதிரைகட்டிய பெரியதேரையுடைய தடாதகைப்பிராட்டி ஒலிக்கும் பலவாத்தியங்களும் யானைகளும் தெய்வத்தன்மையுள்ள இன்னியதேர்களும், வலிக்குங் குதிரைகளும் வீரர்களும் சத்திக்கும் ஓசையைக்கவர்ந்துகொண்டு அவ்வாறேஒலிக்கும்படி-ஊழிதோறுமோங்குகின்ற கயிலாசகிரியை அடுத்தாள்.—(எ-று) வலிக்குங்குதிரையென்றது-வீரன்செலுத்தும்வண்ணம் செல்லுங் குதிரையென்றதாம். (வலித்தல்) என்பது-உடன்படல். (௨௬)

வானூர்கயிலைமலையான்மகடன்னைநீத்துப் ........ *
போனாள்வந்தாளென்றருவிக்கட்புனலுக்கந்நீ ........ *
ராலுவொலியாலனைவாவென்றழைஇத்தன்றேசு ........ *
தானுண்கையாற்றழீஇயெதிரோற்பச்சென்றாள் ........ *

(இ-ள்) வானளவும்பொருந்திய கயிலைமலையானது தன்னைவிட்டுப்போன மலையரையன்புத்திரியாகிய பார்வதியானவள் (இப்போது) வந்தாளென்று(பரிவுகூர்ந்து) அருவியாகிய கண்ணீர்சொரிந்து நீங்காத அந்நீரினொலியால் தாயேவாவென்று அழைத்துத்தன்றேசாகிய கையால்தழுவி யெதிர்கொள்ளும்படி சென்றாள்.—(எ-று) பரிவு-வருவித்துரைக்கப்பட்டது.

கிட்டிப்பொருப்பைக்கிரியோடுகிரிகடாக்கி ........ *
முட்டிப்பொருதாலெனவேழமுழங்கிப்பாயப் ........ *
புட்டிற்புறத்தார்மறத்தார்கணைபூட்டுவில்லார் ........ *
வட்டித்துருமேறெனவார்த்துவளைந்துகொண்டார் ........ *

(இ-ள்) தடாதகைப்பிராட்டியாருடன்சென்றபடைவீரர்கள் கயிலாயகிரியைக்கிட்டி-மலைகளைமலைகள்,தாக்கியுமுட்டியும்பொருதாற்போல-யானைகள் ஒலித்துப்பாயவும்,அம்பறாத்தூணிகட்டிய முதுகினையுடையவர்களும் வீரத்தையுடையவர்களும், பாணங்கள்பூட்டிய வில்லையுடையவர்களுமாய்ச் சப்தங்கூறி இடியேறுபோல்வளைந்துகொண்டார்கள்.(எ-று) (௨௮)

ஓடித்திருமாமலைக்காவலரும்பரார்க்கு ........ *
நாடிப்பணிதற்கரிதாகியநந்தியாதங் ........ *

கூடிப்பணிந்தித்திறங்கூறலுங்கொற்றவேனந் .. .. ..... *
தேடிக்கிடையானுளந்தேர்ந்தனனந்தியெந்தை .. .. .. *

(இ-ள்) இப்படியாக இவர்கள்வளைந்துகொண்டதை அறிந்து அந்தக்கயிலைமலைக்காவலாளிகள் விரைவிற்சென்று தேவர்களுக்குங்கண்டுபணிவதற்கரியவராகிய நந்திதேவரிடத்திற்சென்று அவருடைய பாதத்தைப்பணிந்து இந்தவிவரங்களைச்சொல்லவும் என்னைத்தருகிய நந்திதேவர் வெற்றிபொருந்திய பன்றியானது தேடிக்காணக்கூடாமனின்ற பரமசிவனுடையதிருவுள்ளக்குறிப்பை அறிந்துகொண்டார்.— (எ-று) (௨௯)

வென்றிக்கணத்தைவிடுத்தான்கனமீதுபெய்த .... ..... *
குன்றிக்கணம்போற்சுழல்கண்ணழல்கொப்புளிப்பச் .... *
சென்றிக்கனையமொழியாள்பெருஞ்சேனையோடு .... ... *
மொன்றிக்கடலுங்கடலும்பொருதொத்ததன்றே .... .. *

(இ-ள்) வெற்றிபொருந்திய பூதகணங்களையேவினர் அந்தக்கணங்கள் மேகத்தினிடத்தில்வைத்திராநின்ற குன்றிமணிக்கூட்டம்போலச்சுழல்கின்றகண்கள் தீப்பொறியைச்சிந்தும்படிசென்று கரும்பின்சுவைபோன்ற(மதுரமுள்ள) மொழியையுடைய தடாதகைப்பிராட்டியின் சேனையைப்பொருந்திக் கடலுங்கடலும்பொருததையொத்தது.—(எ-று) கருப்பு-ஆகுபெயர். (பொருதவொத்தது என்பது-விகாரவகையால் பொருதொத்தது என நின்றது. (௩௰)

சூலங்கண்மழுப்படைதோமரநேமிபிண்டி .. ..... .. .. *
பாலங்கள்கழுக்கடைவாட்படைதண்டநாஞ்சி .... .. .... *
லாலங்கவிழ்க்கின்றவயிற்படைவீசியூழிக் .... ..... ..... *
காலங்கலிக்குங்கடல்போன்றகளமார்ப்பு .... ..... .. *

(இ-ள்) சூலங்கள்-மழுப்படைகள்-இருப்புலக்கைகள்-சக்கரங்கள்-பிண்டிபாலங்கள்-ஈட்டிகள்-வாட்படைகள்-தண்டங்கள்-கலப்பைகள்-விஷத்தைக்கக்குகின்ற வேற்படைகள் என்னும் இவ்விதஆயுதங்களைவீசி வீரர்கள் ஆரவாரிக்கும் ஆரவாரங்கள் ஊழிக்காலத்தில் ஆரவாரிக்குங்கடலொலிபோன்றன. (எ-று) கடல்-ஆகுபெயர். (௩௧)

எறிகின்றனவோச்சுவவெய்யவனாகியாகச் .... .. .... *
செறிகின்றனபல்படைசெந்நிறப்புண்ணீர்மூழ்கிப் .... .. *

பதிகின்றனவும்பிழைக்கின்றவுரர்பட்டுத்தாக்கி ...... ....*
முறிகின்றனவுமுயன்றோர்வினைப்போகமொத்த .... ....*

(இ-ள்) எறிகின்றவைகளும்-ஓச்சுகின்றவைகளும்- எய்கின்றவைகளுமாதியாகப்பொருந்திய பல ஆயுதங்கள் செம்மைநிறத்தையுடைய உதிரத்தில் மூழ்கிப்பதிகின்றவைகளும்- பிழைக்கின்றவைகளும் (வீரர்மேல்பட்டுத்தாக்கி முறிகின்றவைகளும் நல்வினைசெய்தவர்களுக்கு அவ்வினையால்வருகின்ற போகங்களை யொத்தன.—எ-று) அவரவர்செய்த நல்வினையினளவு போகம்நீடித்துநிற்பதும்-சிலநாளிருப்பதும் - தொன்றியுடனேமறைவதுமியல்பாதலால்போகமொத்தவென்றார். (௩௨)

தெரிசிக்கவந்தசிலதேவர்சிறைப்புள்ளூர்தி .... ..... ....*
வெருவிப்பறந்தவொழிந்தோர்விலங்கூர்திமானங் .... ..*
கருவிப்படையாற்சிதைபட்டனகாலனூர்தி ........ ....*
குருதிப்புனலுக்கதுகொற்றவையுண்டதென்ன .... ....*

(இ-ள்) (இவ்வாறு போர்செய்யும்போது) தரிசனஞ்செய்யவருகின்ற (தேவர்களில்) சிலதேவர்களுடைய சிறையையுடைய பக்ஷிகளாகிய வாகனங்கள்பயந்து பறந்தோடின - மற்றைத்தேவர்களுடைய மிருகமாகிய வாகனங்களும் விமானங்களும் ஆயுதங்களாலழிந்தன-யமனுடைய வாகனமாகிய எருமைக்கடாவானது [illegible]ன்னங்காளியானவள் உண்ட உதிரம்போல் உதிரத்தைக்கக்கியது.—(எ-று) புள்ளூர்தியாவது - கருடனும் அன்னமுமாம். விலங்கூர்தியாவது- ஐராவதமென்னும் யானை முதலானதுகளாம். காளியுண்ட உதிரமாவது- மகிடாசுரனை மர்த்தனஞ்செய்தபோது பெருகிய உதிரமாம். (௩௩)

பொருகின்றதுகண்டுவிச்சாதரர்போகம்வீடு .... ..... ..*
தருகின்றவனைத்தொழவானெறிசார்ந்துநேரே .... .. *
வருகின்றவர்வேறுவழிக்கொடுபோவரன்புக் .. .. .... ...*
குருகின்றளிர்மெல்லடியாரொடுமுற்றமஞ்சா .... .... *

(இ-ள்) இவ்வாறுபோர்செய்கின்றதைப் - போகங்களையு மோக்ஷத்தையுந் தருகின்றகயிலாசபதியைத்தொழுவதற்கு ஆகாயமார்க்கத்தைப்பொருந்தி நேரேவருகின்ற விச்சாதரர்கள்கண்டு தங்களுக்குக்கொலைநேரிடுமென்று பயந்து அன்புக்கு உருகாநின்ற இனிதாகிய தளிர்போன்றமென்மையாகியபா

தங்களையுடைய தங்கள் தங்கள் ஸ்திரீகளோடு வேறுவழிக்கொ ண்டுபோவார்கள்.—(எ-று) (௩௪)

திங்கட்படைசெங்கதிரோன்படைசீற்றமேற்ற ..... .. ....*
வங்கிப்படைதீம்புனலான்படைநாரசிங்கத் .... .. ....*
துங்கப்படைசிம்புணெடும்படைசூறைச்செல்வன் .......*
வெங்கட்படைபன்னகவெம்படைமாறிவிட்டார் ...... ..*

(இ-ள்) சந்திராஸ்திரமும் அதற்குமாறாகச் சூரியாஸ்திரமு ம்கோபங்கொண்ட ஆக்கினேயாஸ்திரமும் அதற்குமாறாகவரு ணாஸ்திரமும் நாரசிங்காஸ்திரமும் அதற்குமாறாக நெடிய சரபா ஸ்திரமும் கொடியமுனையையுடைய வாயவியாஸ்திரமும்-அத ற்குமாறாகவெவ்விதான நாகாஸ்திரமும்விட்டார்கள் —(எ-று)

கொட்புற்றமராடுமிக்கொள்கையர்தம்மினந்தி .... .... *
நட்புற்றவர்கைப்படைதூட்படஞானமூர்த்தி .... .... ..*
பெட்புற்றருளவருமெங்கள்பிராட்டிமெய்ய .. .. ....*
கட்புற்றரவிற்கணைமாரிகடேற்றிநின்றாள் .... .. .. ....*

(இ-ள்) இவ்வாறுஇடசாரிவலசாரியாகச்சுழன்றுபோர்செய் யுங்கொள்கையையுடைய வீரர்களில நந்திதேவருடைய நட் பைப்பெற்றவீரர்களின்கையிலிராநின்ற ஆயுதங்கள்தூளாகு ம்படி கயிலாசபதியானவர் விருப்பமுறவருகின்ற எங்கள் இ றைவியாகிய தடாதகைப் பிராட்டியானவள் புற்றிலிராநின்ற கொடியபார்வையையுடைய சர்ப்பங்களையொத்த பாணவரு ஷிங்களைப்பிரயோகஞ்செய்தாள்.—(எ-று) (௩௬)

கையிற்படையற்றனர்கற்படைதொட்டுவீரர் .... .. ....*
மெய்யிற்படுமென்றுவிடுக்குமுன்வீரக்கன்னி .... .. .. *
பொய்யிற்படுநெஞ்சுடையார்தவம்போலமாய ..... .....*
நெய்யிற்படுவச்சிரவேலைதிமிர்த்துவீசி .... .... ...... ...*

(இ-ள்) கையிலிருந்த ஆயுதங்களையெல்லாம் இழந்தவர்கள் மறுபடியும் கற்களை ஆயுதமாக எற்றிக்கொண்டு தடாதகை ப்பிராட்டியின்சேனையிலிராநின்ற வீரர்கள்மேல்படும்படி எ றிவதற்குமுன் அந்தக்கற்களெல்லாம் பொய்மார்க்கத்தில்செல் லுகின்ற மனமுடையவர்கள் தவம்போல் மாயத்தக்கதாகத்த டாதகைப்பிராட்டி பகைவருதிரத்திற்படும்படியானவச்சிரவே லை ஓங்கி எறிந்து.—(எ-று) (௩௭)

துண்டம்படவே துணித்தக்கணவீரர்தம்மைத் .... .. ..*
தண்டங்கொடுதாக்கினன்சாய்ந்தவர்சாம்பிப்போனா ... ..*
ரண்டங்கள்சராசரம்யாவையுந்தானேயாக்கிக்..... .. .... *
கொண்டெங்குநின்றாள்வலிகூறவரம்பிற்றோமோ .. .... *

(இ-ள்) துண்டுதுண்டாக அறுத்து அந்தக்கணவீரர்களைத் தண்டாயுதத்தினால் அடித்தான் அவர்கள்சோர்ந்து பின்னிட்டு ஓடிப்போனார்கள் - அண்டங்களையுஞ் சராசரங்களையுந் தானே சிருஷ்டித்து அவைகளில் நிறைந்திருப்பவனுடைய ஆண்மையானது ஒருவரால் சொல்ல அளவுபட்டதோ.—(எ-று)(௩௮)

படையற்றபிமானமும்பற்றறவற்றுச்சுற்றந் .. .. .. .. *
தொடையற்றிகன்மூண்டெழுதோள்வலியற்றுச்செற்ற ....*
மிடையற்றுவீரநகையற்றடலேறுபோலு .. ...... .. ....*
நடையற்றுடைவார்நிலைகண்டனனந்தியண்ணல்... .. ... ..*

(இ-ள்) ஆயுதங்கள் அறுபட்டும் - அபிமானமென்பதெவ்வளவுமில்லாமல்நீங்கியும் அணிந்தமாலைகள் அறுபட்டும் - போர்மூண்டு ஓங்குகின்ற தோள்வலியற்றும், தங்களிடத்திலிருந்தகோபங்கள்மாறுபட்டும் - வீரநகைநீங்கியும் பலம்பொருந்திய ஏறுபோல்நடக்கும் நடைமாறியும்வருகின்ற கணங்களுடைய நிலைமையைநந்திதேவர்கண்டார்.—(எ-று) அண்ணலென்பது - பெருமையிற்சிறந்தோன்பெயர். (௩௯)

உடையானடிதாழ்ந்தவையோதலுமோதநீத்தச் .. .. .. *
சடையானிளவாணகைசெய்துதருமச்செங்கண் .. .. .. *
விடையான்சிலையானிகல்வென்றிவிளைக்குந்தெய்வப் .. ..*
படையானெழுந்தானமராடியபாரிற்சென்றான் .. .. ..... *

(இ-ள்) கயிலாசபதியின்திருவடிகளைப்பணிந்து நடந்தகாரியங்களைச்சொல்லவும் - அலைகளையுடைய நீருருவமாகிய கங்கையையணிந்திராநின்ற சடைமுடியையுடையசுவாமியானவர் புன்னகைசெய்து சிவந்தகண்களையுடைய தர்மவிடையின்மேலேறிக்கொண்டு பிநாகமென்னும் வில்லினையுடையவரும் போரில் வெற்றியைத்தருகின்ற தெய்வத்தன்மையையுடையபாசுபதாஸ்திரமுதலிய படையையுடையவருமாய்ப்போர்செய்தயுத்தகளத்துற்போனார்.—(எ-று) (௪௰)

மேவியாகவப்பாரிடைப்பாரிடவீரனாயமராடி .. .. ....*
யோவிலாவலிகவர்ந்ததுமன்றினியுருத்தெவரெதிர்ந்தானுந் *

தாவிலாவலிகவரவுமடங்கலின்றனிப்பிணாவெனநிற்குந் ......*
தேவியார்திருவுருவமுஞ்சேவகச்செய்கையுமெதிர்கண்டான்*

(இ-ள்) யுத்தகளத்தி லிவ்வாறுசேர்ந்துபூதகணவீரர்களுடைய வலியைப் போர்செய்துகவர்ந்ததுமல்லாமல் இனிக்கோபித்து எவரெதிர்த்தாலும் கெடாத அவர்களுடைய வலிமையைக்கவரவும் - ஒப்பற்ற பெண்சிங்கம்போல நிற்கும் தந்தேவியாருடைய திருமேனியின் பொலிவினையும் வீரத்தன்மையையும்பார்த்தருளினார்.—(எ-று) (௬௧)

ஒற்றைவார்கழற்சரணமும்பாம்பசைத்துடுத்தவெம்புலித்தோலுங், கொற்றவாண்மழுக்கரமும் வெண்ணீறணி கோலமுந்நூன்மார்புங், கற்றைவேணியுந்தன்னையேநோக்கிய கருணைசெய் திருநோக்கும், பெற்றதன்வலப்பாதியைத்தடாதகைப் பிராட்டியுமெதிர்கண்டாள் .. .. ..... .. .. ..... .. .. ..... *

(இ-ள்) நீண்டதாகிய ஒருவீரக்கண்டைகட்டிய திருவடியையும் அரவக்கச்சா லிறுக்கிக்கட்டிய வெவ்விதாகிய புலித்தோலுடையினையும்-வெற்றியும் ஒளியுமுள்ள மழுப்படையேந்திய திருக்கரத்தையும் வெண்மையாகிய விபூதியணிகின்ற அழகிய முந்நூல்பொருந்திய திருமார்பினையும் கற்றையாகிய சடையினையும் தன்னையேநோக்குகின்றகருணைசெய்கின்றதிருநோக்கத்தையும் பெற்றிராநின்ற தன்வலப்பாதியாகிய சுவாமியைத்தடாதகைப்பிராட்டியுமெதிர்கண்டாள்.—(எ-று) (௬௨)

கண்டவெல்லையிலொருமுலைமறைந்ததுகருத்தினுண்மடனச்சங், கொண்டமைந்திடக் குனிதரமலர்ந்தபூங் கொம்பர்போலொசிந்தொல்கிப், பண்டையன்புவந்திறைகொளக் கருங்குழற்பாரமும்பிடர்தாழச், செண்டையுண்கணும்புறவடிநோக்கமண்கிளைத்துமின்னெனநின்றாள் .. .. .. .. .. .. .. .. *

(இ-ள்) கண்டபோது மத்தியிலிருந்த ஒருதனம் மறைந்தது-அதுமறையவேஉள்ளத்தில்நாணமும்மடனும் அச்சமும்குடிகொண்டிருக்க வளையும்படியாக மலர்ந்த பூங்கொம்பைப்போல் ஒசிந்து முன்பிருந்த அன்பானது வந்து பொருந்தவும்-கருமையாகிய அளகபாரம் பிடரியிற்றாழவும் - கயலைப்போலப் பொருந்திய கண்கள்புறவடியை நோக்கவும்-கால்விரலால் மண்ணைக்கிளறிக்கொண்டு மின்னலைப்போல் நின்றாள்.(எ-று)

நின்றமென்கொடிக்ககல்விசும்பிடையாரணிசைத்திய திருமாற்ற
மன்றறிந்தமூதறிவுஞ்சுமதிசீறடிபணிந்தன்னாயிக் .....*
கொன்றையஞ்சடைக்குழகனே நின்மணக்குழகனென்றலுமன்
பு, துன்றநின்றவட்பார்த்தருட்சிவபரஞ்சோதிமற்றிதுகூறுவர்*

(இ-ள்) அகன்றவிசும்பினிடத்தில் முன்னாள் பரமசிவனருளிச்செய்த திருவாக்கினையறிந்த பேரறிவினையுடைய சுமதியென்னுமந்திரியானவர் இவ்வாறுநின்ற தடாதகைப்பிராட்டியாருடைய சிற்றடியைப்பணிந்து (தாயே) கொன்றைமாலையணிந்த அழகிய சடையினையுடைய இந்தக்கயிலாயபதியே உன் மணவாளனென்று சொல்லவும் அதைக்கேட்டு அன்பானது பொருந்தும்படி நின்ற தேவியாரைப்பார்த்துக் கிருபையினையுடைய சிவபரஞ்சோதியாகிய கயிலாசபதியானவர் இதனைச் சொல்லுகின்றார்.—(எ-று) (சச)

என்றுதொட்டிந்நிசையின்மேற்சயங்குறித்தெழுந்துபோந்த
னையாமு, மன்றுதொட்டிநம்மதுரைவிட்டினைவிடாதிருந்துவ
ந்தனமுன்னைத்,தொன்றுதொட்டநான்மறையுரைவழிவருசோ
மவாரத்தோரை, நன்றுதொட்டநாண்மணஞ்செயவருதுநின்
னகர்க்குநீயேகென்றான் .......................*

(இ-ள்) திக்குகளிலேபோய்ப்(பொருது) வெற்றிகொள்ளக்கருதி என்று நீயெழுந்து புறப்பட்டனையோ அன்று முதல் நாமும் நம்முடைய மதுரையைவிட்டு உன்னைவிட்டுப்பிரியாமல் தொடர்ந்துவந்தோம் இனி) பழமையாகிய நான்குவேதங்களிற்சொல்லுகிற முறைமைப்படி வருகிற சோமவாரத்தில் நல்லலக்கினங்கூடுகிறகாலத்தில் உன்னைமணஞ்செய்துகொள்ளவருகிறோம்-நீமதுரைக்குப்போவென்று அருளிச்செய்தார்.—(எ-று) (சரு)

என்றநாதன்மேலன்பையுமாவியையுமிருத்தியாயங்குழக் ..*
குன்றமன்னதேர்மேற்கொடுதூரியங்குமுறுகடலெனவார்ப்ப
நின்றதெய்வமால்வரைகளும்புணரியநீத்தமுநீத்தேகி .*
மன்றன்மாமதுராபுரியடைந்தனண்மதிக்குலவிளக்கன்னாள்.*

(இ-ள்) இவ்வாறருளிச்செய்தவுடன் கயிலாயபதியினிடத்தில் சந்திரகுலத்துக்குத் தீபத்தையொத்த தடாதகைப்பிராட்டியார் அன்பையும் ஆவியையும்வைத்துத் தோழியர்கூட்டமுங்கூ

டச்சூழ்ந்துவரும்படி மகமேருவையொத்ததேரின்மேலேறிக்கொண்டு வாத்தியங்களிசைக்கும் கடல்போலாரவாரிக்கமதிலிலிருக்கும் தெய்வத்தன்மையுள்ள மலைகளையும்புண்ணியநதிகளையும்கடந்துசென்று நன்மையுள்ள பெருமைபொருந்திய மதுரைநகரத்திற் சேர்ந்தார்—(எ-று) குலத்தை விளக்குதலின்-குலவிளக்கென்றார். (௬௬)

மங்கைநாயகிமங்கலமெதிர்கொளவந்துவானிழிசெல்வம்,பொ
ங்குமாளிகைபுகுந்தனளாகமேற்புதுமணத்திறந்தீட்டி, யெங்
குமோலையுய்த்தமைச்சர்மங்கலவினைக்கியைவனவமைக்கின்று
நன்கண்மாநகரெங்கணுங்கடிமுரசானைமேலறைவித்தார் .. *

(இ-ள்) மங்கையர்க்கரசியாகிய தடாதகைப்பிராட்டியார் அஷ்டமங்கலங்களும் எதிரில்வரும்படி சென்று பொன்னுலகத்தையும் இகழ்ச்சிசெய்வதற்குக்காரணமான செல்வம்விளங்குகின்றமாளிகையிற்சேர்ந்திருக்கப் புதுமையுள்ளவிவாகத்தைக்குறித்து எழுதிய வோலையை எல்லாத்தேசங்களுக்கும் அனுப்பி மந்திரிமார்கள் கல்யாணவினைக்கு வேண்டியவைகளைச் செய்யயோசித்து அழகிய இடத்தையுடைய பெருமைபொருந்திய மதுரைநகரமெங்கும் கல்யாணபேரிகையை யானைமேல் அறைவித்தார்கள்.—(எ-று) (௬எ)

(வேறு.)

கன்னிதன்மணமுரசறைந்திடுங்கடிநகருறைபவர்களொடேத், து
ன்னியவுவகையர்கடவுளைத்தொழுகையருடன்முகிழ்ப்பெழப்,
பன்னியதுதியினரியலெழின்மகளிரையழகுசெய்பரிசென..*
மின்னியவெழில்வளநகரொலாஞ்செயல்வினையணிபெறவெழில்
செய்வார்.......................................*

(இ-ள்) தடாதகைப்பிராட்டியினுடைய விவாகத்தைக்குறித்துப்பேரிகைசாற்றவும்- அதைக்கேட்ட சிறப்புபொருந்திய மதுரைநகரத்திலிருப்பவர்கள் அளவற்ற சந்தோஷத்தையுடையவர்களாயும் சோமசுந்தரக்கடவுளைத் துதிசெய்கின்றவர்களாயும் சரீரத்தில் புளகமுண்டாகும்படி தோத்திரஞ்சொல்லுகின்றவர்களாயும் மிகுந்த அழகையுடைய ஸ்திரீகளுக்கு மணப்பதும் அழகுசெய்யுந் தன்மையைப்போல் இனிதாகிய மிகுந்த அழகையும் வளப்பத்தையுமுடைய அம்மதுரைநகரத்

னதையெல்லாம் கைபுனைதொழிலினால் அழகுபொருந்த அலங்காரஞ்செய்கின்றார்கள்.—(எ-று) (சஅ)

கோதையொடும்பரிசந்தனக்குப்பைகளுந்தனர்வீசுவார் - சீத
ளமென்பனிநீர்கடுப்பச்சிந்திய பூழியடக்குவார் - மாதருமைந்த
ருமிறைமகண்மன்றன்மகிழ்ச்சிமயக்கினுற்றி - காதணிகுழைவளை
டிகண்டிகைகழல்வனதெரிகிலர்தொழில்செய்வார் .. .... *

(இ-ள்) நீக்கியபூமாலைகளும் சந்தனமாகிய குப்பைகளையெடுத்துப்போய் வெளியில் எறிவார்கள் - குளிர்ச்சியையுடைய மிருதுவாகிய பனிநீர்களைத் தூவிச்சிந்தியபூழிகளையடக்குவார்கள் - மாதர்களும் ஆடவர்களும் தடாதகைப்பிராட்டியின் கல்யாணத்தைக்குறித்து உண்டாகிய சந்தோஷமயக்கத்தினால் காதில் அணிந்த குழைகளும் வளையல்களும் பதக்கங்களும் கழல்கின்றவைகள் தெரியாமல் தொழில்செய்கின்றார்கள் (எ-று)

மங்கலமென்றென வினவுவார் வருமதிநாளெனவுரைசெய்வார் -
தங்களையொல்லை தழீஇக்கொள்வார் தாங்கருமோகை தலைக்
கொள்வார் - திங்களினெல்லையுமாறுநாளாகமென்றுசெலுத்
துவார் - நங்கையருட்கடிகாணவோ துடித்தன தோள்களெமக்
கென்பார் .... .... .... .... .... .... .... *

(இ-ள்) கல்யாணம் என்றைக்கென்று வினவுவார்கள் - வருகுஞ்சோமவாரமென்று சொல்லுவார்கள் - அப்படிச்சொன்னவர்களை விரைவாகத்தழுவிக்கொள்ளுவார்கள் - தாங்குதற்கரிய அதிகசந்தோஷத்தை யுடையவர்கள் - சோமவாரதினை அளவும் ஆறுதினமாயினும் ஆறுயுகம்போலக் கழிப்பார்கள் - தடாதகைப்பிராட்டியாருடைய அரிதாகிய விவாகமகோற்சவத்தைக்காண்பதற்கோ நம்முடைய தோள்கள் துடித்தனவென்று சொல்லுவார்கள்.—(எ-று) (௫௰)

பித்திகைவெள்ளைபுதுக்குவார்பெட்புறுவார்களும்பெட்புறச் -
சித்திரபத்திதிருத்துவார்தெருத்திகள்குங்குமந்நீவுவார் .... .. *
வித்தியபாலிகைமென்றளைமுளைவிரிந்தலைநீர்நிறைபொற்குடம் ..... *
பத்தியின்வேதிநிரப்புவார்தோரணம்வாயில்பரப்புவார் .. .. *

(இ-ள்) சுவர்களைச்சுண்ணாம்பினால் புதுக்குவார்கள் - தொழிலினருமையைக்கண்டு சந்தோஷிக்கின்றவர்களும் சந்தோஷிக்கும்படிசித்திரங்களை வரிசையாக அமைப்பார்கள் - திண்ணைகளில் குங்குமப்பூக்குழம்புகளைப்பூசுவார்கள் - வேதிகைகளி

ல் அங்குரங்கள் அமைத்தபாலிகைகளையும் மிருதுவாகிய தழைகள்விரித்த தலையினையுடைய நீர்நிறைந்தபொற்குடங்களையும் வரிசையாக வைப்பார்கள். — (எ-று) வேதி - கடைக்குறை (௬௧)

நீளிடைமணிமறுகெங்கணு நெடுநடைக்காவணநாட்டுவார் ...*
பாளைகொள்கமுகுகருங்கழைப்பழுக்குலை வாழையொழுக்குவார் - கோளின்றொகைகொண்டெனவாடிகள் கோத்தணி வார்மிசைக்
கொடிநிரை - வாளரியெழுபரியடிபடமத்திகை நிரையெனவைப்பரால் ........ *

(இ-ள்) நீண்டஇடங்களையுடைய அழகிய வீதிகளெங்கும் நெடியநடைக்காவணம்நாட்டுவார்கள் - பாளைகள் பொருந்திய கமுகமரங்களையும் மதுரமுள்ளகரும்புகளையும் குலைகளையுடைய வாழைமரங்களையும் (மேற்சொல்லியபந்தற்கால்களில்) வரிசையாகக்கட்டுவார்கள் - சூரியன்முதலாகிய கோள்கள் ஒருங்கு பொருந்தியிருப்பதுபோலக் கண்ணாடிகளைக் கோத்தணிவார்கள் - மேலேவரிசையாகக்கொடிகளை ஒளிபொருந்திய சூரியனது தேரிற்கட்டிய ஏழுங்குதிரையானது அடிபட மத்திகைக்கட்டம்போல்வைப்பார்கள் — (எ-று) மத்திகை என்பது - குதிரைச்சம்மட்டி அது இக்காலத்தில்சவுக்கென்றுசொல்லப்படுகின்றது. (௬௨)

பூவொடுந்தண்பனிசிந்துவார் பொரியொடுபொற்சுண்ணம் வீசுவார் - பாவைவிளக்குநிறுத்துவார் பைந்தொடைப்பந்தரிற்றூக்குவா-
ராவணமென்னவயிர்ப்புறவணிமறுகெங்கணுமரதனக் - கோ
வையுமரகதமாலையுங்கோப்பமைப்பாரமுந்தூக்குவார் .... *

(இ-ள்) மலர்களோடு குளிர்ந்தபனிநீரைச்சிந்துவார்கள் பொரிகளுடன் பொன்னிறமுள்ளவாசனைப்பொடிகளை வீசுவார்கள் - பாவைகளேந்திக்கொண்டிருக்கும் தீபங்களை வைப்பார்கள் - பசியபூமாலைகளைப் பந்தலினிடத்தில் தொங்கக்கட்டுவார்கள் - கடைவீதிகளென்றியாருநிர்த்தேசிக்கும்படி அழகியவீதிகளெங்கும் ரத்தினக்கோவைகளையும் மரகதமாலைகளையும் கோத்திராநின்ற மற்றமாலைகளையும் தொங்கக்கட்டுவார்கள் (எ-று)

அடுகரிசித்திரமப்புவார் சமன்மணிப்போடையிலச்சுவார் .... *
கடுநடைப்பரிவுளிகழுத்தலங்காரணிகலனைதிருத்துவார் .. .... *
சுடர்விடுதேர்பரிபூட்டுவார் தொடையொடுகவரிகடுக்குவார். *
வடுவறுபொற்கலநவமணிமங்கலதீபமியற்றுவார் .... .... *

(இ-ள்) போரிற்பகைவரைக்கொல்லத்தக்க யானைகளுக்குச்சிந்தூரம்அணிவார்கள்-தீப்போல்விளங்குகின்றரத்தினங்கள் பதித்த பட்டங்களைக்கட்டுவார்கள்- கடுநடையையுடைய குதிரைகளுக்குக் கழுத்தணிகளையும் காலணிகளையும் சேணமுதலானவைகளையும் அணிவார்கள்-பிரகாசிக்கின்ற தேர்களிற் குதிரைகளைப்பூட்டுவார்கள்-ரத்தினமாலைகளோடு சாமரைகளையுந்தொங்கக்கட்டுவார்கள் - குற்றமற்றபொற்றட்டுகளில் நன்மையையுடைய நவரத்தினதீபங்களை வைப்பார்கள்.—(எ-று)

பழையனகலனைவெறுப்பார்புதியனபணிகள்பரிப்பாரற்..*
குழைபனிநீரளைகுங்குமங்குவிமுலைபுதைபடமெழுகுவார்..*
மெழுகியவீரம்புலர்த்துவார்விரைப்படுகலவைகளப்புவா..*
ரழகியகண்ணடிநோக்குவார்மைந்தரையாகுலமாக்குவார்..*

(இ-ள்) பழமையாகிய ஆபரணங்களைநீக்கிவிட்டுப்புதியஆபரணங்களைத்தரித்துக்கொள்ளுவார்கள் - குழைக்கும்பனிநீர்சேர்ந்த குங்குமக்குழம்பைக் குவிவாகிய தனங்கள்மறையும்படி பூசிக்கொண்டு அவ்வீரத்தை யுலர்த்துவார்கள்- (இதுவுமன்றி) வாசனைபொருந்திய கலவைகளை அப்பிக்கொண்டு அழகுபொருந்திய கண்ணாடிகளைநோக்குவார்கள்- (மாதர்கள் இவ்வாறு அலங்காரஞ்செய்துகொள்வதனால்) ஆடவர்களுக்கு வருத்தத்தையுண்டாக்குகின்றார்கள்.—(எ-று) (ருரு)

அஞ்சனம்வேல்விழியூட்டுவாராடவர்மார்பிடைநாட்டுவார்..*
பஞ்சுகள்பாதமிருத்துவார்பரிபுரமீதுதிருத்துவார்.... ..*
வஞ்சியர்தேறலருந்துவார்மருங்குறளாடவருந்துவார்,கொஞ்
சியகனிமொழிகழறுவார்குழுவொடுகுரவைகள்குழறுவார்..*

('இ-ள்) மாதர்கள்வேல்போன்ற கண்களில் மையெழுதுவார்கள்-அந்தக்கண்வேலை ஆடவர்களுடைய மார்பினிடத்தில் நாட்டுவார்கள்-பாதங்களில் செம்பஞ்சிக்குழம்புகளைப் பூசுவார்கள்-அந்தப்பாதங்களினிடத்தில் சிலம்புகளணிவார்கள்-மதுவையுண்பார்கள்-இடையானது தள்ளாடுவதனால் வருந்துவார்கள்- கொஞ்சுகின்றமொழிகளைக்கேட்பவர்களுக்கு முப்பழம்போலமதுரிக்கும்படி வசனிப்பார்கள்- கூட்டமாகச்சேர்ந்து குரவைப்பாட்டுகள் பாடுவார்கள்.—(எ-று) கண்வேலைமார்பில் நாட்டுதலாவது - சில ஆடவர்களுக்கு ஆசையினால் மாதர்கள் நோக்கும் நோக்கமானது மார்பில் வேல்தைப்பதுபோலிருக்கின்றதென்னுங் குறிப்பு. (ருசா)

இன்னரமிதுனமெனச்செல்வார்கிளைகெழுபாணொடுவிறலியர்
கன்னியரரசைவணங்குவார்வதுமணமெய்துகளிப்பி .. *
னின்னிசையாழொடுபாடுவாரீந்தனதுகில்விரித்தேந்துவார். *
சென்னியின்மீதுகொண்டாடுவார்தேறலுண்டுசெருக்குவார்

(இ-ள்) விறலியர்கள் தங்களுக்குச்சுற்றமாகிய பாணர்களோடு இன்னர மிதுனப்பக்ஷிகள்போல் சென்று தடாதகைப் பிராட்டியாரை வணங்கிச் சிறப்புடன்விவாகநடக்குங் களிப்பினால் இனிய இசையையுடையயாழ்வாசித்துக்கொண்டுபாடுவார்கள் அப்போது கொடுக்கும்பொருள்களை வஸ்திரம்விரித்து வாங்கிச்சிரசின்மேல்வைத்துக்கொண்டு கூத்தாடுவார்கள் - பின்னும் மதுவையுண்டுகளிப்படைவார்கள்.—(எ-று) கிளையென்றது-கலைவர்களை- பாணர் எனற்பாலது - பாண் எனக் குறைந்துநின்றது. (ருஎ)

மன்னவர்மகளிருமறையவர்மகளிரும்வந்துபொன்மாலையைத்
துன்னினர்சோபனம்வினவுவார்தோகைதன்மணவணி நோக்
குவார், கன்னிதனேவலர்வீசிய காசறைகர்ப்பூரவாசமென்,
பொன்னறுங்கலவையின்மெய்யெலாம்புதைபடவரொடும்
போவரால் .... .... .... .... .. .... .. .... *

(இ-ள்) அரசமாதர்களும் பிராமணஸ்திரீகளும் வந்து தடாதகைப்பிராட்டியின் தாயாகிய காஞ்சனமாலையைக்கண்டுசோபனம்வினவுகின்றார்கள்-தடாதகைப்பிராட்டியின் கல்யாணக்கோலத்தை நோக்குகின்றார்கள்-(இவ்வாறுவருகின்றவர்கள்) யாவரும் தடாதகைப்பிராட்டியின் ஏவலாளிகள்வீசுகின்ற மயிர்ச்சாந்தினாலும் பச்சைக்கருப்பூரவாசனைசேர்த்தமென்மையாகிய பொன்னிறமுள்ள நறிய கலப்புகள்கூடிய சந்தனக்குழம்புகளினாலும் தங்கள்சரீரமுழுவது மறையத்தக்க வளப்பத்தோடும் போவார்கள்.—(எ-று) (ருஅ)

அங்கனகஞ்செய்தசும்பினவாடைபொதிந்தனதோடவிழ்...*
தொங்கல்வளைந்தனமங்கையர்துள்ளியகவரியினுள்ளன ...*
கங்கையும்வாணியும்யமுனையுங்காவிரியும்பலதுறைதொறு ..*
மங்கலதூரியமார்ப்பனமதமலைமேலனவருவன .... .. *

(இ-ள்) கங்காநதிதீர்த்தமும் சாஸ்வதிநதிதீர்த்தமும் யமுனாநதிதீர்த்தமும் காவிரிநதிதீர்த்தமும் பலவாகிய இடங்களிலிருந்தும் அழகியபொன்னினாற்செய்யப்பட்ட குடங்களினுள் ளிருப்பவைகளாயும் அந்தக்குடங்களின்மேல் வஸ்திரங்கள் தரித்

கப்பட்டவைகளாயும் இதழ்கள்விரிந்த பூமாலைகளை அணியப்பட்டவைகளாயும்மாதர்களால்வீசப்படுகின்ற சாமரைகளினுள்ளிருப்பவைகளாயும்மங்கலவாத்தியங்கள்கோஷிக்கும்படியானைகளின்மேல் வைக்கப்பட்டவைகளாயும் வருவன.—(எ-று)

அங்கவர்மனைதொறுமணவினையனுகியதழனியமெனமறைப்.
புங்கவரினிதுணவறுசுவைப்போனகமடுவினைபுரிகுவா .... *
ரிங்கடுவனபலியடியருக்கெனயதிகளையெதிர்பணிகுவார் .. *
சங்கரனடியனாயெதிர்கொள்வார்சபரியைவிதிமுறைபுரிகுவார்

(இ-ள்) அந்தநகரத்திலிருப்பவர்கள் தங்கள் தங்கள்வீடுகளில் கல்யாணம்வந்ததனால் மிகுந்தகளிப்பையுடையவர்களாயப்பிராமணர்கள் இனிமையுடன் உண்ணும்படி அறுசுவைக்கறியோடுங்கூடிய சாதஞ்சமைக்குந்தொழிலைச்செய்விக்கின்றார்கள்,-இவிடத்தில்சுவாமிகளுக்காகப்பிக்ஷைசமைக்கப் படுகின்றதென்று யதிகளாயிருப்பவர்களைக்கண்டுபணிவார்கள்- சிவனடியார்களைக்கண்டு அவர்களுக்குச்செய்யவேண்டிய பூசையை முறைமைப்படி செய்வார்கள்.(எ-று)சுவை-ஆகுபெயர்.

இன்னணநகர்செயலணிசெயவிணையிலிமணமகன் மணவினைக்.
கன்னியுமனையவளென்னினிக்கடிநகர்செயுமெழில்வரனையா *
மென்னவரியநகர்செயலெழிலிணையெனவுரைசெய்வதெவனி
தன், முன்னிறைமகடமர்மணவணிமண்டபவினைசெயு முறை
சொல்வாம் .. ... .... ... .... .... .... .... *

(இ-ள்) இவ்வாறு நகரத்தை அலங்காரஞ்செய்ய-மாப்பிள்ளையானவர் (எத்தன்மையனென்றால்) ஒப்பில்லாதவர் - கல்யாணப்பெண்ணானவளும் ஒப்பில்லாதவளே என்றால் சிறப்புப்பொருந்திய இந்த நகரத்தில்செய்யப்படுகின்ற அழகிய அலங்காரத்தை அரிதாகியஎவ்விதநகரத்தின் அலங்காரமே யானாலுமொப்பாமென்று நாம்சொல்வதற்கு என்னிருக்கின்றது(ஒன்றுமில்லை) நகரத்தார் இவ்வாறு அலங்காரஞ்செய்வதற்குமுந்த டாதகைப் பிராட்டியாருடைய சுற்றத்தார் கல்யாணமண்டபத்தை அலங்காரஞ்செய்யு முறைமையைச் சொல்லுகின்றோம்.—(எ-று) (௯௧)

(வேறு.)

கருவிலான்முகிலூர்தியைப்பொருதநாள்கலைமதிமருமாட்டி*
செருவில்வாங்கிய விமானமாலைகளெனத்தெய்வதவனையெல்

லா, மருவியநந்நகர்வைகியதம்பிறைமடமகடனைக்காண்பான்,
அருவிநின்றெனநட்டனவொட்டிவான்ஞெருடுநிலைநெடுந்தேர்கள்

(இ-ள்) சந்திரவம்சத்திற்பிறந்த புத்திரியாகிய தடாதகைப் பிராட்டியார் தேவேந்திரனோடு போர்செய்துவெற்றிகொண்டநாளில் கவர்ந்தவிமானங்களை ஒழுங்குஈளாக வைத்ததுபோலாகவும் அந்தநகரத்தில் நிலையாயிராநின்றதங்களிறைவனுகியமலையரையனுடைய மகளைக்காணத் தெய்வத்தன்மையையுடைய மலைகளெல்லாந் தேடிக்கொண்டு வந்திருப்பதுபோலாகவும்-ஆகாயத்தைமுட்டித் தொடும்படியான நெடியநிலைத்தேர்களை நாட்டினார்கள்.—(எ-று) (௬உ)

பளிக்கினேழுயர் களிறுசெய்தமைத்த பொற்படியதுபசுஞ்சோதி, தெளிக்குநீலத்திருளிசணிரைமணித்தெற்றியதுநீரோர்சாய், வெளிக்குளாடிய மேவாவியப்பாவைபோன்மிளிர்பளிங்காற்சோதி, தளிர்க்கும்பித்தியநிடையிடைமரகதச்சாளரத்ததுமதோ.... .... .. .. .... .... ...... .. .. *

(இ-ள்) எழுமுப்புயர்ந்தயானைகளிருபுறத்திலும்பளிங்கினாற்செய்தமைத்த பொன் படியையுடையதும் பசிய சோதியைவிரிக்கு நீலமணிகளால் சிங்கங்களை வரிசையாகச்செய்துவைத்திராநின்றமணிகள்பதிக்கப்பட்டதிண்ணையையுடையதும்- சமீபத்தில்வந்து பொருந்தினவர்களுடையசாயலானது வெளிப்புறத்தில் தோன்றுகின்றசித்திரப்பாவைபோலப் பிரகாசிக்கும்படியான பளிங்கினாற்செய்யப்பட்டு ஒளிவிளங்கும் சுவரையுடையதும்-மத்தியில்மத்தியில் மரகதரத்தினத்தினால் செய்யப்பட்ட சாளரங்களையுடையதும்—(எ-று) (௬௩)

பல்லுருச்செய்தபவளக்காலாயிரம்படைத்ததிந்திரநீலக் ..... *
கல்லுருத்தலைப்போதியதாடகக்கவின்கொளுத்திரமேல .. *
நல்லுருக்கியசெம்மணித்துலாத்ததாலமுதுடற்பசுந்திங்கள் *
வில்லுருக்குகன்மாட்டமதாகியவேள்விமண்டபஞ்செய்தார். *

(இ-ள்) பல உருக்களைச்செய்துவைத்திராநின்ற ஆயிரம் பவளக்கால்களையுடையதும் - இந்திரநீலரத்தினங்களாற்செய்திராநின்றமேற்போதிகைகளையுடையதும்-பொன்னினாற்செய்யப்பட்டஉத்திரங்களைமேலேயுடையதும்-இருளைக்கெடுக்கும்பதுமராகமணிகளால்செய்யப்பட்டதுலாங்களையுடையதும்-அமுதமயமானஉடலையுடையகுளிர்ந்தசந்திரனுடையகிரணங்கள்

உருக்கும்படியான சந்திரகாந்தக்கல்லினால்செய்யப்பட்டமா டத்தையுடையதுமாகிய ஒரு கல்யாணமண்டபஞ்செய்தார்கள் (எ-று) ஆடகனகம்-ஒருபொருளிருசொல். (௲௪)

மூத்திற்பாளைசெய்தவிர்மரகதத்திரன் மொய்த்தபாசிலைதுப் பின், கொத்திற்றீம்பழம்வெண்பொனாற்கோழைாகுயின்றபூக மூந்துப்பின், றொத்திர்றாங்குபூச்செம்பொனாற்பழுக்குலைதூ க்கிப்பொன்னூற்றண்டு, வைத்துப்பாசொளிமரகதநெட்டிலை வாழையுநிரைவித்தார். .... .... .... .. .. .. .. *

(இ-ள்) மூத்துகளால்பாளைகள்செய்யப்பட்டுப்பிரகாசியா நின்றமரகதரத்தினங்களால் நிறைந்த பசிய இலைகளும்பவளங் களால் குலையாகியமதூரமுள்ளபழங்களும்வெள்ளியினால் கோ ழைாயுஞ்செய்யப்பட்ட கமுகமரங்களும்பவளத்தினால்கொத் தாகத்தொங்குகின்ற பூவும் செம்பொனால் குலைகள் தொங்கவி ட்டும்-பொன்னினால்தண்டுசெய்து பசிய ஒளியுள்ள மரகதம ணியினால் நெடிய இலைகளும் செய்யப்பட்ட வாழைமரங்களும் நிறைவித்தார்கள்.—(எ-று) (௲௫)

பித்திமாதவிசண்பகம்பாதிரிபிறவுமண்டபஞ்சூழப், பத்தியா வளர்த்தளிகள்வாய்திறந்துபண்பாடவின்மதுக்காலத், தத்தியா ய்மணங்கவர்ந்துசாளரந்தொறுந்தவழ்ந்தொழுகிளந்தென்ற, நித்தியாநிற்குமதுத்துளிதெளித்திடச்செய்தனருய்யானம் *

(இ-ள்) சிறுசண்பகமும்குருக்கத்தியும் பாதிரியும் சண்பக மும் மற்றுமுள்ளமரங்களும் மண்டபத்தைச்சூழ வரிசையாக வளர்த்து வண்டுகள்வாய்திறந்து இசைபாடவும் - இனியதே னொழுகவும் பார்த்து நறுநாற்றத்தைக்கவர்ந்துகொண்டு சாள ரங்கள்தோறும் தவழ்ந்துசெல்லுகின்ற தென்றற்காற்றுனது தித்திக்காநின்ற தேன்துளியைத்தெளிக்கவும்-பூந்தோட்டங்க ள்செய்தார்கள்.—(எ-று) பித்திகை-எனற்பாலது, பித்தி-என க் கடைகுறைந்துநின்றது. உய்யானமூங் குறைந்துநின்றது.

வேள்விச்சாலையும்வேதியுங்குண்டமுமேகலையொடுதொன் னூற், கேள்விச்சார்வினற்கண்டுகண்ணடிவிடைகிளர்சுடர்சிவச்ச, நீள்விற்சாமரம்வலம்புரிசுவத்திகநிறைகுடமெனவெட்டு, வாள் விட்டோங்குமங்கலத்தொழில்செய்பொறிவகையினுனிருமித் தார். .. .... ... .. .... .... .. .. .... .... ....*

(இ-ள்) யாகசாலையும் வேதிகையும் ஓமகுண்டமும் அதைச் சேர்ந்த மேகலையும் பழமையாகிய ஆகமத்தின் கேள்விச்சாரியினால் செய்தமைத்துக்-கண்ணாடி ரிஷபம் விளங்குகின்ற தீபம் ஸ்ரீவச்சம்மிருந்த சிங்காசனத்தையுடைய சாமரை வலம்புரிச்சங்கம் சுவத்திகம் பூர்ணகும்பம் என்னும் ஒளிவிட்டோங்குகின்ற அஷ்டமங்கலங்களை எழுதுகின்ற சித்திரவகையினால் ஏற்படுத்தினார்கள் (எ-று) மேகலை என்பது - ஓமகுண்டத்தின் வரம்புகள். ஸ்ரீவச்சம் என்பது - குழந்தையை இடையில்வைத்துக்கொண்டிருக்கும் ஸ்திரீரூபமாம். சுவத்திகம் என்பது - ஒருமண்டபவடிவமாயிருப்பதாம். (௬௭)

மணங்கொள்சாந்தொடுகுங்குமப்போதளாய் மான்மதம்பனி
நீர்தோய்த், திணங்குசேறுசெய்திருநிலந்தடவிவா னிரவிமண்
டலநாணப், பணங்கொளுகமாமணிவிளக்கிருகையும் பாவைக
ளெடுத்தேந்தக், கணங்கொடாரகையெனநவமணிகுயில்கம்ப
லம்விதானித்தார் .... .. .. .. .. .. .... ... .. *

(இ-ள்) வாசனைபொருந்திய சந்தனத்தோடு குங்குமப்பூவைக்கலந்து கஸ்தூரியும் பனிநீருஞ்சேர்த்து ஒன்றுபடக்குழம்பாக்கி அந்தக்குழம்பைப் பெருமைபொருந்திய நிலத்தில் மெழுகி ஆகாயத்திற்செல்லுகின்ற சூரியமண்டலம் நாணும்படி படம்பொருந்திய நாகரத்தினங்களாகிய தீபங்களை இரண்டுபுறத்திலும் பிரதிமைகளேந்திக்கொண்டு நிற்கக் கூட்டமாகிய நக்ஷத்திரம்போல் நவரத்தினங்களாற் செய்தமைத்திராநின்ற கம்பலங்களை மேலேகட்டினார்கள்.—(எ-று) (௬௮)

செம்பொற்கோயின்முன் சேண்டொடுகாவணந்திசையெலாம்
விழுங்கச்செய், தம்பொற்பாலிகைப்பாண்டில்வாய்முளைதெ
ளித்தம்புயத்தவனாதி, யும்பர்க்கேற்றபொற்கம்பலமேல்விரித்
துள்ளுறத்தவிசிட்டுத், தும்பைத்தாழ்சடையான்றமர்க்காதன
ஞ்சூழவிட்டதனாட்பண் .... .... .. .. .. . .. ..*

(இ-ள்) செம்பொன்னாற்செய்யப்பட்ட அந்தக்கல்யாணமண்டபத்தின்முன் ஆகாயத்தைத்தொடும்படியாகவும் திக்குகளெல்லாமறையும்படியாகவும்பந்தல்போடுவித்துப்பொன்னாற்செய்து வட்டமாகியபாலிகையினிடத்தில்முளைதெளித்துப்பிரமதேவன்முதலாகிய தேவர்களிருக்கத்தக்கதாகிய கம்பலத்தை மேலேவிரித்து அதற்குள்ளே ஆசனமிட்டுத் தும்பைப்பூ

மாலையணிந்த தாழ்ந்தசடையையுடைய பரமசிவன் தமராகிய அடியார்களிருக்கச் சுற்றிலும் ஆசனமிட்டு அதன்மத்தியில்—(எ-று) (சுகூ)

கற்பகத்தருவயிரவாளரிட்பிடர்களைப்பொற்குறடேற்றி, யெற்படுத்துகிராற்குடஞ்சதுரமாவியற்றியவெருத்தத் தூண், விற்படுப்பளிக்குத்திரட்டூப்பிறுல்விடங்கமேனிலமூன்றுப், பொற்படநூல்வழிவிமானம்பன்மணிகளாற்பொலியச்செய்துள்ளாக *

(இ-ள்) கற்பகவிருக்ஷங்கள் தந்த வயிரமணியாலியன்ற ஒளிபொருந்திய சிங்கங்களின் பிடரியின்மேல் பொருந்தும்படி பொற்பலகையைவைத்து ஒளிபொருந்திய பவளத்திருக்சதுரமாகக்குடஞ்செய்த கழுத்தினையுடைய தூண்களும்- ஒளிபொருந்திய பளிங்கினுலுத்திரங்களும்-பவளத்தினுல் கொடுங்கைகளும்மேனிலமூன்றும் அழகும்பொருந்தச்சிற்பசாஸ்திரமுறைமைப்படி பலரத்தினங்களால் பிரகாசிக்கத்தக்கதாக விமானஞ்செய்து அதிலுள்ளாக.—(எ-று) (எ௰)

அங்கமாறுமேகால்காளாய்முதலெழுத்தம்பொற்பீடிகையாகித், துங்கநான்மறைநூல்களேநித்திலத்தொடுத்தலைசதாம்பாகி, யெங்களுயகனெம்பெருமாட்டியோடிருப்பதற்குருக்கொண்டு, தங்கினுலென நவமணிகுயின்றபொற்றவிசதுசமைத்திட்டார்.... .. .. ........ .. .. .... .... .. *

(இ-ள்) ஆறங்கங்களுங் கால்களாயும் பிரணவமானது அழகியபொற்பீடமாகியும் பரிசுத்தமாகிய நான்குவேதசாஸ்திரங்களே முத்துகளால் தொடுத்து அசைகின்ற வடமாகியும் எங்களிறைவனுகிய பரமசிவன் தடாதகைப்பிராட்டியுடன் வீற்றிருப்பதற்கு உருவங்கொண்டுபொருந்தியதுபோல் நவரத்தினங்கள்பதித்த பொற்றவிசுசெய்திட்டார்கள்.—(எ-று) (எக)

புரந்தரன்றருகற்பகம்பொலந்துகில்பூண்முதலியநல்கச் ....*
சுரந்தரும்பெறலமுதமைவகையறுசுவையுறுமுதலாகப் .. *
பரந்ததெய்வவான்பயப்பசிந்தாமணிபற்பலவுஞ்சுரந்தித் .. *
திரந்துவேண்டுவதராத்தாவிட்டூருரிந்திரனைகர்நாண .... .. *

(இ-ள்) தேவேந்திரன் தருகின்ற கற்பகவிருக்ஷங்கள் பீதாம்பரங்களும் ஆபரணங்களுமுதலானவைகளைக்கொடுக்கவும், சுரந்துபெறுதற்கரிய அமுதமும் அறுசுவையையுடைய ஐவ

கையுண்டிகளு முதலாக மிகுந்தபொருள்களைக் காமதேனு
கொடுப்பவும் நினைத்திரந்து வேண்டிய பலபொருள்களையுஞ்
சிந்தாமணிகொடுக்கவுஞ்சேர்த்தார்கள் இந்திரனுடைய நகர
மீ நாணும்படி.— எ-று) ஐவகையுணவாவது - உண்டல்முதலி
ய நான்குடன் - உறிஞ்சுதலுமாம் (எஉ)

தென்னர்சேகரன் திருமகடிருமணத்திருமுகம்வரவேற்று, மன்
னர்வந்தெதிர்தொழுதுகைக்கொண்டுதம்மணிமுடிமிசையேற்
றி, யன்னவாசகங்கேட்டனர்கொணர்ந்தவர்க்கருங்கலந்துகின
ல்கி, முன்னுகீர்த்தெழுகளிப்புறமனத்தினுமுந்தினர்வழிக்கொ
ள்வார் .... .... .... .... .... .... .... .... *

(இ-ள்) பாண்டியர்குலத்துக்கு மகுடம்போல்விளங்குகின்
றவனாகிய மலயத்துவசபாண்டியனுடைய சிறந்தபுத்திரியாகி
ய தடாதகைப்பிராட்டியின் திருமணத்தைக்குறித்த திருமுகம்
வர அந்தந்தத் தேசத்தரசர்கள் எதிரேற்று அதனைத்தொழு
து கையில்வாங்கிக்கொண்டு தங்கள் மகுடத்தின்மேல் ஏற்றி
அதிலெழுதியிருக்கும் வாசகத்தைக்கேட்டு அத்திருமுகங்கொ
ண்டுவந்தவர்களுக்குக்கிடைத்தற்கரிய ஆபரணங்களையும்வஸ்தி
ரங்களையுங்கொடுத்து முன்னேயெழுத்துக்கொண்டுசெல்கின்ற
களிப்புண்டாக மனதைப்பார்க்கினும் விரைந்தவர்களாய்வழிக்
கொண்டார்கள்.—(எ-று) (எங)

கொங்கர்சிங்களர்பல்லவர்வில்லவர்கோசலர்பாஞ்சாலர் .... *
வங்கர்சோனகர்சீனர்கள்சாளுவர்மாளவர்காம்போச .... *
ரங்கர்மாகதராரியர்நேரியரவந்தியர்வைதர்ப்பர் .... .... *
கங்கர்கொங்கணர்விராடர்கண்மராடர்கள்கருநடர்குருநாடர்.

(இ-ள்) கொங்குதேசத்தாரும்-சிங்களதேசத்தாரும்- பல்ல
வதேசத்தாரும்-வில்லவதேசத்தாரும்- கோசலதேசத்தாரும்-
பாஞ்சாலதேசத்தாரும்-வங்கதேசத்தாரும்-சோனகதேசத்தா
ரும்-சீனதேசத்தாரும்-சாளுவதேசத்தாரும்- மாளவதேசத்தா
ரும்-காம்போசதேசத்தாரும்-அங்கதேசத்தாரும்- மாகததேச
த்தாரும்- ஆரியதேசத்தாரும்-நேரியதேசத்தாரும்- அவந்தி
தேசத்தாரும்- விதர்ப்பதேசத்தாரும் - கங்கதேசத்தாரும்-
கொங்கணதேசத்தாரும்-விராடதேசத்தாரும்- மராடதேசத்
தாரும் - கருநடதேசத்தாரும்- குருதேசத்தாரும்;—(எ-று)

கலிங்கர்சாவகர்கூவிளரொட்டியர்கடாரர்கள்காந்தாரர், குலிங்கர்கேகயர் விதேகர்கள்பௌரவர் கொல்லர்கள்கல்யாணர், தெலுங்கர்குர்ச்சரர்மச்சர்கண்மிலேச்சர்கள் செஞ்சையர்முதலேனைப், புலங்கொண்மன்னருந்துறைதொறுமிடைந்துபார் புதைபடவருகின்றார் ..... .... ... .... .... ..... *

(இ-ள்) கலிங்கதேசத்தாரும்-சாவகதேசத்தாரும்-கூவிளதேசத்தாரும்-ஒட்டியதேசத்தாரும்-கடாரதேசத்தாரும்-காந்தாரதேசத்தாரும்-குலிங்கதேசத்தாரும்-கேகயதேசத்தாரும்-விதேகதேசத்தாரும்-பௌரவதேசத்தாரும்-கொல்லதேசத்தாரும்-கல்யாணதேசத்தாரும்-தெலுங்குதேசத்தாரும்-குர்ச்சரதேசத்தாரும்-மச்சதேசத்தாரும்-மிலேச்சதேசத்தாரும்-செஞ்சையதேசத்தாரும்முதலாகிய மற்றைத்தேசத்தரசர்களும் வழிகள்தோறும் நெருங்கிப் பூமிமறையும்படிவருகின்றார்கள்--(எ-று) (௭௫)

இத்தகைப்பலதேயமன்னவர்களுமெண்ணிடம்பெறுதின்றிப் பைத்தவாழிபோனிலமகண்முதுகிறப்பரந்ததானையராகித், தத்தநாட்டுளபலவகைவளனுமுந்தழீஇப்பலநெறிதோறு, மொய்த்துவந்தனர்செழியர்கோன்றிருமகண்முரசதிர் மணவூர்

(இ-ள்) இப்போதுசொல்லிவந்தபெருமையினையுடையபலதேசத்தரசர்களும் எள்ளிடுதற்கும்இடம்பெறுவண்ணம் நெருங்கிக்குளிர்ந்த சமுத்திரம்போலப்பூமிதேவியின்முதுகிறப்பரந்துவருகின்றசேனைகளையுடையவர்களாய்த்தங்கள் தங்கள் நாட்டிலுள்ள பலவகையானபொருள்களும் சேகரித்துக்கொண்டு மார்க்கங்கள்தோறும் நெருங்கிவந்தார்கள் மலயத்துவசபாண்டியராசன்புத்திரியாகிய தடாதகைப்பிராட்டியின்பேரிகைமுதலாகியவாத்தியங்கள் சத்திக்கும்படியான கல்யாணநகரத்தில்--(எ-று) (௭௬)

வந்தகாவலருடையர்சென்றுணர்த்தினர்வருகெனவருளுப்பச், சந்தவாளரிப்பிடாணைமீதிறந்தமைத்தருள் பழுத்தோங்குங், கந்தநாண்மலர்க்கொம்பினைக்கண்டுகண்களிப்புற முடித்தாமஞ், சிந்தவீழ்ந்தருள்சுரந்திடத் தொழுதுபோய்த் திருந்துதம்மிடம்புக்கார் .... ....... ........ ....... ... .. .. *

(இ-ள்) இப்படியாகவந்த அரசர்கள்வாயிற்காவலாளிகள்தடாதகைப்பிராட்டியின்சமூகத்திற்போயறிவித்துஉத்தரவுபெ

ற்றுக்கொண்டுவந்து வாருங்களென்று அழைத்துக்கொண்டு போய் அருகில்விட-அழகிய ஒளிபொருந்தியசிங்காசனத்தின்பிடரியிலிராநின்ற ஆசனத்தின்மேல் தர்மந்தழைத்து அருள்பழுத்து மிருந்தவாசனைபொருந்தியபூங்கொம்புபோன்றதடாதகைப்பிராட்டியாரைத்தரிசித்து இரண்டுகண்களும் களிப்படையவும் மகுடத்திலணிந்த பூமாலைகள்சிந்தவும் வீழ்ந்து கிருபைபெருகும்படிதொழுது (உத்தரவுபெற்றுக்கொண்டு) போய்த் திருத்தமாகிய தங்கள் தங்கள் விடுதியிற்சேர்ந்தார்கள். (எ-று)

வளைவளங்களும்புறவினில்வளங்களுமருதத்தண்பணைவேலித்,
தளைவளங்களுஞ்சலதிவாய்நடைக்கலந்தருவளங்களுமீண்டி *
யுளைவரம்பறமங்கலம்பொலிந்ததிவ்வூரினிறால்வேதக்.. [ன்.
களைகடந்தவன்றிருமணஞ்செயவரு காட்சியைப்பகர்கின்றே

(இ-ள்) மலையிலுள்ளபொருள்களும் காட்டிலுள்ளபொருள்களும் குளிர்ச்சிபொருந்திய மருதநிலத்திலிருக்கும் தண்ணியவயனிலத்திலுண்டாகியபொருள்களும் சமுத்திரத்திற்செல்லுகின்ற கப்பல்கள்தருகின்றபொருள்களும்நிறைந்துசொல்லளவுக்கெட்டாதவண்ணம் இந்தமதுரைநகரமானது பொலிவடைந்தது-இனி நான்குவேதத்தின்முடிவையுங்கடந்த பரமசிவன் திருமணஞ்செய்யவருகின்றகாட்சியைச் சொல்கின்றேன். (எ-று) (எஅ)

ஏகநாயகிமீண்டபின்ஞாட்பிகத்திரசிதகிரியெய்தி ........ *
நாகநாயகமணியணிசுந்தரநாயகனுயிர்க்கெல்லாம் .... .... *
போகநாயகனகிப்போகம்புரிபுணர்ப்பறிந்தருணந்தி ... *
மாகநாயகன்மாலயனுருத்திரர்வரவின்மேன்மனம்வைத்தான்

(இ-ள்) ஏகநாயகியாகிய தடாதகைப்பிராட்டியார்சென்றபின்பு யுத்தகளத்தைவிட்டுநீங்கி வெள்ளிமலையாகிய கயிலாசகிரியை அடைந்து ஆதிசேஷனாகிய திருவாபரணத்தையணிந்திராநின்ற சோமசுந்தரக்கடவுள் உயிர்களுக்கெல்லாம் போகநாயகனாகிப்போகத்தைத்தரும்தொடர்ச்சியை அறிந்து அருளிச்செய்கின்றநந்தியென்னுங்கயிலாசபதியானவர்தேவேந்திரன்மகாவிஷ்ணு பிரமதேவன் உருத்திரர்கள் என்னும் இவர்கள் வரவேண்டுமென்பதைத் திருவுள்ளத்திற்கொண்டருளி.—(எ-று)

சங்குகன்னனையாதியகணதிபர்தமைவிடுத்தனனன்னூர் ..[தி
செங்கணேற்றவர்மாலயன்முதற்பெருந்தேவர்வான்பதமெய்

யெங்கணாயகன்றிருமணச்சோபனமியம்பினாரதுகேட்டுப் [ர்
பொங்குகின்றபேரன்புபின்றள்ளுறப்பொள்ளென வருகின்றா

(இ-ள்) சங்குகன்னன்முதலாகியகணாதிபர்களை அனுப்பினார்-அவர்கள் செங்கண்ணையுடைய ரிஷபவாகனங்களுள்ள உருத்திரர்கள் மகாவிஷ்ணு,பிர்மதேவன்முதலான மேன்மைபொருந்தியகடவுளர்களிருக்கும் சிறப்புள்ளபதவிகளிற்போய்க் கயிலாசபதியின் திருக்கல்யாண மகோற்சவச் சோபனத்தைச் சொல்லினார்கள் அந்தச்சேதியைக்கேட்டு மேலிடுகின்ற அன்பானது பின்னின்றுதள்ள அதிகவிரைவாக வருகின்றார்கள்.—(எ-று) (அ௰)

அஞ்சுகோடியோசனைபுகைந்திருமடங்கழன்றவர்தலைப்போ
ரஞ்சுதீயுருத்திரர்புடையுடுத்தவரழற்கணாற்பூதங்க . . . . . . [வீ
ரஞ்சுநூறுருத்திராண்டத்துச்சியரரியயன்முதற்றேவ . . . . *
ரஞ்சுமாணையுமாற்றலும்படைத்தவரடுகுறட்படைவீரர். . . . *

(இ-ள்) அஞ்சுகோடியோசனைதூரம்புகைந்து பத்துகோடியோசனைதூரம் தீச்சிகைவிட்டு விளங்கும்படியிராநின்ற காலாக்கினிருத்திரர்களும் அவர்களையொத்தவர்களாயவர்களைச் சூழ்ந்திராநின்ற பத்துருத்திரர்களும் தீப்பொறிசொரிகின்றகண்களையுடைய நால்வகைப்பூதங்களும் அஞ்சத்தக்கவர்களாக அண்டமுகட்டிலிருக்கும் நூறுருத்திரர்களும் விஷ்ணு பிர்மமதேவன்முதலாகிய கடவுளர்களும் பயப்படுகின்ற ஆக்கினையும் வல்லமையும்பெற்றவர்களாய் எதிர்த்தவர்களைக்கொல்லும் பூதப்படைவீரர்களும்.—(எ-று) (அ௧)

புத்தியட்டகர்நாலிருகோடிமேற்புகப்பெய்தநரகங்கள் . . . *
பத்திரட்டியுங்காப்பவர்பாரிடப்படையுடைக்கூன்மாண்டர் *
சத்தியச்சிவபரஞ்சுடருதவியசதவுருத்திரன்று . . . . . . . . *
ருப்பத்தளித்தவீரம்பதுகோடியருருத்திரர்கணநாதர் . . . . *

(இ-ள்) அஷ்டவித்தியேசுவரர்களும் இருபத்தெட்டுக்கோடிநரகங்களையுங் காப்பவர்களும் பூதப்படைகளையுடைய கூர்மாண்டரும் உண்மையாகியசிவபரஞ்சுடரருளிய நூறுருத்திரர்களும் அவர்கள் அருளிச்செய்த நூறுகோடிருத்திரர்களும் கணநாதர்களும்.—(எ-று) (அ௨)

பட்டகாரியாயரவணிபவர்பசுபதியுருத்திராதி . . . . . . . . . . *
யட்டமூர்த்திகண்மேருவின்வீர்சடாடகர்தோமேடேந்து . . *

மட்டறுமலர்மகன்செருக்கடங்கிடமயங்கியவிதிதேற்ற....*
நிட்டையாலவனெற்றியிற்றோன்றியநீலலோகிதநாதர்....*

(இ-ள்) விஷம்பொருந்திய வாயையுடைய சர்ப்பாபரணங்களணிந்தவர்களாகிய பசுபதி ருத்திரர்கள் முதலான அஷ்டமூர்த்திகளும், மகமேருவைப்போலவிளங்குகின்ற ஒளியையுடைய ஆடம்கேசுவரர்களும் இதழ்கள்பொருந்திய தேனிடைவிடாதுபெருகுகின்ற தாமரைமலரிலிருக்கும் பிரம்மதேவனுடைய இறுமாப்படங்கும்படி அவன்மறந்துவிட்டசிருஷ்டித்தொழிலைத்தெரிவிக்கும்படி நிஷ்டையினால் அவனெற்றியில் உண்டான நீலலோகிதருத்திரரும்.—(எ-று) (அரு)

பாலமேற்றசெந்தழல்விழியுருத்திரர்பதினொருபெயர்வாகைச்
சூலமேற்றகங்காளகபாலியர்துரகதநெடுங்காரி.... ....*
நீலமேற்றமைபங்கஞ்சுகப்போர்வையினடியவர்திருவாணக் *
கோலமேற்றவரெண்மர்ஞாளிப்புறங்கொண்டகேத்திரபாலர்.

(இ-ள்) நெற்றியில் தீக்கண்ணினையுடைய ஏகாதசருத்திரர்களும், வெற்றிபொருந்திய சூலாயுதமும் கங்காளமும் கபாலமும் ஏந்தியருத்திரர்களும், குதிரையேறிச்செலுத்துகின்றசாத்தாவும் நீலநிறத்தையுடைய சட்டையணிந்தருத்திரர்களும் திருவாணிகளாய்ச்சுவானமேற்கொண்டிராநின்ற எட்டுக்ஷேத்திரபாலர்களும்.—(எ-று) (அசு)

செய்யதாமரைக்கண்ணுடைக்கரியவன்செம்மலர்மணிப்பீடத்
தையன்வாசவனாதியெண்டிசைப்புலத்தமரரெண்வசுத்தேவர் *
மையில்கேள்விசாலெழேழ்மருத்துகண் மருத்துவரிருவோர்
வான், வெய்யவாள்வழங்காறிரண்டருக்கரோர்வெண்சுடர்மதி
ச்செல்வன் ..........................*

(இ-ள்) செந்தாமரைக்கண்ணினையுடைய மகாவிஷ்ணுவும் அழகியசெந்தாமரைமலராகிய ஆசனத்தில்வீற்றிருக்கும் பிரம்மதேவனும் தேவேந்திரன்முதலாகிய அஷ்டதிக்குப்பாலகர்களும் அஷ்டவசுக்களும் நல்லகேள்விகளில் மிகுந்த ஏழேழுமருத்துகளும் அச்சுவினிதேவர்களிருவரும் ஆகாயத்தினிடத்தில் வெவ்விதானகிரணங்களைப் பரப்புகின்ற பன்னிரண்டுசூரியர்களும் வெண்கதிரையுடையசந்திரனும்.—(எ-று) (அஎ)

கையுங்கால்களுங்கண்பெற்றுக்கதிபெற்றகரும்புலிமுனிச்செல்
வன், பையராமுடிப்பதஞ்சலிபாற்கடல்பருகிமாதவன்சென்னி

செய்யதாள்வைத்தசிறுமுனிகுறுமுனிசிவமுனைர்சனகாதி; மெ
ய்யுணர்ச்சியோர்வாமதேவன்சுகன்வியாதனாரதன்மன்றே. *

(இ-ள்) கைவிரல்களிலும் கால்விரல்களிலும் கண்கள்பெ
ற்று மோக்ஷமடைந்தவியாக்கிரபாதமுனிவரும், படமுள்ளசர்
ப்பரூபமாகிய பதஞ்சலிமுனிவரும், பாற்கடலையுண்டுமாதவனா
கிய கிருஷ்ணமூர்த்தியின் திருமுடியில் தமதுதிருவடியைவைத்
தருளிச்செய்த உபமன்னியமுனிவரும், அகஸ்தியரும் மெய்ஞ்
ஞானநிலையுணர்ந்தசனகர்முதலாகிய நான்குமுனிவர்களும், வா
மதேவமுனிவரும், சுகமுனிவரும், வியாசமுனிவரும் நாரதமு
னிவரும்.—(எ-று) (அசு)

எழுவரன்னையர்சித்தர்விச்சாதரரியக்கர்கின்னரர்வேத.... *
முழுவரம்புணர்முனிவர்யோகியர்மணிமுடித்தலைப்பலநாகர் *
வழுவில்வான்றவவலியுடைநிருதர்வாள்வலியுடையசுரேசர்.. *
குழுவொடும்பயில்பூதவேதாளர்வெங்கூளிகளரமாதர்.... *

(இ-ள்) சத்தமாதர்களும்- சித்தர்களும்- விச்சாதரர்களும்-
இயக்கர்களும்-கின்னரர்களும்- வேதங்களினளவுகளையெல்லா
ம் உணர்ந்தமுனிவர்களும்-யோகியர்களும்-மாணிக்கமுள்ளப
ணாமுடியையுடைய பலநாகராசாக்களும்-மாறுபடாத தவவலி
மையுடைய நிருதர்களும்-வாள்வலிமையுடைய அசுரேசர்களு
ம்-கூட்டங்கூட்டமாயிராநின்றபூதவேதாளர்களும்-வெவ்விய
கூளிகளும் தெய்வஸ்திரீகளும்.—(எ-று) (அஎ)

ஆண்டிரேடயனம்பருவந்திங்களாறிரண்டிருபக்க.... [டுமீ
ம்னடுமைம்பொழுதியோகங்கள்கரணங்களிராப்பகலிவற்றே
பூண்டநாழிகைகணமுதற்காலங்கள்பொருகடலெண்டிக்கு.. *
நீண்டமால்வரைதிக்கயமேகமின்னிமிர்ந்தவைம்பெரும்பூதம்

(இ-ள்) அறுபதுவருஷங்களும்- இரண்டயனங்களும்- ஆறு
காலங்களும்-பன்னிரண்டுமாதங்களும் - இரண்டுபக்ஷங்களும்-
ஐந்துபொழுதுகளும்-யோகங்களும்-கரணங்களும்-இராப்ப
கல்களும் இவைகளோடுபொருந்திய நாழிகைகளும், கணமுத
லாகியகாலங்களும்-அலைமோதுகின்ற எழுகடல்களும்-எழுந
திகளும்-அஷ்டதிக்குகளும்-நீண்ட அஷ்டகுலபர்வதங்களும்-
அஷ்டகசங்களும்- சத்தமேகங்களும்-மின்னல்களும்-ஓங்கிய
பஞ்சபூதங்களும்.—(எ-று) (அஅ)

மந்திரம்புவனங்கடத்துவங்கலைவருணங்கள்பதம்வேதந் .. *
தந்திரம்பலசமயநூல்புறந்தழீஇச்சார்ந்தநூறருமாதி.... *
முந்திரங்கியசதுவிதஞ்சரியையேமுதலியசதுட்பாத......*
மிந்திரங்குநீர்முடியடியரடியவுரிச்சியாவெண்சித்தி........*

(இ-ள்) சத்தகோடிமகாமந்திரங்களும் இருநூற்றெழுபத்துநாலு புவனங்களும் முப்பத்தாறுதத்துவங்களும் பஞ்சகலைகளும் ஐம்பத்தொரு அக்ஷரங்களும் எண்பத்துநாலு பதங்களும் நான்குவேதங்களும் தந்திரங்களும் பலசமயசாஸ்திரங்களும் புறச்சமயசாஸ்திரங்களும் முதன்மையாகச் சொல்லப்பட்ட அறமுதலாகிய நான்குறுதிப்பொருள்களும் சரியைமுதலாகிய நான்குபாதங்களும் சந்திரனையுங் கங்கையாகிய நீரையும் அணிந்திராநின்ற சடைமுடியையுடைய பரமசிவனடியார்கள் விரும்பாத அஷ்டமாசித்திகளும்.—(எ-று) (௬௧)

ஆயிரங்கடலனையவாய்ப்பரந்தெழுமாயிரமனீகத்து.. ....*
ளாயிரங்கதிரனையராயுருத்திரரந்தரத்தவரண்ட,.... ......*
மாயிரந்தகர்பட்டெனத்துந்துபியாயிரங்கலந்தார்ப்ப ....*
வாயிரஞ்சதகோடியோசனைவழியணாக்கணத்திடைச்செல்வார்

(இ-ள்) அனேகங்கடல்போலவனவாய்ப் பரந்தெழுகின்ற அனேகம் சேனைகளுக்குள் அனேகஞ் சூரியர்கள்போல் உருத்திரர்களும் தேவர்களும் அண்டமானது அனேகம் துகள்படுமென்றுசொல்ல-அனேகம்வாத்தியங்கள்முழங்கும்படி ஆயிரநூறுகோடியோசனை வழியை அரைக்ஷணத்தில்(கடந்து) செல்லுகின்றார்கள்.—(எ-று) (௬௨)

சித்தந்தேர்முனிவேந்தருந்தேவருஞ்சிவனுருத்தரித்தோருந்,
தத்தந்தேர்முதலூர்தியர்வார்திகழ்சந்தனமணிக்கொங்கைக் *
கொத்தந்தேமலர்க்குழன்மனையாரொடுங்குளிர்விசும்பாருஞ்
செல், றத்தந்தேரிடையாள்பங்கனணிவலாக்கணியராய்வருகி
ன்றார் ....................................*

(இ-ள்) யாவருடைய உள்ளத்தையுமுணரு முனிசிரேஷ்டர்களும், தேவர்களும், சிவசாரூப்பியம் பெற்றவர்களும், தங்கள்தங்கள் தேர்முதலாகிய வாகனங்களையுடையவர்களும், கச்சான துபிரகாசியாநின்ற சந்தனக்குழம்பும் ரத்தினமாலையுமணிந்த ஸ்தனங்களையும் கொத்தாகிய அழகிய பூமாலையணிந்த

அநேகத்தையுமுடைய மனைவியர்களோடு குளிர்ச்சிபொருந்திய ஆகாசமானது வழியாகச்சென்று ஒருபாகத்தில் தேனையொத்த இடையினையுடைய பார்வதியைவைத்துக்கொண்டிருக்கின்ற பரமசிவன் வீற்றிராநின்றஅழகியகயிலாசகிரிக்குச் சமீபமாக வருகின்றார்கள்.—(எ-று) (௬௪)

இழிந்தவூர்தியர்பணிந்தெழும்யாக்கையரிறைபுகழ்த்திருநாமம்,
மொழிந்தநாவினர்பொடிப்பெழுமெய்யினர் முகிழ்ந்தகைமுடியேறக்,
கழிந்தவன்பினர்கண்முதற்புலன்கட்குங்கருணைவான்சுவையூறப்,
பொழிந்தவானந்தத்தேனுறைதிருமலைப்புறத்துவண்டெனமொய்த்தார் ........................ *

(இ-ள்) இவ்வாறுவருகின்றவர்கள் வாகனங்களை விட்டிழிந்தவர்களாய்ச் சரீரமானது பூமியில்பொருந்தும்படி பணிந்தெழுந்து பரமசிவனுடைய புகழ்த்திருநாமங்களை யெடுத்து நாவினால்துதிசெய்து புளகமுற்ற சரீரத்தையுடையவர்களாயும் இரண்டுகைகளையுங் குவித்துச் சிரசின்மேல் வைத்துக்கொண்டிருந்தஅன்பையுடையவர்களாயும் நேத்திரமுதலாகிய பஞ்சேந்திரியங்களுக்கும் கருணையாகிய மேன்மைபொருந்திய மதுரமானதுஊறும்படிபொழிந்த ஆனந்தத்தேனாகிய பரமசிவன்வீற்றிருக்கும் திருமலைச்சாரலில் வண்டுகள்போல் ஆர்த்துக்கொண்டுவந்து மொய்த்தார்கள்.—(எ-று) (௬௫)

*விரவுவானவர்நெருக்கறவொதுக்குவான்வேத்திரப்படையோச்சி, யரவுவார்சடைநந்தியெம்பிரான்வரமணிமுடிதாக்கப்,
பரவுதூளியிற்புதைபடுகயிலையம்பருப்பதம்பகல்கானு, மிரவிமண்டிலத்தொடுங்குநாளொடுங்கியவிந்துமண்டிலமானும். *

(இ-ள்) தெரிசனத்துக்காகவந்து சேர்ந்திருக்குந் தேவர்களைநெருக்கமற ஒதுக்கக் கையிலிருக்கும்பிரம்பினைவீசிச்சர்ப்பமணிந்த நீண்டசடையினையுடைய எம்முடைய கடவுளாகியநந்திதேவரானவர் அந்தத் தேவர்களணிந்தரத்தினகிரீடங்களில் தாக்குதலால் பரவுகின்ற தூளியினால் மறைகின்ற கயிலைமலையானது கதிர்களை விரிக்கின்ற சூரியமண்டிலத்தில் அமாவாசைத்தினத்தில் ஒடுங்குகின்ற சந்திரமண்டிலத்தை யொப்பாகும்.
(எ-று) (௬௬)

வந்தவானவர்புறநிற்பநந்தியெம்வள்ளலங்குள்ளெய்தி, யெந்தைதாள்பணிந்தையவிண்ணவரெலாமீண்டினுரெனவிண்டு,

தந்திடென்னவந்தழைத்துவேத்திரத்திறற்றாதரந்தெரிந்து
ய்ப்ப, முந்திமுந்திவந்திறைஞ்சினர்சேவடிமுண்டகமுடிசூட*

(இ-ள்) வந்ததேவர்கள்வெளியிலிருக்க நந்தியென்னலாகியநந்திதேவரானவர் உள்ளேசென்று நம்மையாளுகிய கயிலாயபதியின் பாதத்தைவணங்கி ஐயனே தேவர்களெல்லாரும் வந்திருக்கிறார்களென்று சொல்ல - அவர்களை உள்ளே அழைத்துக்கொண்டுவாவென்று கட்டளையிட - வந் தழைத்துக்கொண்டுபோய்த் தராதம்மியமறிந்து தம்முடையகையிலிருக்கும் பிரம்பினால்குறித்து ஒவ்வொருவராக அனுப்ப - ஒருவர்க்குமுன்னொருவராகச்சென்று தங்களுடையமுடிகள் கயிலாயபதியினுடைய பாதத்தாமரைகளைச்சூடும்படி பணிந்தார்கள்.—(எ-று)

தீர்த்தன்முன்பணிந்தேத்துகின்றார்களிற்சிலர்க்குத்தன்றிருவா
யின், வார்த்தைநல்கியுஞ்சிலர்க்கருண்முகிழ்நகைவழங்கியுஞ்சி
லர்க்குக்கண், பார்த்துநீண்முடியசைத்துஞ்சிலர்க்கருட்பரிசி
றந்தெழுந்தண்டங், காத்தகண்டனோர் மண்டபத்திடைபுக்கு
க்கடிமணக்கவின்கொள்வான் ...... ..................*

(இ-ள்) பரமசிவனுடைய சன்னிதியில்பணிந்து துதிசெய்கின்றவர்களில் சிலபேருக்குத் திருவாயினால் வார்த்தை அருளிச்செய்தும், சிலருக்குக்கிருபையோடுங்கூடிய புன்னகையருளிச்செய்தும்; சிலருக்குக்கிருபாநோக்கம் அருளிச்செய்தும், சிலருக்குத் திருமுடியை அசைத்தும், இவ்வாறு அருட்பரிசில்கொடுத்து அங்குநின்றெழுந்து அண்டங்களையெல்லாம்ரக்ஷித்த காளகண்டத்தையுடைய பரமசிவன் ஒருமண்டபத்திற்போய்க் கல்யாணக்கோலங்கொள்ளுகின்றார்.—(எ-று) (௯௫)

ஆண்டநாயகன்றிருவுளக்குறிப்புணர்ந்தளகைநாயகனுள்ளம்*
பூண்டகாதன்மேற்கொண்டெழுமன்புந்தன் புனிதமெய்த்தவ
ப்பேறு, மீண்டவாங்கணேர்தெண்ணிலாமறைகளுமிருவருமு
னிவோருந், தீண்டருந்திருமேனியைத்தன்கையாற் றீண்டிமங்
கலஞ்செய்வான் .................................*

(இ-ள்) எல்லாரையும் ஆட்கொண்டு ரக்ஷிக்கும்படியான பரமசிவனுடைய திருவுள்ளக்குறிப்பையறிந்து குபேரனானவன் தன் உள்ளத்தில் பூண்ட ஆசையை மேற்கொண் டெழுகின்ற அன்பும் தான்செய்தபுனிதமாகிய மெய்த்தவத்தின் பேறும்

பொருந்த அவ்விடத்திற்சென்று அளவில்லாதவேதங்களும்
பிரம்மவிஷ்ணுக்களும் முனிவர்களும் தொழுதற்கரிய திருமே
னியைத் தன்கையினால் தீண்டி அலங்காரஞ்செய்கின்றான்.—
(எ-று) (கசு)

பூந்துகிற்படாங்கொய்சகத்தானையின் போக்குகோவணஞ்சா
த்தி,மெய்ந்திரட்டை ஞாண்பட்டிகையிறுக்கிவண்டிறைக்குநாண்
மலர்க்குஞ்சி,வேய்ந்துகற்பகப்புதுமலர்ச்சிகழிகையிலைந்துநீ
றணிமெய்யிற், சாந்தமான்மதந்தண்பனி நீராய்த்தடக்கை
யான்மட்டித்தான் ..... *

(இ-ள்) பொலிவினையுடைய வஸ்திரத்தைமுன்புறத்தில்கொ
ய்சகத்தானையாகவும், பின்புறத்தில் கோவணமாகவும்தரித்து
அதன்மேல் இரட்டையாகிய அரைஞாண்பட்டிகைசாத்திவண்
டிசையாடும் புதுமலர்களணியத்தக்ககொண்டையணிந்து அத
ன்மேல் கற்பகத்தின் புதியபூமாலையணிந்து விபூதியணிகின்ற
திருமேனியில் சந்தனமும் கஸ்தூரியும் குளிர்ச்சிபொருந்திய
பனிநீருங்கலந்து தன்பெரியகையினாற்பூசினான்.(எ-று) (கஎ)

இரண்டுசெஞ்சுடர் நுழைந்திருந்தாலென விணைமணிக்குழைக்
காதிற், சுருண்டதோடுபொற்குண்டலந்திணியிருபுரந்துதோ
ட்புறந்துள்ள, மருண்டதேவரைப்பரமெனமதிப்பவர்மையல்
வல்லிருண்மான,விருண்டகண்டமேன்முழுமதிகோத்தெனவி
ளைத்தகண்டிகைசாத்தி ..... *

(இ-ள்) இரண்டுசூரியர்கள் நுழைந்திருந்தாற்போல அழகி
யசங்கக்குழையணிந்த இரண்டுகாதிலும் சுருண்ட வடிவயாகி
யதோடும் பொற்குண்டலமும்திணிந்த இருளைத்துரந்துதோ
ள்களினிடத்தில் அசைந்துகொண்டிருக்கும்படிதரித்தும்,மய
க்கங்கொண்டதேவரைப்பரமென்றுமதிக்குமவர்களுடையம
யக்கமாகியவலிய இருளையொப்பாகக்கறுத்திராநின்ற கழுத்தி
னிடத்தில்பூர்ணசந்திரனைக் கோத்தெனக்கோத்திராநின்ற மு
த்துக்கண்டிகை சாத்தியும்.—(எ-று) (கஅ)

வலங்கிடந்தமுந்நூல்வரையருவியின்வயங்குமார்பிடைச்சென்
னித், தலங்கிடந்தவெண்டிங்களுந்தழுமெனத் தாரமாலிகை
சாத்தி,யிலங்கிடந்தமாலிகைப்பரப்பிடையியைத்திருண்முகம்
பிளந்தாரங், கலங்கிடந்தபாற்கடன்முளைத்தெழுமிளங்கதிரொ
ளக்கவின்செய்து ..... *

(இ-ள்) வலமாக இருக்கும் முத்துமாலையானது மலையருவிபோலப் பிரகாசித்துக்கொண்டிருக்க மார்பினிடத்தில் திருமுடியினிடத்திலிருக்கும் வெண்மதிபொழிகின்ற அமுதமென்றுசொல்லும்படி முத்துமாலைசாத்தியும் அந்தமுத்துமாலைப் பரப்பினிடத்திற்பொருந்தி இருளையோட்டி மாணிக்கவடமானது கலன்கள்பொருந்திய பாற்கடலில் உதித்துவிளங்காநின்ற இளஞ்சூரியன்போல் அழகுசெய்யும்படிஅணிந்தும்.—(எ-று) (௯௯)

திசைகடந்தநாற் புயங்களிற்பட்டிகை சேர்த்துவாளெறிக்குந்
தோ,ளசைகடந்தநல்லார்மனங்கவர்ந் துயிர்நக்கவங்கதஞ்சா
த்தி, யசைகடங்கலுழ்வாரணவுரிவைநீத்தணிகொளுத்தரீயம்
பெய், திசைகடந்தமந்திரபவித்திரமெடுத்தெழில் விரலணி
ந்து ......................................*

(இ-ள்) திசைகளைக்கடந்த நான்குபுயங்களிலும் பட்டிகைசாத்தியும் ஒளிவீசுகின்றதோள்களில் ஆசையைநீக்கிய முனிவர்கள்பத்தினிமார்களுடையமனதைக்கவர்ந்து உயிரையுண்டவாகுவலயந்தரித்தும் அசைகின்றமதநீர்பெருகும்படியானையானைத்தோற்போர்வையை நீக்கி அழகுபொருந்திய உத்தரீயஞ்சாத்தியும் சொல்லுக்கெட்டாத மந்திரவடிவமாகிய பவித்திரமெடுத்து அழகுள்ளவிரலிலணிந்தும்.—(எ-று) இசைகடந்தவெனப்பாடமாயின்-பெருமைபொருந்தியவெனப் பொருளுரைத்துக்கொள்க. (௱)

உடுத்தகோவணமிசைப்பொலந்துகிலசைத்தரவமைந்தலைநா
ல, விடுத்தபோக்கெயின்மணித்தலைக்கொடுக்குடங்கின்விட விரு
புறந்தூக்கித், தொடுத்ததார்ப்புயந்தூக்கிநூபுரங்கழல்சொற்ப
தங்கடந்தன்பர்க், கடுத்ததாளிலிட்டிருநிதிக்கோன்மனருந்த
வப்பயன்பெற்றான் ..................................*

(இ-ள்) முன்தரித்த கோவணவுடையின்மேல் பீதாம்பரமணிந்தும் சர்ப்பமானது ஐந்துதலைகளைத்தொங்கவிட்டதுபோல் மாணிக்கங்களாலாகியதலைக்கொடுக்குகளை அந்தப்பீதாம்பரத்தினிரண்டுமுனையிலும்பிரகாசிக்கும்படி தொங்கவிட்டும் தொடுத்தபூமாலைகளைப்புயங்களிலணிந்தும் சிலம்புகளும் வீரகண்டையும் சொல்லுக்கெட்டாமல் அடியார்களுக்கு அடுத்த திருவடியிலணிந்தும் குபேரன்தான்செய்த தவப்பயனைப்பெற்றான்.—(எ-று) சொற்பதம் என்பது-ஒருபொருளிருசொற்பிரிவில்லாதது. (௱௧)

செங்கண்மாலயனிந்திரன்முதற்பெருந்தேவர்க்கும்யாவர்க்கு
மங்கலந்தருகடைக்கணுபகனொருமங்கலம்புனைந்தான்போற்,
சங்கைகொண்டிடும்போதரன்முதுகின்மேற்சரணம்வைத்தெ
திர்போந்த,துங்கமால்விடைமேற்கொடுநடந்தனன்சுரர்கள்பூ
மழைதூர்த்தார் .... .... .... .... .... *

(இ-ள்) மகாவிஷ்ணு பிர்ம்மதேவன்முதலாகிய கடவுளர்க
ளுக்கும் மற்றுமுள்ள எல்லார்க்கும்நன்மையை அருளிச்செய்
கின்றகிருபாநோக்கத்தையுடைய கயிலாயபதியானவர் தாமு
மொருகோலம்புனைந்தவர்போலச் சங்கைகொண்டு கும்போ
தரனுடைய முதுகின்மேல் திருவடியைவைத்து எதிரில்வந்தப
லம்பொருந்தியமால்விடைமேல் ஆரோகணித்துக்கொண்டெ
ழுந்தருளினார் அப்போது தேவர்கள்கற்பகப்பூமாரிபெய்தார்
கள்.—(எ-று) (௱௨)

அந்தரத்தவரந்தரதுந்துபியைந்துமார்த்தனர்சூழ, வந்தரக்க
ருமியக்கரும்பூதருமங்கலவியங்கல்லலக், கொந்தலர்க்கருங் கு
ழலரமடந்தையர்கொளைவல் விஞ்சையர்தாளநற், தந்தலைசத்தி
டமலர்ந்தபூங்கொம்பர்போற்சாய்ந்தலைசந்தனராட .... *

(இ-ள்) தேவர்கள் தேவதுந்துபியைந்தையு முழக்கிக்கொ
ண்டுசூழவும், அரக்கர்களும் இயக்கர்களும் பூதர்களும் வந்து
மங்கலவாத்தியங்களை முழக்கவும், இசைப்பாட்டில் வல்லவர்க
ளாகியவிஞ்சையர்கள் தாளம்போட்டுக்கொண்டு ஆட்டுவிக்கக்
கொத்தாகிய பூமாலைகளணிந்த அளகபாரத்தையுடைய அரம்
பாஸ்திரீகள் மலர்ந்தபூங்கொம்புபோல்சாய்ந்தசைந்தாடவும்.
(எ-று) (௱௩)

துங்கமாயிரங்கருவியாயிரமலைத்தூங்கிருண்முழைதோறுஞ், சி
ங்கமாயிரம்வாய்திறந்தார்த்தெனச்சிரங்களாயிரந்திண்டோ,
ளங்கமாயிரமாயிரமுடையவனாயிரமுகந்தோறுஞ் .... .. *
சங்கமாயிரமாயிரமாயிரந்தடக்கையும்பிடித்தூத .... .... *

(இ-ள்) பரிசுத்தமானதாயொலிக்கா நின்ற அருவியையுடை
ய ஆயிரமலைகளின் இருள்தங்கியகுகைகள்தோறும் ஆயிரஞ்சிங்
கங்களிருந்து வாயைத்திறந்து கெற்சிப்பதுபோல் ஆயிரந்தலை
களும் திண்ணிய தோள்களாகிய இரண்டாயிர முறுப்புகளையு
முடையவனாகிய பாணுகம்பனானவன் ஆயிரம்வாய்கள்தோறும்

ஆயிரம் சங்கங்களைவைத்து இரண்டாயிரங்கைகளாலும்பிடித்துக்கொண்டூதவும்.—(எ-று) (௱௪)

போக்குமாயையின்புணர்ப்பையுமிருண்மலப் புணர்ப்பையுங்
கடந்தெய்மைக், காக்குநாயகனருச்சனைவிடாதருட் கதியடைந்
துளவானவன், றாக்குநர்படவாயிரங்கரங்களாற் றொம்மென
முகந்தோறுந், தாக்கவேறுமேலெழுகுடமுழாவொலி தடங்க
டலொலிசாய்ப்ப........ *

(இ-ள்) நீக்கத்தக்கமாயையின் வலியதொடர்ச்சியையும் ஆணவமலத்தொடர்ச்சியையும்நீக்கி யெக்காலாகக்ஷிக்கும் கயிலாசபதியை அருச்சிக்குமுறைமையைவிடாது செய்து அருட்கதிபெற்றவாணனெனுமவன் பாடலுக்கொப்பாக ஆயிரங்கைகளாலும்முகங்கள்தோறும் தொம்மென்று தாக்க மேலெழுமோசை உண்டாகாநின்ற குடமுழாவென்னும் வாத்தியத்தின் ஓசையானது பெரியகடலின் ஓசையை அடக்கவும்.—(எ-று) ஆயிரங்கைகளால் தாக்கப்படுதலால் குடமுழாவின் முகங்களுமாயிரமெனக்கொள்க. (௱௫)

முனிவரஞ்சலிமுகிழ்த்தசெங்கையினர்மொழியுமாசியருள்ளங்
கனிவரும்பியவன்பினர்பரவவுட்கருத்தொடுகழிக்கொண்டோ
ர், துனிவருங்கணநாதர்கொட்டதிர்காத் துணையினர்மழைபோ
லப், பனிவருங்கணராடியதாளினர்பாடுநாவினரோத்த. .... *

(இ-ள்) முனிவர்கள் தங்களிரண்டுகைகளையுங் குவித்துக் கொண்டு ஆசீர்வசனங்கள்சொல்லி உள்ளத்தில்கனிவாகவுண்டான அன்பினையுடையவர்களாய்த் துதிசெய்யவும்-உட்கருத்துடன்வழிநடக்கின்றவர்களாகிய துன்பமில்லாத கணநாதர் இரண்டுகைகளையுங்கொட்டுகின்றவர்களாயும்-மழைபோல்நீர் ஒழுகுங்கண்களையுடையவர்களாயும் ஆடுகின்ற தாள்களையுடையவர்களாயும் பாடுகின்ற நாவையுடையவர்களாயும் துதிசெய்யவும். (எ-று) (௱௬)

இந்திரன்மணிக்களாஞ்சிகொண்டொருமருங்கெய்தமெல்லிலை
வாசந், தந்திலங்குபொன்னடைப்பைகொண்டீசனேர் சார்வ
ரமருத்துக்கோ, வந்திரங்கொளியாலவட்டம்பணிமாறவாரழற்
றாபந், தந்துநேரநீர்க்கடவுள்பொற்கோடிகந்தாமரைக்கரந்
தாங்க........ *

(இ-ள்) தேவேந்திரனானவன் ரத்தினங்கள்பதித்திராநின்ற காளாஞ்சியை யேந்திக்கொண்டு ஒருபுறத்தில் வரவும், மிருதுவாகிய வெற்றிலையும் அதற்குரிய வாசனைத்திரவியமும் கொடுத்துப்பிரகாசியாநின்றபொன்னாலாகிய அடைப்பையையேந்திக்கொண்டு ஈசானமூர்த்தி ஒருபுறத்தில்வரவும், வாயுதேவன் வந்து ஒலிக்குமொலியையுடைய ஆலவட்டம்வீசிக்கொண்டு ஒருபுறத்தில்வரவும், அக்கினிதேவன் தூபக்கலய மேந்திக்கொண்டுவரவும், வருணதேவன் பொன்னாற்செய்யப்பட்ட பூந்தட்டினைத் தாமரைமலரையொத்த தன்கையில் ஏந்திக்கொண்டு வரவும்.—(எ-று) (௱எ)

நிருதியாடிகொண்டெதிர்வரவடிக்கடிநிதிமுகந்தளகைக்கோண், கருதியாயிரஞ்சிதறிடத்தண்டினன்காஞ்சுகவினைசெய்யப், பருதியாயிரம்பணாடவியுரகரும்பன்மணிவிளக்கேந்தச், சுருதிநாயகன்றிருவடிமுடியின்மேற்சுமந்துபின்புறஞ்செல்ல ...... *

(இ-ள்) நிருதியானவன் கண்ணாடியையேந்திக்கொண்டு எதிரில்செல்லவும், குபேரனானவன் திரவியங்களை அடிக்கடி அநேகமாகவீசவும், எமதருமராசனானவன் கையில் தண்டமேந்திக்கொண்டு எதிரில் நெருங்குகின்றவர்களை விலக்கிக்கொண்டுசெல்லவும், சூரியனைப்போல்பிரகாசிக்கும்படி ஆயிரம்படங்களையுடைய நாகர்களும்பலரத்தினதீபங்களேந்திக்கொண்டுசெல்லவும், வேதபுருஷனானவன் திருவடிகளை முடியின்மேற்சுமந்துகொண்டு பின்புறத்தில்வரவும்.—(எ-று) (௱அ)

கங்கைகாவிரியாதிய நவநதிக்கன்னியர்குளிர்தூங்கப், பொங்குவார்திரைநுரைக்கொழுந்தெனக்கவரிகள்புரட்டவெண்பிறைக் கீற்றாத், துங்கவாளெயிற்றிருளுடற்குழிவிழிச்சுடரழற்செம்பங்கிச், சங்கவார்குழைக் குறியகுண்டோதரன் றண்மதிக்குடைதாங்க .............................................. *

(இ-ள்) கங்கைகாவிரிமுதலாகியஒன்பதுநதிக்கன்னியர்களும் குளிர்ச்சிபொருந்தும்படிபொங்குகின்ற நீண்ட பாற்கடலில் உண்டாகாநின்ற அலைகளின்கொழுந்துபோல்சாமரைகள்வீசவும், வெண்பிறைக்கீற்றையொத்த பலம்பொருந்தி வெண்மையான பற்களையும் இருள்போன்ற வுடலையும் குழிந்தவிழிகளையும்பிரகாசியாநின்ற அக்கினிபோன்ற சிவந்தகேசத்தையும் நீண்டசங்கக்குழையினையுமுடைய குறியனாகிய குண்டோதரனு

ளையும் குளிர்ச்சிபொருந்திய சந்திரனையொத்த வெள்ளைக்கு டையேற்றிக்கொண்டுவரவும்.—(எ-று) (௱௯)

இடிக்கும்வானுருமேறுயர்நெடுங்கொடியெகினவெண்கொடி ஞால,முடிக்குமூழிநாளார்கடுங்காலெனமூச்செறிவிட நாகர், துடிக்கவாயிற்றுவணவண்கொடிமுதற்சூழ்ந்துசேவகஞ்செ ய்யுங், கொடிக்குழாத்தினுட் கொடியரசாய்விடைக்கொடிபு டைபெயர்ந்தாட.................... *

(இ-ள்) இடிக்காநின்ற இடியேறாகிய ஓங்கிய கொடியும் வெண்மையாகிய அன்னக்கொடியும் உலகத்தை முடிக்காநின் ற ஊழிக்காலத்தில் வீசுகின்ற பிரசண்டமாருதம்போல் மூச்சு விடுகின்ற விஷத்தையுடைய நாகங்கள் துடிக்கும்படி வாயிற் கவ்விக்கொள்ளத்தக்க வன்மைபொருந்திய கருடக்கொடியும் இவைமுதலாகச் சூழ்ந்து சேவகஞ்செய்யாநின்ற கொடிக்கூ ட்டத்தினுள் கொடியரசாய் ரிஷபக்கொடியானது ஒருபுறத்தி லசைந்தாடவும்.—(எ-று) (௱௰)

கண்ணுதற்பிரான்மருங்கிருகடவுளர்கப்புவிட்டெனத் தோன் றும்,வண்ணமுத்தலைப்படையெடுத்தொருகுடவயிறுடைப்பெ ரும்பூதம், பண்ணவப்பதினெண்படைக் கலமுந்தன்பக்கமாச் சேவிப்ப, வண்ணன்முச்சுடர்முளைத்தொரு வரைநடந்தனைய தோர்மருங்கெய்த........................ *

(இ-ள்) நெற்றிக்கண்ணையுடையபரமசிவனுடைய இருபக்க த்திலும் பிர்மாவும் விஷ்ணுவும் உண்டாயிருப்பதுபோல்தோ ன்றுகின்ற அழகிய முத்தலையையுடையசூலத்தைக்குடம்போ ன்றபெருவயிறுள்ள ஒரு பெரியபூதமானது ஏந்திக்கொண்டு செய்யப்பட்டதாகிய அழகுள்ள பதினெட்டு ஆயுதங்களும் த ன்பக்கமாகச்சேவித்துக்கொண்டுவரும்படி பெருமைபொரு ந்திய சோமசூரியாக்கினியென்னு முச்சுடர்களும் உதித்தவொரு மலையானது நடப்பதுபோல் ஒருபுறத்தில்வரவும். — (எ-று)

பந்தநான்மறைப்பொருட்டிரட்டெனவடபாடல்செய் தெதிர் புட்ப,தந்தனைத்தவானுயிருணவுருத்தெழு தழல்விடத்தெதிர் நோக்கு,மந்தமாதியிலாவிழல்விடிவமாயாடியினிழல்போல, வந்தசந்தனன்சாத்துநீறுடுதிருமாலையுமெடுத்தேந்த....*

(இ-ள்) ஆறங்கமாகிய பந்தத்தையுடைய நான்மறைப்பொ ருளின் திரட்டைப்போல் வடமொழிப்பாடல்செய்து புட்பத

ந்தன் எதிரில் துதிசெய்யவும் தேவர்களுயிரா யுண்ணக்கோ பித்தெழுந்த தீப்போன்ற விஷத்தின் எதிரில்சென்ற ஆதியந்த மில்லாத பரமசிவனது திருமேனிநிழலாய்க் கண்ணாடியிலொளிபோல்வந்த சுந்தரமூர்த்தியானவர் ப்ரமசிவனுடைய திருமேனியில் சாத்தும்படியான திருநீறும் திருப்பள்ளித்தாமமும் ஏந்திக்கொண்டுவரவும்.—(எ-று) (௩௰௨)

அன்னத்தேரினனயன் வலப்பாங்கருடராவலிகவர்சேன,வன்னத்தேரினன்மாலிடப்பாங்கருமலர்க்கரங்குவித்தேத்தப், பொன்னத்தேமலர்க் கொன்றையான்வெள்ளியம் பொருப்பொடு மெழுந்திப்போந்தா,லென்னத்தேரணிமதுரைமாநகர்ப் புறத்தெய்துவானவ்வேலை.......... .... .... .... ....*

(இ-ள்) அன்னவாகனத்தை யுடையவராய்ப் பிர்மாவானவர் வலப்புறத்திலும் சர்ப்பங்களின்வலியைக்கவரத்தக்க அழகு பொருந்திய கருடவாகனத்தை யுடையவராகிய மகாவிஷ்ணுவானவர் இடப்புறத்திலும் செந்தாமரைமலர்போன்றகைகளைக்குவித்துக்கொண்டு துதிசெய்யவும் பொன்னிறமுள்ளவாசனை பொருந்திய கொன்றைப்பூமாலையணிந்திராநின்ற கயிலாசபதியானவர் வெள்ளிமலையோடு மெழுந்து செல்வதுபோல் நிலைத்தேர்கள்வைத்து அலங்காரஞ்செய்திராநின்ற பெருமை பொருந்திய மதுரைநகரத்தின் புறத்தில்செல்லுகின்றார் அப்போது.—(எ-று) பொன்னத்தேமலர் என்பது-விகாரவகையான்மிக்கது. (௩௰௩)

(வேறு)

தேவர்கடேவன்வந்தான்செங்கண்மால்விடையான்வந்தான் *
மூவர்கண்முதல்வன்வந்தான்முக்கணெம்பெருமான் வந்தான்
பூவலரயன்மால்காணுப்பூரணபுராணன்வந்தான்... .... ....*
யாவையும்படைப்பான்வந்தானென்றுபொற்சின்னமார்ப்ப*

(இ-ள்) தேவர்க்கெல்லாந்தேவனானவன் வந்தான் செங்கண்மாலாகிய ரிஷபவாகனத்தையுடையவன்வந்தான் மும்மூர்த்திகளுக்கு முதல்வனாயிருப்பவன் வந்தான் திரிநேத்திரங்களையுடைய எம்பிரான்வந்தான்-தாமரைமலரில்வீற்றிராநின்றபிர்மதேவனும் மகாவிஷ்ணுவுங்காணாத எங்கும்பூரணமாயிராநின்ற பழையோன்வந்தான் எல்லாவுலகங்களையும் படைப்பவன்வந்தானென்று பொன்னாலாகியசின்னங்களொலிக்கவும்.(எ-று)

பெண்ணினுக்கரசிவாயிற் பெருந்தகையமைச்சரோடே .. ..*
மண்ணினுக்கரசர்சேனைமன்னவர்பிறருமீண்டிக்... .. ....*
கண்ணினுக்கினியான்றன்னைக்கண்டெதிர்கொண்டுதாழ. .. *
விண்ணினுக்கரசனூரின்வியத்தகுநகரிற்புக்கான் ....... ..*

(இ-ள்) பெண்களுக்கெல்லாம் அரசியாகிய தடாதகைப்பிராட்டியின்வாசலுக்குரிய மேன்மைத்தன்மையையுடைய மந்திரிகளும் மற்றைத்தேசங்களுக்கு அரசர்களாயிருப்பவர்களுந்தடாதகைப்பிராட்டியின் சேனைகளுக்குத்தலைவர்களாயிருப்பவர்களும்மற்றவர்களும் நெருங்கி எதிர்கொண்டு பணியும்படி பார்க்கின்றவர்களுடைய பார்வைகளுக்கெல்லாம் இன்பந்தரத்தக்கவாகிய கயிலாயபதியானவர் தேவேந்திரனுடைய ஊராகிய சுவர்க்கம்போல் யாவரும் வியப்படையத்தக்க (அலங்காரமுள்ள) மதுரையிற்போனார்.—(எ-று) (௱௰௫)

முகிறவழ்புரிசைசூழ்மூதூர்முகப்பெருவாயினீந்தி .... .... *
பகிறவழ்மாடவீதிவலம்படவணைவானாக .... ...... ....*
நகிறவழ்பொலங்கொம்பன்னநன்னகர்மகளிரம்பொற் ... *
றுகிறவழ்மருங்குலாயத்தொகைபுறந்தழுவச்சூழ்ந்தார் ... *

(இ-ள்) மேகங்கள்தவழும்படியான உயரமுள்ள மதில்சூழ்ந்த பழமையாகிய அம்மதுரைநகரத்தின்பெரியமுகத்கோபுரவாயிலைவிட்டுநீங்கி அகிற்புகைதவழ்ந்துகொண்டிராநின்ற மாடங்களையுடையவீதியில் வலமாக எழுந்தருளும்போது அவரைப்பார்க்கவேண்டுமென்கிற ஆசையினாலே தனங்களாகியமுலைகள்பொருந்திய பொற்கொம்பையொத்த நன்மையுள்ள அந்தநகரத்துமாதர்கள் அழகியபொன்னுலாகிய வஸ்திரங்களையணிந்திராநின்ற தோழியர்கூட்டம் புறத்தில்வரும்படி சூழ்ந்தார்கள்.—(எ-று) (௱௰௬)

தமிழ்முதற்பதினெண்டேத்துமகளிருந்தாருநாட்டி ....'...*
அமிழ்தமன்னவருமுல்லையம்புயங்குமுதநீலங் .... ......*
குமிழ்நறுங்கோங்குகாந்தள்மோழிணரசோகம்வாச .... *
முமிழ்தாமலர்ச்சநந்தவனமெனவெருங்குமொய்த்தார் .. *

(இ-ள்) தமிழ்நாட்டுமாதர்கள்முதல் பதினெட்டுநாட்டினிடத்துமுள்ளமாதர்களும்கற்பகவிருக்ஷமுள்ள சுவர்க்கலோகத்திலிராநின்ற அமுதம்போன்ற தேவஸ்திரீகளும் முல்லைகளும் தாமரைகளும் அல்லிகளும் நீலோற்பலங்களும் குமிழும்வாச

லை பொருந்திய கோங்குங்காந்தளும் கொழுமையாகிய பூங்கொத்துகளையுடைய அசோகும் வாசனையைவீசும்படி மலர்ந்த நந்தனவனம்போல்எல்லாரும் ஒருகூட்டமாக நெருங்கினார்கள்.—(எ-று) (௱௰௭)

எம்மைநீர் விடுதிரோ யோவென்பபோற்கலையுஞ்சங்கும் .... *
விம்மநாண்மடனுமுங்கணெஞ்சிடைவெளியாக .... .. *
வும்மைநீத்தோமந்தோவுரைத்தனமுரைத்தோமென்று ...*
தம்மைநூபுரங்கால்பற்றித்தடுப்பபோலார்ப்பச்சென்றார் ...*

(இ-ள்) எங்களை நீங்கள் விட்டுவிடுகிறீர்களோவென்று முறையிடுவனபோல் மேகலைகளும் சங்குவளையல்களும் ஒலிக்கவும்-நாணமும்மடமும் உங்கள்மனதினிடம் வெளியாக உங்களைவிட்டுநீங்கி ஓடிப்போம் (ஐயையோ) நாங்கள்சொன்னோம்சொன்னோம் என்று தங்களைச்சிலம்புகள் கால்களைப்பற்றிக் கொண்டுபோகவேண்டாமென்று தடுத்தல்போல் ஒலிக்கவும் வீதியிற்சென்றார்கள்.—(எ-று) மேகலை-விகாரத்தால்முதல்குறைந்துநின்றது, இவ்வாறன்றிவிடாத ஆகுபெயரெனக்கொள்ளினுமமையும். இங்ஙனங்கொள்ளுங்கால் கலையென்னுமொழிக்கு வஸ்திரமென்றேபொருளுரைத்துக்கொள்க. (௱௰௮)

கடியவிழ்கமலக்காடுபூத்ததோர்கருணைவாரி .... ..... ..*
யடிமுதன்முடியீறாகவலர்விழிக்குவளைசாத்திக் .... .......*
கொடியசெம்பதுமப்போதுகுழன்மிசைச்சூடுவார்போற். .*
றொடியணிகரங்கள்கூப்பித்துதியெனவிவையசொல்வார் .. *

(இ-ள்) வாசனையுடன்மலர்ந்த செந்தாமரைமலர்க்காடுபூத்திருப்பதாகிய ஒப்பற்ற கருணைக்கடல்போன்றபரமசிவனுடைய திருவடிமுதல்திருமுடியீறாகத்தங்கள்கண்களாகிய நீலோற்பலமலர்களைச்சாத்திக் கொடியினையுடையசெந்தாமரைமலரைத் தங்கள் அளகத்தில் தரித்துக்கொள்ளுகிறவர்களைப்போல் வளையல்கள் அணிந்த இரண்டுகைகளையும் குவித்துச் சிரசின் மேல்வைத்துக்கொண்டு தோத்திரஞ்செய்வதுபோல் இந்த வார்த்தைகளைச் சொல்லுகின்றார்கள்—(எ-று) (௱௰௯)

நங்கையென்றேற்றாற்கொல்லோநம்பியைத் திளைத்தற்கென்பார், மங்கையைமணப்பானென்றேவள்ளரெனுநோற்றானென்பா, ரங்கடிமதுரையென்றேவாற்றியதவந்தானென்பா, ரிங்கிவர்வதுவைகாண்பானென்னநாநோற்றேமென்பார் .... *

(இ-ள்) தடாதகைப்பிராட்டியானவள் இந்தப்புருஷனைச் சேர்வதற்கு என்னதவஞ்செய்தாளோவென்று சிலர்சொல்லுகிறார்கள்-தடாதகைப்பிராட்டியைச்சேர இந்தவள்ளல்செய்த தவம் எப்படிக்கொடுத்ததோவென்று சிலர்சொல்லுகிறார்கள்-அழகியசிறப்பினையுடைய இந்தமதுரைநகரமானது என்னதவஞ்செய்ததோ என்பார்கள்-இவர்களுடைய திருக்கல்லியாணத்தைத் தரிசிக்கநாம்செய்த தவந்தான் எப்படிக்கொடுத்ததோவென்று சிலர்சொல்லுகிறார்கள்.—(எ-று) (௱௨௰)

தென்னவன்வருந்திமேனாட்செய்தவப்பேற்றாற்பெற்ற ....*
தன்மகள்வதுவைகாணத்தவஞ்செய்தானிலனேயென்பார்..*
கன்னிதனழகுக்கேற்றவழகனிக்காளையென்பார் .... ....*
மன்னவனிவனேயன்றிவேறிலைமதுரைக்கென்பார் .... ..*

(இ-ள்) மலயத்துவசபாண்டியராசன் முன்னாளில் வருத்தமுற்றுச் செய்த தவப்பயனாற்பெற்ற தன்புத்திரியின் திருக்கல்லியாணக்கோலத்தைப் பார்க்கத் தவஞ்செய்யாமற்போனானேயென்று சிலர்சொல்லுகிறார்கள்-நம்முடைய கன்னிக்கேற்ற அழகினையுடையவன் இந்தக்காளையென்றுசிலர்சொல்லுகிறார்கள்-நம்முடைய மதுரைநகரத்துக்கு அரசன் இவனேயல்லது வேறொருவருமில்லையென்கிறார்கள்.—(எ-று) (௱௨௧)

நங்கைதன்னலனுக்கேற்பநம்பியைத்தந்ததந்தத் .... ....*
துங்கமாமதிநூலவல்லசுமதிதன்சூழ்ச்சியென்பா ..... ....*
ரங்கவடவப்பேறென்பாரன்னைதன்கன்னிக்கன்றி ........*
யிங்கிவன்மருகனாகவெத்தவமுடையாளென்பார் .... ....*

(இ-ள்) தடாதகைப்பிராட்டியின் அழகுக்குத்தக்க கணவனைத்தந்தது தூய்மையையும் பெருமையையுமுடைய மதிநூல்கற்றுணர்ந்த மந்திரியாகிய சுமதியின் உபாயமென்று சிலர் சொல்லுகிறார்கள்-இது தடாதகைப்பிராட்டியின் தவப்பேறென்று சிலர்சொல்லுகிறார்கள்-தாயாகிய காஞ்சனமாலையானவள் இந்தப்பெண்ணைப்பெறத் தவஞ்செய்ததுமல்லாமல் இந்தக்கடவுள் மருமகனாகக் கிடைக்கும்படி என்னதவஞ்செய்தாளோவென்று சிலர் சொல்லுகிறார்கள்.—(எ-று) (௱௨௨)

பூந்துகினெகிழ்ப்பர்சூழ்வர்புணர்முலையலைப்பர்பூசு ......*
சாந்தினையுகுப்பர்நாணந்தலைக்கொண்டார்போலச்சாய்வர் *
கூந்தலையவிழ்ப்பர்வாரிக்கூட்டுவர்முடிப்பர்மேனி .... ..*
மாந்தளிரொங்குமாரன்வாளிகள்புதையச்சோர்வார் .... ...*

(இ-ள்) கயிலாசபதியைக்கண்ட ஸ்திரீகள் தாங்கள் தரித்துக்கொண்டிருக்கும் பொலிவாகிய வஸ்திரங்களை யவிழ்ப்பார்கள்-மறுபடியுங் கட்டுவார்கள்-நெருங்கியிருக்கும் தனங்களை யலைப்பார்கள்- பூசியசந்தனத்தை உதிர்த்துவிடுவார்கள் - வெட்கந் தலைக்கொண்டவர்கள்போலத் தலையிறங்கிக்கொள்வார்கள்-அளகத்தை அவிழ்ப்பார்கள்-மறுபடியும்சேர்த்து வாரிமுடிப்பார்கள்- மாந்துளிரையொத்த சரீரமுழுவது மன்மதபாணந்தைக்க அதனால்சோர்வார்கள்.—(எ-று) (௩௨௩)

தண்ணளியொழுக்கஞ்சார்ந்தகுணத்தினைச்சார்ந்துயிர்ந்த..*
வண்ணமென்மலர்களென்னேவாளியாய்த்தைத்தவென்பார்*
கண்ணறுங்கூந்தல்வேய்ந்தகடியவிழ்நீலத்தாரும் ......*
வெண்ணகையரும்புமுல்லைத்தாமமும்வெறுத்துவிடுப்பார்.*

(இ-ள்) தண்மையாகிய அளியினொழுக்கஞ்சார்ந்த குணத்தினைப்பொருந்தியும் அழகிய இந்த மலர்கள் கொல்லுந் தன்மையையுடைய பாணங்கள்போலாய்த் தைத்தன இது என்ன அதிசயமோவென்றுசொல்லுகிறார்கள்- தேனிறைந்த நறிய அளகத்திலணிந்திராநின்ற வாசனையமைந்த நீலோற்பலபுட்பமாலையையும் வெண்மையாகிய தங்கள்நகைபோல்அரும்புகின்ற முல்லைப்பூமாலையையும் வெறுத்து நீக்கிவிடுவார்கள் —(எ-று) (தண்ணளியொழுக்கஞ்சார்ந்த குணத்தினைச்சார்ந்தும்)என்பதற்குத்தண்ணளியகிருபையினையும்ஒழுக்கத்தினையுஞ்சார்ந்தநற்குணத்தைப்பொருந்தியும் எனவும், தண்மையாகிய வண்டுகளாகிய நீட்சியையுடைய நாரினையும்பொருந்தியும் எனவும் சிலேடையாகப்பொருள்கொள்க. குளிர்ச்சியாகிய தன்மையுள்ளமலருக்குக்கொல்லுந் தன்மையுள்ள பாணத்தின்செய்கை வந்ததென்ன அற்புதமென்று கூறினமைக்கேற்ப வாளியென்னும் பதத்தைப் பிரயோகித்தார்-வாள்-என்னுங் கொலைத்தொழிலையுணர்த்துஞ்சொல்லானது இகரவிகுதிபெற்றுவாளியெனநின்றது. நீலோற்பலமலரும்,முல்லைமலரும்,மன்மதபாணமாகையால் அம்மலர்களால் தொடுக்கப்பட்டமாலையினை நீக்கிவிடுகிறார்களெனக்கொள்க. (௩௨௪)

விம்மிச்செம்மாந்தகொங்கைமின்னனார்சிலர்விற்காமன் ..*
கைம்மிக்ககணையேறுண்டுகலங்கியமயக்காற்றங்கண் ......*
மைம்மிக்கநெடுங்கண்சோர்வதனமுமவனம்பென்றே....*
தம்மிற்றம்முகத்தைநோக்கார்தலையிறக்கிட்டுச்செல்வார்..*

(இ-ள்) பருத்திறுமாந்த ஸ்தனங்களையுடைய சில ஸ்திரீகளா
னவர்கள் கரும்புவில்லையுடைய மன்மதன் கையினின்றும் எவ
ப்பட்ட பாணங்களாலடிபட்டுக் கலங்கிய மயக்கத்தினால் தங்
களுடைய மைபொருந்திய நெடியகண்களும் பற்களும்மு
கமும் அந்த மன்மதனுடைய பாணமென்று நினைத்துக்கொ
ண்டு தங்களுக்குள் தங்கள் முகத்தைநோக்காதவர்களாய்த்தலை
யையிறங்கிக்கொண்டு செல்லுகின்றார்கள்.— எ-று) மன்மத
பாணமாவது-தாமரைப்பூ-மாம்பூ-அசோகம்பூ-முல்லைப்பூ-
நீலப்பூ-என்பவைகள். இவைகளுக்குள் நீலப்பூ ஸ்திரீகளுடைய
கண்கள். முல்லையரும்பு-அவர்களுடையபற்கள். தாமரைப்பூ
அவர்களுடையமுகம் என்றுகொள்க. (௱௨௫)

பற்றியபைம்பொன்மேனிப்பசப்பதுதேறாரண்ண,லொற்றை
மால்விடையின்மேற்கொண்டிருந்துநம்முளத்துமேவப், பெ
ற்றனமிதென்கொன்மாயம்பேதைமீர்பெருமானீண்ட, கற்றை
வார்சடைப்பூங்கொன்றையிதுவன்றேகாண்மினென்பார் ...*

(இ-ள்) பசியபொன்னிறமுள்ளமேனியிற்பொருந்தியபசப்
புநிறத்தை அறியாதவர்களாய்க் கயிலாசபதியானவர் தனியா
கிய மால்விடையேயிருந்துகொண்டு நம்முடைய இருதயத்தி
ல் பொருந்தும்படி பெற்றோம் இதென்னமாயம் ஸ்திரீகளே
அதற்குத் திருஷ்டாந்தம் கயிலாசபதியினுடைய நீண்ட கற்றை
யாகிய சடைமுடியிலணிந்திராநின்ற கொன்றைமலரல்லவோ
இதனைப்பாருங்களென்று தங்கள் சரீரத்திலுண்டாகிய பசப்பு
நிறத்தைக் காட்டுகிறார்கள்.— எ-று) (௱௨௬)

திங்களென்றெழுந்துநம்மைச்சுடுவதென்செந்தீயென்பார். *
பங்கலன்சென்னிமீதுங்கிடப்பதேபோலுமென்பா ........*
ரங்கவற்கிந்தவெப்பமில்லைகொலென்றயிர்ப்பாராற்றக் .... ..*
கங்கைநீர்சுமந்தானென்பாரதனையுங்காண்மினென்பார் ..... *

(இ-ள்) செந்தீயானது திங்களென்று பெயர்வைத்துக்கொ
ண்டு நம்மைச்சுடுவதென்னகாரணமென்று சிலர்சொல்லுகிறா
ர்கள்-அது இந்தக் கயிலாசபதியின் திருமுடியினிடத்தும் இரு
க்கின்றதென்று சிலர்சொல்லுகிறார்கள்- அவருக்கிந்த வெப்ப
மிராதோவென்று சந்தேகிப்பார்கள்-அந்த வெப்பத்தை ஆற்
றுதற்கே திருமுடியில் நீரைவைத்துக்கொண்டிருக்கின்றாரென்
று சிலர்சொல்லுகின்றார்கள்-அதையுங் காணுங்களென்றுசிலர்
சொல்லுகிறார்கள்.— எ-று) (௱௨௭)

கலையொடுநாணம்போக்கிக்கருத்தொடுவண்ணம்வேறு ....*
புலையொடுமெழுகிட்டென்னவுருகுகண்ணீரராகிச் .. ...*
சொலையொடுபயில்வேற்கண்ணார்குரிசிறன்பவனிநோக்கி ..*
யலையொடுமதியஞ்சூடுமையன்மெய்யன்பரொத்தார் ....*

(இ-ள்) இடையிலிருந்தவஸ்திரத்தையிழந்ததுமல்லாமல்நாணத்தையுமிழந்து உள்ளமும் மேனியும் வேறாகி உலையினிலெமெழுகினையிட்டாலது உருகி யோடுவதுபோல் பெருகியோடுகின்ற கண்ணீரையுடையவர்களாய்க்கொலைத்தொழிலைச்செய்வதற்கேதுவாகிய வேல்போன்றகண்களையுடைய ஸ்திரீகளானவர்கள் கயிலாசபதியெழுந்தருளுகிற திருவோலக்கத்தைக்கண்டு நீருடன்சந்திரனையணிந்திராநின்ற அந்தக்கடவுளுடையமெய்யடியாரை யொத்திருந்தார்கள்.—(எ-று) (௱௨௮)

நட்டவர்க்கிடுக்கணெய்தநன்றிகொன்றவர்போற்கையில் ..*
வட்டவாய்த்தொடியுஞ்சங்குமருங்குசூழ்கலையுநீங்க .... ..*
விட்டபொற்சிலம்பிட்டாங்கேநன்றியினிகவார்போற்கா ..*
லொட்டியேகிடப்பநின்றாருகுத்தபூங்கொம்பரன்னார் ....*

(இ-ள்) சினேகித்தவர்களுக்கு ஒருதுன்பநேரிடுமாகில் அவர்களைவிட்டுப்பிரிந்துவிடுகின்றநன்றிகெட்டவர்கள்போல் கையிலணிந்திராநின்ற வட்டமாகிய வாயையுடையகடகங்களுஞ்சங்குவளையல்களும் இடையிலணிந்த வஸ்திரங்களும் நீங்கிவிடவும் தரித்த பாதசிலம்பானது தரித்தபடியேநன்றியினின்றும்நீங்காதவர்போலக்காலையொட்டிக்கொண்டிருக்கும்படி நின்றார்கள் மலர்களையெல்லாம் உதிர்த்துவிட்டுநிற்கும்வெறுங்கொம்பையொத்த ஸ்திரீகள்.—(எ-று) (௱௨௯)

மின்னுவேற்கணாளோர்விரக்கிழைவிடைமேலையன் ....*
புன்னகைப்போதுநோக்கப்போதுமுப்புரமும்வேளின் ..*
மன்னவன்புரமுஞ்சுட்டதல்லவோகெட்டேன்வாளா .. ..*
வின்னவைசுடாதுபோமோவேழையேன்புரமுமென்றாள் ..*

(இ-ள்) ஒளிவிட்டுவிளங்குகின்ற வேல்போன்ற கண்களையுடையவளாகிய ஒருஸ்திரீயானவள் ரிஷபவாகனத்தின்மேல் எழுந்தருளுகின்ற கயிலாசபதியினுடைய புன்னகையாகிய முல்லையரும்பும், பார்வையாகிய தாமரைப்பூவும் திரிபுரத்தையும் மன்மதனுடைய புரமாகிய சரீரத்தையும் சுட்டவையல்லவோ

ஆதலால்கெட்டேன் இவ்விரண்டும் ஏழையேனுடையவுடலாகியபுரத்தையும் சுடாமல் வீணாகப்போவன வல்லவென்றாள். (எ-று) (௱௩௰)

உழைவிழியொருத்திதன்கணுருவெளியாகித்தோன்றுங் .. *
குழகனையிரண்டுசெம்பொற்கொங்கையுமொன்றாய்வீங்கத் *
தழுவுவாளுநற்றங்காணுடைமுலையிரண்டேயாகி .... .... *
யிழையிடைகிடக்கநீங்கியிருக்கைகண்டிடைபோலெய்த்தாள் *

(இ-ள்) மான்பார்வையையொத்த பார்வையினையுடைய ஒருஸ்திரீயானவள் தன் கண்ணுக்கு உருவெளியாகத்தோன்றுகின்ற கயிலாயபதியைச்செம்பொன்னிறமுள்ள தன்னிரண்டுஸ்தனங்களும் ஒன்றாய்வீங்கும்படி தழுவுகின்றவள்-பரிசங்காணாதவளாய் இரண்டு பெரியஸ்தனங்களும் முன்போலவேயாகி ஆபரணங்கள் மத்தியிலிருக்க நீங்கியிருப்பதை நோக்கித் தன்னிடைபோல் இளைத்தாள்.—(எ-று) (௱௩௧)

வாரிருங்கொங்கையாளோர்மாதராள்வானோருய்யக் .. .. *
காரிருள்விடமுண்டன்றுகறுத்ததேயன்றுகொன்றைத் .... *
தாரிருஞ்சடையார்கண்டநீரையன்மீர்தமதுநெஞ்சங் .... *
காரிரும்பென்றேகாட்டக்குறியிட்டகறுப்பேயென்றாள் ... *

(இ-ள்) கச்சுக்கட்டிய பெரியஸ்தனங்களையுடைய ஒருஸ்திரீயானவள் தன்னெதிரிலிருக்கும் ஸ்திரீகளைப்பார்த்து ஸ்திரீகளே-கொன்றைமாலையணிந்த சடையையுடைய இந்தக்கயிலாயபதியினுடைய கண்டமானது முன்னாளில் தேவர்கள் பிழைக்கும்படி கரியவிஷத்தையுண்டு அதினால்கறுத்ததென்று சொல்லுகிறீர்களே அந்தக்கருமையில்ல மற்றென்னவென்றால்தம்முடைய மனமானது கருமையாகிய இரும்பென்று காட்டுதற்காகக்குறியிட்டுவைத்த கருமையேயாமென்றுசொன்னாள்.—(எ-று) (௱௩௨)

பொன்னவிர்சடையான்முன்னேபோனதென்னெஞ்சுதூதா *
வன்னதுதாழ்த்ததென்னென்றழுங்குவாளொருத்திகெட்டே *
னென்னதுநெஞ்சும்போனதென்றனளொருத்திகேட்ட .. *
மின்னனாள்வெற்கண்சேந்தாள்விளைத்தனரவளும்பூசல் .. *

(இ-ள்) பொன்போலப்பிரகாசியாநின்றசடைமுடியையுடைய கயிலாயபதியினிடத்துக்கு என்மனதானது தூதாகச்சென்றது அப்படிசென்றமனம்இன்னமும்வந்துசேராமல்இருக்கிற

காரணம் யாதோ தெரியவில்லையென்று ஒருஸ்திரீயானவள் துய
ரமுறுகின்றாள் மற்றொருத்தி என்மனமும் தூதாகச்சென்றது
அதுவும்வரவில்லையென்றாள் அதைக்கேட்டவள் வேல்போன்ற
கண்சிவக்கக் கோபங்கொண்டவளாய் மேற்சொல்லிய இரண்
டுபேருடனும் போர்செய்தாள்.—(எ-று) இரண்டுஸ்திரீகளு
ம்சொன்னதைக்கேட்டவள்ஏன்போர்செய்தாளென்னில்சுவா
மிக்குத்தானொருத்தியுமே உரியவளென்கிற எண்ணங்கொண்டு
போர்செய்தாளெனக்கொள்க. (௱௩௩)

செப்பிளங்கொங்கையாளோர்தெரிவைநீர்திருநோக்கெம்பால்
வைப்பதென்மதன்போலெம்மைச்சுடுவதேமதனுக்காவி .. *
யப்பொழுதளித்தாற்போலெம்மாவியுமளித்தாலின்று .. *
மெய்ப்புகழுமக்குண்டின்றேற்பெண்பழிவிளையுமென்றாள். *

(இ-ள்) செப்பையொத்த ஸ்தனங்களையுடைய ஒருஸ்திரீயா
னவள் சுவாமியைப்பார்த்து நீர் உம்முடைய பார்வையை எங்
களிடத்தில் வைப்பது யாதுக்கு மன்மதனைச்சுட்டதுபோல் எ
ங்களையுஞ்சுடுகின்றதே அப்போது அந்தமன்மதனுக்கு உயிர்
கொடுத்தாற்போல் எங்களுயிரையுங் கொடுத்தாலிப்போது
மெய்யாகிய புகழுமக்குண்டாகும் கொடாவிட்டால் உமக்கு
ப்பெண்பழிநேரிடுமென்றாள்.—(எ-று) (௱௩௪)

கவனமால் விடையான்றன்னைக் கடைக்கணித் திலனென்றங்
கோர், சுவணவான்கொடியோரோவத்தொழில்வல்லான் குறு
கநோக்கி, யிவனைநீயெழுதித்தந்தால்வேண்டுவவீவனென்று *
ரவனையாரெழுதவல்லாரென்றனளாவிசோர்ந்தாள் .. .... *

(இ-ள்) வேகமுடன்செல்லுகின்ற பெரியவிடையையுடைய
கயிலாயபதியானவர் தன்னைக் கடைக்கண்ணாற் பார்க்கவில்லை
யேயென்று எண்ணமிட்டுக்கொண்டிருக்கும் ஒருஸ்திரீயானவ
ள் அங்குவந்த ஒரு சித்திரகாரனைநோக்கி யிந்தக்கடவுள்போ
லப் படமெழுதி யெனக்குக்கொடுத்தால் உனக்குவேண்டிய
பொருள்களைக் கொடுப்பேனென்றாள் - ஆ-இந்தக்கடவுளை எவ
ர்கள்எழுதத்தக்கவர்களென்றான் -அதைக்கேட்டவள்ஆவிசோ
ர்ந்து மெய்மறந்துபோனாள்.—(எ-று) (௱௩௫)

வலத்தயன்வரவுகாணாண்மாலிடங்காணாள்விண்ணோர் ....[ப்
குலத்தையுங்காணாண்மண்ணோர்குழாத்தையுங் காணாண்ஞான
புலத்தவர்போலக்கண்டபொருளெலாமழுமான்செங்கைத் *
தலத்தவன்வடிவாக்கண்டாளொருதனித்தையன்மாது ....*

(இ-ள்) ஒப்பில்லாதவளாகிய ஒருமாதானவள்வலப்புறத்தில் பிரம்மதேவன் வருதலைக்காணாள்-இடப்புறத்தில் மகாவிஷ்ணு வருவதையுங்காணாள்-தேவர்கூட்டங்களையுங்காணாள் - மனிதகூட்டத்தையுங்காணாள் - ஞானவுணர்ச்சியை யுடையவர்கள்போலக்கண்டபொருள்களெல்லாம் மழுவையு மானையும் ஏந்திக்கொண்டிராநின்ற திருக்கரங்களையுடைய கயிலாசபதியினுருவமாகவேகண்டாள்.—(எ-று) (௱௯௬)

முன்பெற்றங்காலிற்செல்லவண்ணலைமுன் போய்க்காண்பான்;
பின்பற்றியாசைப்பாசம்பிணித்தெழவோடுவாளோர் .... *
பொன்பெற்றமுலையாள்கொம்பருகும்மலர்போலத்தாளின் .. *
மின்பெற்றகாஞ்சிதட்பவிலங்கொடுநடப்பாளொத்தாள் .. *

(இ-ள்) ரிஷபவாகனமானது காற்றினைப்போல் முன்னே செல்லுதலினாலே பரமசிவனை யெதிரிலேகண்டு தரிசிக்கவேண்டுமென்கிற ஆசையாகிய கயிறானது கட்டிப் பின்னின்று முன்னிழுக்க ஓடுகின்றவளாகிய தேமல்பரந்த தனங்களையுடைய ஒருஸ்திரீயானவள் கொம்பினின்றும் உதிருகின்ற மலர்போல் ஒளிபொருந்திய மேகலாபரணமானது நழுவிக் காலில்விழுந்து தடுப்ப-அதனால் விலங்குடனடப்பவளை யொத்தாள்.(எ-று)

விதுக்கலைமிலைந்துசெங்கண் விடையின்மேல்வருமானந்த...*
மதுக்கடறனைக்கண்வாயாண் முகந்துண்டுமகளிரெல்லாம்.... *
பதுக்கலைசரிவதோரார்புரிவளைகழல்வதோரார் .... ....... *
முதுக்குறையகல்வதோரார்மூழ்கினார்காமவெள்ளம். .... *

(இ-ள்) திருமுடியில் சந்திரகலையையணிந்துகொண்டுசெங்கண்ணையுடைய ரிஷபவாகனத்தின்மேல் வருகின்ற ஆனந்தத்தேன்கடலைக் கண்களாலும் வாயாலும் வாரியுண்டு மாதர்களெல்லாம் தாங்கள்உடுத்துக்கொண்டிருக்கும் புதியகலைகள் சரிவதை அறியாதவர்களாயும் சங்குவளையல்கள் கழல்வதை அறியாதவர்களாயும் பேரறிவுநீங்குவதைஅறியாதவர்களாயும் காமவெள்ளத்தில் மூழ்கினார்கள்.—(எ-று) ஆனந்தத்தேனைக் கண்ணாலுண்டது-நோக்கியதாகவும், வாயாலுண்டது-புகழ்ந்துகூறியதாகவுங்கொள்க. (௱௯௮)

பைத்தழகெறிக்குமாடப்பந்திமேனின்றுகாண்பார் ...... *
கைத்தலங்கூப்பியாங்கேகண்களுநோக்கியாங்கே .... ... *
சித்தமுங்குடிபோய்ச்சொல்லுஞ்செயலுமாண்டங்கண்மாண.
வைத்தமண்பாவையோவடிவுவேறற்றுநின்றார் .......... *

(இ-ள்) பொன்னிறங்கொண்டு அழகுடன் விளங்குகின்றமாடப்பந்திகளின்மேலிருந்துகொண்டுபார்க்காநின்ற ஸ்திரீகளானவர்கள் கைகுவித்துத்தொழுதபோதே கண்களும் அந்தக்கண்களாற் பார்த்தபோதே சித்தமும் தங்களைவிட்டுநீங்கிப் பரமசிவனிடத்தில் குடிபோய்விடச்-சொல்லையும் செய்கையையுமிழந்துஅந்தவீதியிலேஅழகுபெறவைத்திராநின்றமண்பாவையின் உருவத்துக்கும் தங்களுருவத்துக்கும் வேறுபாடுதோன்றாவகைநின்றார்கள்.—(எ-று) (௱௩௯)

அன்பட்டபுரமுங்காமனாகமுஞ்சுட்ட தீயின் .... .... ....*
மின்பட்டசடிலத்தண்ணன்மெய்யென்பதறியார்நோக்கிப்.*
பொன்பட்டகலனுமெய்யும்பொரிகின்றாரவனைப்புல்லி ...*
னென்பட்டுவிடுமோவையவேழையராவியம்மா .... ....*

(இ-ள்) சிவநேசத்தையொழித்த திரிபுரத்தாரையும் மன்மதனுடலையும் சுட்டெரித்த அக்கினிமயமாயிருப்பது-ஒளிபொருந்தியசடைமுடியையுடைய இந்தக்கயிலாயபதியின் திருமேனியென்று தெரியாதவர்களாகையால் (ஆசையுடன்பார்த்து) பொன்னினாற்செய்யப்பட்ட ஆபரணங்களும் தங்கள் சரீரங்களும் பொரியப்படுகின்றார்கள் அந்தக்கடவுளைப் புணர்வார்களேயானால் என்னபாடுபட்டுவிடுமோ அந்த மாதர்களுடைய உயிர்கள்.—(எ-று) (௱௪௰)

கொடிகள்பூத்துதிர்ந்தபோற்றிற்கொம்பனார்கலையுஞ்சங்குந்..*
தொடிகளுஞ்சுண்ணத்தூளுஞ்சுரர்பொழிமலருநந்தி.. ...*
யடிகள்கைப்பிரம்புதாக்கச்சிந்தியவண்டவானோர் ..........*
முடிகளின்மணியுந்தாருங்குப்பையாய்மொய்த்தவீதி .... *

(இ-ள்) கொடிகள்பூத்து உதிர்ந்தமலர்களைப்போல் பூங்கொம்பையொத்த ஸ்திரீகளணிந்திராநின்றவஸ்திரமும், சங்குவளையல்களும், கடகங்களும், சுண்ணப்பொடிகளும், தேவர்கள் பொழிகின்ற மலர்களும், நந்திதேவருடையகையிலிருக்கும்பிரம்படிபடச்சிந்தியதேவர்களுடைய முடிகளிற்பதித்திருக்கும் ரத்தினங்களும், பூமாலைகளும் வீதியில் குப்பைகளாய் நிறைந்தன.—(எ-று) (௱௪௧)

துன்னியதருப்பைகூடவாசிலைதழாவித்தோய்த்துப்... .. *
பொன்னியல்கலசநன்னீர்பூசுரர்வீசவன்னார் ........ ..,*
பண்ணியர்வட்டமாகவானவிற்பதித்தாலென்ன ..........*
மின்னியமணிசெய்நீராஞ்சனக்கலம்விழியாற்சுற்ற ...... *

(இ-ள்) பொருந்தியதருப்பையோடு அரசிலையினையும் ஒன்றுகச்சேர்த்துத்தோய்த்துப் பொன்னுற்செய்யப்பட்ட கலசத்திலிருக்கிற நல்லநீரைப் பிராமணர்கள் வீசவும், பிராமணஸ்திரீகள் இந்திரவில்லை வட்டமாகவைத்ததுபோல் பிரகாசியாநின்ற மணிகளாற்செய்யப்பட்ட நீராஞ்சனத்தட்டினையேந்திக்கொண்டு மூன்றுமுறையாகச்சுற்றவும்.—(எ-று) (௱௪௨)

கொடிமுரசாடிசெம்பொற்குடமணிநெய்யிற்பூத்த .. .. .. *
கடிமலரனையதீபமங்குசங்கவரியென்னும் .. .. .. ... *
படிவமங்கலங்களெட்டும்பரித்துநேர்பனுமக்கொம்பர் ... *
வடிவினார்வந்துகாட்டமாளிகைமருங்கிற்செல்வான் .... *

(இ-ள்) கொடி-பேரிகை-கண்ணாடி-பொற்கலசம்-மணி-நெய்யினாலேற்றப்பட்ட வாசனைபொருந்திய மலர்போலிருக்குந்தீபம்-அங்குசம்-சாமரை-என்னும் இவைகளின்வடிவமாகச்செய்யப்பட்டிருக்கிற அஷ்டமங்கலங்களைச்செந்தாமரைமலர்பூத்திராநின்றபூங்கொம்பையொத்தஉருவத்தையுடைய ஸ்திரீகள் ஏந்திக்கொண்டுவந்துகாட்டவும் திருமாளிகைக்குச்சமீபத்திற்செல்லுகின்றார்.—(எ-று) (௱௪௩)

செப்புரங்கவர்ந்தகொங்கையரம்பையர்தீபங்காட்டுந் .... *
துப்புரவன்பினார்க்குத்தூயமெய்ஞ்ஞானநல்கு .... .... *
முப்புரங்கடந்தான்றன்னைமும்முறையியங்களேங்கக் .... *
கப்புரவிளக்கந்தாங்கிவலஞ்செயக்கருணைபூத்தான் .. .... *

(இ-ள்) தீபத்தொண்டுசெய்கின்ற உறுதியான அன்பினையுடைய அடியார்களுக்கு மெய்ஞ்ஞானத்தை அருளிச்செய்கின்ற கயிலாசபதியை வாத்தியங்களொலிக்கும்படி பொற்செப்பினுடைய இறுமாப்பைக்கெடுத்த ஸ்தனங்களையுடைய அரம்பாஸ்திரீகள் கருப்பூரதீபமேந்திக்கொண்டு மூன்றுதரம் வலம்வரக் கிருபை பூத்திருந்தார்.—(எ-று) செப்புரங்கவர்ந்தகொங்கை-என்பதற்குச் செப்பினைமார்பிலேகவர்ந்துவைத்துக்கொண்டிருப்பதுபோலிராநின்ற ஸ்தனமெனப் பொருள்கூறினுமாம். (௱௪௪)

கோயின்முன்குறுகலோடுமைம்புலக்குறும்புதேய்த்த .... *
தூயநால்வேதச்செல்வர்சுவத்திகளோதநந்தி .......... *
சேயிருந்தட்கைபற்றிச்செங்கணேறிழிந்துநேர்ந்து .... *
மாயனுமயனுநீட்டுமலர்க்கரமிருபாற்பற்றி .......... *

(இ-ள்) கோயிலுக்குச்சமீபத்தில் வந்தமாத்திரத்தில் பஞ்சேந்திரியங்களாகிய குறும்பினையழித்தபரிசுத்தமுள்ளபிராமணர்கள் மங்கலவசனங்கள்சொல்ல நந்திதேவருடைய செவ்விதாகியபெருமைபொருந்திய கையைப்பற்றிக்கொண்டுசெங்கண்களையுடைய ரிஷபவாகனத்தைவிட்டிழிந்து(உடனே) சமீபத்தில்வந்து மகாவிஷ்ணுவும் பிரமதேவனும் இரண்டுபுறத்திலும்நீட்டுகின்றகைகளைப்பற்றிக்கொண்டு. (எ-று) (௱௪௫)

எதிர்ந்தருமறைகள்காணாநிளைத்தடிசுமந்துகாணா ........ *
முதிர்ந்தவன்புருவமானபாதுகைமுடிமேற்சாத்திப் .. .... *
பதிந்தவர்தலைமேற்கொண்டபாசவல்வினைதீர்த்துள்ளம் .... *
பொதிந்துபேரின்பநல்கும்பொன்னடிப்போதுசாத்தி .. *

(இ-ள்) அரியவேதங்களும்தேடிக்காணாமையினிளைத்துத்திருவடிகளைச்சுமந்தாவது காணலாமென்றுமேலிட்ட அன்பின்வடிவம்போன்ற பாதுகையினிடத்தில் - தங்கள்சிரசில் அணிந்துகொண்டுதுடிப்பற்றிருப்பவர்களுடைய சிரசுகளேயிடமாகக்கொண்டு அவர்களுடைய ஆணவமலத்தினு லுண்டாகின்ற வலியவினைதீர்த்து அவர்களுடைய உள்ளத்தைவிட்டு நீங்காமலிருந்து பேரின்பத்தை யருளிச்செய்யும்படியான பொன்போன்ற திருவடி மலரைச்சாத்தி —(எ-று) பாதுகையினிடத்தில்திருவடியைச்சாத்தியெனக்கூட்டுக. (௱௪௬)

பையரவுரியினன்னநடைப்படாம்பரப்பிப்பெய்த ...... *
கொய்யவிழ்போதுநீத்தங்குறாகழலடிநனைப்பத் .. .... *
தெய்வமந்தாரமாரிதிருமுடிநனைப்பத்தென்ன ............ *
ருய்யவந்தருளுமையனுள்ளெழுந்தருளுமெல்லை .......... *

(இ-ள்) படத்தினையுடையபாம்பின்தோலையொத்த நடைப்பாவாடைவிரித்து அதின்மேற்பரப்பிய கொய்த இதழ்விரிந்தமலர்களிலுள்ளதேன்வெள்ளமானது ஒலிக்காநின்றவீரகண்டையையணிந்திராநின்றதிருவடியைநனைக்கவும், தேவர்கள்வருஷிக்கும்கற்பகமலரின்தேன்வெள்ளமானது-திருமுடியைநனைக்கவும், பாண்டிநாட்டார்கடைத்தேறும்படி வந்தருளிய கயிலாயபதியானவர்உள்ளேயெழுந்தருளும்போது.—(எ-று) தென்னர்என்பதற்குப் பாண்டியர்களெனப்பொருள்கூறினுமமையும். பையரவுரியினன்ன நடைப்படாம் என்றது- வெண்மையையும், நுண்மையையும் பற்றியெனக்கொள்க. (௱௪௭)

மங்கலமகளிரோடுங்காஞ்சனமாலைவந்து .... ..... .....*
கங்கையின்முகந்தசெம்பொற்கரகநீரனையார்வாக்கத் ... *
திங்களங்கண்ணிவேய்ந்தசிவபரஞ்சோதிபாத .... ......... *
பங்கயம்விளக்கியந்நீர்தலைப்பெய்துபருகிநின்றாள் .. ..... *

(இ-ள்) பொலிவினையுடைய சிலதோழியர்கள் தன்னைச்சூழ்ந்துவரும்படி காஞ்சனமாலையானவள்வந்து கங்கையிலிருந்துகொண்டுவந்த பொற்கலசத்திலிராநின்றநீரை அந்தத்தோழிகள்வார்க்க-இளந்திங்களை அழகியமாலைபோலணிந்திராநின்ற கயிலாசபதியின் திருவடித்தாமரைமலர்களை விளக்கி அந்தநீரைத் தன்சிரசில் தெளித்துக்கொண்டு உள்ளுக்குங்கொண்டாள்.—(எ-று) (௱௪௮)

பாதநாண்மலர்மேலீரம்புலரவெண்பட்டானீவிச் ...... *
சீதமென்பனிநீராட்டிமான்மதச்சேறுபூசித் ... ..... .. *
தாதவிழ்புதுமந்தாரப்பொன்மலர்சாத்திச்சென்னி .. .. *
மீதிருகரங்கள்கூப்பிவேறுநின்றிதனைச்சொன்னாள் .. .... *

(இ-ள்) திருவடித்தாமரைமலர்களினீரம் புலரும்படி பட்டுவஸ்திரத்தாலே துடைத்துக் குளிர்ச்சியுமிருதுவுமுள்ளபனிநீர்விட்டுக்கஸ்தூரிகலந்த சந்தனக்குழம்பணிந்து மகரந்தங்களோடுமலர்கின்ற கற்பகத்தினழகியமலர்சாத்தித்தம்சிரசின்மேல் கைகளைக் குவித்துவைத்துக்கொண்டு இடைந்துநின்று இந்தவார்த்தைகளைச் சொல்லுகின்றாள்.—(எ-று) (௱௪௯)

அருமையாலடியேன்பெற்றவணங்கினைவதுவைசெய்தித் .. *
திருநகர்த்திருவுங்கன்னித்தேயமுங்கைக்கொண்டாள்கென் .*
றுரைசெய்தாளதற்குநேர்வாருண்ணகையுடையராகி .. ...*
மருகனூரியங்களார்ப்பவதுவைமண்டபத்தைச்சேர்ந்தார் .. *

(இ-ள்) அருமையுடனடியேன்பெற்ற கன்னிகையை விவாகஞ்செய்துகொண்டு சிறப்புள்ள நகரத்தின் செல்வத்துடன் பாண்டிநாட்டின் சிறப்பினையும் தேவரீர் கைக்கொண்டு அரசாட்சிசெய்யுமென்று சொல்லினாள்-அதற்குத் திருவுளமிசைகின்ற மருகனானவர் புன்னகையையுடையவராய் வாத்தியங்களொலிக்கும்படி கல்யாணமண்டபத்திற் சேர்ந்தார்.(எ-று)

அருத்தநான்மறைகளார்ப்பவரிமணித்தவிசிலேறி.. .. .... *
திருத்தனுங்கிருந்துசூழநின்றமாலயனேயேனை ..... ..... *

யுருத்திராதியரைப்பின் னுமொழிந்தவானவரைத்தத்தந் .... *
திருத்தகுதவிசின்மேவததிருக்கடைநாட்டம்வைத்தான் .... *

(இ-ள்) கயிலாயபதியானவர் பொருள்களுள்ள நான்குவேதங்களும் ஆர்க்கும்படி ரத்தினங்கள் பதித்திருக்கும் சிங்காசனத்திலேறி அவிடத்திலிருந்தபின்பு-சூழ்ந்திருக்கின்ற மகாவிஷ்ணுவையும் பிரமதேவனையும் இவர்களுடைல்லாமல் உருத்திரர்முதலியவர்களையும் பின்னுமவர்களொழிந்த தேவர்களையும் தங்கள்தங்கள் சிறப்புப்பொருந்திய ஆசனத்திலிருக்கும்படி திருக்கடைக்கண்சாத்தினார்.—(எ-று) (௩௱௫௧)

விண்டலவாழேனோரேனோர்மிடைதலான்ஞாலச்செல்வி .... *
பண்டையளன்றியின்னுபரித்தனள்பௌவமேழு .... ..... *
முண்டவன்றன்னைத்தானின்னுத்தரதிருத்தினுளோ..... .... *
வண்டர்நாயகன்றனுணைவழியினுவறிவேமம்மா .... .. *

(இ-ள்) விண்ணுலகத்திலிராநின்ற தேவர்களும் மற்றவுலகத்திலிருப்பவர்களும் நெருங்கியிருப்பதினாலே பூமிதேவியானவள் முன் ஒருபுறம்சாய்ந்ததுபோல் சாயாமல் எல்லாவையும் தாங்கிக்கொண்டிருந்தாள்-அப்படி தாங்கிக்கொண்டிருந்தது- தேவர்தேவராகியகயிலாசபதியானவர் எழுசமுத்திரத்தையும் உண்டவராகிய அகஸ்தியமுனிவரை உத்தரதிசையிலிருக்கச்செய்தாரோ அல்லது அவருடைய ஆக்கினையினுலோ நாமறிந்திலம்.—(எ-று) (௩௱௫௨)

மாமணித்தவிசில்வைகிமணவினைக்கடுத்தவோரை .... .. *
தாம்வருமளவும்வானத்தமணிபமலர்க்கொம்பன்னார் .. .. *
காமருநடனநோக்கிக்கருணைசெய்திருந்தானிப்பாற் .... *
கோயகள்வதுவைக்கோலம்புனைநிறங்கூறலுற்றேன். .... *

(இ-ள்) மாணிக்கங்கள்பதித்திராநின்ற சிங்காசனத்தில் எழுந்தருளி விவாகச்சடங்குசெய்வதற்கு அடுத்ததாகிய லக்கினம் வருகிறவரைக்கும் சுவர்க்கலோகத்திலிருந்து வந்திராநின்ற பொன்னிறமுள்ள பூங்கொம்பையொத்த அரம்பாஸ்திரீகள் ஆடுகின்ற அழகுபொருந்திய நடனத்தைநோக்கிக் கிருபைகூர்ந்திருந்தார்-இப்பால் தடாதகைப்பிராட்டியாரானவர் கல்யாணக்கோலம்புனைகின்றவகையினைச்சொல்லத்தொடங்கினேன் (எ-று) (௩௱௫௩)

மாசறுத்தெமையானந்தவாரிநீராட்டிப்பண்டைத்.. ... .. *
தேசுருவிளக்கவல்லசிவபரம்பரையைச்செம்பொ ..... .. ... *

ஞசனத்திருத்திநானமணிந்துகுங்குமச்சேறப்பி... ..... ..*
வாசநீராட்டினார்கண்மதிமுகக்கொம்பரன்னார்.. .. .... *

(இ-ள்) பிறவிக்கேதுவாகிய ஆணவமலத்தைநீக்கி எங்களை ஆனந்தவெள்ளத்தில் முழுகவைத்துப்பழமையாகிய தேசினை யுடைய உருவமாகும்படி செய்யவல்ல சிவபரம்பரையாகிய த டாதகைப்பிராட்டியைச் செம்பொன்னால்செய்யப்பட்ட ஆச னத்தில்வீற்றிருக்கச்செய்து மதிபோன்ற முகத்தையுடைய ஸ் திரீகளானவர்கள் கஸ்தூரி அணிந்து குங்குமக்குழம்பைப்பூசி வாசனைசேர்த்த நீரினால் ஸ்நானஞ் செய்வித்தார்கள்.— (எ-று) பண்டைத்தேசுருவிளக்கலாவது - பரிசவேதியானது களிம்பி னை நீக்கிச் செம்பினைப் பொன்னாக்குவதுபோல் ஆணவமலத் தை நீக்கி ஆன்மாவைச் சிவமாக்குதல். (௱௫௪)

முரசொடுசங்கமேங்கமுழங்கிநுண்டுகில்சாத்தி.. .............*
பாகியலறத்திற்கேற்பவந்தணர்க்குரியதானம்..... ... ....*
விரைசெறிதளிர்க்கையாரவேண்டுவவெறுப்பத்தந்து .... *
திரைசெய்நீரமிர்தமன்னாடிருமணக்கோலங்கொள்வாள் .. *

(இ-ள்) பேரிசையுடனே சங்கங்கள்சத்திக்கும்படி நுண்மை யாகிய வஸ்திரமணிந்து க்ஷத்திரியகுலதர்மத்திற்குத் தகுதியா கப் பிராமணர்களுக்குரிய தானமாய் வாசனைபொருந்திய த ளிர்போன்ற கைகள் நிறைய எடுத்து வேண்டிய பொருள்க ளை ,அவர்கள் வெறுக்கும்படி கொடுத்து அதன்பின்பு பாற்க டலினுண்டாகிய அமிர்தத்தையொத்ததடாதகைப்பிராட்டியா ர் திருமணக்கோலங் கொள்கின்றார்.— (எ-று) தடாதகைப்பி ராட்டியாரானவர் சிவானந்தமே திருமேனியாகக்கொண்டிரு ப்பவராதலாலும், அன்பர்களுக்குப் பிறவாவரந்தருபவராத லாலும் அமிர்தமன்னாளென்றார். (௱௫௫)

செம்மலர்த்திருவும்வெள்ளைச்செழுமலர்த்திருவுந்தங்கள்... *
கைம்மலர்த்தவப்பேறின்றுகாட்டுவார்போலநங்கை......*
யம்மலரணிச்சமஞ்சுமடியிற்செம்பஞ்சுதீட்டி........ ..*
மைம்மலர்க்குழன்மேல்வாசக்காசறைவழியப்பெய்து.....*

(இ-ள்) மகாலட்சுமியுஞ்சரஸ்வதியுந் தங்கள் கைமலர்செய் த தவப்பேற்றினை யிப்போது காட்டுகின்றவர்போல் அழகிய அணிச்சம்பூவுக்கும் அஞ்சத்தக்க தடாதகைப்பிராட்டியாரது பாதத்தில் செம்பஞ்சுக்குழம்புதீட்டி மேகம்போன்றதாய்ப்பூ மாலையணியத்தக்க அளகத்தின்மேல் வாசனைபொருந்திய மயி

ர்ச்சாந்து வழியும்படியாகப்பூசி.—(எ-று) அனிச்சமஞ்சும
டியென்றதனால்-அம்மலரினுமெல்லிய அடியென்பதாயிற்று.

கொங்கையின்முகட்டிற்சாந்தங்குளிர்பனிநீர்தோய்த்தட்டிப்.
பங்கயமலர்மேலன்னம்பவளச்செவ்வாய்விட்டார்ப்பத் ..... *
தங்கியவென்னவாரநூபுரந்ததும்பச்செங்கே........ ....*
ழுங்கதிர்ப்பாதசாலங்கிங்கிணியலம்பப்பெய்து ..... ..... ..*

(இ-ள்) சந்தனத்தைக்குளிர்ச்சியாகிய பனிநீர்விட்டுக்கலந்து ஸ்தனத்தின்மிருதுவாகிய உச்சியிலப்பித்தாமரைப்புஷ்பத்தின்மேல் அன்னங்கள்பவளம்போன்ற செவ்வாயைத்திறந்து சத்திக்கும்படி தங்கியிருத்தல்போல் பொருந்தநூபுரமானது சத்திக்கவும், செம்மையாகிய நிறத்தினையுடைய மாணிக்கம்பதித்த அழகியகிரணங்களையுடைய பாதசாலங்களும் கிண்கிணிகளும்சததிக்கவும் திருவடிகளில் அணிந்து.—(எ-று) (௱௫௭)

எண்ணிரண்டிரட்டிகோத்தவிரிசிகையிருபத்தொன்றிற் .... *
பண்ணியகலாபமீரேழ்பருமநாலிரண்டிற்செய்த .. .. ..*
வண்ணமேகலையிரண்டிற்காஞ்சியிவ்வகையோரைந்தும் ....*
புண்ணியக்கொடிவண்டார்ப்பப்பூத்தபோற்புலம்பப்பூட்டி.*

(இ-ள்) முப்பத்திரண்டுகோவையாகக்கோத்தவிரிசிகையென்பதும், இருபத்தொருகோவையாகக்கோத்தகலாபமென்பதும், பதினாலுகோவையாகக்கோத்த பருமமென்பதும், எட்டுக்கோவையாகக்கோத்த அழகிய மேகலையென்பதும், இரண்டுகோவையாகக்கோத்த காஞ்சியென்பதுமாக ஐந்துவகையாயிராநின்ற மேகலாபரணங்களைப் புண்ணியக்கொடியினிடத்து வண்டுகளிசைபாடும்படி மலர்கள் பூத்திருப்பனபோல் ஒலிக்கும்படி தரித்து—(எ-று) (௱௫௮)

பொன்மணிவண்டுவீழ்ந்தகாந்தளம்போதுபோல... ......*
மின்மணியாழிகோத்துமெல்விரற்செங்கைக்கேற்ப .... ...*
வன்மணிவைரயாப்புக்கடகமுந்தொடியும்வானத் ........*
தென்மணிக்கரங்கள்கூப்பவிருதடந்தோளிலேற்றி ......*

(இ-ள்) பொன்னிறத்துடன்மணிநிறமுமுள்ள வண்டுகள்படிந்திராநின்ற காந்தள்மலர்போல் பிரகாசியாநின்ற ரத்தினங்கள்பதித்த மோதிரங்களை மிருதுவாகிய விரலினிடத்து அணிந்து - செம்மையாகிய கைகளுக்கு எற்கும்படி உறுதியுள்ள வயிரமணிகளைப் பதித்திராநின்ற கடகங்களும், இரண்டுதோ

ள்களுக்கும்ஏற்பத்தொடிகளும், ஆகாயத்திற்செல்லுகின்ற சூரியன்றவனுடைய அழகிய கைகளாகிய கிரணங்களும் குவியும்படி அணிந்து.—(எ-று) கடகங்களினுடையவும், தொடிகளினுடையவுமாகிய ஒளிக்குமுன் சூரியனது ஒளி மழுங்குமென்னுங்குறிப்புத்தோன்ற (என்மணிக்கரங்கள்கூப்பவென்றார்) கூப்பவென்பது-வலித்தல்விகாரம். சூரியன்கை கூப்பித்தொழுதென்று பொருள்கூறினுமமையும். (௩௫௰)

மரகதமாலையம்பொன்மாலைவித்துருமமாலை.. ..... .. ....*
நிரைபடவானவில்லினிழல்படவாரத்தாமம்.... .. ..... *
விரைபடக்களபச்சேறுமெழுகியபுளகக்கொங்கை.... ....*
வரைபடமருவியன்றிவனப்புநீர்நுரையுமான .... .. ......*

(இ-ள்) மரகதமாலையும் பொன்மாலையும் பவளமாலையும் வரிசையாக இந்திரவில்லைப்போல் ஒளியுண்டாகும்படி முத்துமாலையும் வாசனைபொருந்திய பச்சைக்கர்ப்பூரஞ்சேர்த்த சந்தனக்குழம்புபூசிய புளகமுறுகின்ற தனங்களினிடத்தில்மலையினின்றுவருகின்ற அருவியையொப்பாயிருப்பதுமல்லாமல் அழகுள்ள நீர்நுரையினையுமொப்பாயிருப்பவும்.—(எ-று)

உருவமுத்துடுவாயம்முத்துடுத்தயல்காசுகோளாய்.. .. ..*
மருவலக்காசுசூழ்ந்தமாமணிகதிராய்க்கங்குல்... ... .....*
வெருவவிட்டிமைக்குமாமேருவின்புறஞ்சூழ்ந்தாடுந்.. ..*
துருவசக்கரம்போற்கொங்கைதுயல்வரவிளங்கச்சூட்டி.. *

(இ-ள்) அழகியமுத்து நக்ஷத்திரங்களாயும்-அந்த முத்துகளைச்சூழ்ந்த பலவகையாகிய ரத்னங்கள் கோளாயும்பொருந்த அந்நக்ஷத்திரங்களைச்சூழ்ந்த மாணிக்கங்கள்சூரியனாகியும் இருளஞ்சும்படிவிட்டுப் பிரகாசியாநின்ற பதக்கத்தைமகமேருவின்புறத்திற்சூழ்ந்துசெல்லுகின்ற துருவசக்கரம்போல் விளங்கும்படி தனத்தினிடத்தில் தொங்கி யசையத்தக்கதாக அணிந்து.—(எ-று) கோளாவது-கிரகங்கள். (௩௫௧)

கொடிக்கயலினமாய்நின்றகோட்சுறவேறும்வீறுந் ......*
தொடிக்கலைமதியுந்தங்கோன்றேல்குலவிளக்காய்த்தோன்று
பிடிக்கிருமாதினூடுமந்தணம்பேசுமாபோல்..... .......[ம்
வடிக்குழைமகரத்தோடுபரிதிவாண்மழுங்கச்சேர்த்து.. ..*

(இ-ள்) கொடியிலெழுதப்பட்ட கயலுக் கினமாயிருக்கிற வலியினையுடைய மகரமும் வீறுகின்ற வட்டமாகிய கலைமதியு

ம் தங்கள் அரசனாகிய பாண்டியராசனுடையபழமையாகியகுலத்தை விளக்கும்படி தீபம்போலத்தோன்றிய தடாதகைப்பிராட்டியி னிரண்டுகாதிலும்இரகசியவார்த்தைகளைச்சொல்லவந்திருப்பதுபோலாக நீட்சியையுடைய குழையினை மகரகுண்டலத்துடன்சூரியனொளிமழுங்கும்படி அணிந்து.(எ-று) (௩௬௨)

மழைக்குமாமதிக்குநாப்பண்வானவிற்கிடந்தாலொப்ப ... ✻
விழைக்குமாமணிசூழ்பட்டமிலம்பகமிலங்கப்பெய்து .... ✻
தழைக்குமாமுகிலைமைந்தன்றளையிடல்காட்டுமாபோற் .... ✻
குழைக்குநீர்த்தகரஞாழற்கோதைமேற்கோதையார்த்து ... ✻

(இ-ள்) மேகத்தினுக்கு முழுமதிக்கு மத்தியில் இந்திரதனுசுபொருந்தி யிருப்பதுபோல் மணிகளால்செய்த பட்டத்தை நெற்றியில் விளங்கும்படி அணிந்து சூழ்ந்துவரு மேகத்தை (இனிமேல் திருவவதாரஞ்செய்யும்) தன்புத்திரனாகிய உக்கிரபாண்டியதேவர் இவ்வண்ணந் தளையிடுமொன்று காட்டு முறைமைபோல் பனிநீர்விட்டுக்குழைத்த மயிர்ச்சாந்தணிந்த அளகத்தின்மேல் பூமாலையைக்கட்டி.—(எ-று) (௩௬௩)

கற்பகங்கொடுத்தவிந்தக்காமருகலன்களெல்லாம்... ..... ...✻
பொற்பமெய்ப்படுத்துமுக்கட்புனிதனுக்கீறிலாத.........✻
வற்புதமகிழ்ச்சிதோன்றவழகுசெய்தமையந்தோன்றச்.......✻
சொற்கலையாளும்பூவின்கிழத்தியுந்தொழுதுநோக்கி ......✻

(இ-ள்) கற்பகவிருக்ஷங்கொடுத்த இந்த அழகுள்ள ஆபரணங்களையெல்லாம் அழகுபொருந்தும்படி திருமேனியிலணிந்து மூன்றுகண்களையுடைய பரமசிவனுக்கு முடிவில்லாத அற்புதமகிழ்ச்சி உண்டாகும்படி அலங்காரஞ்செய்து விவாகமுகூர்த்தகாலம் வந்தமாத்திரத்தில் சரஸ்வதியும் மகாலக்ஷ்மியும் நோக்கிப்பணிந்து.—(எ-று) (௩௬௪)

சுந்தரவல்லிதன்னைச்சோபனமென்றுவாழ்த்தி ........... ✻
வந்திருகையுந்தங்கண்மாந்தளிர்க்கைகணீட்டக்............✻
கொந்தவிழ்கோதைமாதுமறமெலாங்குடிகொண்டேறு .... ✻
மந்தளிர்ச்செங்கைபற்றுவெழுந்தனண்மறைகளார்ப்ப..... ✻

(இ-ள்) சுந்தரவல்லியாகிய தடாதகைப்பிராட்டியைச் சோபனஞ் சோபனமென்று வாழ்த்திவந்து இரண்டுபக்கத்திலும் மாந்தளிர்போன்ற தங்களிரண்டுகைகளையும் நீட்டப் பூங்கொத்

துகள்விரிகின்ற அளகத்தையுடைய தாயானவள் முப்பத்திரண்டறங்களுங் குடிகொண்டு வீற்றிராநின்ற அழகிய தளிர்போன்ற தன்னுடையகைகளாற் பற்றிக்கொண்டு வேதங்கள் முழங்கும்படியெழுந்தாள்.—(எ-று) (௱௬௫)

(வேறு.)

அறைந்தனதூரியமார்த்தனசங்க ...........*
நிறைந்தனவானவர்நீண்மலர்மாரி ...............*
யெறிந்தனசாமரையேந்திழையார்வாய்ச் ..... ...*
சிறந்தனமங்கலவாழ்த்தெழுசெல்வம் .. ..... ...*

(இ-ள்) தேவர்களாலே திருமணவாத்தியங்கள் அறையப்பட்டன-(இன்னும்) வலம்புரிச்சங்கங்கள் சத்திக்கப்பட்டன-(பின்னும்) நீட்சியான பூமாரிகள் நிறையப்பட்டன-(அன்றியும்) தாங்கும்படியான ஆபரணங்களுடைய பெண்களாலே சாமரைகள் வீசப்பட்டன-(மேலும்) அப்பெண்கள்வாயிலிருந்து எழும்புகின்ற மங்கலவாழ்த்துச் செல்வமானவை சிறக்கப்பட்டன.—(எ-று) (௱௬௬)

அடுத்தனள்சுந்தரியம்பொனடைப்பை...........*
யெடுத்தனளாடிதிலோத்தமையேந்திப் .. .. ... *
பிடித்தனள்விந்தைபிடித்தனள்பொற்கோ... ... *
லடுத்தநெருக்கையொதுக்கிநடந்தாள்...... .. *

(இ-ள்) அடுத்துநின்ற இந்திராணியானவள் அழகும் பிரகாசமும்பொருந்திய அடைப்பையேந்தினள்-திலோத்தமையானவள் நிலைக்கண்ணாடியை இருகரங்களாலும் ஏந்திப்பிடித்தனள்-இலட்சுமியானவள் பொற்றகட்டாற் சுற்றப்பட்ட பிரப்பங்கோலைக் கையிற்பிடித்தனள்-மேலும் தடாதகைப்பிராட்டியானாள் சூழ்ந்த சனநெருக்கங்களை ஒதுக்கிநடந்தனள்.(எ-று) (௱௬௭)

கட்டவிழ்கோதையரம்பைகளாஞ்சி............*
தொட்டனளூர்ப்பசிதூமணியால ....... .... *
வட்டமசைத்தனள்வன்னமணிக்கா .... .........*
சிட்டிழைகோடிகமேனகைகொண்டாள் ...... *

(இ-ள்) முறுக்கவிழ்ந்த வாடாமலர்மாலையிணையுடைய அரம்பையானவள் காளாஞ்சியேந்தினள்-உருப்பசியானவள் சுத்தம்பொருந்திய நவமணிகளிழைத்த ஆலவட்டம்பிடித் தசைத்தனள்-மேனகையானவள் நிறமும் அழகும்பொருந்திய ஆரதனங்களிழைத்த பூந்தட்டை ஏந்தினள்.—(எ-று) (௱௬௮)

கொடிகளெனக்குளிர்போதொடுசிந்தும் ...... *
வடிபனிநீரினர்வீசுபொன்வண்ணப் ........ *
பொடியினரேந்தியபூம்புகைதீபத் ........... *
தொடியணிகையினர்தோகையர்சூழ்ந்தார் ... *

(இ-ள்) கொடிகளைப்போலும் குளிர்ச்சிபொருந்தியபுட்பங்களோடு தூவும் வடித்தெடுத்த பனிநீரையேந்தியபெண்களும், வாசம்வீசும் பொன்னிறமான கந்தபொடியினை யேந்தியபெண்களும், அழகிய புகைபொருந்திய தீபமேந்திய வளையல்களையணிந்த கைகளையுடையபெண்களும், தடாதகைப் பிராட்டியாரைச்சூழ்ந்தார்கள்.—(எ-று) (௱௬௯)

தோடவிழோதியர்சோபனகீதம் .... ........ *
பாடவிரைப்பனிநீரொடுசாந்த............ .. ...*
மேடவிழ்மென்மலரிட்டபடத்திற்............ *
பாடகமெல்லடியைப்பையவையா. .... .. ...*

(இ-ள்) இதழ்கள்விரிந்த மலர்களையணிந்த கூந்தலையுடைய மாதர்கள் சோபனசங்கீதம்பாட-வாசனைபொருந்திய பனிநீரும் அதனோடுசந்தனமும் மடல்விரிந்த மென்மையாகிய மலர்களும் தெளித்திராநின்ற மெல்லிய நடபாவாடையின்மேல் பாடகமணிந்த மெல்லியதிருவடியைத் தடாதகைப்பிராட்டியாரானவர் மெதுவாகவைத்து.—(எ-று) (௱௭௰)

செம்மலராளொடுநாமகடேவி ............ *
கைம்மலர்பற்றினகல்வியொடாக்க ........ *
மிம்மையிலேபெறுவார்க்கிதுபோதென் ...... *
றம்மணிநூபுரமார்ப்பநடந்தாள் .. .. ........*

(இ-ள்) இலக்குமியின்கரமும் அதனோடு சரஸ்வதியின்கரமும் தடாதகைப்பிராட்டியாருடைய மலர்போன்ற திருக்கரங்களைப்பிடித்தன-இம்மையிலே கல்வியுடனே செல்வம்பெறுவார்க்கு இதுகாலமென்று அழகிய நவமணிகள் இழைத்த திருவடிச்சிலம்புகள் சத்திக்கும்படியாகஅத்தடாதகைப்பிராட்டியார் நடந்தார்.—(எ-று) இவ்விரண்டுபாடலுங்குளகம். (௱௭௧)

ஒல்கினண்மெல்லவொதுங்கினளன்பு... .... ...*
பில்கியிருந்தபிராணருகெய்தி ... .... .... *
மெல்கியெருத்தமிசைத்தலைதூக்கிப்......... .. *
புல்கியகாஞ்சிபுலம்பவிருந்தாள். .. ..... ......*

(இ-ள்) தளர்ந்தவளுமாய் மெல்ல ஒதுங்கினவளுமாய் விள ங்குந் தடாதகைப்பிராட்டியார் அன்புகனிந்திருந்த சோமசுந் தரக்கடவுளினது பக்கலிற்சென்று மெலிவடைந்து பிடரியின் மேல் தலையெடுத்துயைத்துப் பொருந்திய எண்கோவைமணிச் த்திக்கும்படியாக வீற்றிருந்தார்.—(எ-று) (௱௭௨)

(வேறு.)

அற்பகவிமைக்குஞ்செம்பொனரதனபீடத்தும்பர்...... ✻
பொற்பகலாதகாட்சிப்புனிதனோடிருந்தநங்கை ... ......✻
யெற்பகல்வலங்கொண்டேகுமெரிகதிர்வரையினுச்சிக்... .. ✻
கற்பகமருங்கிற்பூத்தகாமருவல்லியொத்தாள். ...... .. ... ✻

(இ-ள்) இருளானதுகெடப் பிரகாசிக்கும் அரதனமிழைத் த செம்பொற்பீடத்தின்மேல் அழகுநீங்காத காட்சியினையுடை ய சோமசுந்தரக்கடவுளினோடு வீற்றிருந்த தடாதகைப்பிரா ட்டியாரானவர் ஒளிபொருந்திய சூரியன் இரவும்பகலும் வலங் கொண்டு செல்லு மகாமேருவினது உச்சியிலே கற்பகவிருட்ச த்தின் பக்கத்திற்பூத்த காமவல்லிக்கொடியையொத்தார்(எ-று)

பண்ணுமின்னிசையுநீருந்தண்மையும்பாலும்பாலி... .... ✻
ணண்ணுமின்சுவையும்பூவுநாற்றமுமணியுமங்கேழ்.. ... .. ✻
வண்ணமும்வேறுவேறுவடிவுகொண்டிருந்தாலொத்த .... ✻
தண்ணலுமுலகமீன்றவம்மையுமிருந்தம்மா .... .... ✻

(இ-ள்) பண்ணும், பண்ணிற்பொருந்திய இனிய இசையும், நீரும், நீரிற்பொருந்திய குளிர்ச்சியும், பாலும், பாலிற்பொரு ந்திய இனிய சுவையும், பூவும், பூவிற்பொருந்திய மணமும், மணியும், மணியிற்பொருந்தியவொளியும், இவையெல்லாம்வே றுவேறு வடிவுகொண்டு இருந்ததை யொத்திருந்தது-சுவாமியு ம் உலகத்தையீன்ற அம்மையும் இருந்தது.—(எ-று) (௱௭௪)

விண்ணுளார்திசையினுள்ளார்வேறுளார்பிலத்தினுள்ளார்... ✻
மண்ணுளார்பிறரும்வேள்விமண்டபத்தடங்கியென்றும் .. ✻
பண்ணுளாரோசைபோலப்பரந்தெங்குநிறைந்தமூன்று .. ✻
கண்ணுளாரடியினீழல்கலந்துளார்தம்மையொத்தார். .... ✻

(இ-ள்) தேவலோகத்திலுள்ளவர்களும் அட்டதிக்கிலுள்ளவர் களும் வேறிடத்திலுள்ளவர்களும், பாதாளத்தி லுள்ளவர்களும் பூவுலகிலுள்ளவர்களும் மற்றவர்களும் வேள்வி மண்டபத்தினு

ளே அடங்கி எக்காலத்தும் இசைப்பாட்டினைப்பாடுகின்றவர்கள் ஓசையைப்போலப்பரவி எங்குநிறைந்த திரிநேத்திரங்களையுடைய பரமேச்சுரரது திருவடிநீழலிலே கலந்துவாழுந் திருத்தொண்டர்களை யொத்திருந்தார்கள்.—(எ-று) (௱௭௫)

ஆயபோதாழியங்கையண்ணல்பொற்கரகநீரால் .... ...... *
சேயவான்சோதியாடற்சேவடிவிளக்கிச்சாந்தந் .... .... *
தூயபோதவிழ்ச்சார்த்திரித்தூபமுஞ்சுடருங்கோட்டி ...... *
நேயமோடருச்சித்தையனிறையருள்பெற்றுநின்றான் .... *

(இ-ள்) அவ்வாறானகாலத்துச் சக்கரத்தை அழகிய கையினிடமாகத்தாங்கிய திருமாலானவர் பொற்கரகநீரினாலே பெருமைபொருந்திய சிவப்பான (திருமேனியினையுடைய) சோமசுந்தரக்கடவுள் ஆடல்புரியும் சிவந்த திருவடிகளைத் துலக்கமுறச்செய்து சந்தனத்தையும் பரிசுத்தமான மலர்ந்த மலர்களையுஞ்சார்த்திச் சாம்பிராணித்தூபமுங் கருப்பூரத்தீபமும் வளைவுறச்சுழற்றிச்சுற்றி அன்புடனே அருச்சித்துச் சுவாமியினுடைய நிறைந்த கருணையைப்பெற்றுநின்றார்.—(எ-று) (௱௭௬)

விண்டலத்தவருளாதிவேதியன்பாததீர்த்த ............. .. *
முண்டகத்தவனுமாலுமுனிவரும்புரந்தராதி...... .. .. .. *
யண்டருநந்திதேவுமடுகணத்தவருமேனைத் .... .. .. ... *
தொண்டரும்புறம்புமுள்ளுநனைத்தனர்சுத்திசெய்தார் .... *

(இ-ள்) தேவலோகத்திலுள்ளவர்களுக்குள் முதன்மையாகிய சோமசுந்தரக்கடவுளினது திருவடியிற்பட்ட திவ்விய தீர்த்தத்தைக்கொண்டு பிரமதேவனும் மகாவிஷ்ணுவும் முனிவர்களும் தேவேந்திரன்முதலான தேவர்களும் நந்திதேவரும் சொல்லுகின்ற பூதகணத்தோர்களும் மற்றச்சிவனடியார்களும் உள்ளும்புறம்பும் நனைத்தார்கள்-நனைத்துஞ் சுத்திசெய்தார்கள்.—(எ-று) (௱௭௭)

அத்தலைநின்றமாயோனதிசெங்கரத்துநங்கை ..... ... .... *
கைத்தலங்கமலப்போதுபூத்ததோர்காந்தளொப்ப ........ *
வைத்தருமனுவாயோதக்கரகநீர்மாரிபெய்தான் .... ...... *
மொய்த்தலர்கண்ணிவிண்ணோர்தொழுதுபூமாரிபெய்தார் .... *

(இ-ள்) அவ்விடத்துநின்ற திருமாலானவர் சோமசுந்தரக்கடவுளினது சிவந்தகையினிடத்திலே தாமரைமலரினிடமாகப்பூ

த்த ஓர்காத்தன்மேலனை ஒப்பாகத்தடாதகைப்பிராட்டியாருடைய கையைவைத்து அரிதாகிய வேதமுறைவிதி சரியென்றுசொல்லக் கமண்டலத்திலிருந்த நீர்மழைசொரிந்தார்- பூங்கொத்துக்களை மாலையாகவுடைய தேவர்கள் தொழுது பூமழைசொரிந்தார்கள்.—(எ-று) (௧௭௮)

ஆடினாரரம்பைமாதர்விஞ்சையரமுதகீதம்... ... . .... *
பாடினாரரவென்றுசீர்த்தாப்பரவினார்முனிவர்வானோர்...... *
மூடினார்புளகப்போர்வைமன்னர்முடிமேற்செங்கை .... *
சூடினார்பலருமன்றற்றிருக்கடலின்பத்தாழ்ந்தார்........... *

(இ-ள்) அரம்பைமாதர்கள் நடனமாடினார்கள்- விஞ்சையர்கள் அமுதம்போலுஞ் சங்கீதம்பாடினார்கள்-முனிவர்கள் அரகரவென்று சத்தித்துத் தோத்திரஞ்செய்தார்கள்-தேவர்கள் (அங்கமெங்கும்) புளகமென்னும் போர்வைபோர்த்தார்கள் - பூதலத்தோர்கள் சிரங்களின்மேலே கரங்களைக்குவித்துத் துதித்தார்கள் - (இன்னும்) பலரும் கலியாணக்கட லின்பத்திலழுழ்ந்தார்கள்.—(எ-று) (௧௭௯)

புத்தனாரெறிந்தகல்லும்போதெனமிலைந்தவேத .... ... *
வித்தனாரடிக்கீழ்வீழவிண்ணவர்முனிவரேனோர் ........ ...*
சித்தநாவாசிகூறக்குங்குமத்தோயந்தோய்ந்த ........... *
முத்தவாலரிசிவீசிமூழ்கினார்போகவெள்ளம்..... ... .... *

(இ-ள்) சாக்கியநாயனார் எறிந்த கல்லையும், புட்பத்தைப் போலத்தரித்த வேதங்களுக்குமுதலான சோமசுந்தரக்கடவுளினுடைய திருவடியின்கீழ் விழுந்தக்கூத்தாகத் தேவர்களும் முனிவர்களும் மற்றவர்களும் பரிசுத்தமாகிய நாவினாலே மங்கலவாழ்த்துக்கூறக் குங்குமநீரிலே மூழ்கிய முத்துக்களையொத்த வெண்மையாகிய அரிசிகளைவீசிப் போக வெள்ளத்திலே மூழ்கினார்கள்.—(எ-று) (௧௮௰)

அம்மையேயப்பனென்னவலர்மணம்போலநீங்கார் ...... *
தம்மருள்விளையாட்டாலேயாற்றநாட்டமியர்போல...... *
தம்மினோர்காணத்தோன்றிநன்மணம்புணரலால........ ...*
மும்மையுமுய்ந்தமென்றுத்தத்தமின்மொழியலுற்றார் .... *

(இ-ள்) தாயுந்தகப்பனும்போல, மலரு மணமும்போல நீங்காதவர்களாய்த் தங்க ளருள்விளையாட்டினாலே செய்தகாலத்

று வறுமையாளர்போல நம்மைப்போல்வாரெல்லாருங் காணத் தோற்றப்பட்டுச் (சுவாமியுமம்மனும்) நன்மையாகிய திருமணஞ்செய்துகொள்ள மூன்றுலகங்களும் ஈடேறினவென்று தங்கள்தங்களில் சொல்லத் தொடங்கினார்கள்.—(எ-று) (௱௮௧)

காமருசுரபித்தீம்பால்கற்பகக்கனிநெய்கன்னல் ....... .... *
ஞாமருசுவையின்னறுமதுபருக்கஞ்செம்பொ ......... *
ஞாமணிவட்டத்திண்காற்பாசனத்தமையப்பெய்து ......... *
தேமருகொன்றையானைத்திருக்கைதொட்டருள்கவென்றார் .. *

(இ-ள்) அழகுபொருந்திய பசுவினுடைய இனிப்பானபாலும், வாழைக்கனியும், நெய்யும், சருக்கரையும், இனிமைபொலு மதுரத்தையுடைய வாசனையான தேனும், பளிங்கினாலும் செம்பொன்னினாலும் நவமணிகளாலுமாகிய பலம்பொருந்திய வட்டமான முக்காலியினிடமாக உண்கலத்திலே மேற்சொல்லிய பஞ்சாமுர்தங்களையும் நிரப்பவைத்துத் தேன்பொருந்திய கொன்றைமாலையைத்தரித்த சோமசுந்தரக்கடவுளைத் திருக்கரத்தினாலெடுத்து அமுதுசெய்தருள்கவென்றார்கள்.—(எ-று) காமருசுரபி(எ-து) பஞ்சதருவினிழலில் மருவிய பசுவெனினும் பொருந்தும். கற்பகக்கனி(எ-து) கற்பகவிருட்சந்தந்த கனியெனினும் பொருந்தும். வாழைக்கனியென்பதற் குதாரணம், கல்லாறனார்செய்த அரும்பதக்கொத்து. கதலியரம்பை கற்பக முதற்கனி - நாரியைந்தும் வாழையெனப்படும். பருக்கம்-(எ-து) பளிங்குக்கல். (௱௮௨)

அங்கைவைத்தமுதுசெய்தாங்ககமகிழ்ந்தட்டமூர்த்தி .... *
யொங்கவிழ்குமுதச்செவ்வாய்க்கோட்டிவாண் முறுவல்பூத்தான்,
புங்கவர்முனிவர்கற்பின்மகளிரும்போதின்மேய ............. *
மங்கையரிருவரோடுமங்கலம்பாடலுற்றார் ............. *

(இ-ள்) அப்பொழுது அஷ்டமூர்த்திவடிவமாகிய சோமசுந்தரக்கடவுள் மனமகிழ்ந்து அங்கையை உண்கலத்துள்வைத்து அமுதுசெய்தருளித் தேன்விரிந்த செவ்வாம்பலுக்கொப்பான சிவந்த திருவாயால்நகைத்துப் புன்சிரிப்புக்கொண்டார்- தேவர்களும் முனிவர்களும் கற்புள்ள மாதர்களும் தாமரையில்மேவிய சரஸ்வதி இலட்சுமி இவ்விருவரோடு (சோமசுந்தரக்கடவுளுக்கும் தடாதகைப்பிராட்டியாருக்கும்) மங்கலவாழ்த்துப்பாடத் தொடங்கினார்கள்.—(எ-று) சிவன் அஷ்டமூர்த்த

ங்களாவன-நிலம், நீர், தீ, கால், வெளி, சூரியன், சந்திரன், இய மானன்-என்பனவாம். (௱அ௩)

மாக்கடிமுளரிவானன்மைந்தரோடொருங்குவைகி ...... *
நாக்களினெடுநாவார்த்திடுவையானறுநெய்யார்த்தி ...... *
வாக்கிடவாரயார்ந்திவலஞ்சுழித்தகடுவிங்கித் ........ *
தேக்கியொலியினார்த்துநிமிர்ந்ததுதெய்வச்செந்தீ ...... *

(இ-ள்) பெருமையும் வாசனையும் பொருந்திய தாமரைக்க மலத்தில்வீற்றிராநின்ற பிரமதேவரானவர் காசிபர்முதலான த மது புத்திரர்களோடு ஒருமிக்க (ஓமகுண்டத்துக்கு முன்பாக) வீற்றிருந்து சுவாலைகளின் நெடுஞ்சுவாலையானநாக்குடிக்கத்தக்கதா க வைத்த துடுப்பிலுமே வாசனை பொருந்திய நெய்யினை நிறை த்து (அச்சுவாலையின்) வாயிலிடமாகச் சொரியத் தெய்வீகம் பொருந்திய (வேள்விக்குண்டத்து) அக்கினியானது நிறைவு பெறக் குடித்து வலமாகச் சுவாலைகளைச் சுழித்து வயிறுபூரித் துத் தெவிட்டிமிஞ்சததத்தோடு சத்தித்து நிமிர்ந்து வளர்ந் தது.—(எ-று) (௱அ௪)

சுற்றுநான்மறைகளார்ப்பத்தூரியஞ்சங்கமேங்கக் ...... *
கற்றநான்முகத்தோன்வேள்விச்சடங்குநூல்கணாந்தவாற்றான் *
முற்றமங்கலநாண்சார்த்திமுழுதுலகீன்றாள்செங்கை .... *
பற்றினன்பற்றிலார்க்கேவீடருள்பரமயோகி .... .... *

(இ-ள்) சுற்றிலும் நான்குவேதங்களுஞ்சத்திக்கவும், (பலவா ன) வாத்தியங்களுஞ் சங்கங்களுஞ் சத்திக்கவும், (பலவும்) கற்ற பிரமதேவனால் வேதநூல்சொன்ன விதிவழியாகவே வேள்விச்ச டங்குகள் முடிவுபெறப் பற்றற்ற அடியார்களுக்கு மோட்சவீ ட்டினைத் தந்தருளும் பரமயோகியாகிய சோமசுந்தரக்கடவு ள் (தடாதகைப்பிராட்டியாருக்குத்) திருமங்கலக்கயிறு சார்த்தி உலகுமுழுது மீன்றவளாகிய, அத்தடாதகைப் பிராட்டியாரது சிவந்த கையைப்பிடித்தார்.—(எ-று) (௱அ௫)

இணரெரித்தேவுந்தானேயெரிவளர்ப்பவனுந்தானே .... *
யுணவுகொள்பவனுந்தானேயாகியவொருவன்வையம் ...... *
புணர்வுறுபோகமூழ்கப்புருடனும்பெண்ணுமாகி ...... *
மணவினைமுடித்தானன்றன்புணர்ப்பையார்மதிக்கவல்லார்.. *

(இ-ள்) அக்கினிதேவனுந் தானே, அக்கினியை வளர்த்துநின் ற பிரமதேவனுந்தானே, உணவுகொள்பவனுந்தானே, ஆகிய

சோமசுந்தரக்கடவுள் உலகத்தில் புணர்ச்சிபொருந்திய சுக போகத்தில்மூழ்க-ஆணுருவமும் பெண்ணுருவமுமாகித் திருக்கல்யாணத்தொழிலினை முடித்தார்-அப்படிப்பட்டவருடையபுணர்ப்பை யார்மதித்துச்சொல்ல வல்லவர்கள்.—(எ-று)(௱அசு)

பின்புதன்பன்னியோடுபிறைமுடிப்பெருமான்கையி ......*
னம்பொரிவாங்கிச்செந்தீநாமடுத்தெனைத்துமான ... .... *
தன்படிவுணர்ந்தவேதமுனிவர்க்குத்தக்கதான.......... *
மின்பகந்ததும்பநல்கியெரிவலமுறையால்வந்து......... *

(இ-ள்) அதன்பின்பு தன்னுடைய மனைவியாகிய தடாதகைப்பிராட்டியாரோடு இளம்பிறையினையணிந்த முடியினையுடைய சோமசுந்தரக்கடவுள் கையினிடத்திலே தன்மையாகியபொரியைவாங்கிச் செம்மையாகிய ஓமாக்கினிச்சுவாலையிற் போட்டு எல்லாந்தாமாகிய சுவாமி தமது திருவடிவத்தையுணர்ந்த வேதமுனிவர்களுக்குத் தகுதியானதானங்களை மனந்திருத்தியடையக் கொடுத்துத் தீயைவலமாக முறைமையோடுவந்து—(எ-று)

மங்கலம்புனைந்தசெம்பொனம்மிமேன்மணாட்டிபாத........*
பங்கயமலரைக்கையாற்பரிபுரஞ்சிலம்பப்பற்றிப்........ *
புங்கவன்மனுவாலேற்றிப்புண்ணியவசிட்டன்றேவி .... ...*
யெங்கெனச்செங்கைகூப்பியெதிர்வரவருட்கண்சார்த்தி.... *

(இ-ள்) சோமசுந்தரக்கடவுள் தமது மணாட்டியாகிய தடாதகைப்பிராட்டியாரது திருவடித்தாமரையைச் சிலம்புகள்சத்திக்கத் தமதுகையினாற்பிடித்து மங்கலமாக அலங்கரித்த செம்பொன்னாகிய அம்மியின்மேல் ஏற்றிவைத்து மனுமுறையாகவே பரிசுத்தமான வசிட்டருடைய மனைவியாகிய அருந்ததியென்னும் கற்புள்ளவள் எங்கேயென்று சுவாமிகேட்க-அந்தஅருந்ததியானவள் சிவந்தகரங்களைக்குவித்து எதிராகவர- இருவரும் கிருபைநிறைந்த கண்களால்நோக்கி.—(எ-று) (௱அஅ)

விதிவழிவழாதவேள்விவினையெலாநிரம்பவிங்ங ...... *
னதிர்கடலுலகந்தேறவாற்றிநான்மறைகளார்ப்பக்.........*
கதிர்மணிநகையார்வாழ்த்தக்காமனைக்காய்ந்தநம்பி.. .... *
மதிநுதன்மங்கையோடுமணவறைதன்னிற்புக்கான்........*

(இ-ள்) வேதநூலின் விதிவழியானது சற்றுந்தவறாது வேள்வித்தொழிலனைத்தும் இங்ஙனம் பூரணமாகச் சத்திக்கின்ற க

டல்சூழ்ந்த வுலகமெல்லாம் (இவ்வாறுசெய்துதேறத்) திருமண த்தொழிலைமுடித்து நான்குவேதங்கள் சத்திக்கவும், பிரகாசம் பொருந்திய முத்துக்களை நிகர்த்த தந்தபந்திகளையுடைய பெ ண்கள்(மங்கலவாழ்த்து) வாழ்த்தவும், மன்மதனையெரித்தசோ மசுந்தரக்கடவுள் இளம்பிறைபோன்ற நெற்றியினையுடைய த டாதகைப்பிராட்டியாரோடு கல்யாண மணவறையிடத்திற் பிர வேசித்தார்.—(எ-று) இம்மூன்றுபாடலுங்குளகம். (௱௮௯)

மனிதருமிமையாதையன்மங்கலவனப்புநோக்கிப் ........ *
புனிதவானவரையொத்தாரவர்க்கதுபுகழோவெந்தை ..... *
கனிதருகருணைநாட்டம்பெற்றவர்கடவுளோராற் .......... *
பணிதருமலரிட்டேத்திவழிபடப்பாலரன்றே ............... *

(இ-ள்) மனிதர்களுங்கண்கவிமையாமல் சோமசுந்தரக்கட வுளினது திருமணக்கோலக் காட்சியினைக்கண்டு பரிசுத்தம் பொருந்திய தேவர்களுக்கொப்பானார்கள்- அம்மனிதர்களுக்கு அதுபுகழ்ச்சியோ, எம்முடைய சோமசுந்தரக்கடவுளினது நி றைவுபொருந்திய கருணைகடாட்சம்பெற்றவர்கள் தேவர்களா லே குளிர்ச்சிபொருந்திய மலரிட்டேத்தி வந்தனைவழிபாடுசெ ய்யப் படுந்தன்மையுடையவர்க ளாவார்களல்லவோ ஆதலாலம் மனிதர்களுக்கு அது புகழ்ச்சியல்லவாம்.—(எ-று) (௱௯௰)

மானிடரிமையோரென்னும்வரம்பிலராகிவெள்வி.......... *
தானிடரகலநோக்கித்தலைதடுமாறிநின்றார் ............ *
கானிடநடஞ்செய்யுங்கண்ணுதல்நட்கணுக்கா ........... *
ஆனிடரகலுநாளிலுயர்ந்தவரிழிந்தோருண்டோ ........... *

(இ-ள்) மனிதர்களென்றும், தேவர்களென்றும், வரம்பில்லா தவர்களாகிக், கல்யாணச்சடங்குகள்தான் இடர்நீங்கும்படிபார் த்து, அவ்வவ்விடங்களிலே மயங்கிநின்றார்கள்-(மலர்முதலிய ப த்திர) வாசம்வீசும்படி திருநடனஞ்செய்தருளும் நெற்றிக்க ண்ணினையுடைய சோமசுந்தரக்கடவுளது அருட்கண்பார்வை யால் மாமிசமாகிய தேகத்திலிருந்து (உயிரானது துன்பம் பொருந்த) நீங்குகின்றகாலத்திலே உயர்ந்தவரென்றும், இழிந் தவரென்றும் உண்டோ.—(எ-று) கானிட நடஞ்செய்யும்- (எ-று) சுடலையினிடத்து நடனஞ்செய்யுங்கடவுளென்பாருமு ளர். சிவனுக்குரிய மலர் பத்தாவன-சைவசமய பூசாவிளக்கம்- மல்லிகைமுல்லை யிருவாட்சி தும்பை, புன்னைகொன்றை மந்தா

ளைபிச்சி, வெள்ளெருக்கூமத்தை மென்மலர்பத்தே. சிவனுக்கு ரிய பத்திரம் பத்நாவண - வில்வந் திருநீற்றுப் பத்திரங் கொன்றை, யாத்தி தும்பைநொச்சியிருவாட்சி, கரந்தைகுருந்து மருவிலைபத்தே. (௩௧௧)

மணவறைத்தவிசினீங்கிமன்றன்மண்டபத்திற்போந்து .... *
கணமணிச்சேக்கைமேவிக்கருநெடுங்கண்ணன்வாணி ...... *
துணைவனேமுதல்வானோர்க்குஞ்சூழ்கணத்தொகைக்குமென்று
தணவறுசெல்வந்தந்தோன்சாறுசாலிசிறப்புநல்கி ... ... (ந்

(இ-ள்) சோமசுந்தரக்கடவுளானவர் திருமணவறையாசனத்திலிருந்து நீங்கித் திருக்கல்யாணமண்டபத்தில்வந்து கூட்டமாக மணிகளிழைத்த படுக்கையிடத்திற்சேர்ந்து கருமையாகிய நீண்ட கண்களையுடைய மகாவிஷ்ணு சரஸ்வதிக்குநாயகராகிய பிரமதேவன்முதலான தேவர்களுக்கும் இன்னும் புடைசூழ்ந்திராநின்ற பூதகணத்தொகைக்கும் எக்காலத்தும் நீங்குதலில்லாத செல்வந் தந்தவர்-(இக்காலத்திலும்) திருவிழாக்கல்யாணத்தில் மிகுந்தவரிசைகளைக்கொடுத்து.—(எ-று) (௩௧௨)

எட்டுவாய்முளரியான்மாலேனைவானவருந்தத்த ......... *
நாட்டுவாழ்பதியிற்செல்லநல்விடைகொடுத்துவேந்தர்க் ... *
காட்டுவாருடிக்காட்டுந்தன்மைபோலரசுசெய்து........ ...*
காட்டுவாளுகிலையன்றிருவுளக்கருணைபூத்தான்... .... .... *

(இ-ள்) இதழ்களையுடைய தாமரையிடத்துவாழும் பிரமதேவனும், மகாவிஷ்ணுவும்பற்றுந்தேவர்களும் தங்கள் நாட்டிலேவாழும்பதியிலே செல்லும்படியாக நன்மையாகிய விடைகொடுத்து அனுப்பி (எவ்வகைப்பட்ட வுயிரினிடத்து நின்றும்) ஆட்டுகின்ற சோமசுந்தரக்கடவுள் தாம் ஆடிக்காட்டுந் திருவிளையாடலின்தன்மையைப்போல (இவ்வுலகத்து) இராசாக்களுக்கு அரசாட்சிசெய்து காட்டுபவராகித் திருவுள்ளத்திலே இருக்கிருபை வைத்தருளினார்.—(எ-று) இவ்விரண்டுபாடலுங் குளகம். (௩௧௩)

(வேறு.)

அஞ்சிவிடைக்கொடி யங்கயற்கொடியாகவராக்கலன் பொற்கலனாகப், பொதியவிழ்கடுக்கை வேம்பலராகப்புலியதள் பொலந்துகிலாக, மதிமுடிவைரமணிமுடியாகமறைநடந் தலம்புமா மதுவாய், பதியுறைசோமசுந்தரக்கடவுள்பாண்டியனாகி வீற்றிருந்தான் ........................... *

(இ-ள்) நடுங்குகின்ற இடபக்கொடியே அழகுபொருந்திய மீனக்கொடியாகவும், சர்ப்பாபரணமே பொன்னாபரணமாகவும், முறுக்கவிழ்ந்த கொன்றைமாலையே வேப்பமாலையாகவும், புலித்தோலாடையே பொன்னுடையாகவும், சந்திரனைத்தரித்த முடியே வைரமணிமுடியாகவும், நான்குவேதங்களுஞ் "சத்திக்கின்ற மகத்தாகிய மதுரைமாநகரத்திலேவாழுஞ் சோமசுந்தரக்கடவுள் சௌந்தரபாண்டியராகிச் (சிங்காதனத்திலே அரசாட்சிசெய்யச் செங்கோலேந்தி) வீற்றிருந்தார்.—(எ-று) இஃது-முத்தகச்செய்யுள். (௩௧௪)

(வேறு.)

விண்டவழ்மதியஞ்சூடுஞ்சுந்தரவிடங்கப்புத்தேள்.........*
கொண்டதோர்வடிவுக்கேற்பக்குருதிகொப்புளிக்குஞ்சூலத் ..*
திண்டிறற்சங்குகன்னன்முதற்கணத்தேவர்தாமும் ........*
பண்டையவடிவுமாறிப்பார்த்திவன்பணியினின்றார்........*

(இ-ள்) ஆகாயத்தினிடமாகத் தவழுகின்ற சந்திரனைச்சடையிலணிந்த சோமசுந்தரக்கடவுளானவர் தாங்கொண்ட ஒப்பற்றவடிவுக்குத் தக்கதாக வுதிரங்கொப்புளிக்கும் பலம்பொருந்திய சூலக்கையன்-சங்கக்கையன்-கன்னன் - முதலிய பூதகணங்களும் தேவகணங்களும் பழையவேஷமாறிச்சோமசுந்தரக்கடவுளென்னுஞ் சௌந்தரபாண்டியருடைய பணிவிடையிலிடத்து நின்றார்கள்.—(எ-று) (௩௧௫)

தென்னவன்வடிவங்கொண்டசிவபரனுலகங்காக்கு.........*
மன்னவர்சிவனைப்பூசைசெய்வதுமறையாறென்று ........*
சொன்னதுமன்னரெல்லாந் துணிவதுபொருட்டுத்தானு ....*
மந்நகர்நடுவொன்றோரணிநகர்சிறப்பக்கண்டான் ... ....*

(இ-ள்) சௌந்தரபாண்டியராகத் திருவுருவங்கொண்ட சோமசுந்தரக்கடவுள் உலகத்தையெல்லாம் அரசாட்சிசெய்து காப்பாற்றும் அரசர்கள் சிவனைப்பூசைசெய்வது வேதத்தில்விதித்த விதிவழியென்றுசொன்னது-அரசர்களெல்லாந் துணியும்பொருட்டுத் தானும் அந்தமதுரைமாநகரத்தில் நடுவொன்று ஒரழகிய நகரத்தைச் சிறப்புடையதாயிருக்கக்கண்டார்.—(எ-று)

மெய்ம்மைநூல்வழியேகோயில்விதித்தருட்குறிநிறீஇப்பே.*
ரிம்மையேநன்மைநல்குமிறையெனநிறுவிப்பூசை ... ....*
செம்மையிற்செய்துநீபவனத்துறைசிவனைக்கால ......... ....*
மும்மையுந்தொழுதுவையமுழுதுங்கோனடத்தும் ....*

(இ-ள்) வேதநூலின்விதிவழியே கோயில்விதித்து அருட்கு றிநிறுத்தி இம்மையிலே பெரிதாகிய நன்மையைக்கொடுக்கும் சொக்கலிங்கமெனத் திருநாமநிறுத்திக் கடம்பவனத்திலுறை யும் சிவனைச் சௌந்தரபாண்டியரானவர் செம்மையாகப்பூசை செய்து திரிகாலமுந்தொழுது உலகமுழுவதும் செங்கோல்செ லுத்துவாராயினர்.—(எ-று) (௱௬௭)

பூவருமயன்மாலாதிப்புனிதருமுனிவரோரும் ... ... ... *
யாவருந்தன்னையேபூசித்திகபரமடையநின்ற ... ... ... *
மூவருண்மேலாமுக்கண்மூர்த்தியேபூசைசெய்த ... ... ... *
தாவரவிலிங்கமேன்மைத்தகுதியாரளக்கவல்லார் ... ... ... *

(இ-ள்) தாமரைப்பூவினிடமாக வந்த பிரமனும் மகாவிஷ் ணுவும் இவர்கள்முதலான பரிசுத்தவான்களும் முனிவர்களும் மற்றவர்களும் யாவரும் தன்னைப்பூசைசெய்து இகபரசௌக்கி யத்தை அடைய நின்ற மும்மூர்த்திகளுக்குள்ளே மேலான தி ரிநேத்திரமூர்த்தியாகிய சோமசுந்தரக்கடவுளே பூசைசெய்த நிலைபெற்று விளங்கிய சொக்கலிங்கத்தின் மேன்மைத் தன்மை யை யாவர் அறிந்து சொல்ல வல்லவர்கள்.—(எ-று) இஃது-பு ராணிகர்கூற்று. (௱௬௮)

(வேறு)

மனித்தருக்கரசாகித்தெவ்வேந்தர்க்குமடங்கலாய்மடநல்லார்க் கினித்தவைங்கணைக்காளையாய்நிலமகட்கிளர்த்துழாயணிமாலா யநித்தநித்தமோர்ந்திகபரத்தாசை[illegible]தெளிந்தவர்க் கொன் றாய்த்,தனித்தமெய்யறிவானந்தமாம்பரதத்து[illegible]நின்றான் *

(இ-ள்) மனிதர்களுக்கு நீதிமன்னவனாகியும், பகைமன்னவ ர்களுக்குச் சிங்கமாகியும், மடமாதர்களுக்கு இன்பம்பொருந் திய பஞ்சபாணங்களையுடைய மன்மதனாகியும், பூமிதேவிக்கு த் தளிர்நிறைந்த துளபமாலையணிந்த மகாவிஷ்ணுவாகியும், நி த்தியமும் அநித்தியமும் அறிந்து இகபரத்தாசையைவிட்டு ம னந்தெளிந்த மகத்துக்களுக்கு ஒருவஸ்துவாகியும்,ஒப்பற்றமெ ய்யறிவானந்தமாம் பரதத்துவமாகியும் நின்றார் சௌந்தரபா ண்டியனென்னுஞ் சோமசுந்தரக்கடவுள்.(எ-று)(விசேடவுரை) விண்ணுலகத்தாருக் கரசனுயிராமல மண்ணுலகத்தாருக் கரச னாயிருந்தமையால்-அரசாகியென்றது-மனித்தருக்கரசாகிநி ன்றார். (பேதமையென்பது மாதர்க்கணிகலமென்னும் வாக்கி யப்படி மகடூஉக்குணம் நாலிலொன்றாகிய மடமுமாதலாவி

ட்டு நீங்காமையால் நல்லார்க்கென்றது மடநல்லார்க்கென்றார். ஆதிசேடனாலும் அளவிட்டுச்சொல்லப்படாத அழகுவாய்த்தமையால்-காளையென்றது-இனித்தவைங்கணைக்காளையென்றார். மாறாது தளிர்த்துவளர்தலால்-துழாயென்றது- இணர்த்துழாயென்றார். யாவருமயங்கும்வடிவமும் அழகும்பெற்றமையால்-மாலையுவமானமாகக்கூறினார். எவ்வகைப்பட்டவாசையும் இகத்தாசையுள்ளும் பரத்தாசையுள்ளு மடங்கினமையால்-ஆசைநீத்தென்றது-இகபரத்தாசைநீத்தென்றார். புறத்துறவிலும் அகத்துறவு பெரிதாகையால் தெளிந்தவர்க்கென்றது- அகந்தெளிந்தவர்க்கென்றார். தேவராலும் யாவராலும் ஒப்பிட்டுச்சொல்லப்படாத ஆனந்தமாதலின்-ஆனந்தமென்றது- தனித்தமெய்யறிவானந்தமென்றார். (காமனைங்கணைகளாவன) கஞ்சமலர்-சூதமலர்-அசோகமலர்-முல்லைமலர்-நீலமலர். இவற்றின்பேர்களாவன-உன்மத்தம்-மதனம்-மோகம்-சந்தாபம்-வசிகரணம். இக்கணைகளவத்தையின் பெயர்களாவன- சுப்பிரயோகம்- விப்பிரயோகம்-சோகம்-மோகம்-மரணம். இவற்றின்குணங்களாவன- (சொல்லுநினைவுமாயிருத்தல்) சுப்பிரயோகம். (வெய்துயிர்த்திரங்கல்) விப்பிரயோகம். (வெதுப்புந்துயப்பவை தெவிட்டலுமாயிருத்தல்) சோகம். (அழுதலும் பிதற்றுதலுமாயிருத்தல்) மோகம். (மயக்கமுமாய்தலும்) மரணம். அன்றியுஞ் சந்தபாணமெனக்கூறுவாருமுளர். அவை-மல்லிகை - நெய்தல்-இரண்டுஞ்சேர்ந்தேழாம். மன்மதனுக்குவில்லும் மூன்றாகும், அவை பூவில்-கருப்புவில்-இருப்புவில், தேவர்மேற்பூவில், மனிதர்மேற்கருப்புவில், இராக்கதர்மேல்இருப்புவில்-என்பர். (௱௧௧)

திருமணப்படலம்-முற்றிற்று.

ஆ படலம்-௰௪-க்கு-திருவிருத்தம்-௭௱௧௰௭.

---

மதுராச்சங்கத்திலும், புதுவைச்சங்கத்திலும், சென்னையிற்ற
மதுசங்கத்திலும், தமிழ்த்தலைமைப்புலமை நடாத்திய,
களத்தூர்-

## வேதகிரிமுதலியாரவர்களால்

திருமணப்படலத்தில ௱௫௰௫-ம், பாடல்தொடங்கி
உரைசெய்யப்பட்டது.

கலியுகாப்தம்- சுதகூாசி௰அ.

சாலிவாகனசகம்- ௲௭௱௭௰௧-நிகழாநின்ற-
பிலவங்கஹூ-தைமீ.

## முதலாம்புத்தகம்-முற்றிற்று

